# பதஞ்சலி யோகம்

## ஒரு விஞ்ஞான விளக்கம்

### பாகம் - 2

ஓஷோ

தமிழில் :
சிங்கராயர்



Since 1976


**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

**PATHANJALIYOGAM : ORU VIGYANA VILAKKAM - 2 (Tamil)**



Originally published in English under the title:
**THE ALPHA AND THE OMEGA, VOLUME - 2**



| | | |
|---|---|---|
| Translated by | : | Singarayar |
| Coordination by | : | **Swami Amano Manish** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | December, 2000 |
| Second Edition | : | August, 2010 |
| Third Edition | : | 2019 |
| Pages | : | **352** |
| Price | : | **Rs. 350/-** |
| Printed a | : | Sree Durga Printers, Chennai |

Published by :
**KAVITHA PUBLICATION**
8, Masilamani Street, Pandy Bazaar,
T. Nagar, Chennai - 600 017
Ph: 044-4216 1657 What'sapp : +91-7402222787
e-mail: kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

# பொருளடக்கம்

# முகவுரை

''அகவுலகத்தைப் பற்றிய ஒரு மாபெரும் அறிவியலாள ராக பதஞ்சலி இருக்கிறார்'' என்கிறார் ஓஷோ. ''அவருடைய மனம் அறிவியல் மனம். ஆனால் அவரது பயணம் உள் முகமானது. அவர் பயன்படுத்தும் சொற்கள் அறிவியல் ஆய்வுக் கூடத்தில் பணிபுரிபவர் பயன்படுத்தும் சொற்களாக இருக்கின் றன. ஆனால் அவரது ஆய்வுக்கூடமோ அகத்தைப் பற்றிய தாகும்.''

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்தியாவில் வாழ்ந்த பதஞ்சலி அவரது புகழ்பெற்ற யோக சூத்திரங்களை ஏட்டில் எழுதிவைத்தார். ஒன்றுக்கொன்று அவை ஏறக்குறைய ஒட்டுற வற்ற விதைகளின் வடிவிலான வாசகங்கள்; அவர் தானே அடைந்திருந்த உணர்வின் அதே உச்சங்களை நோக்கி சாதகர் களுக்கு வழிகாட்டும் நோக்கில் அவை அமைந்துள்ளன. ஆனால் விதையில் மரத்தைப் பார்ப்பது சாமானியமான சாதனை அல்ல. யோகத்தில் வைராக்கியமுடைய சாதகர்களைத் தவிர பிறரால் பதஞ்சலி பெரிதும் கண்டு கொள்ளப்படவே இல்லை. அவர் எதைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார் என்பதை புரிந்துகொள்வதற்கான உள்ளொளியோ அனு பவமோ, யாருக்கும் இருக்கவில்லை.

ஐயாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு, மறுபடியும் இந்தியாவில் விழிப்புணர்வு பெற்ற ஞானியும் குருவும் ஆன

ஓஷோ, பதஞ்சலியைக் குறித்த மலைப்பூட்டும் 90 நிமிடப் பேருரைகள் ஒரு நூறை வழங்கினார் - உடனே, இதுவரை ஒட்டுறவற்று இருந்து வந்தவை, திடீரென உயிரோட்டம் உள்ளவையாகவும் சுவை நிரம்பியவையாகவும் ஆயின. விதைகளாகவே இருந்து வந்தவை, பூ மரங்களாகப் பூத்துக் குலுங்கின.

'யோகம்: ஆன்மாவின் அறிவியல் யோகா' (த சயன்ஸ் ஆஃ த ஸோல்) என்னும் இந்நூல்.

விநோதமாகத் தோற்றமளிக்கும் ஆசனங்களுக்கேற்ப உடம்பை வலுக்கட்டாயமாக திருகி முறுக்குவது வளைத்து நெளிப்பது பற்றிய நூல் அல்ல. மாறாக இது ஓர் உதவி செய்யும் நூல் ஆகும்: தன் விளிம்பில் இருப்பது மையத்தை நோக்கிப் போவதற்கான - தன் உடம்பிலிருந்து ஆன்மாவை நோக்கி இயங்குவதற்கான மனிதரின் முயற்சிதான், அறிவியல் கண்டுபிடிப்புகளிலேயே மிகவும் அற்புதமான கண்டுபிடிப் பாகும்; அந்தத் திசையில் பயணம் மேற்கொள்ள ஆர்வம் கொண்டுள்ள அனைவருக்கும் நடைமுறை சாத்தியமான உதவி செய்வதற்காக படைக்கப்பட்டதே இந்நூல்.

ஆச்சரியகரமான விஷயம் என்னவென்றால் ஓஷோவுக்கும் பதஞ்சலிக்கும் இடையிலான இந்த வெல்லமுடியாத சேர்க் கையை விட அதிகப் பொருத்தமாக 197

4இல் வேறு எதுவும் தோன்ற வில்லை. தொழில்நுட்ப யுகத்தில் வளர்க்கப்பட்டு, அறிவியல் அணுகுமுறைபற்றிய புரிதலும் அறிவியல் மனம் பற்றிய மதிப்பீடும் கொண்டுள்ள தற்கால மனிதருக்கே முற்றிலும் தேவையானது இந்தத் தொடர். குறிப்பாகச் சொல்வ தானால், குழப்பத்தில் இருக்கும் ஓர் உலகத்தில் உடைந்து நொறுங்கும் கட்டுமானங்களாலும் மதிப்பீடுகளாலும் சூழப்பட்டுள்ள தீரமிக்க நவீன கால மனிதர், பொறுப்பை தானே ஏற்க முடிவு செய்துவிட்டார் என்றால், தன் சொந்த உள்ளாற்றலை ஆராயவும் வளர்த்தெடுக்கவும் கண்டுணரவும் முடிவு செய்துவிட்டார் என்றால் அவருக்கே

உரியது இத்தொடர்.

இந்த நூல் ஒரு புதிய வகை அறிவியலைப் பற்றியது. மதத்தன்மைக்கான பரிசோதனை மற்றும் விசாரணையின் அறிவியல் பற்றியது; ஒருவர் தம் சொந்த ஆன்மாவை அடைந்து கொள்வதற்கான அறிவியல் பற்றியது. அறிவியல் மற்றும் ஆன்மிக நீரோட்டங்களை ஓஷோ ஒன்றிணைத்திருக்கிறார். மேலும் ஒரு பாய்ந்தோடும் ஆற்றை அவர் உருவாக்கி இருக்கிறார் - அந்த ஆறு கரைபுரண்டு ஓடுகிறது; அதன் அருகில் வரும் ஒவ்வொருவரின் தாகத்தையும் தணிப்பதற்காகவே அது ஓடிக் கொண்டிருக்கிறது.

- சுவாமி கிருஷ்ண பிரேம், M.M.,
D. Phil.M. (RIMU), ஆச்சாரியா.

# 1. சமாதியின் அர்த்தம்

சம்பிரஞ்ஞாத சமாதி என்பது சரியான பகுத்தறிவு, ஆழமான சிந்தனை, ஆனந்தம், சுத்த ஜீவன் பற்றிய உணர்வு ஆகிய வற்றுடன் கூடிய சமாதி ஆகும்.

அசம்பிரஞ்ஞாத சமாதியில் அனைத்து விதமான மனச்செயல்பாடுகளும் (சித்தவிருத்திகளும்) நின்றுள்ளன; புலப்படாதப் பதிவுகளை மட்டுமே மனமானது தக்க வைத்திருக்கிறது.

விதேகர்களும் பிரகருதி - லயர்களும், தம் முற்பிறவியி லேயே தம் உடம்புடன் தம்மை ஒருமைப்படுத்திக் காண்பதை நிறுத்திவிட்டதால் அசம்பிரஞ்ஞாத சமாதியை அடைகிறார்கள். ஆசையின் விதைகள் எஞ்சியிருப்பதால் அவர்கள் மீண்டும் பிறவி எடுக்கிறார்கள்.

மற்றவர்கள், நம்பிக்கை – முயற்சி – நினைவுகூர்தல் – ஒருமுக கவனம் - பாகுபடுத்தி அறிதல் வாயிலாக அசம்பிரஞ்ஞாத சமாதியை அடைகிறார்கள்.

பதஞ்சலி உள் உலகைப் பற்றிய மாபெரும் அறிவியலார் ஆவார். அவரது அணுகுமுறை ஓர் அறிவியல் மனத்தினுடையதைப் போன்றதே. அவர் ஒரு கவிஞர் இல்லை. இந்த வகையில் அவர் மிகவும் அபூர்வ மானவர். ஏனெனில் உள் உலகுக்குள் நுழைகிறவர்கள் ஏறக்குறைய எப்போதுமே கவிஞர்களாகவே இருக்கிறார்கள். புற உலகுக்குள் நுழைகிறவர்கள் ஏறக்குறைய எப்போதுமே அறிவியலராகவே இருக்கிறார்கள்.

பதஞ்சலி ஓர் அபூர்வமான மலர். அவரது மனம் அறிவியல் மனம். ஆனால் அவரது பயணம் உள்நோக்கியது. எனவேதான் அவரது சொல் முதலும் முடிவுமாக ஆகி உள்ளது. அவரே இத்துறையில் தொடக்கமும் - இறுதியும் ஆக இருக்கிறார். ஐயாயிரம் ஆண்டுகளாக அவரை எவரும் விஞ்ச - மேம்படுத்த முடியவில்லை. அவரை மேம்படுத்த - வளர்த்தெடுக்க முடியாது என்றே தோன்றுகிறது. அவரே இறுதி வார்த்தையாக இருப்பார் - ஏனென்றால் இந்த சேர்க்கையே அசாத்தியமானது! அறிவியல் அணுகுமுறையோடு உள் உலகில் பிரவேசிப்பது என்பது ஏறக்குறைய ஓர் அசாத்தியமான காரியமாகத்தான் இருக்கிறது. அவர் ஒரு கணக்காளர், தர்க்கவாதி போலப் பேசுகிறார்; அவர் ஒரு ஹெராக்ளிட்டசாக இருக்கிறார். பேசும்போதோ அரிஸ்டாட்டிலைப் போல் பேசுகிறார்.

அவரது ஒவ்வொரு வார்த்தையையும் புரிந்துகொள்ள முயலுங்கள். அது கடினமாகத்தான் இருக்கும். ஏன் அது கடினமாக இருக்கும் என்றால் அவரது சொற்கள் தர்க்கத்தினுடையதாக, வாதத்தினுடையதாக இருக் கையில், அவர் சுட்டிக்காட்டுவது அன்பை நோக்கியதாக, பரவசத்தை நோக்கியதாக, கடவுளை நோக்கியதாக இருக்கிறது. அவர் பயன்படுத்தும் சொற்கள் அறிவியல் ஆய்வகத்தில் பணிபுரியும் ஒருவரின் சொற்களைப் போல் உள்ளன. ஆனால் உள் இருத்தலே அவரது ஆய்வகம். எனவே அவரின் குறியீட்டுச் சொற்களால் தவறான கருத்துக் கொண்டு விடாதீர்கள். உச்சக் கவிதையின் கணக்காளர் அவர் என்னும் உணர்வை தக்கவைத்துக் கொள்ளுங்கள். அவர் ஒரு முரண்பாடு. ஆனால் அவர் ஒருபோதும் முரண்பாடான மொழியைக் கையாள்வதில்லை. அவரால் அது முடியாது. மிகவும் உறுதியான தர்க்க அடிப்படையை அவர் தக்கவைத்துக் கொள்கிறார்: அவர் பகுத்தாய்கிறார், பிரித்துப் பார்க்கிறார்; ஆனால் தொகுத்துக் கொள்வதே அவரது நோக்கம். தொகுத்துக் கொள்வதற்காகத் தான் பகுத்துப் பார்க்கிறார் அவர்.

எனவே, அவரது பாதையைப் பார்த்து ஒருபோதும் தவறான பார்வை கொண்டு விடாதீர்கள். இலக்கை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள் - அறிவியல் அணுகுமுறை மூலமாக இறுதி நிலையை அடைவதே அவரது இலக்கு. எனவேதான் மேற்கத்திய மனதை மிகவும் கவர்ந்திருக்கிறார் பதஞ்சலி. எப்போதுமே மேற்கின்மீது செல்வாக்கு செலுத்தி வந்திருக்கிறார். ஆகவே அவர் பெயர் சென்ற இடங்களிலெல்லாம் அவர் செல்வாக்கு உடையவராக இருந்திருக்கிறார். அவரை நீங்கள் புரிந்துகொள்வது எளிது. ஆனால் அவரைப் புரிந்துகொள்வது மட்டும் போதுமானதல்ல. அவரைப் புரிந்துகொள்வது ஒரு ஐன்ஸ்டீனைப் புரிந்துகொள்வதைப் போலவே எளிதானதே. அவர் (புத்தி) மூளையிடம் பேசுகிறார். ஆனால் அவரது இலக்கு, இதயமே. இதை நீங்கள் நினைவில் கொண்டாக வேண்டும்.

நாம் ஓர் அபாயகரமான பிரதேசத்தின் வழியாகப் பயணம் செய்யப் போகிறோம். அவர் ஒரு கவிஞரும்கூட என்பதை நீங்கள் மறந்து போய் விட்டால் நீங்கள் வழிதவறிப் போய்விடுவீர்கள். பின் அவர் பயன்படுத்தும் சொற்கள், மொழி, வாதம் இவற்றில் அளவுக்குமீறிய பற்றுக் கொண்டு விடுவீர்கள். அவரது குறிக்கோளை மறந்துவிடுவீர்கள். பகுத்தறிவின் வழியாக பகுத்தறிவைக் கடந்து நீங்கள் அப்பால் செல்ல வேண்டும் என்று அவர் விரும்புகிறார். இது ஒரு சாத்தியப்பாடு. பகுத்தறிவை - வாதத்தை மிகவும் ஆழமாக உங்களால் தீர்த்துவிட முடியும்போது, நீங்கள் கடந்து அப்பால் செல்கிறீர்கள். பகுத்தறிவின், வாதத்தின் வழியாகவே நீங்கள் செல்கிறீர்கள். அதை நீங்கள் தவிர்ப்பதில்லை. பகுத்தறிவைக் கடந்து அப்பால் செல்வதற்கு அதை ஒரு படியாக நீங்கள் பயன்படுத்துகிறீர்கள். இப்போது அவரது வார்த்தைகளைக் கவனியுங்கள். ஒவ்வொரு வார்த்தையையும் பரிசீலித்தாக வேண்டும்.

> **சம்பிரஞ்ஞாத சமாதி என்பது சரியான பகுத்தறிவு, ஆழமான சிந்தனை, ஆனந்தம், சுத்த ஜீவன்பற்றிய உணர்வு ஆகிய வற்றுடன் கூடிய சமாதி ஆகும்.**

அறுதி நிலையான **சமாதி**யை அவர் இரண்டு கட்டங்களாகப் பிரிக்கிறார். இறுதி நிலையைப் பிரிக்க முடியாது. அது பிரிக்கப்பட முடியாத்து. உண்மையில் அதற்குக் கட்டங்களும் இல்லை. ஆனால் மனத்துக்கு - சாதகருக்கு உதவி செய்வதற்காகவே அவர் முதலில் அதை இரண்டாகப் பிரிக்கிறார். முதல் கட்டத்தை அவர் **சம்பிரஞ்ஞாத சமாதி** என்று அழைக்கிறார் - இந்த **சமாதி**யில் மனம் அதன் சுத்த நிலையில் தங்கி இருக்கிறது.

இந்த முதல் கட்டத்தில் மனம் சுத்திகரிக்கப்பட்டு தூய்மைப் படுத்தப்பட வேண்டி இருக்கிறது. அதை அப்படியே உங்களால் கைவிட

முடியாது. அதைக் கைவிடுவது சாத்தியமில்லை, ஏனெனில் அசுத்தங்களுக்கு ஒட்டிக் கொள்ளும் தன்மை உண்டு என்கிறார் பதஞ்சலி. மனமானது முற்றிலும் தூய்மையாக - மிகவும் சுத்திகரிக்கப்பட்டு, மிகவும் நுட்பமாகி, ஒட்டிக் கொள்ளும் தன்மை இல்லாதிருக்கும் நிலையில் மட்டுமே உங்களால் அதைக் கைவிட முடியும்.

ஸென் குருமார்கள் ''மனதைக் கைவிடுக'' என்று கூறுவது போல பதஞ்சலி கூறுவதில்லை. அது முடியாத காரியம் என்கிறார் அவர். நீங்கள் பொருளற்றுப் பேசிக்கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் கூறுவது சரிதான். ஆனால் அது சாத்தியமில்லை. ஏனெனில் அசுத்த மனத்துக்கு எடை உண்டு. கல்லைப் போல அது கட்டிக் கொண்டு தொங்குகிறது. அசுத்த மனத்தில் ஆசைகள் இருக்கின்றன - கோடிக்கணக்கான ஆசைகள், நிறைவு செய்யப்படாத, நிறைவு செய்யப்பட ஏங்குகிற, நிறைவு செய்யக் கோருகிற கோடிக்கணக்கான எண்ணங்கள் - நிறைவேறாத ஆசைகள் அதில் உள்ளன. அவற்றை உங்களால் எப்படிக் கைவிட முடியும்? ஏனெனில் முற்றுப் பெறாதது எப்போதும் முற்றுப் பெறுவதற்கே இயங்குகிறது.

ஒருபொருள் முற்றுப்பெற்றால் மட்டுமே அதை உங்களால் கைவிட முடியும் என்பதை நினைவில் கொள்ளுங்கள் என்கிறார் பதஞ்சலி. ஒன்றை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் ஓர் ஓவியராக இருந்து, நீங்கள் ஓவியம் தீட்டிக் கொண்டிருந்தால், ஓவியம் முற்றுப் பெறாத வரை உங்களால் அதை மறக்க முடியாது. அது தொடர்கிறது, உங்களைத் துரத்துகிறது. உங்களால் நன்றாகத் தூங்க முடியாது. அது அங்கே இருக் கிறது. மனத்தில் அதற்கொரு தொடர்ச்சி இருக்கிறது. அது இயங்குகிறது. முற்றுப்பெறச் செய்யும்படி அது கேட்கிறது. பூர்த்தியானதுமே அது தீர்கிறது. இனி அதை நீங்கள் மறந்துவிட முடிகிறது. முற்றுப் பெறச் செய்வதை நோக்கிய ஒரு போக்கு மனதில் இருக்கிறது. மனம் ஒரு நிறைவு விரும்பி / செம்மைவாதி. எனவே முற்றுப்பெறாத எதுவும் மனதில் ஒரு பதற்றமாக இருக்கிறது. மேற்கொண்டு சிந்திப்பதற்கு எதுவுமில்லாத அளவுக்கு சிந்தனை பூர்த்தியாகாதவரை சிந்திப்பதை உங்களால் நிறுத்த முடியாது என்கிறார் பதஞ்சலி. அப்போதுதான் அதை அப்படியே கைவிட்டு மறந்துவிட முடியும்.

ஸென்னில் இருந்தும் ஹெராக்ளிட்டசில் இருந்தும் முற்றிலும் நேர் எதிராக மாறுபட்ட வழிமுறை இது. முதல் **சமாதி**, பெயரளவிலான **சமாதி** - அதுவே **சம்பிரஞ்ஞாத சமாதி** அல்லது நுட்பமாகச் சுத்திகரிக்கப்பட்ட மனத்துடன் கூடிய **சமாதி**. இரண்டாவது **சமாதி**, **அசம்பிரஞ்ஞாத சமாதி** இது மனம் அற்ற **சமாதி**, ஆனால் மனம் மறைந்த நிலையிலும்கூட

எண்ணங்கள் இருக்கின்றன. மனம் அற்ற நிலையிலும் இறந்த காலத்தின் நுட்பமான விதைகள் உணர்வற்ற தளத்தில் தங்கி உள்ளன என்கிறார் பதஞ்சலி.

உணர்வு மனம் இரண்டாகப் பிரிக்கப்படுகிறது. முதலாவது, **சம்பிரஞ்ஞாதம்** - சுத்திகரிக்கப்பட்ட மனம். சுத்திகரிக்கப்பட்ட வெண்ணெயைப் போன்றதே இது. தனக்கே உரிய ஓர் அழகுடன் இருக்கிறது. ஆனாலும் அது இருக்கிறது. மேலும் எவ்வளவுதான் அழகாக இருந்தாலும் மனம் அசுத்தமானதுதான். எவ்வளவுதான் தூய்மையும் அமைதியும் ஆனதாக இருந்தாலும் மனம் என்னும் நிகழ்வே அசுத்த மானதாகும். விஷத்தை உங்களால் சுத்திகரிக்க முடியாது. அப்போதும் அது விஷமாகவே இருக்கும். மாறாக, அதை நீங்கள் மேலும் மேலும் சுத்திகரிக்கும் அளவுக்கு அது மேலும் மேலும் விஷத்தன்மையுள்ளதாக ஆகிறது. அது மிகமிக அழகானதாகத் தோன்றலாம். அதற்கே உரிய வண்ணங்களையும் சாயல்களையும் அது பெற்றிருக்கலாம், ஆனாலும் அப்போதும் அது அசுத்தமானதாகவே இருக்கிறது.

முதலில் சுத்திகரிக்கிறீர்கள், பின் கைவிடுகிறீர்கள். ஆனால் அப்போதும் பயணம் முற்றுப் பெறுவதில்லை. ஏனெனில் இதெல்லாம் உணர்வுள்ள மனத்தில் இருப்பவைதான். உணர்வற்ற மனத்தை நீங்கள் என்ன செய்வீர்கள்? உணர்வு மனத்தின் அடுக்குகளுக்குப் பின்புறமே, பரந்த ஓர் உணர்வற்ற கண்டமே இருக்கிறது. உணர்வற்ற மனத்தில் உங்கள் கடந்த பிறவிகள் அனைத்தின் விதைகளும் புதைந்துள்ளன.

பதஞ்சலி உணர்வற்ற மனத்தையும் இரண்டாகப் பிரிக்கிறார். **சபீஜ் சமாதி** என்கிறார் - உணர்வற்ற மனம் இருந்து, மனம் உணர்வுடன் கைவிடப்பட்ட நிலையில் அது விதைகளுடன் கூடிய **சமாதி** அதாவது **சபீஜ் சமாதி**. அந்த விதைகளும் எரிக்கப்பட்டதும் நீங்கள் பூரண நிலையை - **நிர்பீஜ் சமாதி** நிலையை அடைவீர்கள்: அதுதான் விதைகள் அற்ற **சமாதி.**

ஆக உணர்வு மனம் இரண்டு கட்டங்களாக பிரிக்கப்படுகிறது. பின் உணர்வற்ற மனம் இரண்டு கட்டங்களாகப் பிரிக்கப்படுகிறது. பின்வரும் நிர்பீஜ் சமாதியில் இறுதி பரவசம் இருத்தலுக்குள் மேலும் பிறவிகளை உங்களுக்குக் கொண்டுவரும் விதைகள் எதுவும் முளைவிடவும் பூக்கவும் உங்களுக்குள் இல்லாத நிலை... பின் நீங்கள் மறைந்து விடுகிறீர்கள்.

**இந்த சூத்திரங்களில் அவர் கூறுகிறார்,**

**சம்பிரஞ்ஞாத சமாதி என்பது சரியான பகுத்தறிவு, ஆழமான சிந்தனை, ஆனந்தம், சுத்த ஜீவன் பற்றிய உணர்வு ஆகிய வற்றுடன் கூடிய சமாதி ஆகும்.**

ஆனால் இது முதல் கட்டமே. பலரும் தவறாக பொருள் கொண்டு விடுகிறார்கள். இதுவே கடைசிக் கட்டம் என்று அவர்கள் நினைக்கிறார்கள். ஏனெனில் அது மிகவும் சுத்தமாக இருக்கிறது, நீங்கள் மிகவும் ஆனந்த மயமாக உணர்கிறீர்கள். மிகவும் மகிழ்ச்சியாக உணர்கிறீர்கள். எனவே இதற்குமேல் அடைவதற்கு எதுவுமில்லை என்றே நீங்கள் நினைக்கிறீர்கள். பதஞ்சலியை நீங்கள் கேட்டால் ஸென் கூறும் சட்டோரி என்பது முதல் சமாதி மட்டுமே என்பார் அவர். அது இறுதியானதல்ல, அறுதியானதல்ல அறுதியானது இன்னும் அதிக தொலைவில் உள்ளது.

அவர் பயன்படுத்துகிற சொற்களை துல்லியமாக ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க முடியாது. ஏனெனில் சமஸ்கிருதம் மிகவும் செம்மையான மொழி. எந்த மொழியும் அதன் அருகில்கூட வரமுடியாது. எனவே உங்களுக்கு அதை நான் விளக்க வேண்டி இருக்கிறது. அவர் பயன்படுத்தி உள்ள சொல் **விதர்க்கம்**. ஆங்கிலத்தில் இது 'ரீசனிங்' (வாதம், பகுத்தறிதல்) என மொழிபெயர்க்கப்படுகிறது. இது ஒரு மட்டமான மொழி பெயர்ப்பே **விதர்க்கம்** என்றால் என்னவென்று புரிந்துகொள்ள வேண்டும். **தர்க்கம்** என்றால் விவாதம். மூன்றுவிதமான தர்க்கங்கள் உள்ளன என்கிறார் பதஞ்சலி. ஒன்றை அவர் **குதர்க்கம்** என்கிறார் - இது எதிர்மறைக் கண்ணோட்டத்தை நோக்கிய வாதம்: எப்போதுமே இல்லை. மறுப்பு, சந்தேகம், இன்மைக்கொள்கை என்கிற ரீதியிலேயே எண்ணுவது இது.

நீங்கள் எதைச் சொன்னாலும், குதர்க்கத்தில் - எதிர்மறை தர்க்கத்தில் - வாழும் மனிதர், எப்போதுமே அதை எப்படி மறுப்பது, எப்படி அதை இல்லை என்பது என்றே எண்ணுகிறார். எதிர்மறையான தன்மையிலேயே அவர் பார்க்கிறார். அவர் எப்போதும் குறைகூறிக் கொண்டும் குமுறிக் கொண்டுமே இருக்கிறார். எப்போதுமே எங்காவது ஏதாவது கோளாறாக இருப்பதாகவே அவர் உணர்கிறார் - எப்போதுமே! அவரை நீங்கள் சரிசெய்யவே முடியாது. ஏனெனில் இதுதான்; அவரது பார்வைக் கோளாறாக இருக்கிறது. சூரியனைப் பார்க்கும்படி அவரிடம் நீங்கள் சொன்னால் அவர் சூரியனைப் பார்க்க மாட்டார். அதில் உள்ள கரும்புள்ளிகளையே பார்ப்பார். பொருள்களின் விஷயங்களின் இருண்ட பகுதியே எப்போதும் அவர் பார்வையில் படும். இதுதான் **குதர்க்கம்**. இது குதர்க்கம் - தவறான பகுத்தறிவு - ஆனால் (சரியான) பகுத்தறிவைப் போல தோன்றுகிறது.

இதுவே இறுதியாக நாத்திகத்துக்கு இட்டுச் செல்கிறது. அந்நிலையில் நீங்கள் கடவுளை மறுக்கிறீர்கள். ஏனெனில் நல்லவற்றை உங்களால் பார்க்க முடியாவிட்டால், வாழ்வின் ஒளிமயமான பகுதியை உங்களால் பார்க்க

முடியாவிட்டால் கடவுளை உங்களால் எப்படிப் பார்க்க முடியும்? அதை நீங்கள் மறுக்கவே செய்வீர்கள். அதன்பின் மொத்த இருத்தலும் இருண்டதாக ஆகிறது. பின் ஒவ்வொன்றுமே தவறாக ஆகிறது. உங்களைச் சுற்றிலும் நீங்கள் ஒரு நரகத்தை உருவாக்கிக் கொள்ள முடிகிறது. எல்லாமே தவறு என்றால் எப்படி உங்களால் மகிழ்ச்சியாக இருக்க முடியும்? ஆனால் இது உங்களின் சொந்த உருவாக்கம்தான். மேலும் எப்போதுமே உங்களால் ஏதாவது ஒரு குறைபாட்டைக் கண்டுபிடித்துவிட முடியும். ஏனெனில் வாழ்க்கை என்பதே இருமைகளால் ஆனதுதானே.

ரோஜாச் செடிகளில் அழகான பூக்கள் உள்ளன. ஆனால் அதில் முட்களும் உள்ளன. குதர்க்க மனிதன் முட்களையே எண்ணுவான். அதன் பின் இந்த ரோஜா என்பதே ஒரு மாயையாகத்தான் இருக்கவேண்டும். என்ற புரிதலுக்கு அவன் வருவான். அது இருக்க முடியாது. இத்தனை முட்களின் மத்தியில் - கோடிக்கணக்கான முட்களின் மத்தியில் - எப்படி ஒரு ரோஜாப்பூ இருக்க முடியும்? அது அசாத்தியம். அந்த சாத்தியத்துக்கே இடமிருக்க முடியாது. யாரோ ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

முல்லா நசுருதீன் மிகமிகச் சோகமாக இருந்தார். அவர் ஒரு மதகுருவிடம் போய், ''என்ன செய்யலாம்? என் பயிர் மறுபடியும் அழிந்துவிட்டது, மழை இல்லாமல் போய்விட்டது'' என்றார். மதகுரு சொன்னார்,'' அதற்காக இவ்வளவு கவலைப்படாதே நசுருதீன். வாழ்க்கையின் பிரகாசமான பக்கத்தைப் பார். நீ மகிழச்சியாக இருக்க முடியும்.. ஏனெனில் இன்னும் உன்னிடம் நிறைய இருக்கிறது. மேலும் நமக்கு வேண்டியதை எல்லாம் வழங்குபவரான கடவுளின்மேல் எப்போதும் நம்பிக்கை வை. வானத்துப் பறவைகளுக்குக் கூட அவர் உணவளிப்பதில்லையா? எனவே ஏன் நீ கவலைப்படுகிறாய்'' என்றார். அதற்கு மிகவும் கசப்புடன் நசுருதீன் ''என் கதிர்களில் இருந்துதான்! ஆம், என் கதிர்களில் இருந்துதான் வானத்துப் பறவைகளுக்கெல்லம் கடவுள் உணவளிக்கிறார்'' என்றார்.

அவரால் உட்கருத்தைப் பார்க்க முடியவில்லை. அவரது பயிர் இந்தப் பறவைகளால் அழிக்கப்பட்டுள்ளது. கடவுள் அவற்றுக்கு உணவளித் திருக்கிறார்...''ஆனால் அழிந்துபோனது **என்** பயிர்.'' இத்தகைய மனம் எப்போதும் ஏதாவது ஒரு குறையைக் கண்டுபிடித்துவிடும். இவர் எப்போதும் இறுக்கத்திலேயே இருப்பார். பதட்டம் அவரை ஒரு நிழலாகப் பின்தொடரும். இதையே பதஞ்சலி **குதர்க்கம்** - அதாவது எதிர்மறைத் தர்க்கம், எதிர்மறை பகுத்தறிவு / வாதம் என்கிறார்.

அடுத்தது தர்க்கம் அதாவது சாதாரண வாதம் / பகுத்தறிவு. சாதாரண தர்க்கம் எங்கும் இட்டுச் செல்வதில்லை. ஒரு வட்டமாகவே வளைய வருகிறது அது.. ஏனெனில் அதற்கு எந்த இலக்கும் இருப்பதில்லை. நீங்கள் பகுத்தது ஆய்ந்துகொண்டே ஆய்ந்துகொண்டே ஆய்ந்துகொண்டே போக முடியும். ஆனால் எந்த முடிவுக்கும் உங்களால் வரமுடியாது. ஏனெனில் தொடக்கத்தில் இருந்தே ஒரு இலக்கு/குறிக்கோள் இருந்தால் மட்டுமே பகுத்தறிவால் ஒரு முடிவுக்கு வர முடியும். ஒரு திசையில் நீங்கள் இயங்கினால் பின் நீங்கள் ஓரிடத்தைப் போய் அடைகிறீர்கள். எல்லாத் திசைகளிலும் நீங்கள் இயங்கினால் - சில சமயங்களில் தெற்கு நோக்கியும், சில சமயங்களில் கிழக்கு நோக்கியும், சில சமயங்களில் மேற்கு நோக்கியும் நீங்கள் இயங்கினால் - ஆற்றலை நீங்கள் வீணடிக்கிறீர்கள்.

குறிக்கோள் அற்ற வாதமே **தர்க்கம்** எனப்படுகிறது. எதிர்மறை மனோநிலையுடன் கூடிய வாமே **குதர்க்கம்** எனப்படுகிறது. உடன்பாட்டு மனோநிலையுடன் கூடிய வாதம் **விதர்க்கம்** எனப்படுகிறது. **விதர்க்கம்** என்றால் விசேஷ **தர்க்கம்** - சிறப்பு நிலை வாதம் என்று பொருள். எனவே **விதர்க்கமே, சம்பிரஞ்ஞாத சமாதியின்** முதல் கூறு. உள் அமைதியை அடைய விரும்புகிற மனிதர் விதர்க்கத்தில் - **விவாதத்தில்** பயிற்று விக்கப்பட வேண்டி இருக்கிறது. அவர் எப்போதும் பிரகாசமான பக்கத்தையே - உடன்பாடான பக்கத்தையே பார்க்கிறார். அவர் பூக்களையே எண்ணுகிறார்; முட்களை மறந்துவிடுகிறார். முட்கள் இல்லை என்பதில்லை. ஆனால் அவற்றை அவர் பொருட்படுத்ததுவதில்லை. பூக்களை நீங்கள் நேசித்து அவற்றையே எண்ணினால், முட்கள் இருப்பதையே, நீங்கள் நம்பமுடியாத ஒரு கட்டம் வருகிறது. ஏனெனில் இத்தனை அழகிய மலர்கள் நிலவும்போது முட்கள் எப்படி நிலவ முடியும்? அவை மாயையான ஒன்றாகத்தான் இருக்க வேண்டும்.

குதர்க்க மனிதன் முட்களையே எண்ணுகிறான். அப்போது பூக்கள் மாயமாகி விடுகின்றன. **விதர்க்க** மனிதன் பூக்களையே எண்ணுகிறான். அப்போது முட்கள் மாயமாகின்றன. எனவேதான். **விதர்க்கமே** முதல் கூறு என்கிறார் பதஞ்சலி. அதன்பிறகே ஆனந்தம் வாய்க்கும். **விதர்க்கம்** வழியாகவே ஒருவர் சுவர்க்கத்தை அடைகிறார். தனக்கான சொர்க்கத்தை ஒருவர் தானே தன்னைச் சுற்றிலும் படைத்துக் கொள்கிறார்.

உங்கள் நிலைபாட்டுக்கு ஒரு பெறுமானம் இருக்கிறது. உங்களைச் சுற்றிலும் நீங்கள் காணும் எதுவும் - அது சொர்க்கமானாலும் நரகமானாலும் - உங்களின் சொந்த உருவாக்கம்தான் அது. மேலும் உடன் பாட்டுப் பகுத்தறிவு மூலமாக மட்டுமே தர்க்கத்தையும் சாதாரண பகுத்தறிவையும்

நீங்கள் கடந்து செல்ல முடியும் என்கிறார் பதஞ்சலி. எதிர்நிலை மூலமாக ஒருபோதும் உங்களால் கடந்துபோக முடியாது. ஏனெனில் எந்த அளவுக்கு நீங்கள் இல்லை என்பீர்களோ அந்த அளவுக்கு நீங்கள் எல்லாவற்றையும் வேதனையாகவே - இன்மையாகவே - மறுக்கப்பட்டதாகவே காண்கி றீர்கள். பின், பையப்பைய நீங்கள் உள்ளுக்குள் ஓர் ஓயாத இல்லாமையாக - ஓர் இருண்ட இரவாக ஆகிறீர்கள். பூக்களே மலரமுடியாத வெறும் முட்கள் மட்டுமே உள்ள ஒரு பாலைவனமாக ஆகிறீர்கள்.

நீங்கள் ஆம் என்று சொல்லும்போது, மென்மேலும் அதிகமதிக விஷயங்களுக்கு ஆம் என்று சொல்ல முடிவதை நீங்கள் காண்பீர்கள். நீங்கள் ஆம் என்று சொல்லும்போது, நீங்கள் ஓர் ஆம். சொல்பவராக ஆகிறீர்கள். வாழ்க்கை உறுதி செய்யப்படுகிறது. நீங்கள் ஆம் என்று சொல்வதன் மூலம் நன்மையானது, அழகானது, உண்மையானது எல்லாவற்றையும் நீங்கள் உள்வாங்கிக் கொள்கிறீர்கள். 'ஆம்' என்பதே இறைமை உங்களுக்குள் நுழைவதற்கான வாயிலாக ஆகிறது. 'இல்லை' என்பதோ மூடிய வாயிலாக இருக்கிறது. கதவை மூடிவிட்டால் நீங்கள் ஒரு நரகமாக இருக்கிறீர்கள். கதவைத் திறந்து விட்டாலோ, எல்லா கதவுகளும் திறந்த நிலையில், ஜீவன் / இருத்தல் உங்களுக்குள் பாய்கிறது. நீங்கள் புத்தம் புதிதாக, இளமையாக, உயிரோட்டமாக இருக்கிறீர்கள். ஒரு பூவாக ஆகிறீர்கள்.

**விதர்க்கம், விசாரம், ஆனந்தம்:** விதர்க்கம் அதாவது உடன்பாட்டுப் பகுத்தறிவோடு நீங்கள் இசைந்தால் அப்போதுதான் நீங்கள் ஒரு சிந்தனையாளராக முடியும், அதற்குமுன் ஒருபோதுமில்லை. அப்போதே சிந்தனை எழுகிறது. சிந்தனைக்கு மிகவும் மாறுபட்ட ஒரு பொருளைத் தருகிறார் அவர். நீங்கள் சிந்திப்பதாகவே நீங்கள் நினைக்கிறீர்கள். ஆனால் பதஞ்சலி அதை ஏற்க மாட்டார். உங்களிடம் எண்ணங்கள் இருக்கின்றன, ஆனால் சிந்தனை இல்லை என்கிறார் அவர். எனவேதான் அவரை மொழி பெயர்ப்பது கடினம் என்கிறேன் நான்.

உங்களிடம் எண்ணங்கள் உள்ளன, கும்பலைப் போல் அலைந்து திரியும் எண்ணங்களே உள்ளன, ஆனால் சிந்தனை இல்லை என்கிறார் அவர். உங்கள் இரண்டு எண்ணங்களுக்கு இடையில் எந்த உள் ஒட்டமும் - உள்தொடர்பும் இல்லை. அவை வேரில்லாத விஷயங்களாகவே இருக் கின்றன. அவற்றில் உள் திட்டம் எதுவும் இல்லை. உங்களின் எண்ணங்கள் ஒரு குழப்பமாகவே இருக்கின்றன. அவை ஓர் ஒழுங்கமைப்பாக இல்லை. அவற்றில் எந்த உள் - ஒழுங்கும் இல்லை. இது நீங்கள் பார்க்கும் ஓர் மணிமாலையைப் போன்றதே. அதில் மணிகள் இருக்கின்றன. அவற்றின் ஊடாகச் செல்லும் கண்ணுக்குத் தெரியாத நூலால் அவை

கோக்கப்பட்டுள்ளன. எண்ணங்கள் மணிகள் போன்றவை. சிந்தனையே நூல். உங்களிடம் மணிகள் இருக்கின்றன. அதிகமாகவே இருக்கின்றன. உண்மையில் உங்கள் தேவைக்கும் அதிகமாகவே இருக்கின்றன. ஆனால் அவற்றின் உள்ளே இடைவிடாது செல்லும் நூல் ஏதும் இல்லை. அந்த உள்நூலையே பதஞ்சலி ஆழந்த சிந்தனை - **விசாரம்** என்கிறார். உங்களிடம் எண்ணங்கள் உள்ளன, ஆனால் சிந்தனை இல்லை. இது இப்படியே தொடரும்போது நீங்கள் பைத்தியம் ஆவீர்கள். கோடிக்கணக்கான எண்ணங்கள் இருந்தும் சிந்தனை இல்லாத மனிதனே பைத்தியக்காரன். **சம்பிரஞ்ஞாத சமாதி** என்னும் நிலையில் எண்ணங்கள் இருப்பதில்லை; ஆனால் சிந்தனை செம்மையாக இருக்கிறது. இந்த பாகுபாட்டைப் புரிந்துகொள்ள வேண்டும்.

உங்கள் எண்ணங்கள் - முதலாவதாக, உங்களுடையவை அல்ல. நீங்கள் சேகரித்தவையே அவை. ஓர் இருண்ட அறைக்குள் சில நேரங்களில் கூரையில் இருந்து ஓர் ஒளிக்கற்றை வரும்போது அந்த ஒளிக் கற்றையில் கோடிக்ககணக்கான தூசித் துகள்கள் மிதப்பதை நீங்கள் பார்க்கிறீர்கள். உங்களுக்குள் நான் ஊடுருவிப் பார்க்கும்போதும் இதே நிகழ்வையே காண்கிறேன். கோடிக்கணக்கான தூசித் துகள்கள் - அவற்றை நீங்கள் எண்ணங்கள் என்கிறீர்கள். அவை உங்களுக்குள்ளும் வெளியும் போய்வந்து கொண்டிருக்கின்றன. ஒரு தலைக்குள் இருந்து இன்னொன்றுக் குள் அவை நுழைகின்றன; அப்படியே போகின்றன. தமக்கே உரிய ஆயுள்காலத்தை அவை கொண்டுள்ளன.

எண்ணமும் ஒரு பொருள்தான். அதற்கு அதற்கே உரிய இருந்தல் நிலை/ வாழ்நிலை இருக்கிறது. ஒரு மனிதர் இறந்ததும் அவரது பைத்தியக்கார எண்ணங்கள் எல்லாம் உடனடியாக வெளிவிடப்படு கின்றன. அவை வேறு ஏதாவது ஒரு வெளியில் தமக்கான புகலிடத்தைத் தேடிக் கண்டுபிடிக்கத் தொடங்குகின்றன. அவற்றுக்கு மிக அருகில் இருப்பவர்களுக்குள் அவை புகுகின்றன. அவை கிருமிகளைப் போன்றவை. அவற்றுக்கு அவற்றுக்கே உரிய வாழ்நாள் இருக்கிறது. நீங்கள் உயிரோடிருக்கும் போதும் நீங்கள் உங்கள் எண்ணங்களை உங்களைச் சுற்றிலும் எல்லா இடத்திலும் தெளித்துப் பரப்பிக் கொண்டே இருக்கிறீர்கள். நீங்கள் பேசும்போது உங்கள் எண்ணங்களை வெளிப்படையாகவே மற்றவர்கள் மேல் வீசி எறிகிறீர்கள். ஆனால் நீங்கள் மவுனமாக இருக்கும்போதும் நீங்கள் உங்களைச் சுற்றிலும் எண்ணங்களை வெளி யிட்டுக் கொண்டே இருக்கிறீர்கள். ஆனால் அவை உங்களுடையவை அல்ல என்பது முதல் விஷயம்.

உடன்பாட்டுப் பகுத்தறிவு உள்ளவர் தனக்குச் சொந்தமில்லாத எல்லா எண்ணங்களையும் உதறிவிடுவார். அவை அசலானவை அல்ல. அவற்றை அவர் தன் சொந்த அனுபவத்தின் மூலமாக கண்டடைந்திருக்கவில்லை. அவர் அவற்றை அடுத்தவர்களிடம் இருந்து திருடி இருக்கிறார், இரவல் வாங்கி இருக்கிறார். அவை அழுக்கடைந்தவை. பலபேரின் கைகளிலும் தலைகளிலும் இருந்து வந்தவை. சிந்தனையாளர் இரவல் வாங்க மாட்டார். தனக்கே உரிய புத்தம்புதிய கருத்தைக் கொண்டிருக்கவே அவர் விரும்புவார். நீங்கள் உடன்பாடானவர் என்றால், அழகையும் உண்மையையும் நன்மையையும் மலர்களையும் நீங்கள் பார்த்தால், காரிருளில்கூட அதை அடுத்துவர நெருங்கிக் கொண்டிருக்கும் காலைப் பொழுதை உங்களால் காண முடிந்தால் நீங்கள் சிந்திக்க முடிகிறவர் ஆவீர்கள்.

அதன்பின் உங்கள் சொந்த எண்ணங்களை நீங்கள் உருவாக்க முடியும். ஆகவே நீங்களே சொந்தமாக உருவாக்கிய எண்ணம் உண்மை யான உள்ளாற்றல் உள்ளதாகவே இருக்கிறது: அதற்கு அதற்கே உரிய ஓர் ஆற்றல் இருக்கிறது.நீங்கள் இரவல் வாங்கியுள்ள இப்போதுள்ள கருத்துகள் ஏறக்குறைய இறந்துபோனவை. ஏனெனில் அவை பயணம் செய்து வந்திருக்கின்றன. லட்சக்கணக்கான ஆண்டுகளாகப் பயணம் செய்து வந்திருக்கின்றன. அவற்றின் தோற்றுவாய் தொலைந்து போய்விட்டது. தம் மூலத்துடனான அனைத்து தொடர்பையும் அவை இழந்துவிட்டுள்ளன. சுற்றிலும் எங்கும் மிதக்கும் தூசு போன்றவையே அவை. அவற்றை நீங்கள் கைப்பற்றுகிறீர்கள். சில சமயங்களில் அவற்றைக் குறித்த உணர்வுள்ளவ ராகவும் நீங்கள் ஆகிறீர்கள். ஆனால் உங்கள் விழிப்புணர்வு எத்தகைய தாக இருக்கிறது என்றால் விஷயங்களை ஊடுருவிப் பார்க்க அதனால் முடிவதில்லை...

சில நேரங்களில் நீங்கள் உட்கார்ந்து கொண்டு இருக்கிறீர்கள். திடீரென எந்தக் காரணமும் இன்றி நீங்கள் சோகமாக உணர்கிறீர்கள். அதற்கான காரணத்தை உங்களால் கண்டுபிடிக்க முடிவதில்லை. சுற்றிலும் பார்க்கிறீர்கள் - எந்தக் காரணமும் இல்லை. எதுவும் அங்கு இல்லை. எதுவும் நிகழ்ந்திருக்கவில்லை. இருக்கிற படியேதான் இருக்கிறீர்கள் நீங்கள். அப்போது திடீரென ஒரு சோகம் உங்களை ஆட்கொள்கிறது. ஓர் எண்ணம் கடந்து செல்கிறது. அதன் வழியில் நீங்கள் இருக்கிறீர்கள், அவ்வளவுதான். இது ஒரு தற்செயல்.. எண்ணமானது மேகத்தைப் போல கடந்து கொண்டிருக்கிறது - யாரோ வெளியிட்ட ஓர் சோக எண்ணம் அது. இது ஒரு தற்செயலே. நீங்கள் அதனால் பீடிக்கப்படுகிறீர்கள். சில நேரங்களில் ஒரு எண்ணம் திரும்பத் திரும்ப வருகிறது. அதையே ஏன்

தொடர்ந்து நீங்கள் எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். என்பதற்கான காரணத்தை உங்களால் காண முடிவதில்லை. அது அபத்தமாகக் காணப்படுகிறது! அது பயனற்றதாகத் தெரிகிறது. ஆனால் அது குறித்து உங்களால் எதுவும் செய்ய முடிவதில்லை. அது உங்கள் வாசலைத் தட்டிக் கொண்டே போகிறது. ''எங்களை எண்ணு'' என்கிறது அது. எண்ணமானது கதவைத் தட்டியபடி காத்திருக்கிறது. ''இடம் கொடு, நான் உள்ளே வர விரும்புகிறேன்'' என்கிறது அது.

ஒவ்வோர் எண்ணத்துக்கும் அதற்கே உரிய வாழ்க்கை இருக்கிறது. அது இயங்குகிறது. அதற்கு அதிக ஆற்றல் இருக்கிறது. நீங்களோ மிகவும் விழிப்புணர்வு அற்று இருப்பதால் மிகவும் ஆற்றல் குறைந்தவராக இருக்கிறீர்கள். எனவே எண்ணங்களால் நீங்கள் இயக்கப்படுகிறீர்கள். உங்கள் மொத்த வாழ்க்கையுமே இத்தகைய தற்செயல் விபத்துகள் நிறைந்ததாகவே இருக்கிறது. நீங்கள் சிலரை சந்திக்கிறீர்கள்; உடனே உங்கள் மொத்த வாழ்க்கைப் பாணியுமே மாறுகிறது. ஏதோ ஒன்று உங்களுக்குள் புகுகிறது. உடனே நீங்கள் அதனால் ஆட்கொள்ளப்பட்டவ ராக ஆகிறீர்கள். நீங்கள் எங்கே சென்று கொண்டிருக்கிறீர்கள் என்பதையே மறக்கிறீர்கள். உங்கள் திசையை நீங்கள் மாற்றுகிறீர்கள். இந்த புதிய எண்ணத்தை நீங்கள் பின்பற்றுகிறீர்கள். ஆயின் இதுவோ ஒரு தற்செயல். நீங்கள் யாவரும் சிறு குழந்தைகளைப் போலவே இருக்கிறீர்கள்.

இது சிந்தித்தல் ஆகாது என்கிறார் பதஞ்சலி. சிந்தனை அற்ற நிலையே இது. இது சிந்தனை அல்ல. நீங்கள் ஒரு கும்பலாக மந்தையாக இருக்கி றீர்கள். சிந்திக்க முடிவதான ஒரு மையத்தை உங்களுக்குள் நீங்கள் பெற்றிருக்கவில்லை. விதர்க்கம் எனப்படும் சரியான பகுத்தறிவு என்னும் ஒழுங்கிற்குள் ஒருவர் நுழையும்போது, பையப்பைய அவர் சிந்திக்கும் திறன் உள்ளவராக ஆகிறார். சிந்தனை என்பது ஒரு திறன். எண்ணங்கள் என்பது அப்படி அல்ல. எண்ணங்களைப் பிறரிடம் இருந்து பெற்றுக் கொள்ள முடியும். சிந்தனையையோ ஒருபோதும் அப்படி பிறரிடமிருந்து பெற்றுக்கொள்ள முடியாது. சிந்தனையை நீங்களாகவேதான் கற்றுக்கொள்ள வேண்டி உள்ளது.

இதுதான் பழைய இந்திய சிந்தனைப் பள்ளிகளுக்கும் நவீன பல்கலைக் கழகங்களுக்கும் இடையிலான வேறுபாடு. இன்றைய பல்கலைக் கழகங்களில் நீங்கள் எண்ணங்களையே பெற்றுக் கொண்டிருக்கிறீர்கள். பழங்கால கல்வி நிலையங்களில், ஞானப்பள்ளிகளில், அவர்கள் எண்ணங்களை அல்ல, சிந்திப்பதையே கற்றுக் கொடுத்தார்கள்.

சிந்தனை என்பது உங்கள் உள்ளுயிரின் ஒரு தன்மை. சிந்தித்தல் என்றால் என்ன பொருள்? உங்கள் உணர்வைத் தக்க வைத்துக் கொள்ளுதல் என்று பொருள். விழிப்பாகவும் உன்னிப்பாகவும் தொடர்ந்து இருப்பது என்று பொருள். ஒரு சிக்கலை நேருக்குநேர் எதிர்கொள்வது என்று பொருள். ஒரு சிக்கல் அதோ இருக்கிறது. நீங்கள் உங்களின் மொத்த விழிப்புணர்வுடனும் அதை எதிர்கொள்கிறீர்கள். அப்போது அங்கே அதற்கு ஒரு விடை, ஒரு பதில், எழுகிறது. இதுவே சிந்தனை ஆகும். ஒரு கேள்வி முன் வைக்கப்படுகிறது. அதற்கு உங்களிடம் ஏற்கனவே ஆயத்த மான ஒரு பதில் இருக்கிறது. அதைக் குறித்து நீங்கள் யோசிக்கத் தொடங்குவதற்கும் முன்பேகூட பதில் வெளி வந்துவிடுகிறது. ''கடவுள் உண்டா?'' என்று ஒருவர் கேட்கிறார். அவர் கேட்டு முடிப்பதற்குள்ளாகவே ''உண்டு'' என்கிறீர்கள் நீங்கள். உங்கள் மரமண்டையை நீங்கள் ஆமென்று ஆட்டுகிறீர்கள். ''ஆம், இருக்கிறார்,'' என்கிறீர்கள்.

இது உங்கள் சிந்தனையா? இந்த சிக்கலைக் குறித்து இப்போதுதான் நீங்கள் சிந்தித்தீர்களா? அல்லது ஏற்கனவே ஓர் ஆயத்தமான பதிலை, எண்ணப்பதிவை உங்கள் நினைவகத்தில் நீங்கள் சுமந்து கொண்டிருக்கி றீர்களா? யாரோ அதை உங்களுக்குத் தந்தார்கள் - உங்கள் பெற்றோர்களோ, உங்கள் ஆசிரியர்களோ, உங்கள் சமுதாயமோ - யாரோ அதை உங்க ளுக்குத் தந்தார்கள். நீங்கள் அதை ஒரு விலைமதிப்பற்ற பொக்கிஷம் போல் சுமந்துகொண்டிருக்கிறீர்கள். அந்த நிலையில் இருந்தே உங்கள் பதில் வருகிறது.

சிக்கலை எதிர்கொள்ளும் ஒவ்வொருமுறையும் சிந்தனையாளர் தன் உணர்வைப் பயன்படுத்துகிறார். அவர் அப்பிரச்சினையை நேருக்குநேர் சந்திக்கிறார். அப்போது அவருக்குள் ஒரு சிந்தனை எழுகிறது. அது நினைவின் பகுதி அல்ல. இதுதான் வேறுபாடு: எண்ணுகிற மனிதன் நினைவின் மனிதன். அவனிடம் சிந்திக்கும் திறன் இருப்பதில்லை! புத்தம்புதிய கேள்வி ஒன்றை அவனிடம் நீங்கள் கேட்டால், அவன் குழம்பி விடுவான். அவனால் பதில் தர முடியாது. அவனுக்கு விடைதெரிந்த ஒரு கேள்வியை அவனிடம் நீங்கள் கேட்டால் அவன் உடனடியாக விடையளிப்பான். இதுதான் ஒரு பண்டிதனுக்கும் ஒரு பகுத்தறிவாளருக் கும் (சிந்தனையாளருக்கும்) இடையிலான வேறுபாடு.

விதர்க்கம்/ சரியான பகுத்தறிவு, விசாரத்துக்கு - ஆழமான சிந்தனைக்கு இட்டுச் செல்கிறது என்கிறார் பதஞ்சலி. விசாரம் - ஆழமான சிந்தனை, ஆனந்தத்துக்கு - பேரின்பத்துக்கு இட்டுச் செல்கிறது. இதுதான் முதல் ஒரு கணம் நிகழும் காட்சி. ஆனால் இது கணநேரக் காட்சிதான். அது

வரும், பின் மறைந்துவிடும். நீண்ட நேரம் அதை நீங்கள் பிடித்து வைத்திருக்க முடியாது. அது ஒரு கணநேரத்துக் காட்சியாகவே இருக்கிறது. ஒரு கணம் ஒரு மின்னல் தோன்றியதும் இருளனைத்தும் மறைந்துவிடுவதை நீங்கள் காண்பது போன்றதே இது - ஆனால் மறுபடியும் அங்கே இருள் இருக்கிறது. மேகங்கள் விலகி ஒரு கணம் நீங்கள் நிலவைப் பார்ப்பது போன்றதே இது - ஆனால் மறுபடியும் அங்கே மேகங்கள் இருக்கின்றன.

அல்லது ஒரு வெயில் நாளில் காலையில் இமயமலைகளின் அருகில் ஒரு கணம் அதன் உயர்ந்த சிகரமான கவுரிசங்கர் காட்சி அளிப்பது போன்றது இது - ஆனால் மறுபடியும் அங்கே பனிமூட்டம் வந்து விடுகிறது. மேகங்கள் சூழ்கின்றன, சிகரம் மறைந்துவிடுகிறது. இத்தகையதே சட்டோரி. எனவேதான் சட்டோரியை ஒரு போதும் சமாதி என மொழிபெயர்க்கப் பார்க்காதீர்கள். சட்டோரி என்பது கணநேரக் காட்சி. அது அடையப் பெற்ற பின்பும் செய்ய வேண்டியது நிறைய இருக்கிறது. உண்மையில் முதல் சட்டோரி - கணநேர தரிசனம் கிடைத்த பிறகுதான் மெய்யான வேலை தொடங்குகிறது. ஏனெனில் அனந்தத்தை நீங்கள் அடைந்து விட்டிருக்கி றீர்கள். இப்போது மெய்யாகவே நம்பகமான தேடல் தொடங்குகிறது. அதற்குமுன் வரை அது வெறுமனே ஏனோதானோ ஆக, இரண்டும் கெட்டான் ஆக இருந்தது. ஏனென்றால் நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள், எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள், என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதுபற்றி அதுவரை உங்களுக்கே உண்மையில் நம்பிக்கை, நிச்சயப்பாடு இருக்கவில்லை.

முன்பெல்லாம் அது உங்களுடைய ஒரு நம்பிக்கையாக, மட்டுமே இருந்தது. முன்பெல்லாம் உங்களுக்கு அதைக் காட்டுவதற்கும் திரும்பத் திரும்ப அதனிடம் உங்களைத் திருப்பிக் கொண்டு வருவதற்கும் ஓர் ஆசான் தேவைப்பட்டார். ஆனால் ஒருமுறை சட்டோரி நிகழ்ந்துவிட்ட பிறகு, அது ஒரு நம்பிக்கையாக மட்டும் நிற்பதில்லை. அது ஓர் அறிதலாக ஆகிவிட்டிருக்கிறது. இனி விசுவாசம் என்பது முயற்சியின் விளைவாக வரவேண்டியதில்லை. இப்போது நீங்கள் விசுவாசிப்பது, உங்கள் சொந்த அனுபவமே, அதை உங்களுக்குக் காட்டி இருப்பதால்தான். முதல் (கணக்) காட்சிக்குப் பிறகே மெய்யான தேடல் தொடங்குகிறது. அதற்குமுன் நீங்கள் வெறுமனே சுற்றிச்சுற்றி வந்து கொண்டிருந்தீர்கள். சரியான பகுத்தறிவு ஆழமான சிந்தனைக்கு இட்டுச் செல்கிறது. ஆழ்ந்த சிந்தனை ஆனந்த மயத்துக்கு இட்டுச் செல்கிறது. இந்த ஆனந்த மயமமோ தூய இருத்தலுக்கு இட்டுச் செல்கிறது.

எதிர்மறை மனம் எப்போதும் அகங்காரியாகவே இருக்கிறது. இருத்தலின் அசுத்தநிலை ஆகும். அது ''நான்'' என நீங்கள் உணர்கிறீர்கள்.

ஆனால் ''நான்''ஐ நீங்கள் உணர்வது தவறான காரணங்களுக்காகவே. கவனித்துப் பாருங்கள். எதிர்மறையில் உயிர்பிழைப்பது அகங்காரம். இல்லை - முடியாது என நீங்கள் சொல்லும் போதெல்லாம் அகங்காரம். எழுகிறது. ஆம் - உண்டு என நீங்கள் சொல்லும் போதெல்லாம் அகங்காரம் எழமுடிவதில்லை. ஏனெனில் அகங்காரத்துக்கு போராட்டம் தேவைப்படு கிறது, அகங்காரத்துக்கு சவால் தேவைப்படுகிறது: யாருக்காவது எதற்காவது எதிராக தன்னை நிறுத்திக் கொள்வது அகங்காரத்துக்குத் தேவைப்படுகிறது. த்னியாக அது நிலவ முடியாது. அதற்கு இருமை தேவை. ஓர் அகங்காரன் எப்போதும் யாருடனாவது எதனுடனாவது, ஏதாவது சூழ்நிலையுடன் சண்டைபோட சாக்குப் போக்குத் தேடிக் கொண்டிருக்கிறான். இல்லை என்று சொல்ல, வெற்றிக் கொள்ள, போட்டியிட்டு வெல்ல ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தை எப்போதும் எதிர்நோக்கிக் கொண்டு இருக்கிறான்.

அகங்காரம் வன்முறையானது. இல்லை என்பதுவே மிகவும் நுட்பமான ஒரு வன்முறையாகத்தான் இருக்கிறது. சாதாரணமான காரியங்களில் நீங்கள் இல்லை - முடியாது என்று சொல்லும் போதுகூட அங்கே அகங்காரம் எழுகிறது. ''நான் விளையாட போகட்டுமா?'' என்று ஒரு குழந்தை தன் தாயிடம் கேட்கிறது. அதற்கு தாய், ''கூடாது!'' என்கிறாள். இதில் பெரிதாக ஒன்றுமில்லை. இருந்தாலும் தாய் ''கூடாது!'' என்று சொல்லும் போது தன்னை ஓர் ஆளாக உணர்கிறாள். ரயில் நிலையத்துக்குப் போய் ஒரு பயணச்சீட்டு கேட்கிறீர்கள். எழுத்தர் உங்களை ஏறிட்டே பார்ப்பதில்லை. வேலையே இல்லாவிட்டாலும் ஏதோ வேலையாக இருப்பது போல் காட்டிக் கொள்கிறார் அவர். ''கொஞ்சம் பொறு!'' என்கிறார். அதில் அவர் தன்னை ஓர் ஆளாக உணர்கிறார். எனவேதான் எல்லா அலுவலகங்களிலும் உங்களுக்கு இல்லை என்ற பதிலே கிடைக்கிறது. சரி - ஆம் - ஆகட்டும் என்பது அரிதாக இருக்கிறது. மிகவும் அரிதாக இருக்கிறது. நீங்கள் எப்பேர்ப்பட்டவராக இருந்தாலும் ஒரு சாதாரண எழுத்தர் உங்களிடம் இல்லை என்று சொல்லிவிட முடிகிறது. அதில் அவர் தன்னை அதிகாரம் - ஆற்றல் உள்ளவராக உணர்கிறார்.

இல்லை என்பது உங்களுக்கு ஓர் அதிகார உணர்வைத் தருகிறது என்பதை நினைவில் கொள்ளுங்கள். முற்றிலும் அவசியப்பட்டால் ஒழிய ஒருபோதும் இல்லை என்று சொல்லாதீர்கள். முற்றிலும் தேவைப்படும் காலத்திலும்கூட அகங்காரம் எழாத வகையில், ஓர் உடன்பாடான முறையில் அந்த இல்லை என்பதைச் சொல்லுங்கள். உங்களால் அப்படிச் சொல்ல முடியும் - இல்லை என்பதைக்கூட, அது 'ஆம்' என்று தொனிக்கும் - தோன்றும் வகையில் சொல்ல முடியும். ஆம் என்பதைக்கூட அது 'இல்லை' என்று தொனிக்கும் - தோன்றும் வகையில் உங்களால் சொல்ல முடியும் அது

தொனியைப் பொறுத்தது. அது தோரணையைப் பொறுத்தது. அது பாவனையைப் பொறுத்தது.

ஒன்றை நினைவில் கொள்ளுங்கள் - சாதகர்களைப் பொறுத்தவரை ஆம் என்பதன் வாசத்திலேயே நீங்கள் தொடர்ந்து வாசம்செய்ய வேண்டி இருக்கிறது என்பதை இடையறாமல் நினைவில் கொள்ள வேண்டும். அதுதான் விசுவாசியின் தன்மை. அவர் ஆம் என்கிறார். இல்லை - முடியாது என்று சொல்லத் தேவைப்படும் தருணங்களிலும் கூட அவர் 'அப்படியே ஆகட்டும்' என்கிறார். வாழ்க்கையில் எந்த முரணையும் - பகையையும் - எதிர்ப்பையும் அவர் பார்ப்பதில்லை. அனைத்தையும் அவர் அங்கீகரிக்கிறார். தன் உடலை அவர் ஏற்றுக் கொள்கிறார். தன் மனத்தை அவர் ஏற்றுக் கொள்கிறார். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்றுக்கும் அவர் சரி என்கிறார். மொத்த இருத்தலுக்கும் அவர் சரி என்கிறார். நிபந்தனைகள் அற்ற, ஐயத்துக்கு இடமற்ற ஆம் - சரி என்பதை உங்களால் சொல்ல முடியும்போது இறுதி மலர்ச்சி நிகழ்கிறது. திடீரென அகங்காரம் விழுகிறது. அதனால் நிற்க முடிவதில்லை. மறுப்பென்னும் முட்டுக்கோல்கள் அதற்குத் தேவை. எதிர்மறை மனோபாவம் அகங்காரத்தை உருவாக்குகிறது. உடன்பாட்டு மனோபாவத்தில் அகங்காரம் கழன்று விழுகிறது. அப்போது ஜீவன் தூயதாயிருக்கிறது.

சமஸ்கிருதத்தில் 'நான்' என்பதற்கு **அகங்காரம், அஸ்மிதா** என்னும் இரு சொற்கள் உள்ளன. இவற்றை மொழிபெயர்ப்பது கடினம். இல்லை என்று சொல்வதில் இருந்து வருகிற தவறான 'நான்' உணர்வே **அகங்காரம்** . ஆம், சரி என்று சொல்வதில் இருந்து வருகிற சரியான 'நான்' உணர்வே அஸ்மிதா. இரண்டுமே 'நான்' தான். ஒன்று அசுத்தமானது. இல்லை என்பது அசுத்தம். நீங்கள் மறுக்கிறீர்கள். நாசமாக்குகிறீர்கள். இல்லை என்பது அழிவுபயப்பது. மிகவும் நுட்பமான அழிவுவேலை அது. ஒருபோதும் அதை பயன்படுத்தாதீர்கள். கூடுமான வரை அதைக் கைவிடுங்கள். நீங்கள் விழிப்பாக இருக்கும்போதெல்லாம் அதைப் பயன்படுத்தாதிருங்கள். அதற்குப் பதிலாக ஒரு சுற்றிவளைத்த முறையைக் கண்டுபிடிக்க முயலுங்கள். அதை நீங்கள் சொல்ல வேண்டி வரும்போதும் கூட, அது ஆம் என்று தோற்றமளிக்கும் ஒருமுறையில் அதைச் சொல்லுங்கள். மெது மெதுவாக நீங்கள் அதற்கு இசைந்தவர் ஆகிறீர்கள். 'ஆம்' என்பதன் மூலமாக அப்பேர்ப்பட்ட ஒரு தூய்மை உங்களிடம் வந்து கொண்டிருப்பதை நீங்கள் உணர்வீர்கள்.

அடுத்து **அஸ்மிதா**. இதை அகங்காரமற்ற அகங்காரம் எனலாம். யாருக்கு எதிராகவும் 'நான்' என்ற உணர்வு இதில் இருப்பதில்லை. யாருக்கு எதிராகவும் முன்னிறுத்தாமல் தன்னைத்தானே உணரும் நிலை இது. உங்கள்

முழுமையான ஏகாந்தத்தை, முழுமையான ஒளித்தன்மையை, மிகத்தூய நிலையை மட்டுமே உணர்த்துவது இது. ''நான் இருக்கிறேன்'' என்று நாம் சொல்லும்போது ''நான்'' என்பது **அகங்காரம்**. ''இருக்கிறேன்'' என்பது **அஸ்மிதா**, ஜீவனைப் பற்றிய உணர்வு மட்டுமே: அத்துடன் ''நான் என்பது சேர்ந்திருப்பதில்லை; இருந்தலை - உயிரை உணர்வதுமட்டுமே. ஆம் என்பது அழகானது. இல்லை என்பதோ அசிங்கமானது.

**அசம்பிரஞ்ஞாத சமாதியில் அனைத்தும் விதமான மன செயல்பாடுகளும் நின்றுள்ளன; புலப்படாத பதிவுகளை மட்டுமே மனமானது தக்க வைத்திருக்கிறது.**

**சம்பிரஞ்ஞாத சமாதி** என்பது முதல் கட்டம். சரியான பகுத்தறிவு, சரியான சிந்தனை, ஆனந்த நிலை, ஆனந்தத்தின் கணநேரக் காட்சி, இருக்கிறேன் என்னும் உணர்வு - அகங்காரம் ஏதுமற்ற தூய எளிய இருத்தல் உணர்வு - அது **அசம்பிரஞ்ஞாத சமாதி**க்கு இட்டுச் செல்கிறது முதலாவது பரிசுத்தம். இரண்டாவது மறைவு. ஏனெனில் மிகவும் தூயதும்கூட அது இருப்பதால் தூய்மையற்றதாகவே ஆகிறது. ''நான்'' என்பது தவறானது. ''இருக்கிறேன்'' என்பதும் தவறானதுதான் ''நான்'' என்பதைவிட அது பரவாயில்லை, ஆனால் ''இருக்கிறேன்'' என்பதும் மறைகிற போதுதான் - அகங்காரம் மட்டுமல்ல, அசுமிதையும் மறைகிற போதுதான் - அதைவிட மேலான சாத்தியப்பாடு வருகிறது. நீங்கள் தூய்மை அற்றவராக இருக்கிறீர்கள். பின் நீங்கள் தூய்மையானவராக ஆகிறீர்கள். ஆனால் ''நான் தூய்மையாக இருக்கிறேன்'' என்று நீங்கள் உணரத் தொடங்கினால், அந்த தூய்மையே தூய்மையின்மையாக ஆகிவிட்டிருக் கிறது. எனவே அதுவும் மறைய வேண்டி இருக்கிறது.

அசுத்தத்தின் மறைவு சம்பிரஞ்ஞாதம். சுத்தமும் மறைந்து விட்டால் அது **அசம்பிரஞ்ஞாதம்**. இதில் மனத்தின் எல்லா விதமான செயல்பாடுகளும் நிறுத்தப்படுகின்றன. முதலாவது நிலையில் எண்ணங்கள் மறைகின்றன. இரண்டாவது நிலையில் சிந்தனையும் மறைகிறது. முதல் நிலையில் முட்கள் மறைகின்றன. இரண்டாவது நிலையில் பூக்களும் மறைகின்றன. முதலாவது நிலையில் இல்லை என்பது மறைகிறபோது ஆம் மிச்சமிருக்கிறது. இரண்டாவது நிலையில் ஆமும் மறைகிறது. ஏனென்றால் ஆம் என்பதும் இல்லையுடன் உறவுடையதே. இல்லை என்பது இல்லாமல் ஆம் என்பதை மட்டும் எப்படி உங்களால் இருத்தி வைக்க முடியும்? அவை இரண்டும் சேர்ந்தே இருக்கின்றன. அவற்றை உங்களால் பிரிக்க முடியாது. இல்லை என்பது மறைந்துவிட்டால் பின் எவ்வாறு உங்களால் ஆம் என்று சொல்ல முடியும்? மிக ஆழத்தில் ஆம் என்பது இல்லைக்கு இல்லை என்று சொல்வதாகும். மறுப்பின்

மறுப்புதான். ஆனாலும் ஒரு நுட்பமான மறுப்பு என்பது நிலவுகிறது. ஆம் என்று நீங்கள் சொல்லும் போது நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கி றீர்கள்? இல்லை என்று நீங்கள் சொல்வதில்லை. ஆனால் உள்ளுக்குள் இல்லை என்பது இருக்கிறது. அதை நீங்கள் வெளிக்கொண்டு வருவ தில்லை. அது புலப்படாமல் மறைந்திருக்கிறது.

உங்களுக்குள் 'இல்லை' என்பது இல்லை என்றால் உங்கள் ஆமுக்கு எந்தப் பொருளும் இருக்க முடியாது. அது என்ன பொருள்படும்? அது பொருளற்றதாகவே இருக்கும். இல்லை என்பது இருப்பதால்தான் ஆம் என்பதற்கு அர்த்தம் இருக்கிறது. ஆம் என்பது இருப்பதால் மட்டுமே இல்லை என்பது பொருள் பெறுகிறது. அவை ஓர் இரட்டை... **சம்பிரஞ்ஞாத சமாதியில்** இல்லை என்பது கைவிடப்படுகிறது. தவறானவை எல்லாம் கைவிடப்படுகிறது. **அசம்பிரஞ்ஞாத சமாதியில்** ஆம் என்பதும் கைவிடப்படுகிறது. சரியானவை எல்லாம்கூட, நல்லது எல்லாம் கூட கைவிடப்படுகிறது. **சம்பிரஞ்ஞாத சமாதியில்** சாத்தானை நீங்கள் கைவிட்டீர்கள். **அசம்பிரஞ்ஞாத சமாதியில்** கடவுளையும் நீங்கள் கைவிடுகிறீர்கள். ஏனெனில் சாத்தான் நிலவாமல் கடவுள் மட்டும் எப்படி நிலவமுடியும்? ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்களே அவை.

எல்லா விதமான செயல்பாடும் நின்று விடுகிறது. ஆம் என்பதும் ஒரு செயல்பாடே. செயல்பாடு என்றாலே பதட்டம்தான்: ஏதோ ஒன்று ஓடிக் கொண்டிருக்கிறது. அழகானதே ஆயினும் ஏதோ ஒன்று ஓடிக்கொண்டே இருக்கிறது. குறிப்பிட்ட காலத்துக்குப்பின் அழகானதும்கூட அசிங்கமாக ஆகிறது. குறிப்பிட்ட காலத்துக்குப் பின் பூக்கள்கூட உங்களுக்கு சலித்து விடுகிறது. குறிப்பிட்ட காலத்துக்குப் பிறகு மிகவும் நுண்மையானதும் தூய்மையானதுமான செயல்பாடுகூட உங்களுக்கு ஒரு இறுக்கத்தைத் தருகிறது, ஒரு பதற்றமாக ஆகிது.

> **அசம்பிரஞ்ஞாத சமாதியில் அனைத்து விதமான சித்த விருத்திகளும் நின்றுள்ளன; புலப்படாத பதிவுகளை மட்டுமே மனமானது தக்க வைத்திருக்கிறது.**

ஆனால் இப்போது கூட அது இலக்கல்ல - ஏனெனில் கடந்த காலத்தில் நீங்கள் சேகரித்திருக்கிற உங்கள் அனைத்து மனப்பதிவுகளுக்கும் என்ன நேரிடும்? பலப்பல பிறவிகளாக நீங்கள் வாழ்ந்திருக்கிறீர்கள். வினை புரிந்திருக்கிறீர்கள், எதிர்வினை புரிந்திருக்கிறீர்கள். பல காரியங்களைக் கட்டி முடித்திருக்கிறீர்கள், பல காரியங்களைக் கட்டவிழ்த்திருக்கிறீர்கள். அவற்றுக்கெல்லாம் என்ன ஆகும்? உணர்வுமனம் தூயதாக ஆகி இருக்கிறது. உணர்வுமனம் தூய்மையாகும் செயலைக்கூட கைவிட்டு

இருக்கிறது. ஆனால் உணர்வற்ற மனமோ பரந்தது. அங்குதான் அனைத்து விதமான விதைகளையும் பூர்வாங்கத் திட்டங்களையும் நீங்கள் வைத்திருக்கிறீர்கள். அவை இன்னும் உங்களுக்குள் உள்ளன.

மரம் மறைந்துவிட்டது. மரத்தை முற்றிலுமாக நீங்கள் வெட்டி விட்டீர்கள். ஆனால் விதைகள் விழுந்துள்ளன. அவை நிலத்தில் கிடக்கின்றன. அவற்றின் பருவம் வரும்போது அவை முளைவிடும். நீங்கள் இன்னொரு பிறவி எடுப்பீர்கள். மறுபடியும் பிறப்பீர்கள். உங்கள் தன்மை இப்போது வேறுபட்டாலும் கூட ஆனாலும் நீங்கள் மறுபடியும் பிறப்பீர்கள். ஏனெனில் அந்த விதைகள் இன்னமும் எரிக்கப்படவில்லை.

புலப்பட்டவற்றை நீங்கள் வெட்டி எறிந்துவிட்டீர்கள். புலப்படும் எதையும் வெட்டி எறிவது எளிதுதான். மரங்கள் அனைத்தையும் வெட்டி எறிதல் எளிதே. தோட்டத்துக்குச் சென்று புல்தரை முழுவதையும், புற்கள் அனைத்தையும் நீங்கள் பிடுங்கிவிட முடியும். ஒவ்வொன்றையும் உங்களால் ஒழித்துவிட முடியும். ஆனாலும் இரண்டே வாரத்தில் மறுபடியும் புல் மேலே வந்து விடும். ஏனெனில் நீங்கள் செய்தது கண்ணுக்குத் தெரிந்ததற்கு மட்டும்தான். மண்ணுக்குள் இருக்கும் விதைகளை இன்னமும் நீங்கள் தொடவில்லை. மூன்றாவது நிலையில் அதுதான் செய்யப்பட வேண்டி உள்ளது.

அசம்பிரஞ்ஞாத சமாதி என்பது இன்னமும் சபீஜ்தான் - அதாவது விதைகளோடு கூடியதுதான். இந்த விதைகளை எரிப்பது எப்படி என்பதற்கு முறைகள் உள்ளன. நெருப்பை -ஹெராக்ளிட்டஸ் சொன்ன நெருப்பை - உண்டாக்குவது எப்படி, உணர்வற்ற விதைகளை எரிப்பது எப்படி என்பதற்கு முறைகள் உள்ளன. அவையும் மறைந்த பின்பே மண் முற்றிலும் தூயதாகிறது. அதிலிருந்து எதுவும் முளைத்தெழ முடியாது. அப்போது பிறப்பில்லை, இறப்பில்லை. அப்போது மொத்த சக்கரமும் உங்களைப் பொறுத்தவரை சுழல்வதை நிறுத்தி விடுகிறது. சக்கரச் சுழற்சியில் இருந்து நீங்கள் விடுபட்டிருக்கிறீர்கள். சக்கரத்திலிருந்து கழன்று கொள்ளாத வரை, சமுதாயத்திலிருந்து கழன்று கொள்வதால் எந்தப் பயனுமில்லை. அப்போதுதான். நீங்கள் முழுமையாக விடுபட்டவர் ஆகிறீர்கள்.

புத்தர் முழுமையாக விடுபட்டவர் ஆவார். மகாவீரர், பதஞ்சலி ஆகியோர் முழுமையாக விடுபட்டவர்கள் ஆவர். தம் கால சமுதாய அமைப்பிலிருந்து அவர்கள் விடுபட்டிருக்கவில்லை. பிறப்பு - இறப்பு என்னும் சக்கரத்தில் இருந்தே விடுபட்டு விட்டவர்கள் அவர்கள். ஆனால் எல்லா விதைகளும் எரிக்கப்பட்ட பின்பு மட்டுமே அது நிகழ்கிறது. இறுதிக்கட்டம் நிர்பீஜ் சமாதி - விதையற்ற சமாதி.

**அசம்பிரஞ்ஞாத சமாதியில் அனைத்து விதமான மன செயல்பாடுகளும் நின்றுள்ளன; புலப்படாத பதிவுகளை மட்டுமே மனமானது தக்க வைத்திருக்கிறது.**

**விதேகர்களும் பிரகிருதி - லயர்களும், தம் முற்பிறவியி லேயே தம் உடம்புகளுடன் தம்மை ஒருமைப்படுத்திக் காண்பதை நிறுத்திவிட்டதால் அசம்பிரஞ்ஞாத சமாதியை அடைகிறார்கள். ஆசையின் விதைகள் எஞ்சியிருப்பதால் அவர்கள் மீண்டும் பிறவி எடுக்கிறார்கள்.**

புத்தர்கூட பிறக்கத்தான் செய்கிறார். அவரது முற்பிறவியில் அவர் அசம்பிரஞ்ஞாத சமாதியை அடைந்திருந்தார். ஆனாலும் விதைகள் இருந்தன. மீண்டும் ஒருமுறை அவர் வரவேண்டி இருந்தது. மகாவீரர் கூட - ஒருமுறை - பிறக்கிறார்; விதைகள் அவரைப் பிறப்பிக்கின்றன. ஆனால் இதுதான் அவரது கடைசிப் பிறப்பாக இருக்கப் போகிறது. அசம்பிரஞ்ஞாத சமாதிக்குப் பிறகு ஒரே ஒரு பிறவி மட்டுமே வாய்க்கும் ஆனால் அந்த பிறவியில் வாழ்வின் தன்மை முற்றிலும் வேறுபடும். ஏனெனில் இந்த மனிதர் இனி தன்னை உடம்புடன் அடையாளப்படுத்திக் கொள்ளமாட்டார். மேலும் உண்மையில் இனி செய்வதற்கு இவருக்கு ஒன்றும் இல்லை. ஏனெனில் மனதின் செயல்பாடு நின்று விட்டுள்ளது. அந்நிலையில் அவர் என்ன செய்வார்? இந்த ஒரு பிறவி எதற்காகத் தேவைப்படுகிறது? அந்த விதைகள் புலப்பட அவர் அனுமதிக்க வேண்டி உள்ளது, அவ்வளவே. அதற்கு அவர் ஒரு சாட்சியாக மாத்திரம் இருப்பார். அதுதான் நெருப்பு.

ஒரு மனிதன் புத்தரிடம் வந்து அவர்மேல் துப்பினான். அவனுக்கு கோபம். புத்தர் தன் முகத்தைத் துடைத்துக் கொண்டு, ''இன்னும் நீ என்னென்ன சொல்லப் போகிறாய்?'' என்று கேட்டார். அந்த மனிதனால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. அவன் உண்மையாகவே கோபமாக இருந்தான். வெறிநிலையில் இருந்தான். புத்தர் சொன்னது என்ன என்பதைப் புரிந்து கொள்ளக்கூட அவனால் முடியவில்லை. மேலும் மொத்த விவகாரமும் முற்றிலும் அபத்தமாயிருந்தது. ஏனெனில் புத்தர் எதிர்வினை புரியவில்லை. அடுத்து என்ன செய்வது, என்ன சொல்வது என அந்த மனிதன் குழம்பிப் போனான். அவன் போய்விட்டான். அன்று இரவு முழுவதும் அவனால் தூங்கமுடியவில்லை. ஒருவரை நீங்கள் அவமதித்து, அவரிடமிருந்து எந்த எதிர்வினையும் வரவில்லை என்றால், உங்களால் எப்படித் தூங்க முடியும்? அந்நிலையில் உங்கள் அவமதிப்பு உங்களிடமே திரும்பிவிடுகிறது. நீங்கள் அம்பெறிந்தீர்கள், அது போய்ச் சேரவில்லை, திரும்பி வருகிறது. வேறு போக்கிடம் இன்மையால் எய்தவரிடமே அது

திரும்பி வருகிறது. அவன் புத்தரை அவமதித்தான். ஆனால் அவமதிப்புக்கு அங்கு இடம் கிடைக்கவில்லை. அப்படியானால் அது எங்கு போகும்? அதன் முதல் எசமானரிடமே அது வந்து சேர்கிறது.

அந்த இரவு முழுவதும் அவன் வெறியோடு இருந்தான். நிகழ்ந்திருப்பது என்ன என்பதை அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை. பின் அவன் மனம் வருந்தத் தொடங்கினான். தான் செய்தது பிழை - தான் செய்தது சரியல்ல என்பதை உணரத் தொடங்கினான். மறுநாள் அதிகாலையில் அவன் போய் அவரிடம் மன்னிப்புக் கேட்டான். புத்தர் சொன்னார்: ''அதைப்பற்றி கவலைப் படாதே. கடந்த பிறவியில் நான் உனக்கு ஏதோ கெடுதல் செய்திருக்க வேண்டும். இப்போது கணக்கு முடிந்துவிட்டது. இப்போது நான் எதிர்வினை புரியமாட்டேன். இல்லாவிட்டால் மறுபடியும் மறுபடியும்..... தீர்ந்தது! நான் எதிர்வினை புரியவில்லை.. ஏனெனில் அது எங்கோ ஓரிடத்தில் இருந்த விதை. அது தீர்க்கப்பட வேண்டி இருந்தது. இப்போது உன்னுடன் என் கணக்கு முடிந்தது.''

இந்தப் பிறவியில் ஒரு விதேகர் - தான் ஒரு தேகம் / உடம்பு அல்ல என்பதைப் புரிந்திருக்கிறவர். அசம்பிரஞ்ஞாத சமாதியை அடைந்திருக்கிறவர் - கணக்கு முடிப்பதற்காகவே உலகுக்கு வருகிறார்.... அவரது மொத்த வாழ்க்கையும் கணக்குத் தீர்ப்பதாகவே அமைகிறது. கோடிக்கணக்கான - வாக்குறுதிகள் பிறவிகள், பலப்பல உறவுகள், பலப்பல தொடர்புகள், பலப்பல ஈடுபாடுகள் - எல்லாவற்றையுமே தீர்க்க வேண்டி இருக்கிறது.

ஒரு நிகழ்ச்சி: புத்தர் ஒரு சிற்றூருக்கு வந்தார். மொத்த ஊரும் திரண்டது. அவர் கூறுவதைக் கவனிக்க அவர்கள் ஆவலாக இருந்தார்கள். அது ஓர் அரியவாய்ப்பு. தலைநகரங்கள்கூட புத்தருக்கு ஓயாமல் அழைப்பு விடுத்துக் கொண்டிருந்தன. அவற்றுக்கே அவர் போகவில்லை. ஆனால் வழியில் இருந்த இந்த சிற்றூருக்கு அவர் வந்திருக்கிறார். அதுவும் எவ்வித அழைப்பும் இன்றியே வந்துள்ளார். ஏனெனில் தம் ஊருக்கு வருமாறு அவரிடம் கேட்க அவ்வூராருக்கு துணிவு வரவில்லை. அது ஒரு மிகச்சிறிய ஊர். ஒரு சில குடிசைகளே இருந்தன. அப்படி இருந்தும் எந்த அழைப்பும் இல்லாமலே அவர் வந்திருக்கிறார். கிராமம் முழுவதும் கிளர்ச்சி அடைந்திருந்தது. ஒரு மரத்தடியில் ஒன்றும் பேசாமல் அவர் உட்கார்ந்திருக்கிறார்.

அவர்கள் சொன்னார்கள், யாருக்காக இப்போது நீங்கள் காத்துக் கொண்டு இருக்கிறீர்கள்? எல்லாருமே இங்கு இருக்கிறோம். ஊர் மொத்தமும் இங்கு கூடிவிட்டது. நீங்கள் தொடங்கலாம்.'' என்றனர். அதற்கு

புத்தர் சொன்னார். ''ஆனால் நான் காத்திருக்கவே வேண்டும். ஏனெனில் யாருக்காக நான் வந்தேனோ அவர் இங்கு இல்லை. ஒரு வாக்குறுதியை நான் காத்தாக வேண்டும். ஒரு கணக்கை நான் முடித்தாக வேண்டும். அதற்காகவே நான் காத்துக் கொண்டு இருக்கிறேன்.'' என்றார். அப்போது ஒரு பெண் அங்கு வந்து சேர்ந்தாள். அதன்பின் புத்தர் பேசத் தொடங்கினார். அவர் பேசி முடித்தபின் அவர்கள் ''இந்தப் பெண்ணுக்காகவா நீங்கள் காத்துக்கொண்டு இருந்தீர்கள்?'' என்று கேட்டார்கள்.

ஏனெனில் அந்தப் பெண் தீண்டப்படாத வகுப்பைச் சேர்ந்தவள். மிகவும் கீழான சாதியைச் சேர்ந்தவள். அவளுக்காகவே புத்தர் காத்திருந்தார் என யாரும் நினைத்துப் பார்க்கவும் முடியவில்லை. அவர் சொன்னார், ''ஆம், இவளுக்காகத்தான் நான் காத்துக்கொண்டிருந்தேன். நான் வந்து கொண்டிருந்த போது வழியில் இவள் என்னைச் சந்தித்தாள். எனக்காகக் கொஞ்சம் காத்திரும், ஏனென்றால் ஒரு வேலையாக பக்கத்து நகருக்கு நான் போய்க் கொண்டிருக்கிறேன். ஆனால் விரைவில் வந்துவிடுவேன்,'' என்றாள். மேலும் கடந்த பிறவிகளில் எதிலோ இவளுக்கு நான் ஒரு வாக்கு கொடுத்திருந்தேன். நான் ஞானநிலைபேறு பெற்றதும் நான் வருவேன். எனக்கு நிகழ்ந்தது என்ன என்று சொல்வேன் என்ற சொல்லி இருந்தேன். அந்தக் கணக்கு முடிக்கப்பட வேண்டி இருக்கிறது. அந்த வாக்குறுதி என்மேல் தொங்கிக் கொண்டிருக்கிறது. அதை நான் நிறைவேற்ற முடியாவிட்டால் (அதை நிறைவேற்றுவதற்காக) திரும்பவும் நான் வரவேண்டி இருக்கும்.''

**விதேகர், பிரகிருதிலயர்:** இரண்டு சொற்களுமே அழகானவை. விதேகர் என்றால் உடம்பற்ற நிலையில் வாழ்பவர். அசம்பிரஞ்ஞாத சமாதியை நீங்கள் அடைந்ததும் உடம்பு அங்கு இருக்கும். ஆனால் நீங்கள் உடம்பற்றவர் ஆகிறீர்கள். நீங்கள் இனி உடம்பில் இருப்பதில்லை. உடல் ஓர் உறைவிடமாக ஆகிறது. அதனுடன் நீங்கள் அடையாளப் படுத்துவதில்லை.

ஆக இந்த இரு பதங்களும் அழகானவை. **விதேகர்** என்றால் தான் ஓர் உடம்பு அல்ல என்பதை அறிகிறவர். நம்புகிறவர் அல்லர், அறிகிறவர் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அடுத்து **பிரகிருதி-லயர்.** தான் உடம்பல்ல என்பதை அறிகிறவர், இது முதல் அவர் **பிரகிருதியாக** - இயற்கையாக இல்லை.

உடம்பு சடப்பொருளைச் சேர்ந்தது. உங்களுக்குள் இருக்கும் சடப்பொருளுடன் உங்களை நீங்கள் அடையாளப்படுத்தவில்லை. என்றதுமே உங்களுக்கு வெளியில் இருக்கும் சடப்பொருளுடனும் உங்களை நீங்கள் ஒருமைப்படுத்திக் கொள்வதில்லை. இனியும் தான் ஓர்

உடம்பல்ல, இனியும் தான் புலப்படும் பொருள் அல்ல - பிரகிருதி அல்ல என்ற நிலையை அடைகிறவரின் இயல்பு கரைந்து விடுகிறது. இனி அவருக்கு உலகு என்பது இல்லை. அவர் அதனுடன் தன்னை ஒருமைப்படுத்திக் கொள்வதில்லை. அதற்கு ஒரு சாட்சியாக மட்டுமே இருக்கிறவர் அவர். அத்தகைய மனிதர்கூட குறைந்தது ஒரு தடவையாவது பிறந்து வரவே செய்கிறார். ஏனெனில் அவர் பல கணக்குகளை முடிக்க வேண்டி இருக்கிறது. பல வாக்குறுதிகளை நிறைவேற்ற வேண்டி இருக்கிறது. பல கருமங்களைக் கைவிட வேண்டி இருக்கிறது.

புத்தரின் மைத்துனன் தேவதத்தன் அவருக்கு எதிராக இருந்தான். அவரைக் கொல்ல பல வழிகளிலும் முயன்றான். ஒரு மரத்தடியில் புத்தர் தியானித்துக் கொண்டு காத்திருந்த போது, மலையில் இருந்து ஒரு பெரிய பாறையை அவன் உருட்டி விட்டான். பாறை வந்து கொண்டிருந்தது. எல்லாரும் ஓடினார்கள். புத்தர் மரத்தடியில் தான் இருந்த அதே இடத்தில் அமர்ந்திருந்தார். அது ஆபத்தானது. பாறை அவரைத் தொடுவதுபோல் வந்து கொண்டிருந்தது. அவரை உரசிச் சென்றது. ஆனந்தர் அவரிடம் கேட்டார். ''நாங்கள் எல்லாரும் தப்பி ஓடியபோது நீங்கள் ஏன் தப்பிக்கவில்லை? அதற்குப் போதிய நேரம் இருந்ததே.''

புத்தர் கூறுகிறார், ''உங்களுக்குப் போதிய நேரம் இருக்கிறது. எனது நேரமோ முடிந்துவிட்டது. எனவே தேவதத்தன் அதைச் செய்தாக வேண்டி இருக்கிறது. ஏதோ ஒரு முற்பிறவியில் ஏதோ ஒரு வினை நேரிட்டிருக்கிறது. அவனுக்கு ஏதோ ஒரு துன்பத்தை, வருத்தத்தை, பதற்றத்தை நான் தந்திருக்க வேண்டும். அதைத் தீர்த்தாக வேண்டும். நான் தப்பிவிட்டால், அதற்காக நான் ஏதாவது செய்திருந்தால், மறுபடியும் ஒரு புதிய தொடர்ச்சி ஆரம்பிக்கப்படுகிறது.''

விதேகர், அசம்பிரஞ்ஞாதத்தை அடைந்திருக்கிறவர், எதிர்வினை புரிவதில்லை. அவர் கவனிக்க மட்டுமே செய்கிறார். சாட்சியாக மாத்திரமே இருக்கிறார். ஆகவே இந்த சாட்சியாயிருத்தல் என்னும் நெருப்பே உணர்வற்ற களத்தில் இருக்கும். எல்லா விதைகளையும் எரிக்கிறது. மண் முற்றிலும் தூயதாகும் ஒரு கணமும் வருகிறது. முளை விடுவதற்கு அங்கே விதை ஏதும் மிச்சம் இருப்பதில்லை. திரும்பி வருவதற்கு அங்கே விதையேதும் இருப்பதில்லை. முதலில் இயற்கை கரைந்து போகிறது. பின் அவர் பிரபஞ்சத்தில் தன்னைக் கரைத்துக் கொள்கிறார்.

> **விதேகர்களும் பிரகிருதி - லயர்களும் தம் முற்பிறவியிலேயே தம் உடம்புகளுடன் தம்மை ஒருமைப்படுத்திக் காண்பதை நிறுத்திவிட்டதால் அசம்பிரஞ்ஞாத சமாதியை அடைகிறார்கள். ஆசையின் விதைகள் எஞ்சியிருப்பதால் அவர்கள் மீண்டும் பிறவி எடுக்கிறார்கள்.**

ஒரு வேலையை நிறைவு செய்யவே நான் இங்கு இருக்கிறேன். என் கணக்கை முடிக்கவே நீங்கள் இங்கு இருக்கிறீர்கள். நீங்கள் இங்கு இருப்பது தற்செயலாக அல்ல. உலகத்தில் கோடிக்கணக்கான மக்கள் இருக்கிறார்கள். அவர்களில் நீங்கள் ஏன் இங்கு இருக்கிறீர்கள்? ஏன் வேறொருவர் இல்லை? ஏதோ ஒரு கணக்கை முடிக்க வேண்டி இருக்கிறது.

**மற்றவர்கள், நம்பிக்கை - முயற்சி நினைவுகூரல் - ஒருமுக கவனம் - பாகுபடுத்தி அறிதல் வாயிலாக அசம்பிரஞ்ஞாத சமாதியை அடைகிறார்கள்.**

ஆக இரண்டு சாத்தியப்பாடுகள் இருக்கின்றன. உங்கள் கடந்த பிறவியில் அசம்பிரஞ்ஞாத சமாதியை நீங்கள் அடைந்திருந்ததால் இந்தப் பிறவியில் நீங்கள் ஏறக்குறைய ஒரு புத்தராகப் பிறக்கிறீர்கள் - இன்னும் நிறைவுபெற வேண்டியது, கைவிட வேண்டியது, எரிக்கப்பட வேண்டியது ஒரு சில விஷயம் மட்டுமே. எனவேதான் நீங்கள் ஏறக்குறைய ஒரு புத்தராக பிறந்திருக்கிறீர்கள் என்கிறேன் நான். நீங்கள் எதையும் செய்யத் தேவை இல்லை. நிகழ்வது எதுவாயினும் அவற்றையெல்லாம் வெறுமனே நீங்கள் கவனித்தாலே போதுமானது.

எனவேதான் எதையுமே செய்யத் தேவை இல்லை என தொடர்ச்சியாக வலியுறுத்தி வருகிறார் கிருஷ்ணமூர்த்தி. அவருக்கு அது சரிதான். அவர் பேச்சை கேட்பவர்களுக்கு அது சரியாகாது. அவரைக் கேட்பவர்களுக்கு செய்வதற்கு இன்னும் நிறைய உள்ளது. இந்நிலையில் அவர்கள் இந்த வாசகத்தால் தவறாக வழிநடத்தப்பட்டார்கள். அவர் தன்னைக் குறித்தே பேசிக் கொண்டிருக்கிறார். அவர் ஓர் அசம்பிரஞ்ஞாத புத்தராகப் பிறந்தார். ஒரு விதேகராக பிறந்தார். ஓர் பிருகிருதி - லயராக பிறந்தார்.

வெறும் ஐந்து வயதாக இருக்கும்போது அடையாருக்கு அருகில் அவர் குளித்துக்கொண்டிருந்தார். மாபெரும் இறையறிவுக் கொள்கை யரில் (தியாசபிஸ்டுகளில்) ஒருவரான லீட்பீட்டர் அவரை கவனித்தார். அவர் முற்றிலும் வித்தியாசமான ஒரு குழந்தையாக இருந்தார். யாராவது அவர்மீது சேற்றை வீசினால் அவர் எதிர்வினை புரியமாட்டார். பல குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். யாராவது அவரை ஆற்றுக்குள் தள்ளிவிட்டால் அவர் அப்படியே போவார். ஆம், அவர் கோபிக்கமாட்டார். சண்டைபிடிக்க மாட்டார். முற்றிலும் வித்தியாசமான ஒரு பண்பை - ஓர் அசம்பிரஞ்ஞாத புத்தரின் பண்பை - அவர் பெற்றிருந்தார்.

இந்தக் குழந்தையை கவனிக்குமாறு அன்னிபெசன்ட்டை அழைத்தார் லீட்பீட்டர். அவர் சாதாரணக் குழந்தை அல்ல. மொத்த இறையறிவு இயக்கமும் அவரையே சுற்றிச் சுழன்றது. அவர் ஓர் அவதாரம் ஆவார், இந்த யுகத்துக்கான சரியான குருவாக அவரே இருப்பார் என அவர்கள் பெரிதாக நம்பினார்கள். ஆனால் சிக்கல் இன்னும் ஆழமானதாக இருந்தது. அவர்கள் தேர்ந்தெடுத்ததும் ஒரு சரியான ஆளைத்தான். ஆனால் அவர்களின் நம்பிக்கைதான் தவறானதாக இருந்தது. ஏனெனில் அசம்பிரஞ்ஞாத புத்தராகப் பிறந்தவர் ஓர் அவதாரம் என்ற வகையில்கூட செயல்புரிபவராக விளங்க முடியாது. ஏனெனில் எல்லா செயல்பாடுமே நின்றுவிட்டது. அவரால் வெறுமனே கவனிக்கமட்டுமே முடியும். அவரால் ஒரு சாட்சியாக மட்டுமே இருக்க முடியும். அவரை மிகவும் செயலூக்க மானவராக மாற்ற உங்களால் முடியாது. அவர் ஓர் செயலின்மையாக மட்டுமே இருக்க முடியும். அவர்கள் சரியான நபரையே தேர்ந் தெடுத்தார்கள். இருந்தாலும் தவறாகவே தேர்ந்தெடுத்தார்கள்.

மேலும் அவர்கள் பெரிதாக நம்பினார்கள். அதன்பின் மொத்த இயக்கமும் கிருஷ்ணமூர்த்தியைச் சுற்றியே சுழன்றது. ஆயின் அதிலிருந்து அவர் வெளியேறியதும் சொன்னார், ''என்னால் எதுவும் செய்ய முடியவில்லை. ஏனெனில் எதுவும் தேவைப்படவில்லை.'' உடனே மொத்த இயக்கமும் அத்தோடு வீழ்ந்தது. ஏனெனில் இந்த மனிதரிடம் அவர்கள் மிக அதிகமாக எதிர்பார்த்தார்கள். பின் மொத்த விவகாரமும் முற்றிலும் புதுவிதமாக ஆகிப்போனது. ஆனால் அதை முன்கூட்டியே கண்டறிந் திருக்க முடியும்.

அன்னிபெசன்ட், லீட்பீட்டர் முதலியோர் மிகமிக அழகான மனிதர்கள். ஆனால் கீழை முறைகளைப் பற்றிய உண்மையான உணர்வு அவர்களுக்கு இல்லை. பலவற்றையும் அவர்கள் நூல்களில் இருந்தும் சாத்திரங்களில் இருந்தும் கற்றிருந்தார்கள். ஆனால் பதஞ்சலி காட்டுகிற ரகசியம் உள்ளபடியே அவர்கள் அறியாதது: அசம்பிரஞ்ஞாதர் / விதேகர் என்கிறவர் பிறக்கிறார். ஆனால் அவர் செயலூக்கமாய் இருப்பதில்லை. அவர் ஒரு செயலின்மை. அவர் மூலமாக எவ்வளவோ நிகழ முடியும். ஆனால் ஒருவர் வந்து அவரிடம் சரண் புகுந்தால் மட்டுமே அது நிகழ முடியும். ஏனெனில் அவர் ஒரு செயலின்மையாக இருக்கிறார். நீங்கள் ஒன்றைச் செய்யுமாறு உங்களை அவர் கட்டாயப்படுத்த முடியாது. அவர் கிடைக்கக் கூடியவராகவே இருக்கிறார். ஆனால் அவர் அத்துமீறுபவராக - ஆதிக்கம் செய்பவராக முடியாது.

அவரது அழைப்பு அனைவருக்கும் பொது. அது ஒரு பொது அழைப்பு. உங்களுக்குத் தனியாக ஓர் அழைப்பு விடுக்க அவரால் முடியாது. ஏனெனில் அவர் செயல்முனைப்பு உள்ளவராக இருக்க

முடியாது. அவர் ஒரு திறந்த கதவு. நீங்கள் விரும்பினால் அதன் வழியாகக் கடந்து போக முடியும். கடைசிப் பிறப்பு என்பது முழுமையான செயலின்மையாகவே, வெறும் சாட்சி பாவமாகவே இருக்கும். அசம்பிரஞ்ஞாத புத்தர்கள் தம் கடந்த பிறவியில் இருந்து எப்படிப் பிறக்கிறார்கள் என்பதற்கு இது ஒரு வழி ஆகும்.

ஆனால் ஒருவர் இந்தப் பிறவியிலும் ஓர் அசம் பிரஞ்ஞாத புத்தர் ஆகவும் முடியும். இவர்களுக்காகவே பதஞ்சலி கூறுகிறார்,

> **ச்சரத்தா வீர்ய ஸ்மிருதி சமாதி பிரக்ஞா: மற்றவர்கள் நம்பிக்கை, முயற்சி, நினைவுகூரல், ஒருமுக கவனம், பாகுபடுத்தி அறிதல் வாயிலாக அசம்பிரஞ்ஞாத சமாதியை அடைகி றார்கள்.**

இதை மொழிபெயர்ப்பது ஏறக்குறைய இயலாத செயல் - எனவே இதை மொழிபெயர்ப்பதை விட விளக்கி விடுகிறேன். அதன் உணர்வை சுவையை உங்களுக்கு தருகிறேன். ஏனெனில் சொற்கள் உங்களை வழிதவறச் செய்துவிடும்.

சிரத்தை என்பதன் நேர்பொருள் நம்பிக்கை அல்ல. அது பெரிதும் விசுவாசத்தை (ஈடுபாட்டை) ஒத்தது. விசுவாசம் என்பது நம்பிக்கையில் இருந்து மிகமிக வேறுபட்டது. நம்பிக்கை என்பதிலேயே நீங்கள் பிறக்கிறீர்கள். விசுவாசம் என்பதோ உங்களில் வளர்வது. ஒரு இந்துவாக இருப்பது நம்பிக்கை. ஒரு கிறிஸ்தவராயிருப்பது நம்பிக்கை. ஒரு முகமதியராயிருப்பது ஒரு நம்பிக்கை ஆனால் இங்கு என்னுடன் ஒரு சீடராயிருப்பது என்பது ஒரு விசுவாசம். நம்பிக்கைக்கு நான் உரிமைகோரமுடியாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். யேசுவும் நம்பிக்கைக்கு உரிமை கோர முடியாது. ஏனெனில் நம்பிக்கையிலேயே நீங்கள் பிறக்கிறீர்கள். யூதர்கள் நம்பிக்கை உள்ளவராக இருந்தார்கள். அவர்களிடம் நம்பிக்கை இருந்தது. மேலும், அதனாலேயே தான் யேசுவை அவர்கள் ஒழித்துக் க ட்டினார்கள் என்பதே உண்மை. ஏனெனில் அவர் அவர்களை அவர்களின் நம்பிக்கையில் இருந்து வெளியேற்றிக் கொண்டிருந்தார், அவர்களின் நம்பிக்கையை நாசம் செய்து கொண்டிருந்தார் என்று அவர்கள் நினைத்தார்கள்.

விசுவாசத்தையே அவர் கேட்டுக் கொண்டிருந்தார். விசுவாசம் என்பது தனிநபர் அந்நியோன்னியம். அது ஒரு சமுதாய நிகழ்வு அல்ல. உங்களின் சொந்த பதில் வினைமூலமே அதை நீங்கள் அடைந்து கொள்கிறீர்கள். விசுவாசத்துடன் யாரும் பிறக்க முடியாது; நம்பிக்கையுடன் பிறக்கலாம். நம்பிக்கை என்பது உயிரற்ற விசுவாசம். விசுவாசம் என்பது

உயிருள்ள நம்பிக்கை. எனவே இந்தப் பாகுபாட்டைப் புரிந்துகொள்ள முயலுங்கள்.

**சிரத்தை**யில் - அதாவது விசுவாசத்தில் ஒருவர் வளரவேண்டும். மேலும் இப்போதும் இது தனிநபர் சார்ந்ததே. யேசுவின் முதல் சீடர்கள் விசுவாசத்தை அடைந்து கொண்டார்கள். அவர்கள் யூதர்கள். பிறப்பால் யூதர்கள். அவர்களின் அந்த நம்பிக்கை என்பது அவர்கள் வெளியேறி னார்கள். அது ஒரு புரட்சி. நம்பிக்கை என்பது மூடநம்பிக்கை. விசுவாசம் என்பது புரட்சி. விசுவாசம் முதலில் உங்களை உங்கள் நம்பிக்கையில் இருந்து அப்புறப்படுத்தி இட்டுச் செல்கிறது. அது அப்படித்தான் இருந்தாக வேண்டும். ஏனென்றால் ஒரு கல்லறையில் நீங்கள் வசித்துக் கொண்டிருந் தால் முதலில் உங்களை அங்கிருந்து வெளிக்கொண்டு வந்தாக வேண்டி இருக்கிறது. அதன் பிறகு மட்டுமே மீண்டும் உங்களை வாழ்வுக்கு அறிமுகப்படுத்த முடியும். **சிரத்தை** அதாவது விசுவாசத்தின் பக்கம் மக்களைக் கொண்டுவர முயன்று கொண்டிருந்தார் யேசுநாதர். அது எப்போதுமே அவர்களின் நம்பிக்கையை அவர் அழித்துக் கொண்டிருப்ப தாகவே தோன்றும்.

இன்று ஒரு கிறிஸ்தவர் என்னிடம் வரும்போது திரும்பவும் அதே நிலைமைதான் நிலவுகிறது! கிறிஸ்தவம் ஒரு நம்பிக்கையாக இருக்கிறது. யேசுவின் காலத்தில் யூதம் ஒரு நம்பிக்கையாக இருந்ததைப் போன்றே இருக்கிறது. ஒரு கிறிஸ்தவர் என்னிடம் வரும்போது மறுபடியும் அவரை நான் அவரது நம்பிக்கையிலிருந்து வெளியில் எடுத்தாக வேண்டி இருக்கிறது. அப்போதுதான் விசுவாசத்தை நோக்கி அவர் வளர அவருக்கு உதவமுடியும். மதங்கள் நம்பிக்கை சார்ந்தவை. மதத்தன்மை என்பதோ விசுவாசத்தில் இருப்பதாகும். மேலும் மதத் தன்மையோடு இருப்பது என்பது கிறிஸ்தவராயிருப்பதோ இந்துவாயிருப்பதோ முகமதியராயிருப் பதோ அல்ல. ஏனெனில் விசுவாசத்துக்குப் பெயர் கிடையாது! விசு வாசத்துக்கு விலாசம் கிடையாது. அது அன்பைப் போன்றது. அன்பு கிறிஸ் தவாமா இந்துவா முகமதியமா? திருமணம் என்பது கிறிஸ்தவமாக, இந்துஇயமாக, முகமதியமாக இருக்கிறது. அன்பு? அன்பு சாதிப் பாகு பாடுகளை அறிவதில்லை. காதலுக்கு இந்துக்கள் என்றும் கிறிஸ்தவர்கள் என்றும் தெரியாது.

திருமணம் என்பது நம்பிக்கை போன்றது. அன்பு என்பது விசுவாசம் போன்றது. அதில் நீங்கள் வளர்ந்தாக வேண்டி இருக்கிறது. அது ஒரு சாதனை. நம்பிக்கை ஒரு சாதனை அல்ல. அதனுடனேயே நீங்கள் பிறக்கிறீர்கள். அது வசதியாக இருக்கிறது. வசதியையும் பாதுகாப்பையும் தேடினால் நம்பிக்கைத்தான் உங்களுக்கு உகந்தது. நம்பிக்கையிலேயே

தங்கி இருப்பதே சிறந்தது. இந்துவாயிருங்கள். கிறிஸ்தவராக இருங்கள். சட்ட விதிகளைப் பின்பற்றுங்கள். ஆனால் உங்கள் இதயத்திலிருந்து நீங்கள் பதிலிறுக்காதவரை, உங்கள் சொந்தப் பொறுப்பில் சமயத்துக்குள் நீங்கள் நுழையாத வரை, அது உயிரற்ற ஒன்றாகவே இருக்கும். இது கிறிஸ்தவராக நீங்கள் பிறப்பது என்பதல்ல. அது எப்படி நீங்கள் ஒரு பிறவிக் கிறிஸ்தவராக முடியும்?

பிறப்புடன் சமயம் எப்படி சம்பந்தப்படுகிறது? பிறப்பு உங்களுக்கு சமயத்தை வழங்க முடியாது. பிறப்பு உங்களுக்கு ஒரு சமூகத்தை, ஒரு மதத்தை, ஒரு மதப் பிரிவைத்தான் தரமுடியும். அது உங்களுக்கு ஒரு மூடநம்பிக்கையைத் தரமுடியும். 'மூட நம்பிக்கை' ('சூப்பர்ஸ்டிசன்') என்ற சொல்லே மிக மிகப் பொருள் பொதிந்தது. 'அநாவசிய நம்பிக்கை' என்பதே அதன் பொருள். 'சூப்பர்' என்றாலே அநாவசியம், அத்தியாவசியம் அற்றது என்றே பொருள். சூப்பர்ஃப்ளுவஸ் = அவசியம் அற்றதாகி இருக்கிற நம்பிக்கை, உயிரற்றதாகி இருக்கிற நம்பிக்கை. ஒரு காலத்தில் அதற்கு உயிர் இருந்திருக்கலாம். சமயம் என்பது திரும்பத் திரும்ப பிறந்தாகவேண்டி இருக்கிறது.

பிறக்கும்போது ஒரு சமயத்துக்குள் நீங்கள் பிறப்பதில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்களுக்குள் சமயம் மறுபடியும், மறுபடியும் பிறக்க வேண்டி இருக்கிறது. அப்போதுதான் அது விசுவாசம் ஆகும். ஒவ்வொரு முறையும் புதிதாக உங்கள் சமயத்தை உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் தர முடியாது. தமக்குச் சொந்தமானதை அவர்களே தான் தேடி கண்டுகொள்ள வேண்டி இருக்கும். ஒவ்வொருவரும் தேடி தமக்கே உரியதை கண்டு கொள்ள வேண்டி உள்ளது. இது ஒரு சாதனைதான் - மாபெரும் சாதனை. அறியாததற்குள் நீங்கள் நுழைகிறீர்கள். **அசம்பிரஞ்ஞாத சமாதியை** நீங்கள் அடைய விரும்பினால் **சிரத்தையே** அதற்கு முதல் காரியம் என்கிறார் பதஞ்சலி. **சம்பிரஞ்ஞாத சமாதிக்கு** பகுத்தறிவு - சரியான பகுத்தறிவு போதுமானது. இந்த வேறுபாட்டை கவனித்தீர்களா? **சம்பிரஞ்ஞாத சமாதிக்கு** சரியான பகுத்தறிவு, சரியான சிந்தனை - இவையே அடிப்படை **அசம்பிரஞ்ஞாத சமாதிக்கு** சரியான விசுவாசமே அடிப்படை; பகுத்தறிவு அல்ல.

அங்கு பகுத்தறிவது இல்லை. ஆனால் ஒரு அன்பு. காதலுக்கோ கண்ணில்லை. பகுத்தறிவின் பார்வையில் அது குருட்டுத்தனமானதாகவே தோன்றுகிறது. ஏனெனில்ல அது இருட்டுக்குள் குதிப்பதாகும். பகுத்தறிவு கேட்கிறது, ''எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்? பரிச்சயமான பகுதியிலேயே தங்கி இரு. புதிய ஒரு நிகழ்வுக்குள் புகுவதால் என்ன பலன்?

பழைய வட்டத்துக்குள்ளேயே ஏன் தங்கி இருக்க கூடாது? அது வசதியானது. எளிதானது. உங்களுக்குத் தேவையானதை எல்லாம் அதனால் வழங்க முடியும்.'' ஆனால் ஒவ்வொருவரும் தனக்கேயான கோயிலை தானே தேடிக் கொள்ள வேண்டும். அப்போது மட்டுமே அது உயிருள்ளதாக இருக்கும்.

இங்கே நீங்கள் என்னுடன் இருக்கிறீர்கள். இதுதான் விசுவாசம் நான் இங்கே இல்லாமல் போனபின் உங்கள் குழந்தைகள் என்னுடன் இருக்க லாம். அது நம்பிக்கையாக இருக்கும். உயிருள்ள குருவுடன் மட்டுமே விசுவாசம் ஏற்படுகிறது. இப்போது உயிருடன் இல்லாத இறந்துபோன குருமீது ஏற்படுவதே நம்பிக்கை. முதல் சீடர்கள் சமயத்தில் இருக்கிறார்கள். இரண்டாவது மூன்றாவது தலைமுறை படிப்படியாக சமயத்தை இழக்கிறது. ஒரு மதப்பிரிவாக மாறுகிறது. அதன்பின் நீங்கள் வெறுமனே பின்பற்று கிறீர்கள். ஏனெனில் அதில் நீங்கள் பிறந்திருக்கிறீர்கள். அது ஒரு க டமை. காதல் அல்ல. அது ஒரு சமூக நியதி. அது உதவுகிறது. ஆனால் அது உங்களுக்குள் ஆழ்ந்த ஒன்று அல்ல. உங்களுக்கு அது எதையும் கொண்டு வருவதில்லை. அது ஓர் விசேஷம் அல்ல. உங்களுக்குள் விரியும் ஓர் ஆழம் அல்ல அது. அது ஒரு மேல்பரப்பு மட் டுமே. ஒரு முகம் மட்டுமே. கோயிலுக்குப் போய்ப் பாருங்கள். ஞாயிறு தோறும் அவர்கள் கோயிலுக்குப் போகிறார்கள், ஜெபங்களையும் செய்கிறார்கள். ஆனால் அது எப்போது முடியுமென்று காத்திருக்கிறார்கள்.

ஒரு கோயிலுக்குள் ஒரு சிறு குழந்தை உட்கார்ந்து கொண்டிருந்தது. அப்போதுதான் முதல் முறையாக அது கோயிலுக்கு வந்திருந்தது. அதற்கு நாலே வயதுதான் ஆகியிருந்தது. ''உனக்குப் பிடிச்சிருக்குதா?'' என்று அம்மா அதனிடம் கேட்டாள். குழந்தை சொன்னது, ''பாட்டு நல்லா இருக் குது. ஆனா வியாபாரம் முடிய ரொம்ப நேரம் இழுக்குது!'' உங்களுக்கு விசுவாசம் இல்லை என்றால் அது வியாபாரம்தான். சிரத்தை என்றால் சரியான விசுவாசம். நம்பிக்கை என்பது தவறான விசுவாசம். இன்னொருவருக்காக சமயத்தை ஏற்றுக் கொள்ளாதீர்கள். அதை நீங்கள் இரவல் வாங்க முடியாது. தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்வதாகும், விலை கொடுக்காமலே அதை நீங்கள் எடுத்துக் கொண்டு இருக்கிறீர்கள். ஆனால் ஒவ்வொன்றுக்கும் ஒரு விலை தந்தாக வேண்டும். மேலும் **அசம்பிரஞ்ஞாத சமாதி**யை அடைவது ஒன்றும் மலிவான ஒன்றல்ல. மொத்த கட்டணத்தையும் நீங்கள் கட்டியாகவேண்டும்: அந்த மொத்தக் கட்டணம் உங்கள் முழு உயிரேயாகும்.

கிறிஸ்தவராக இருப்பது என்பது ஒரு விலாசம் மட்டுமே. மதத் தன்மையோடு இருப்பது ஒரு விலாசம் அல்ல. உங்கள் முழு உயிருமே /

ஜீவனுமே அதில் ஈடுபடுகிறது. அது ஓர் அர்ப்பணிப்பு. பலர் என்னிடம் வந்த கூறுகிறார்கள், ''நாங்கள் உங்களை நேசிக்கிறோம். நீங்கள் சொல்வது எல்லாமே நல்லதுதான். ஆனால் நாங்கள் சந்நியாசம் ஏற்க விரும்பவில்லை. ஏனெனில் பொறுப்பேற்றுக்கொள்ள நாங்கள் விரும்பவில்லை. ''ஆனால் நீங்கள் பொறுப்பேற்காத வரை, ஈடுபடுத்திக் கொள்ளாத வரை உங்களால் வளர முடியாது. ஏனெனில் அப்போது உறவு என்பது இல்லை. அப்போது உங்களுக்கும் எனக்கும் இடையில் வார்த்தைகள் இருக்கலாம், உறவு இருப்பது இல்லை. அப்போது உங்களுக்கு நான் ஓர் ஆசிரியராக இருக்கலாம், ஆனால் ஒரு குருவாக இருக்க முடியாது. அப்போது நீங்கள் எனக்கு ஒரு மாணவராக இருக்கலாம், ஒரு சீடராக முடியாது.

**சிரத்தை** அதாவது விசுவாசம் / ஈடுபாடு என்பது முதல் வாசல். இரண்டாவது, **வீரியம்**. இதுவும் மொழிபெயர்க்கக் கடினமானதுதான். 'முயற்சி' என இது மொழிபெயர்க்கப்படுகிறது. இல்லை. முயற்சி என்பது இதன் ஒரு பகுதி மட்டும்தான். **வீரியம்** என்பதற்கு பல பொருள்கள் உண்டு. ஆனால் அதன் ஆழமான பொருள் உயிர்ச்சக்தி என்பதே. வீரியம் என்பதன் ஒரு பொருள் விந்து, பாலியல் ஆற்றல் என்பது. அதை மிகவும் சரியாக மொழிபெயர்க்க உண்மையாகவே நீங்கள் விரும்பினால், வீரியம் என்பது உயிர்ச்சக்தி என்பதுதான். உங்களின் மொத்த ஆற்றலின் நிகழ்வே அது. ஆற்றலே நீங்கள் என்பதே அது. இந்த ஆற்றலை முயற்சி மூலமே வெளிக்கொணர முடியும் என்பதும் உண்மைதான். எனவேதான் அதன் ஒரு பொருள் 'முயற்சி' என்பதாக இருக்கிறது.

ஆனால் அது சரியான மொழிபெயர்ப்பு அல்ல. **வீரியம்** என்ற சொல்லுக்கு இணையான வளமான மொழிபெயர்ப்பு அல்ல. வீரியம் என்றால் உங்கள் ஆற்றல் முழுவதும் அதற்குள் கொண்டு வரப்பட வேண்டும். மனம் மட்டும் போதாது. மனதிலிருந்து நீங்கள் சரி என்று சொல்லலாம். அது போதாது. உங்களிடம் எதையும் மீதம் வைத்துக் கொள்ளாத உங்களின் ஒட்டு மொத்தம் - அதுவே வீரியம் என்பதற்குப் பொருள். ஆகவே இது விசுவாசம். முழு ஈடுபாடு இருந்தால் மட்டுமே சாத்தியம். மற்றபடி ஒரு பாதுகாப்புக்காக, ஒரு பத்திரத்துக்காக உங்களின் ஒரு பகுதியை நீங்கள் பிடித்து வைத்துக் கொள்கிறீர்கள். ஏனெனில் ''இந்த ஆள் தவறாக எங்கேனும் இட்டுச் சென்று கொண்டிருக்கலாம். எனவே எந்த நேரத்திலும் பின்வாங்க முடிய வேண்டும். 'போதும் போதும், இதற்குமேல் தேவையில்லை' என்று எந்த கட்டத்திலும் கூறிவிட முடியவேண்டும்.''

இந்த ஆள் எங்கே இட்டுச் செல்வாரோ என்ற எச்சரிக்கைக்காகவே உங்களில் ஒரு பகுதியை நீங்கள் தடுத்து நிறுத்திக் கொள்கிறீர்கள். பலரும் என்னிடம் வந்து , ''நாங்கள் கவனித்துக் கொண்டிருக்கிறோம். என்ன

நிகழ்கிறது என்பதை முதலில் நாங்கள் கவனிப்போம்.'' என்று சொல்கிறார்கள் இவர்கள் மிகவும் விவரமானவர்கள் - விவரமான முட்டாள்கள் - ஏனெனில் இத்தகு விஷயங்களை வெளியிலிருந்து கவனிக்க முடியாது. நிகழ்ந்து கொண்டிருப்பது ஓர் உள் நிகழ்வு. யாருக்கு அது நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதைக் கூட பல சமயங்களில் உங்களால் பார்க்க முடியாது. என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதை பல சமயங்களில் நான் மட்டுமே பார்க்க முடியும். என்ன நிகழ்ந்தது என்பதை, நீங்களே பிற்பாடுதான் அறியவருவீர்கள்.

மற்றவர்களால் கவனிக்க முடியாது. வெளியிலிருந்து அதை கவனிக்க எந்த வாய்ப்பும் இல்லை. வெளியிலிருந்து எப்படி உங்களால் கவனிக்க முடியும்? உடலசைவுகளை உங்களால் பார்க்க முடியும். மக்கள் தியானம் செய்வதை உங்களால் பார்க்கமுடியும். ஆனால் உள்ளுக்குள் நிகழ்ந்து கொண்டிருப்பது எதுவோ அதுவே தியானம். வெளியில் அவர்கள் செய்து கொண்டிருப்பது, வெறுமனே அதற்கான சூழலை உருவாக்குவதுதான்.

ஒரு நிகழ்ச்சி: ஜலாலுதீன் என்ற மிகப்பெரிய சூபி குரு இருந்தார். அபூர்வமான மாணவர்கள் அடங்கிய ஒரு சிறு பள்ளியை அவர் வைத்திருந்தார். அவர்கள் மிகவும் அபூவர்மானவர்கள். ஏனென்றால் அத்தகையவர்களை மட்டுமே அவர் தேடித் தேர்ந்தெடுக்கிறார். தான் தேர்ந்தெடுக்காத எவரையும் தன் குழுவில் அவர் அனுமதிக்க மாட்டார். மிகச் சிலருக்காகவே அவர் இயங்கினார். ஆனால் அங்கு என்னதான் நிகழ்ந்து கொண்டிருந்தது என்பதைப் பார்ப்பதற்காக சில நேரங்களில் சில மனிதர்கள் அவரிடம் வருவார்கள். அப்படி ஒரு தடவை ஒரு பேராசிரியர் கூட்டம் வந்தது. எப்போதுமே இவர்கள் மிகவும் உஷாரான, மிகவும் விவரமான மனிதர்களாகவே இருக்கிறார்கள். அவர்கள் வந்து பார்த்தபோது குருவின் வீட்டு முற்றத்தில் ஐம்பது பேர் நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் கிறுக்குத் தனமான சைகைகளை செய்து கொண்டிருந்தார்கள். சிலர் சிரித்துக் கொண்டும் சிலர் அழுது கொண்டும் சிலர் குதித்துக் கொண்டும் இருந்தார்கள். அதை பேராசிரியர்கள் கவனித்தார்கள்.

அவர்கள் சொன்னார்கள், ''இங்கு என்ன நடக்கிறது? இந்த மனிதன் இவர்களை பைத்தியம் பிடிக்கும் நிலைக்கு இட்டுச் சென்று கொண்டிருக் கிறார். ஏற்கனவே இவர்கள் பைத்தியமாக இருக்கிறார்கள், முட்டாளாகவும் இருக்கிறார்கள். ஏனென்றால் ஒருதடவை உங்களுக்கு பைத்தியம் பிடித்துவிட்டால் அதிலிருந்து மீண்டுவருவது கடினமே. இது அபத்தமாக இருக்கிறது. இப்படி ஒரு போதும் நாம் கேள்விப்பட்டதில்லை. தியானம் செய்வோர் என்றால் அமைதியாகத்தானே அமர்ந்திருப்பார்கள்.'' என்றனர்.

அவர்களுக்கு இடையில் பலத்த வாக்குவாதம் நடந்தது. அவர்களில் சிலர், ''இங்கே நடந்து கொண்டிருப்பது என்ன என்பது நமக்குத் தெரியாது. ஆகையால் இதுபற்றி எவ்வித தீர்ப்பு மேற்கொள்வதும் சரியல்ல'' என்றார்கள். பின் அவர்களில் ஒரு மூன்றாவது பிரிவினர், ''இது எத்தகையதாக இருந்தாலும் இது பார்த்து மகிழக்கூடியதாகவே இருந்தது. நாங்கள் இதை கண்டு மகிழவே விரும்புகிறோம். இது அழகாக இருக்கிறது. இதை நாம் ஏன் ரசிக்கக் கூடாது? அவர்கள் செய்வது என்ன என்று ஏன் போட்டு அலட்டிக் கொள்ள வேண்டும்? மாறாக அவர்களை வெறுமனே கவனிப்பதே ஓர் அழகான காரியமாகத்தான் இருக்கிறது.'' என்று சொன்னார்கள்.

அதன்பிறகு சில மாதங்கள் கழித்து மறுபடியும் அதே கூட்டம் அந்த பள்ளியைப் பார்வையிட வந்தது. இப்போது என்ன நடந்து கொண் டிருந்தது? இப்போது எல்லோரும் அமைதியாக இருந்தார்கள். ஐம்பதுபேர் அங்கு இருந்தார்கள். குருவும் அங்கு இருந்தார். அவர்கள் அனைவரும் அமைதியாக - அவ்வளவு அமைதியாக அமர்ந்திருந்தார்கள். அங்கு ஓர் ஆள்கூட இல்லை என்னுமளவுக்கு சிலை போல் இருந்தார்கள். மறுபடியும் விவாதம் நடந்தது. ஒரு பிரிவினர் கூறினர், ''இப்போது இவர்கள் உதாவக்கரைகளாகிவிட்டார்கள். பார்ப்பதற்கு இனி இங்கு என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை. முதல்முறை நாம் வந்திருந்த போது அது அழகாக இருந்தது. நாம் அதை ரசித்திருந்தோம். ஆனால் இப்போது கான்பது முற்றிலும் சலிப்பைத் தருகிறது என்றனர். மற்றொரு பிரிவினர் சொன்னார்கள், ''ஆனால் இப்போது தான் அவர்கள் தியானம் செய்து கொண்டிருக்கிறார்கள் என்று நாங்கள் நினைக்கிறோம். முதல் தடவை வந்த போது இவர்கள் சுத்தப் பைத்தியங்களாகவே இருந்தார்கள். இப்போது செய்வதுதான் சரியான செயல். இப்படித்தான் தியானம் நடைபெற வேண்டும். இப்படித்தான் சாத்திரங்களில் எழுதி இருக்கிறது. இந்த முறையில்தான் விவரிக்கப்பட்டிருக்கிறது.'' என்றனர்.

ஆனால் இன்னுமொரு பிரிவினர் - மூன்றாவது பிரிவினர் சொன்னார்கள், ''தியானத்தைப் பற்றி எங்களுக்கு எதுவும் தெரியாது. எனவே நாங்கள் எதைக் கொண்டு தீர்மானிப்பது?'' என்றனர்.

பின் மறுபடியும் சில மாதங்களுக்குப் பின் அந்த குழுவினர் வந்தனர். இப்போது அங்கு யாருமில்லை. குரு மட்டுமே அமர்ந்திருந்தார். புன்முறுவல் பூத்துக் கொண்டிருந்தார். எல்லாச் சீடர்களும் மறைந்து விட்டிருந்தார்கள். எனவே குழுவினர் கேட்டார்கள், ''என்ன நேர்ந்தது? முதல் முறை நாங்கள் வந்தபோது ஒரு பைத்தியக்காரக் கும்பல் காணப்பட்டது. இது பயனற்றது, எல்லோரையும் நீங்கள் பைத்தியமாக

ஆக்கிக் கொண்டிருக்கிறீர்கள் என்று நாங்கள் நினைத்தோம். அடுத்தமுறை நாங்கள் வந்தபோது மிகவும் அருமையாக இருந்தது. மக்கள் தியானம் செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் எல்லாரும் இப்போது எங்கே போய்விட்டார்கள்?''

குரு சொன்னார், ''வேலை முடிந்தது. சீடர்கள் போய் விட்டார்கள். காரியம் நிகழ்ந்துவிட்ட மகிழ்ச்சியில் நான் சிரித்துக் கொண்டிருக்கிறேன். நீங்களோ முட்டாள்களாக இருக்கிறீர்கள். எனக்குத் தெரியும். நீங்கள் மட்டுமல்ல, நானும் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறேன். என்னென்ன விவாதங்கள் நடைபெற்றன என்பது எனக்கும் தெரியும். முதல் தடவையும் இரண்டாவது தடவையும் நீங்கள் என்ன நினைத்தீர்கள் என்பதை நான் அறிவேன்,'' என்றார் ஜலாலுதீன். ''மூன்று தடவை இங்கு வர நீங்கள் மேற்கொண்ட முயற்சியே நீங்கள் தியானிகளாக ஆவதற்குப் போதுமானதாக இருந்திருக்கும். விவாதத்தில் நீங்கள் செலவிட்ட அளவு ஆற்றலே உங்களை அமைதியானவர்களாக ஆக்குவதற்குப் போதுமான தாக இருந்தது. மேலும் இதே கால அளவிலயே அந்த சீடர்கள் மறைந்து விட்டார்கள். நீங்களோ நின்ற இடத்திலேயே நின்றுகொண்டிருக்கிறீர்கள். உள்ளே வாருங்கள்! வெளியில் இருந்து வேடிக்கை பார்க்காதீர்கள்.'' என்றார். அவர்கள் சொன்னார்கள், ''உண்மைதான்! இங்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதைக் காண்பதற்குத்தான் நாங்கள் இங்கே மறுபடியும் மறுபடியும் வந்து கொண்டிருக்கிறோம் எங்களுக்கு உறுதி ஏற்பட்டபின்... மற்றபடி இதில் ஈடுபட்டுக் கொள்ள நாங்கள் விரும்பவில்லை.

விவரமான மனிதர்கள் ஒருபோதும் (ஈடுபட்டுக்) பொறுப்பேற்றுக் கொள்ள விரும்புவதில்லை. ஆனால் பொருப்பேற்பு இல்லாமல் எங்கேனும் வாழ்க்கை உண்டா? ஆனால் அர்ப்பணிப்பு /பொறுப்பேற்பு என்பது ஓர் அடிமைத்தனம் என்று விவரமானவர்கள் நினைக்கிறார்கள். ஆனால் அடிமைத்தனம் இல்லாமல் விடுதலை எங்கேனும் இருக்கிறதா? (வெளியே வருவது என்பது முதலில் சிக்குண்டிருப்பதால்தானே?) முதலில் ஓர் உறவுக்குள் நீங்கள் இயங்க வேண்டி இருக்கிறது. அதன் பிறகு மட்டுமே அதைக் கடந்துபோக உங்களால் முடியும். முதலில் ஓர் ஆழமான ஈடுபாட்டுக்குள் நீங்கள் இயங்க வேண்டும். மிகவும் ஆழமாக, இதயத்திலிருந்து இதயத்துக்கு இயங்க வேண்டும். அதன்பிறகு மட்டுமே உங்களால் அதைக் கடந்துசெல்ல முடியும், வேறு வழியே இல்லை. சுற்றுப்பிராகாரத்திலேயே நடந்து கொண்டு பார்த்துக் கொண்டிருந்தால் கர்ப்பக்கிரகத்துக்குள் ஒருபோதும் உங்களால் நுழைய முடியாது. (அர்ப்பணிப்பே கர்ப்பக்கிரகம்) அந்நிலையில் எந்த உறவும் ஏற்பட வாய்ப்பில்லை.

குரு - சீட உறவு ஒரு காதல் உறவு போன்றதே. இதுதான் இருப்பதிலேயே மிக உயர்ந்த அன்பு அது. உறவு ஏற்படாத வரை உங்களால் வளர முடியாது. முதலாவது, ஈடுபாடு - சிரத்தை. இரண்டாவது, ஆற்றல் - முயற்சி என்கிறார் பதஞ்சலி. உங்கள் ஆற்றல் முழுவதும் செயலுக்குக் கொண்டு வரப்பட வேண்டும். ஓரளவு என்பது உதவாது. சொல்லப்போனால் அது அழிவுபயப்பதாகக் கூட ஆகலாம். ஏனெனில் பகுதியளவே நீங்கள் உள்ளே வந்து பகுதியளவு வெளியே நின்று கொண்டால் உங்களுக்குள் அது ஒரு பிளவாக ஆகிவிடும். உங்களுக்குள் அது ஓர் இறுக்கத்தை ஏற்படுத்தும். பரவசத்துக்குப் பதிலாக அது ஒரு பதட்டமாகவே ஆகும்.

நீங்கள் உங்கள் முழுமையில் இருக்கும் இடத்திலேயே ஆனந்தம் இருக்கிறது. நீங்கள் பகுதியளவே இருக்குமிடத்தில் பதட்டமே இருக்கிறது. ஏனெனில் அப்போது நீங்கள் பிளவுபட்டிருக்கிறீர்கள். அதில் ஓர் இறுக்கம் இருக்கிறது. இரண்டு பகுதிகளும் தனித்தனி வழியில் போய்க் கொண்டிருக்கிறது. அந்நிலையில் உங்கள்பாடு சிரமம்தான்.

> **மற்றவர்கள் நம்பிக்கை - முயற்சி - நினைவு கூரல் - ஒருமுக கவனம் - பாகுபடுத்தி அறிதல் வாயிலாக அசம்பிரஞ்ஞாத சமாதியை அடைகிறார்கள்.**

நினைவுகூரல் என்பதற்கான சொல் **ஸ்மிருதி**: ஞாபகம். இதை குருட்ஜீப் தன்னை - நினைவுகூரல் என்கிறார். அதுதான் ஸ்மிருதி.

உங்களையே உங்களால் நினைவில் கொள்ள முடிவதில்லை. கோடிக்கணக்கான செய்திகளை நீங்கள் நினைவு கூரலாம். ஆனால் உங்களை - நீங்கள் இருப்பதை - தொடர்ச்சியாக மறந்துகொண்டே போகிறீர்கள் நீங்கள். குருட்ஜீப் ஓர் உத்தி வைத்திருந்தார். அதை அவர் பதஞ்சலியிடம் இருந்துபெற்றார். உண்மையைச் சொன்னால் எல்லா உத்திகளுமே பதஞ்சலியிடம் இருந்தே வருகின்றன. உத்திகளில் கரைகண்டவர் அவர். ஸ்மிருதி என்றால் ஞாபகம் - நீங்கள் எதைச் செய்து கொண்டிருந்தாலும் நினைவில் இருத்தலே - சுயநினைவில் இருந்தலே - ஸ்மிருதி. நீங்கள் நடந்து கொண்டிருக்கிறீர்கள். உள்ளத்தின் ஆழத்தில் 'நான் நடந்து கொண்டிருக்கிறேன், நான் இருக்கிறேன்' என்பதை நினைவில் கொள்ளுங்கள். நடப்பதிலேயே தொலைந்து போகாதீர்கள். நடை என்னும் இயக்கம் - செயல்பாடு ஒருபுறம் இருக்கிறது. அத்துடன் உள்மையமும் இருக்கிறது. அதைக் குறித்தும் விழிப்புடனும், கவனித்துக் கொண்டும், சாட்சியாயும் இருங்கள்.

'நான் நடந்துகொண்டு இருக்கிறேன்' என்று உங்கள் மனதுக்குள் திரும்பத் திரும்ப கூறத் தேவையில்லை. அப்படி நீங்கள் கூறினால் அது

நினைவுகூரல் ஆகாது. நான் நடக்கிறேன். நான் சாப்பிடுகிறேன், நான் பேசுகிறேன், நான் கவனிக்கிறேன் என்பதை வார்த்தையில்லாமல் நீங்கள் உணரவேண்டும். நீங்கள் எதைச் செய்தாலும் உள்ளே இருக்கும் 'நான்' - ஐ மறந்துவிடக் கூடாது. அது கூடவே வரவேண்டும். இது, தான் எனும் உணர்வு அல்ல; தன்னைப்பற்றிய உணர்வு. தான் எனும் உணர்வு. அகங்காரம் ஆகும். தன்னைப்பற்றிய உணர்வோ **அஸ்மிதா** - தூய்மை, 'நான் இருக்கிறேன்' என்ற விழிப்பு மட்டும் ஆகும்.

சாதாரணமாக உங்கள் பிரக்ஞை உணர்வு புறப்பொருளை நோக்கிச் செலுத்தப்படுகிறது. நீங்கள் என்னைப் பார்க்கிறீர்கள். உங்கள் முழு உணர்வும் என்னை நோக்கி ஓர் அம்பு போல செலுத்தப்பட்டுக் கொண்டிருக்கிறது. ஆயினும் நீங்கள் என்மீதே செலுத்தப்படுகிறீர்கள். தன்னை நினைவுகூர்தல் என்றால் நீண்ட இருமுனை கொண்ட ஓர் அம்பாக இருந்தாக் வேண்டும். ஒருமுனை என்னை நோக்கி இயங்குகையில் மறுமுனை உங்களை நோக்கி இருக்கும். இருபுறமும் ஒருங்கே பாயும்படி எய்யப்படும் அம்பே ஸ்மிருதி - அதாவது சுய நினைவு.

மிகவும் கடினமே. ஏனென்னில் பொருளையே நினைத்து உங்களை மறந்துவிடுத்ல் எளிது. இதற்கு எதிரான நிலையும் - அதாவது உங்களையே நினைத்துப் புறத்தை மறந்துவிடுவதும் - எளிதே. இரண்டும் எளிதே. எனவேதான் உலகத்துக்குள் - கடைவீதியில் இருப்போரும் உலகத்துக்கு வெளியில் மடாலயத்துக்குள் இருப்போரும் ஒரே விதமாகவே இருக்கிறார்கள். இருவருமே ஒருதிசை அம்பாகவே இருக்கிறார்கள். கடைவீதியில் இருப்போர் பொருள்களையே பார்த்துக் கொண்டிருக்கிறார் கள். மடாலயத்தில் இருப்போர் தம்மையே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

**ஸ்மிருதி** என்பது கடைவீதியிலும் இல்லை மடாலயத்திலும் இல்லை. சுயத்தை நினைவு கூரும் நிகழ்ச்சியே **ஸ்மிருதி** - அது உள்ளும் புறமும் உணர்வு நிலையில் ஒருங்கே இருக்கும் நிகழ்வு. உலகிலேயே மிகவும் கடினமான காரியம் இதுதான். இதனை ஒரே ஒரு கண நேரமாகிலும், அதன் ஒரு சிறு கூறு நேரமாகிலும் நீங்கள் அடைய முடிந்தால் அப்பொழுதே **சட்டோரியின்** கணநேர தரிசனத்தை நீங்கள் பெற்றிருப்பீர்கள். உடனடியாகவே நீங்கள் உடம்பில் இருந்து வெளியேறி வேறெங்கோ போயிருப்பீர்கள்.

முயன்று பாருங்கள். ஒன்றை மட்டும் நினைவில் வையுங்கள் - உங்களுக்கு விசுவாசம் இல்லாவிட்டால் இது ஒரு மனக்குழப்பமாக ஆகும். இதுதான் இதிலுள்ள சிக்கல். அந்த மனக் குழப்பம் எந்த அளவுக்குப் பெரிதாக இருக்கும் என்றால் இதனால் உங்களுக்குப் பைத்தியமே

பிடித்துவிட முடியும். ஏனெனில் அது மிகவும் கொந்தளிப்பான மனநிலையாக இருக்கும். எனவேதான் பொருள் - மனம் இரண்டையும், புறம் - அகம் இரண்டையும் ஒருசேர நினைவில் கொள்ளல் கடினமாக உள்ளது. இரண்டையும் நினைவுகூரல் என்பது மிகமிகக் கடினமானதே. விசுவாசம் இருந்தால் அது மன இயக்கத்தை தணித்துவிடும். ஏனெனில் விசுவாசம் என்பது அன்பே. அது உங்களைச் சாந்தப்படுத்தும். உங்களைச் சுற்றி ஒரு சாந்தப்படுத்தும் ஆற்றலாக அது விளங்கும். இல்லாவிட்டால் மன இறுக்கமே - குழப்பமே மிகவும் அதிகரித்து உங்களால் தூங்க முடியாமல் போய்விடும். உங்களால் ஒரு கணமும் அமைதியாய் இருக்க முடியாது. ஏனெனில் அது ஓர் ஓயாத பிரச்சினையாக இருக்கும். தொடர்ச்சியாக நீங்கள் (கவலையுடனேயே) பதட்டத்துடனேயே இருப்பீர்கள்.

எனவே நீங்கள் ஒன்று செய்ய முடியும் - அது எளிதானது. அதாவது மடத்துக்குப் போய்விடலாம், கண்களை மூடிக் கொள்ளலாம்; உங்களையே நினைத்துக் கொண்டிருக்கலாம், உலகத்தை மறந்துவிடலாம். ஆனால் இதன்மூலம் நீங்கள் செய்து கொண்டிருப்பது என்ன? மொத்த நிகழ் முறையையும் வெறுமனே தலைகீழாக்கி இருக்கிறீர்கள், வேறொன்று மில்லை. எந்த மாறுதலும் இல்லை. அல்லது இந்த மடங்களையும், ஆலயங்களையும் இந்தச் சாமியார்களையும் மறந்துவிட்டு உலகில் இருக்கலாம், உலகை அனுபவிக்கலாம். இதுவும் எளிதானதுதான். ஆனால் கடினமான காரியம், இரண்டைக் குறித்தும் உணர்வுடன் இருப்பதுதான். அப்படி இரண்டைக் குறித்தும் நீங்கள் உணர்வுடன் இருக்கும்போது, உங்களின் ஆற்றல் இருபுறத்திலும் ஏககாலத்தில் உணர்வுடன் இருக்கும் போது, நேர் எதிர்எதிரான பரிமாணங்களிலும் அம்புபோல் பாயும்போது, அங்கு கடந்து செல்லுதல் நிகழ்கிறது. நீங்கள் அப்படியே மூன்றாவது ஓர் ஆளாக ஆகிறீர்கள். இரண்டுக்கும் நீங்கள் சாட்சியாக ஆகிறீர்கள். மூன்றாவது நுழைந்ததுமே முதலில் பொருளையும் உங்களையும் காண நீங்கள் முயல்கிறீர்கள். ஆனால் இரண்டையும் காண நீங்கள் முயன்றால் படிப்படியாக, படிப்படியாக உங்களுக்குள் ஏதோ ஒன்று நிகழ்ந்து கொண்டிருப்பதை நீங்கள் உணர்வீர்கள். இது ஏனெனில் நீங்கள் மூன்றாவதாக ஆகிக் கொண்டிருக்கிறீர்கள். எழுவாய், பயனிலை இரண்டுக்கும் இடைப்பட்டவராக நீங்கள் இருக்கிறீர்கள். இப்போது நீங்கள் பொருளுமல்ல, மனமுமல்ல (புறமும் அல்ல அகமும் அல்ல).

**நம்பிக்கை - முயற்சி - நினைவுகூரல் - ஒருமுக கவனம் - பாகுபடுத்தி அறிதல் வாயிலாக அடைகிறார்கள்.**

**சிரத்தை**, விசுவாசம், **வீரியம்**, முழு அர்ப்பணிப்பு, முழுமுயற்சி, முழு ஆற்றல் ஆகியவற்றை உள்ளே கொண்டுவர வேண்டும். உங்கள்

உள்ளாற்றல் முழுவதும் கொண்டு வரப்படவேண்டும். நீங்கள் உண்மையாகவே உண்மையைத் தேடுபவர் என்றால் வேறெதையும் உங்களால் தேடமுடியாது. அது ஒரு முழுமையான ஈடுபாடாகவே இருக்கும். அதை ஒரு பகுதிநேரப் பணியாக உங்களால் ஆக்க முடியாது. காலை நேரங்களில் தாம் தியானிப்போம், பின் விட்டு விடுவோம் ''என்று கூற முடியாது. இல்லை, தியானம் என்பது உணர்வில் இருபத்து நான்கு மணிநேரமும் தொடர்ச்சியாக நடப்பதாக ஆகவேண்டும். நீங்கள் எதைச் செய்தாலும் அதன் பின்னணியில் இடையறாமல் தியானம் என்பது இருந்தாக வேண்டும். இதற்கு ஆற்றல் தேவைப்படுகிறது. உங்கள் முழு ஆற்றலும் தேவைப்படும்.

அடுத்து சில விஷயங்கள். உங்கள் ஆற்றலும் தியானத்துக்கு தேவைப்படும்போது காமம் தானாக மறைந்துவிடுகிறது. ஏனெனில் வீணடிக்க உங்களிடம் ஆற்றல் மீதம் இருக்காது. பதஞ்சலியைப் பொறுத்தவரை **பிரம்மச்சரியம்** என்பது ஓர் ஒழுங்குமுறை அல்ல. அது ஒரு பின்விளைவு. உங்கள் முழு ஆற்றலையும் சமயத்திற்காக ஈடுபடுத்துவதால் உங்களிடம் ஆற்றல் ஏதும் காமத்திற்காக மீதமிருப்பதில்லை.. சாதாரண வாழ்க்கையிலும் இது நிகழ்கிறது. ஒரு மாபெரும் ஓவியரை நீங்கள் பார்க்க முடியும். அவர் பெண்களை முழுமையாக மறந்து விடுகிறார். அவர் ஓவியம் தீட்டும் போது அவர் மனதில் காமம் இருப்பதில்லை. ஏனெனில் மொத்த ஆற்றலும் வேறு திசையில் இயங்கிக் கொண்டிருக்கிறது. அதற்குமேல் கூடுதல் ஆற்றல் காமத்திற்காக அவரிடம் இருப்பதில்லை.

ஒரு மாபெரும் கவிஞர் - பாடகர் - நடனக்காரர் தன் துறையில் முழுமையாக ஈடுபடும்போது தானாகவே பிரம்மச்சாரியாக ஆகிறார். அதற்கான தனியாக ஒழுங்குமுறை அவரிடம் இல்லை. காமம் என்பது மிதமிஞ்சிய ஆற்றல். காமம் என்பது ஒரு பாதுகாப்பு வடிகால். உங்களுக்குள் அளவுக்கு அதிகமாக இருந்து. அதற்கு நீங்கள் எதையும் செய்ய முடியாது இருந்தால் இயற்கையே ஒரு வடிகால் - சேஃப்ட்டி வால்வ் அமைத்துள்ளது: அந்த அதிகத்தை நீங்கள் அதன்மூலம் வெளியில் எறிந்துவிட முடிகிறது. இல்லாவிட்டால் நீங்கள் பைத்தியமாகி விடுவீர்கள் அல்லது வெடித்து விடுவீர்கள். அதை நீங்கள் அடக்கி வைக்க முயன்றால், அப்போதும் நீங்கள் பைத்தியம் ஆவீர்கள். ஏனெனில் அடக்குதல் ஒருபோதும் உதவாது. நிலைமாற்றமே தேவை. முழுமையான ஈடுபாட்டின் மூலமாகவே அந்த தன்மை மாற்றம் வருகிறது. ஒரு போர்வீரன் மெய்யாகவே வீரன் என்றால் - அப்பழுக்கற்ற வீரன் என்றால் அவன் காமத்தைக் கடந்தவனாகவே இருப்பான். அவனுடைய மொத்த ஆற்றலும் இயக்கத்தில் இருக்கிறது.

மிக மிக அழகான கதை ஒன்று கூறப்படுகிறது: ஒரு மாபெரும் தத்துவ ஞானி, சிந்தனையாளர் இருந்தார். அவர் பெயர் வாச்சஸ்பதி... அவர் தன் படிப்பில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். அப்போது அவரது அப்பா அவரிடம் கூறினார், ''எனக்கு வயதாகிக் கொண்டு வருகிறது. எப்போது இறப்பேன் என்பது எனக்கே தெரியாது. எந்த நிமிடத்திலும் எனக்கு சாவு வரலாம். நீ என் ஒரே மகன், எனவே உனக்குத் திருமணம் பண்ணிப் பார்க்க ஆசைப்படுகிறேன்.'' என்றார். ஆனால் மகனோ அப்போது தன் முழுக் கவனத்தையும் படிப்பில் செலுத்தி இருந்ததால் 'சரி' என்று சொல்லி விட்டார். அவர் சொன்னதை அவரே கவனிக்கவில்லை. எனவே அவருக்கு திருமணம் ஆயிற்று. ஆனாலும் அவருக்கு ஒரு மனைவி இருப்பதையே அவர் முற்றிலும் மறந்துவிட்டார். அந்த அளவுக்கு கற்பதில் ஈடுபாட்டுடன் இருந்தார்.

இத்தகைய நிகழ்ச்சி இந்தியாவில் மட்டுமே நிகழ முடியும். வேறெங்கும் இப்படி நடக்க முடியாது. அந்த மனைவி அவரை மிகவும் நேசித்தாள். எனவே அவரை தொந்தரவு செய்ய அவள் விரும்பவில்லை. இவ்வாறு பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்தன என்று கூறப்படுகிறது. ஒரு நிழல்போல் அவருக்கு அவள் பணிவிடை செய்து வந்தாள். எல்லா வற்றையும் கவனித்துக் கொண்டாள். ஆனால் தொந்தரவு செய்யவில்லை. ''நான் இங்கு இருக்கும்போது நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்கவில்லை. ஓயாமல் அவர் ஓர் உரை எழுதிக் கொண்டிருந்தார். இதுவரை எப்போதும் எழுதப்படாத சிறந்த உரை அது. பதராயனரின் பிரம்ம சூத்திரங்களுக்கு அவர் உரை எழுதிக் கொண்டிருந்தார். அதில் அவர் எந்த அளவுக்கு முழுமையாக ஈடுபட்டிருந்தார் என்றால் அவர் தன் மனைவியை மறந்துவிட்டது. மட்டுமல்ல; யார் தனக்கு உணவு கொண்டு வருகிறார்கள், தட்டுகளை யார் திரும்ப எடுத்துக் கொண்டு போகிறார்கள், மாலையில் யார் வந்து விளக்கை ஏற்றுகிறார்கள், யார் படுக்கை விரிக்கிறார்கள் என்பதைக்கூட அவர் கவனிக்கவில்லை.

பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்தன. அவரது உரை நிறைவடைந்த இரவும் வந்தது. கடைசி சொல்லை மட்டுமே இனி எழுதவேண்டும். அவர் ஒரு சபதம் எடுத்திருந்தார். - உரை முடிந்ததும் தான் ஒரு துறவி ஆவதாக. அதன்பின் மனத்தைப் பற்றி அவர் கவலைப்பட மாட்டார். எல்லாமே முடிந்தது. அவர் நிறைவு செய்ய வேண்டிய ஒரே கருமம் அதுதான்.

அன்று இரவு அவர் சற்று ஓய்வாக இருந்தார். ஏனெனில் கடைசி வாக்கியத்தை சுமார் பன்னிரண்டு மணி அளவில் அவர் எழுதினார். அப்போதுதான் முதன்முதலாக தன் சுற்றுப்புறத்தை அவர் உணர வந்தார். விளக்கு மங்கலாக எரிந்துகொண்டிருந்தது. அதற்கு கொஞ்சம் எண்ணெய்

தேவைப்பட்டது. ஓர் அழகிய கரம் அதில் எண்ணெய் ஊற்றிக் கொண்டிருந்தது. அவர் திரும்பி அது யாரென்று பார்த்தார். அந்த முகத்தை அவரால் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. ''நீங்கள் யார்? இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டார். மனைவி சொன்னாள், ''இப்போது நீங்கள் கேட்டு விட்டதால் நான் சொல்லியாக வேண்டும். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் என்னை நீங்கள் உங்கள் மனைவியாகக் கொண்டு வந்தீர்கள். ஆனால் நீங்கள் மிகவும் ஈடுபாட்டோடு இருந்ததால், உங்கள் வேலையில் பொறுப்புணர்வோடு உங்களை நீங்கள் முற்றிலுமாக ஒப்படைத்து விட்டிருந்ததால் உங்களை நான் குறுக்கிடவோ தொந்தரவு செய்யவோ விரும்பவில்லை.'' என்றள்.

வாச்சஸ்பதி அழத் தொடங்கினார். அவர் கண்களில் கண்ணீர் வழியத் தொடங்கியது. ''என்ன விசயம்?'' என்று மனைவி கேட்டாள். அவர் சொன்னார்,'' இது மிகவும் சிக்கலான விசயம். இப்போது என்ன செய்வதென்றே எனக்குத் தெரியவில்லை. ஏனெனில் உரை முற்றுப் பெற்றுவிட்டது. இப்போது நான் ஒரு சந்நியாசி. என்னால் இல்வாழ்க்கை நடத்த முடியாது. நான் உங்கள் கணவனாக இருக்க முடியாது. உரை முடிந்துவிட்டது. நான் முன்பே ஓர் உறுதி எடுத்துவிட்டேன். உடனடியாக நான் போகப் போகிறேன். ஏன் நீங்கள் முன்பே என்னிடம் சொல்லவில்லை? நான் உங்களைக் காதலித்திருக்க முடியும். மேலும் நீங்கள் செய்த சேவைக்கு, உங்கள் அன்புக்கு, உங்கள் பக்திக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?''

எனவே பிரம்ம சூத்திரங்களின் மீதான தன் உரையை அவர் பாமதி என்று அழைத்தார். பாமதி என்பது அவருடைய மனைவியின் பெயர். இந்தப் பெயர் பொருத்தமற்றதே. ஏனெனில் பதராயனரின் பிரம்ம சூத்திரங்களுக்கான உரையை பாமதி என்றதற்கு எந்தப் பொருளும் எந்த உறவும் இல்லை. ஆனால் அவர் சொன்னார், ''இனி வேறெதுவும் நான் செய்வதற்கு இல்லை. கடைசி வேலை, நூலுக்குத் தலைப்பிடுதல். எனவே அதை நான் பாமதி என்று அழைக்கிறேன். இதன்மூலம் என்றென்றும் அது நினைவு கூரப்படும்.''

அவர் புறப்பட்டு விட்டார். மனைவி கதறி அழுது கொண்டிருந்தாள். ஆனால் அது வேதனையில் எழுந்த அழுகை அல்ல. முற்றான பரவசத்தில் எழுந்த கண்ணீர். அவள் சொன்னாள், ''இதுவே போதும். இந்தச் செய்கை, உங்கள் கண்களில் காணும் இந்த அன்பு; இதுவே போதும். இதிலேயே எனக்கு போதிய கைம்மாறு கிடைத்துவிட்டது. குற்றஉணர்வு கொள்ளா தீர்கள். செல்லுங்கள். என்னை முழுமையாக மறந்து விடுங்கள். உங்கள்

மனத்துக்கு நான் ஒரு பாரமாக இருக்க விரும்பவில்லை. இனி என்னை நினைவில் கொள்ளத் தேவை இல்லை.''

இது சாத்தியமே. நீங்கள் முழுமையான ஈடுபாடு கொண்டால் காமம் மறைந்து விடுகிறது. ஏனெனில் காமம் என்பது ஒரு வடிகால் மட்டுமே. ஆற்றல் பயன்படுத்தப்படாமல் உங்களிடம் மிதமிஞ்சி இருக்கும்போது காமம் உங்களை அழைக்கழிப்பதாகிறது. மொத்த ஆற்றலும் பயன்படுத்தப்பட்டதும். காமம் மறைகிறது. அதுவே பிரம்மச்சரிய நிலை. வீரிய நிலை. உங்கள் உள்ளாற்றல் முழுவதன் மலர்ச்சி நிலை.

### முயற்சி, நினைவுகூரல், ஒருமுக கவனம், பாகுபடுத்தி அறிதல்:

**சிரத்தை** - விசுவாசம்; **வீரியம்** - உங்கள் மொத்த உயிராற்றல், உங்கள் முழுஈடுபாடு, மற்றும் முயற்சி; **ஸ்மிருதி** - சுயநினைவு; அடுத்து சமாதி. சமாதி என்ற சொல்லின் பொருள், பிரச்சினை எதுவும் இருக்காத மனநிலை என்பதாகும். அது **சமாதான்** என்ற சொல்லில் இருந்து விரிகிறது. சமாதான் என்றால் நீங்கள் முற்றிலும் சரி என்று உணரும் மனநிலை அதில் எந்தப் பிரச்சனையும், எந்தக் கேள்வியும் இல்லாத நிலை. எந்தப் பிரச்சினையும் இல்லாத எந்தக் கேள்வியும் இல்லாத மனநிலை. அது ஒருமுக கவனம் (Concentration) அல்ல. ஒருமுக கவனம் என்பது, பிரச்சினைகள் அற்ற மனத்துக்கு தானாக ஏற்படும் ஒரு பண்புதான். இது தான் மொழிபெயர்ப்பதில் உள்ள சிரமம்.

ஒருமுக கவனம் என்பது இந்த மனநிலையின் ஒரு பகுதிதான் - இது தானாக ஏற்படுகிறது. ஒரு குழந்தையைப் பாருங்கள் - அது தன் விளை யாட்டில் முழுவதுமாக லயித்திருக்கிறது /திளைத்திருக்கிறது. எவ்வித முயற்சியுமின்றி அதன் மனம் குவிந்திருக்கிறது. அது தன் விளையாட்டில் கவனத்தைக் குவிக்கவில்லை. ஒருமுக கவனம் என்பது ஒரு துணை விளைவு. விளையாட்டில் அது முழுமையாக லயித்திருப்பதால் மன ஒருமை நிகழ்கிறது. எதன் மீதாவது மனத்தை ஒருமைப்படுத்த உங்களுக்கு தெரிந்தே முயன்றால் பின் அது ஒரு முயற்சி ஆகும். அங்கே இறுக்கம் இருக்கும், நீங்கள் களைத்துப் போவீர்கள்.

சமாதி என்பது ஒன்றில் நீங்கள் ஒன்றிவிட்டால் தானாக, தன்னிச்சை யாக நிகழ்கிறது. என்னை நீங்கள் கவனித்துக் கேட்டுக் கொண்டிருந்தால் அது ஒரு சமாதி ஆகிறது.என்னை முழுமையாக நீங்கள் கேட்டால் வேறு எந்த தியானமும் கூட தேவை இல்லை. அது ஒரு மன ஒருமைப்பாடு ஆகிறது. மனத்தை நீங்கள் குவிக்கிறீர்கள் என்பதல்ல, அன்புடன் நீங்கள் கவனித்துக் கேட்டால் ஒருமுக கவனம் தானாக ஏற்படுகிறது.

**அசம்பிரஞ்ஞாத சமாதியில்** ஈடுபாடு முழுமையாக இருக்கும்போது, முயற்சி மும்முரமாக இருக்கும்போது, (சுய) நினைவுகூர்தல் ஆழமாக இருக்கும்போது சமாதி நிகழ்கிறது. எதை நீங்கள் செய்தாலும் அதை முழுமையான ஒருமைப்பாட்டுடன் செய்யுங்கள் - மனத்தைக் குவிக்க எந்த முயற்சியும் செய்யாதீர்கள். மனதை ஒருமுகப்படுத்த முயற்சி தேவைப்படு மானால் அது அசிங்கமானதே. அது உங்களைப் பீடித்த ஒரு நோய் போன்றது. அதனால் நீங்கள் அழிக்கப்படுவீர்கள். ஒருமுக கவனம் என்பது ஒரு பின்விளைவாக வரவேண்டும். ஒருவரை நீங்கள் நேசிக்கிறீர்கள். அவருடன் நீங்கள் இருக்கும்போது நீங்கள் ஒருமுகப்பட்டிருக்கிறீர்கள். ஒன்றை நினைவில் கொள்ளுங்கள்: எதன்மீதும் ஒருபோதும் கவனத்தைக் குவிக்காதிருங்கள். மாறாக, ஆழமாக கவனியுங்கள், முழுமையாக கவனியுங்கள். மன ஒருமை உங்களில் தானாக எழுவதைக் காண்பீர்கள்.

அடுத்தது பாகுபடுத்தி அறிதல் - **பிரக்ஞை**. பிரக்ஞை என்றால் பாகுபடுத்தி அறிதல் அல்ல. பாகுபடுத்தி அறிதல் என்பதும் பிரக்ஞையின் ஒரு பகுதியே. உண்மையில் பிரக்ஞை என்றால் மெய்யறிவு. தன் விழிப்புணர்வை தானே அறிந்து கொண்டிருக்கும் நிலை. தியானக் கனல் சுடர்விட்டு எழும்போது அந்த கனலைச் சூழ்ந்திருக்கும் ஒளியே, பிரகாசமே பிரக்ஞை என்றார் புத்தர். உள்ளே **சமாதி**, உங்களைச் சுற்றிலும் வெளியே ஓர் ஒளி; ஓர் ஒளிவட்டம் உங்களை சூழ்ந்து வருகிறது. உங்கள் ஒவ் வொரு செயலிலும் நீங்கள் ஞானத்துடன் செயல்படுகிறீர்கள். ஞானத்துடன் செயல்பட நீங்கள் முயன்று கொண்டிருக்கிறீர்கள் என்பதல்ல. நீங்கள் முழு உணர்வுடன் இருப்பதால் அது தானாக நிகழ்கிறது. அவ்வளவே. நீங்கள் எதைச் செய்தாலும் அது அறிவுடைமையாகவே அமைகிறது - சரியான செயலைச் செய்ய வேண்டும் என சதா நீங்கள் நினைத்துக் கொண்டிருப் பது அல்ல இது.

சரியான செயலையே செய்ய வேண்டும் என இடையறாது நினைத்துக் கொண்டிருக்கும் மனிதரால் எந்தச் செயலையுமே செய்ய முடியாது. ஏன் தவறான செயலைக் கூட அவரால் செய்ய முடியாது. ஏனெனில் அது அவர் மனத்தில் மிகுந்த பதற்றத்தை உருவாக்கும். மேலும் எது சரி எது தவறு? இதை எப்படி உங்களால் முடிவு செய்ய முடியும்? மெய்யறிவு பெற்றவர், புரிதல் உள்ள மனிதர், தேர்ந்தெடுப்பதில்லை. அவர் இயல்பாக உணர்கிறார் - தன் விழிப்புணர்வை அவர் எல்லா இடத்திலும் பாய்ச்சுகிறார். அந்த ஒளியில் அவர் இருக்கிறார். எனவே அவர் எங்கெங்கு இயங்கினாலும் அது சரியாக இருக்கிறது.

சரியானது என்பது பொருள்களைச் சார்ந்தது அல்ல. அது உங்களைச் சார்ந்தது; இயங்கிக் கொண்டிருப்பவருக்குச் சொந்தமானது அது. சரியான

காரியங்களையே புத்தர் செய்கிறார் என்பதில்லை. ஒரு புத்தர் செய்கிறவை எல்லாமே சரியானதாக இருக்கிறது. அவ்வளவே. விவேகம் / பாகுபடுத்தி அறிதல் என்பது பற்றாக்குறையான சொல். புரிதல் மனிதரிடம் விவேகம் இருக்கிறது. அதைக் குறித்து அவர் யோசிப்பதில்லை. அவருக்கு அது எளிதாக - இயல்பாக இருக்கிறது. அவ்வளவே. இந்த அறையை விட்டு வெளியேற நீங்கள் விரும்பினால் கதவின் வழியாக நீங்கள் வெளியேறு கிறீர்கள், அவ்வளவே. தடுமாறுவது இல்லை. முதலில் சுவரிடம் போய் முட்டி பின் வழிகாண முயலுவது இல்லை. நேராக வெளியேறுகிறீர்கள். இதுதான் கதவு என்று நினைப்பதுகூட இல்லை.

ஆனால் ஒரு குருடர் வெளியேற வேண்டுமானால் ''கதவு எங்கே?'' என்று விசாரிப்பார். அப்போதும் அதைக் கண்டுபிடிக்க அவர் சிரமப்படுகிறார். பல இடங்களில் தன் குச்சியால் அவர் தட்டுவார், தடவுவார். தொடர்ந்து தன் மனதில் அவர் கேட்டுக் கொள்வார், ''இது கதவா அல்லது சுவரா? நான் போகும் பாதை சரியா அல்லது தவறா?'' பின் கதவை அடைந்ததும் ''ஆம், இதுதான் கதவு'' என்று அவர் எண்ணுகிறார்.

இதற்கெல்லாம் காரணம் அவர் பார்வை அற்றவராக இருப்பதுதான். நீங்கள் பார்வை அற்றவராக இருப்பதால்தான் ஒன்றை சரியா தவறா என பாகுபடுத்தி அறிகிறீர்கள். நீங்கள் எண்ண வேண்டி இருக்கிறது. ஏனென்றால் நீங்கள் கண்ணில்லாதவராக இருப்பதால்தான். சரியா தவறா என்பதை நீங்கள் நம்பவேண்டி இருப்பதற்கு காரணம் நீங்கள் பார்வை இல்லாமல் இருப்பதுதான். ஒழுக்கமாக - கட்டுப்பாடாக நீங்கள் நடக்க வேண்டி இருப்பதற்குக் காரணம் நீங்கள் குருடராக இருப்பதுதான். புரிதல் மலரும் போது, கனல் அங்கே கனலும்போது, நீங்களே பார்க்கிறீர்கள், எல்லாமே தெளிவாக இருக்கிறது. உள்ளத்தில் தெளிவு இருந்தால் எல்லாமே தெளிவாக இருக்கிறது. நீங்கள் காட்சி உடையவராக ஆகிறீர்கள். நீங்கள் செய்வதெல்லாம் சரியாகவே இருக்கிறது. அவை சரியாக இருப்பதால் அவற்றை நீங்கள் செய்கிறீர்கள் என்பதில்லை; புரிதலுடன் அவற்றை நீங்கள் செய்தால், அவை சரியாகவே இருக்கிறது.

**சிரத்தை, வீரியம், ஸ்மிருதி, சமாதி, பிரக்ஞை: அசம்பிரஞ்ஞாத சமாதியை அடையும் மற்றவர்கள் அதை, விசுவாசம் /ஈடுபாடு அளவற்ற ஆற்றல் - முயற்சி - முழுமையான சுயநினைவு - கேள்விகள் அற்ற மனம் - மற்றும் புரிதல் எனும் ஒளி இவற்றால் அடைகிறார்கள்.**



**ஹெராக்ளிட்டஸ், கிறிஸ்து, ஸென் ஆகியோரின் போதனைகள் பற்றி இதுவரை நீங்கள் சொல்லி வந்திருப்பவற்றை, பதஞ்சலியின் போதனைகள் பற்றி இப்போது நீங்கள் சொல்லி உள்ளதுடன் ஒப்பிட்டால், அவையெல்லாம் மழலைக்குழந்தையின் பள்ளிப் பாடங்கள் போல்தான் உள்ளது. ஹெராக்ளிட்டசும், கிறிஸ்துவும், ஸென் போதகர்களும் இறுதிப் படி அருகில்தான் உள்ளதுபோல் காட்டுகிறார்கள் என்றால் பதஞ்சலியோ முதல் படி கூட ஏறக்குறைய அசாத்தியமான ஒன்று என்பதுபோல் காட்டுகிறார். செய்ய வேண்டிய வேலையின் உண்மையான அளவை எம்மைப் போன்ற மேல் நாட்டவர் இன்னும் உள்ளபடி உணர்ந்து கொள்ளவில்லை என்றே தோன்றுகிறது.**

*''தாவோவைப் பார்த்து எள்ளி நகையாட முடியாவிட்டால் அது தாவோவாகவே இராது'' என்கிறார் லாவோ சு. நானும் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன்: என்னை நீங்கள் தவறாகப் புரிந்துகொள்ளா விட்டால் நீங்கள் நீங்களாகவே இருக்க மாட்டீர்கள். (if you did not misunderstand me, you would not be you)நீங்கள் தவறாகவே புரிந்து கொள்வீர்கள். ஹெராக்ளிட்டஸ், கிறிஸ்து, ஸென் பற்றி நான் சொல்லி வந்திருக்கிறவற்றை நீங்கள் தவறாகவே புரிந்து உள்ளீர்கள். ஹெராக்ளிட்டஸ், கிறிஸ்து, ஸென் பற்றி நான் சொல்லி வந்திருக்கிறவற்றை நீங்கள் புரிந்திருக்கவில்லை. அப்படி ஹெராக்ளிட்டசையும், ஸென்னையும், யேசுநாதரையும் உங்களால் புரிந்து கொள்ள முடியாவிட்டால் பதஞ்சலியையும் உங்களால் புரிந்து கொள்ள முடியாது.*

*ஒப்பிட்டுப் பார்க்காமல் இருப்பதே புரிந்து கொள்ளுதலுக்கான முதல் விதி. எவ்வாறு நீங்கள் ஒப்பிட முடியும்? ஹெராக்ளிட்டஸ் அல்லது பாஷோ அல்லது புத்தர் அல்லது யேசு அல்லது பதஞ்சலியின் உள்ளார்ந்த நிலைபற்றி உங்களுக்கு என்ன தெரியும்? ஒப்பிட நீங்கள் யார்? ஏனெனில் ஒப்பிடுதல் என்பது தீர்ப்புச் சொல்லுதல் ஆகும். தீர்ப்புச் சொல்ல நீங்கள் யார்? ஆனால் மனமானது தீர்ப்புச் சொல்லவே விரும்புகிறது. ஏனெனில் தீர்ப்பிடும்போது மனம் தன்னை உயர்வாக உணர்கிறது. நீங்கள் ஒரு நீதிபதி ஆகிறீர்கள். உங்கள் அகங்காரம் மிகமிக சுகமாக உணர்கிறது. அகங்காரத்துக்கு நீங்கள் ஊட்டமளிக்கிறீர்கள். தீர்ப்பிடுதல் மூலமும்*

ஒப்பிடுதல் மூலமும் உங்களுக்கே எல்லாம் தெரியும் என்று நீங்களாக நினைத்துக் கொள்கிறீர்கள்.

அவர்கள் வெவ்வேறு விதமான மலர்கள் - ஒப்பிடவே முடியாத மலர்கள். ஒரு ரோஜாவையும் தாமரையையும் எப்படி நீங்கள் ஒப்பிட முடியும்? அவ்றறை ஒப்பிட ஏதாவது வாய்ப்பு உள்ளதா? எவ்வித வாய்ப்பும் இல்லை. ஏனெனில் இரண்டும் வெவ்வேறு விதமான உலகங்கள். சூரியனுடன் சந்திரனை எப்படி உங்களால் ஒப்பிட முடியும்? எவ்விதமான சாத்தியப்பாடும் இல்லை. அவை இரண்டும் வெவ்வேறு பரிமாணங்கள். ஹெராக்ளிட்டஸ் ஒரு காட்டுப்பூ. பதஞ்சலி ஒரு தோட்டப் பூ. பதஞ்சலி உங்கள் புத்திக்கு பக்கமாக இருக்கிறார். ஹெராக்ளிட்டஸ் உங்கள் இதயத்ததுக்குப் பக்கமாக இருக்கிறார். ஆனால் இன்னும் ஆழமாகச் செல்லச் செல்ல வேறுபாடுகள் மறைகின்றன. நீங்களே மலரத் தொடங்கும் போது ஒரு புதிய புரிதல் உங்கள் மீது விழுகிறது: பூக்கள் தம் வண்ணங்களில் வேறுபடுகின்றன, தம் வாசனைகளில் வேறுபடுகின்றன, தம் வடிவங்களில் வேறுபடுகின்றன; தம் பெயரிலும் உருவிலும் வேறுபடுகின்றன -

ஆனால் மலர்தலில் அவை வேறுபடுவதில்லை என்னும் புரிதல் அது. மலர்தலில், மலர்தல் என்னும் நிகழ்வில், அவை ஒரே விதமாகவே உள்ளன. ஹெராக்ளிட்டஸ் தனிவிதமானவர்தான். அப்படித்தான் இருந்தாக வேண்டும். ஒவ்வொரு தனிமனிதரும் தனிச்சிறப்பானவர்தான். பதஞ்சலி இன்னொருவிதமாக இருக்கிறார். அவர்களை நீங்கள் ஒரு பிரிவில் போட்டு வைக்க முடியாது. அவர்களை நீங்கள் வலிந்து திணித்து வகைப்படுத்த முடியக்கூடிய வளைகள் ஏதும் இல்லை. ஆனால் நீங்களும் மலர்ந்தால், அப்போது நீங்கள் புரிந்து கொள்வீர்கள் - மலர் தாமரை என்றாலும் ரோஜா என்றாலும் மலர்தல் என்பது ஒரே மாதிரியானதுதான், அதில் எந்த வேறுபாடும் இல்லை; உள்ளார்ந்த உயிர் ஆற்றல் 'மலர்தல்' என்ற கொண்டாட்ட நிகழ்வு ஒரே மாதிரியாக உள்ளது என்பதை நீங்கள் புரிந்து கொள்வீர்கள்.

அவர்கள் வெவ்வேறு விதமாகப் பேசுகிறார்கள். வெவ்வேறு விதமான மன அமைப்புகளை அவர்கள் பெற்றிருக்கிறார்கள். பதஞ்சலி அறிவியல் ரீதியான சிந்தனையாளராக இருக்கிறார். அவர் ஓர் இலக்கணவாதி . மொழியியல் அறிஞர். ஹெராக்ளிட்டசோ ஒரு கட்டற்ற கவிஞர். இலக்கணத்தைப் பற்றியும் மொழியைப் பற்றியும் வடிவத்தைப் பற்றியும் அவருக்கு கவலை இல்லை. இந்நிலையில் நான் பதஞ்சலியின் போதனையைக் கவனிக்கும்போது, ஹெராக்ளிட்டசும் சொல்லும் ஸென் போதகர்களும் சிறுபிள்ளைத்தனமானவர்களாக, மழலைப்பள்ளிப் பாடங்களாக உங்களுக்குத் தோன்றுவதாக நீங்கள் கூறும் போது,

பதஞ்சலியைப் பற்றியோ ஹெராக்ளிட்டசைப் பற்றியோ நீங்கள் ஏதும் சொல்லவில்லை. உங்களைப் பற்றியே நீங்கள் ஏதோ சொல்லிக் கொண்டு இருக்கிறீர்கள்; நீங்கள் ஒரு மனம் சார்ந்த மனிதர் என்பதைத் தான் நீங்கள் தெரிவித்துக் கொண்டு இருக்கிறீர்கள்.

பதஞ்சலியை உங்களால் புரிந்துகொள்ள முடிகிறது. ஹெராக்ளிட்டசோ உங்களுக்குப் பிடிபடுவதே இல்லை. பதஞ்சலி அதிக திடமானவராக இருக்கிறார். அவரை உங்களால் பற்றிக் கொள்ள முடிகிறது. ஹெராக்ளிட்டசோ பனிமூட்டம் போல் இருக்கிறார். அவரை உங்களால் பற்றிப்பிடிக்க முடிவதில்லை. பதஞ்சலியை உங்களால் புரிந்து கொள்ள முடிகிறது. அவர் பகுத்தறிவாளராகத் தெரிகிறார். ஆனால் ஒரு ஹெராக்ளிட்டசை, ஒரு பாஷோவைக் கொண்டு நீங்கள் என்ன செய்வீர்கள்? ஒன்றும் செய்யமுடியாது. அவர்கள் முற்றிலும் பகுத்தறிவுக்கு உட்படாதவர்களாக இருக்கிறார்கள். அவர்களைக் குறித்து சிந்திப்பதில் உங்கள் மனம் முற்றிலும் செயலற்றதாக ஆகிறது - இத்தகைய செய்திகளை, ஒப்பீடுகளை, தீர்ப்புகளை நீங்கள் கூறுகிறபோது நீங்கள் உங்களைப் பற்றித்தான் - நீங்கள் எப்படிப்பட்டவராக இருக்கிறீர்கள் என்பதைப் பற்றித்தான் - கூறிக் கொண்டிருக்கிறீர்கள்.

பதஞ்சலியைப் புரிந்துகொள்ள முடியும். அதில் எந்த சிரமமும் இல்லை. முற்றிலும் அறிவுபூர்வமானவர் அவர். அவரைப் பின்பற்ற முடியும். அதில் எந்தச் சிக்கலும் இல்லை. அவரது உத்திகள் எல்லாவற்றையும் செய்து பார்க்க முடியும். ஏனெனில் எப்படிச் செய்வது என்பதை அவர் உங்களுக்கு சொல்லித் தருகிறார். எப்படி என்பது எப்போதுமே புரிந்து கொள்வதற்கு எளிதானது. என்ன செய்வது? எப்படி செய்வது? இதற்கான உத்திகளை அவர் உங்களுக்கு வழங்குகிறார்.

என்ன செய்வது என்று பாஷோவிடமோ ஹெராக்ளிட்டசிடமோ சென்று கேளுங்கள். செய்வதற்கு ஒன்றுமில்லை என்றே அவர்கள் சொல்லிவிடுவார்கள். அப்போது நீங்கள் திகைத்துப் போகிறீர்கள். செய்வதற்கு ஏதாவது இருந்தால் அதை உங்களால் செய்யமுடியும். ஆனால் செய்வதற்கு ஒன்றுமில்லை என்றால் நீங்கள் குழம்பிப் போகிறீர்கள். இருந்தாலும் திரும்பத் திரும்ப நீங்கள் இப்படித்தான் கேட்டுக் கொண்டே போவீர்கள்: ''என்ன செய்வது? எப்படிச் செய்வது? நீங்கள் சொல்லிக் கொண்டிருப்பதை சாதிப்பது எப்படி?''

அறுதி இலக்கைப் பற்றியே அவர்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள். அதை அடையும் முறையைப் பற்றி அவர்கள் பேசுவதில்லை. பதஞ்சலியோ முறையைப் பற்றியே பேசுகிறார். ஒருபோதும் இலக்கைப் பற்றிப் பேசுவதில்லை. வழிமுறைபற்றியே பதஞ்சலி அக்கறை கொள்கிறார்.

முடிவைக் குறித்தே ஹெராக்ளிட்டஸ் அக்கறை கொள்கிறார். முடிவு மறை பொருளானது புதிரானது. அது ஒரு கவிதை: கணித சூத்திரம் அல்ல. அது ஒரு புதிர் ஆனால் அதன் பாதை அறிவியல் ரீதியானதே. அதன் உத்தி, வழிமுறை உங்களுக்குப் பொருந்துகிறது - ஆனால் இது உங்களைப் பற்றித்தான் விளக்குகிறது; ஹெராக்ளிட்டசைப் பற்றியோ பதஞ்சலியைப் பற்றியோ அல்ல. நீங்கள் ஒரு மனவழி செல்லும் மனிதர்; தலைவழி செல்லும் மனிதர் - இதை உணர முயலுங்கள். பதஞ்சலியையும் ஹெராக்ளிட்டசையும் ஒப்பிட்டுக் கொண்டிருக்காதீர்கள். இது உங்களைப் பற்றித்தான் விளக்கிக் காட்டுகிறது என்பதை மட்டும் பார்க்க முயலுங்கள். மேலும் அது உங்களைக் குறித்தே ஏதோ ஒன்றைக் காட்டுகிறது என்பதாலேயே தான் அது குறித்து நீங்களும் ஏதாவது செய்ய முடியும்.

பதஞ்சலி எப்படிப்பட்டவர், ஹெராக்ளிட்டஸ் எப்படிப்பட்டவர் என்று உங்களுக்குத் தெரியும் என எண்ணாதீர்கள். தோட்டத்தில் இருக்கும் ஒரு சாதாரண மலரைக் கூட உங்களால் புரிந்துகொள்ள முடிவதில்லை. அவர்களோ பிரபஞ்சத்தில் மலர்ந்துள்ள அறுதியான மலர்ச்சியாக இருக்கிறார்கள். அதே வழியில் நீங்களும் மலர்ந்தால் ஒழிய அவர்களை உங்களால் புரிந்து கொள்ளவே முடியாது. ஆனால் உங்களால் ஒப்பிட முடியும், நீங்கள் தீர்ப்பிட முடியும். ஆனால் தீர்ப்பிடுவதன் மூலம் முழுக் குறிப்பையும் நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள்.

எனவே புரிந்து கொள்ளுவதற்கான முதல் விதி, ஒருபோதும் தீர்ப்பிடாதே என்பதாகும். புத்தரை, மகாவீரரை, முகமதுவை, கிறிஸ்துவை, கிருஷ்ணரை ஒருபோதும் தீர்ப்பிடாதீர்கள். ஒருபோதும் ஒப்பிடாதீர்கள். ஒரு - போதும் ஒப்பிடாதீர்கள்! ஒப்பீட்டுக்கு அப்பால்பட்ட ஒரு பரிமாணத் தில் அவர்கள் நிலவுகிறார்கள் அவர்களைப் பற்றி உங்களுக்கு தெரிந் திருப்பது எதுவாயினும் அது எதுவும் உண்மையில் மதிப்புக்குரியதில்லை - வெறும் துண்டு துணுக்குகளே. முழுமையைக் கிரகித்துக் கொள்வது உங்களால் முடியாதது. அவர்கள் மிகவும் அப்பால் இருக்கிறார்கள். உண்மையில் உங்கள் மனமாகிய நீரில் தெரியும், அவர்களின் பிரதி பலிப்பை மட்டுமே நீங்கள் பார்க்கிறீர்கள்.

நிலவை நீங்கள் பார்த்திருக்கவிலலை. நீரில் தெரியும் நிலவின் பிம்பத்தையே நீங்கள் பார்த்திருக்கிறீர்கள் - யதார்த்தத்தை நீங்கள் பார்த்திருக்கவில்லை. ஒரு கண்ணாடிப் பிரதிபலிப்பைத்தான் நீங்கள் பார்த்திருக்கிறீர்கள். பிரதிபலிப்போ கண்ணாடியைப் பொறுத்தது. கண்ணாடி பழுதுடையதாயிருந்தால் பிரதிபலிப்பும் குறைபாடுடைய தாகவே இருக்கும். உங்களின் மனமே உங்களின் கண்ணாடியாக இருக்கிறது.

பதஞ்சலி மிகவும் பெரியவர், அவருடைய போதனை மிகவும் பெரியது என்று நீங்கள் சொல்லும்போது, ஹெராக்ளிட்டசை உங்களால் அறவே விளங்கிக் கொள்ள முடியவில்லை என்பதைத்தான் அப்படி நீங்கள் சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள். ஹெராக்ளிட்டஸ் உங்களுக்கு விளங்க வில்லை என்றால் அவர் உங்களுக்கு பதஞ்சலியைவிட மிகமிக அப்பாற் பட்டவராக இருக்கிறார் என்பதைத்தான் அது காட்டுகிறது. பதஞ்சலியைவிட மிகவும் அப்பாற்பட்டவராக அவர் இருக்கிறார். பதஞ்சலியைப் புரிந்து கொள்வது கடினமாக இருக்கிறது என்கிற அளவிலாவது அவரை உங்களால் புரிந்து கொள்ள முடிகிறது. இப்போது நான் கூறுவதைக் கூர்ந்து கவனியுங்கள். ஒன்று கடினமாக இருந்தால் அதை உங்களால் சமாளித்துவிட முடியும். அது எவ்வளவுதான் கடினமானதாக இருந்தாலும் அதை உங்களால் சமாளித்துவிட முடியும்! கடின முயற்சி தேவைப்படுகிறது, ஆயினும் அதனை சமாளித்து விட முடியும்.

ஹெராக்ளிட்டஸ் சுலபமானவரல்ல. அவர் சாதாரணமாகவே அசாத்தியமானதாயிருக்கிறார் பதஞ்சலி கடினமானவர் ஆனாலும் கடினமானதை உங்களால் புரிந்துகொண்டுவிட முடிகிறது. அதன்மீது ஏதாவது செய்யப்பட முடிகிறது; உங்கள் சித்தத்தை, உங்கள் முயற்சிகளை, உங்களின் மொத்த ஆற்றலை அதன்மீது செலுத்த முடிகிறது. ஏதாவது செய்து அதற்கு தீர்வுகாண உங்களால் முடிகிறது. கடினமானதை எளிமையானதாக்க முடியும். அதி நுட்பமான முறைகளைக் கண்டுபிடிக்க முடியும். ஆனால் அசாத்தியமானதை உங்களால் என்ன செய்ய முடியும்? அதை எளிமையான தாக்க முடியாது. ஆனால் உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்ள முடியும்: 'அந்தளவுக்கு அதில் ஒன்றுமில்லை. அது ஒரு மழலைக் குழந்தைகளின் பாடம்' என உங்களுக்கு நீங்களே கூறிக் கொள்ள முடியும். நீங்கள் எவ்வளவு வளர்ந்த ஆள்! எனவே அது உங்களுக்கான தல்ல; அது சிறுபிள்ளைகளுக்குரியது, உங்களுக்கானதல்ல.

அசாத்தியமானதைத் தவிர்ப்பதற்கு மனம் செய்யும் ஒரு சூழ்ச்சியே இது. ஏனெனில் அதை நீங்கள் சமாளிக்க மாட்டீர்கள் என்பதை நீங்கள் அறிகிறீர்கள். எனவே மிகவும் எளிதான வழி இப்படி கூறிவிடுவதுதான், ''அது எனக்கானது அல்ல, என்னைவிட கீழ்நிலையில் உள்ளவர்களுக் கானது - அது குழந்தைகளுக்கான பாடம்.'' நீங்களோ எவ்வளவு வளர்ந்த முதிர்ந்த ஆள்! உங்களுக்குத் தேவை ஒரு மழலையர் பள்ளி அல்ல. உங்களுக்குத் தேவை ஒரு பல்கலைக்கழகம்தான். பதஞ்சலிதான் உங்களுக்குப் பொருத்தமானவர். அவர் மிகவும் கடினமானவராகத் தோன்றுகிறார். எனவே அவரை உங்களால் தீர்த்துவிட(*slove*) முடியும். அசாத்தியமானதற்கோ தீர்வு காணவே முடியாது.

ஹெராக்ளிட்டசை நீங்கள் புரிந்து கொள்ள விரும்பினால் உங்கள் மனதை முழுமையாகத் துறந்துவிடுவதைத் தவிர வேறு வழி இல்லை. பதஞ்சலியை நீங்கள் புரிந்து கொள்ள விரும்பினால் அதற்கு ஒரு படிப்படியான பாதை இருக்கிறது. என்னென்ன செய்வது என்பதற்கான படிகளைத் தருகிறார் அவர். ஆனால் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள் - ஒரு வழியாக கடைசியில் அவரும் உங்களிடம்''மனத்தை அகத்தை அகற்றிவிடுங்கள்'' என்றே கூறுவார். ஹெராக்ளிட்டஸ் தொடக்கத்திலேயே கூறுவதை இறுதியில் கூறுவார் அவர். ஆனால் பாதையில், வழியில் உங்களை ஏமாற்றமுடியும். ஏனெனில் முடிவில் அவரும் அதையே கூறப் போகிறார். ஆனால் அப்போதும் அவரை நீங்கள் புரிந்துகொள்ள முடியும். ஏனென்றால் அவர் படிநிலைகளை உருவாக்குகிறார். எனவே படிக்கட்டுகள் இருக்கும்போது குதிப்பது என்பது குதிப்பதைப் போலத் தோன்றுவதில்லை.

இந்த நிலவரம் இதைப் போன்றதே: ஹெராக்ளிட்டஸ் உங்களை ஒரு படுபாதாளத்துக்குக் கொண்டு வந்து ''குதி!'' என்கிறார். நீங்கள் கீழே பார்க்கிறீர்கள். அவர் என்ன கூறுகிறார் என்பதையே உங்கள் மனதால் கிரகித்துக் கொள்ள முடிவதில்லை. அது தற்கொலை முயற்சியாகவே தோன்றுகிறது. அதற்கு படிக்கட்டுகள் இல்லை. உடனே, ''எப்படி?'' என்று கேட்கிறீர்கள் நீங்கள். அதற்கு அவர், எப்படி என்பதெல்லாம் இல்லை. அப்படியே குதிக்க வேண்டியதுதான். எப்படி என்பது இதில் எங்கே வந்தது?'' இதற்குப் படிநிலைகள் கிடையாது. ஆகையால் எப்படி என்று விளக்க முடியாது. நீங்கள் அப்படியே குதிக்கவேண்டியதுதான். நீங்கள் தயார் என்றால் நான் உங்களை தள்ளிவிடமுடியும். ஆனால் இதற்கு முறைகள் கிடையாது.'' என்கிறார் அவர். குதிப்பதற்கு என்று ஏதாவது முறை உண்டா என்ன? ஏனெனில் குதித்தல் என்பது ஒரு திடீர் நிகழ்ச்சி. ஒரு நிகழச்சி / நிகழ்முறை படிப்படியாக அமையும் போதுதான் அதற்கு முறைகள் வருகின்றன. இது அசாத்தியம் என அறிந்ததும் நீங்கள் நேர் எதிராக திரும்புகிறீர்கள். ஆனால் நீங்கள் அவ்வளவு பலவீனமானவர் அல்லர் என உங்களை நீங்களே தேற்றிக் கொள்வதற்காக, ''இது குழந்தைகளுக்கானது, இது அவ்வளவு கடினமானது அல்ல,'' என்கிறீர்கள். அது உங்களுக்கானது அல்லவாம்!

பதஞ்சலியும் உங்களை அதே பாதாளத்துக்கே தள்ளிப் போகிறார். ஆனால் அவர் வழியில் படிக்கட்டுகளை உருவாக்கி இருக்கிறார். ஒரு தடவையில் ஒரு படி கட என்கிறார் அவர். அது ஏற்புடையதாக இருக்கிறது! உங்களால் புரிந்துகொள்ள முடிகிறது. இந்தக் கணக்கு எளிதாகத் தெரிகிறது: முதலில் ஒரு படி, பிறகு அடுத்த படி - அப்படித்தான்; மொத்தமாக குதிக்க

வேண்டியதில்லை; ஆனால் இதை நினைவில் கொள்ளுங்கள்: நீங்கள் ஒரேயடியாக குதித்துவிட வேண்டிய கட்டத்துக்கு கூடிய சீக்கிரம் அவரும் உங்களைக் கொண்டுவருவார். படிக்கட்டுகளைக் கூட அவர் அமைத்து இருக்கிறார். ஆனால் அவை பாதாளம் வரைக்கும் கொண்டு போய்ச் சேர்க்காது. பாதிவரைதான் சேர்க்கும். அதிலிருந்தும் அடியாழம் என்பது எவ்வளவோ தொலைவில் இருக்கிறது. அது ஓர் அடியற்ற ஆழம் என்று சொன்னால் இன்னும் பொருத்தமாக இருக்கும்.

எனவே நீங்கள் எத்தனை படிகளை அமைத்துக் கொள்கிறீர்கள் என்பதால் எந்த வேறுபாடும் ஏற்படுவதில்லை. பாதாளம் அப்படியேதான் இருக்கிறது. தொண்ணூற்று ஒன்பது படிகள் வரை அவர் உங்களை இட்டுச் செல்வார். உடனே நீங்கள் மிகவும் மிகழ்கிறீர்கள் - ஏதோ பாதாளத்தையே முழுவதும் கடந்துவிட்ட மாதிரி! அடித்தளம் மிகவும் அருகில் வந்துவிட்ட மாதிரி! அதுதான் இல்லை! முன்பு இருந்த அதே தொலைவான தூரத்திலேயே அடித்தளம் இருக்கிறது. இந்த தொண்ணூற்று ஒன்பது படிகளும் உங்கள் மனத்தை முட்டாளாக்க மட்டுமே. உங்களுக்கு ஒருமுறையை, ஓர் உத்தியைத் தந்துவிட்டிருப்பதாக அதை சமாதானப் படுத்த மட்டுமே. பின் நூறாவது படிக்கட்டில் ''இப்போது குதி'' என்றே அவரும் கூறுகிறார். பாதாளம் இன்னும் அதே ஆழத்தில்தான் இருக்கிறது. கடக்கவேண்டிய தூரம் இன்னும் அதே தூரமாகத்தான் இருக்கிறது.

எந்த வேறுபாடும் ஏற்படுவதில்லை. ஏனெனில் அதல பாதாளம் அடியற்றது. முடிவற்றது. கடவுள் அளவு கடந்தவர். அவரை எப்படி உங்களால் படிப்படியாக - அளவுக்குட்பட்ட முறையில் - சந்திக்க முடியும்? ஆனால் இந்த தொண்ணூற்று ஒன்பது படிகளும் உங்களை வசப்படுத்தத்தான். பதஞ்சலி அதிக திறமையானவர். ஹெராக்ளிட்டஸ் அப்பாவி. அவர் உங்களிடம் இதை மட்டுமே சொல்கிறார்: ''இதுதான் வழி - இதோ இருக்கிறது பாதாளம் குதி!'' அவர் உங்களை இணங்க வைப்பதில்லை. அவர் உங்களை கவர்ந்து வசப்படுத்துவதில்லை. ''இதுதான் உள்ளது. குதிக்க விரும்பினால் குதி. விருப்பம் இல்லை என்றால் போய்ச் சேர்,'' என்று மட்டுமே அவர் கூறுகிறார்.

மேலும், படிகள் அமைப்பது பயனற்றது என்பதையும் அவர் அறிந்திருக்கிறார். ஏனெனில் இறுதியில் எப்படியும் ஒருவர் குதித்தே ஆக வேண்டும். ஆனால் நீங்கள் பதஞ்சலியைப் பின்பற்றுவதே நல்லது என நான் நினைக்கிறேன். ஏனெனில் படிப்படியாக உங்களை மயக்குகிறார் அவர். குறைந்தது ஒவ்வொரு படியாகவாவது நீங்கள் கடக்கும்படி செய்ய அவரால் முடியும். பின் அடுத்தபடி அதிக எளிதாகிறது. பின் அதற்கு அடுத்தது. இப்படியே நீங்கள் தொண்ணூற்று ஒன்பது படிகளையும் தாண்டி

கடந்துவிட்டால் அதன்பின் திரும்பிப் போவது என்பது அதிக கடினம் ஆகும். ஏனெனில் இனிப் போய் பின்வாங்குவது உங்கள் அகங் காரத்துக்கு முற்றிலும் மதிப்புக் குறைவாகத் தோன்றும். ஏனெனில் முழு உலகமும் உங்களைப் பார்த்து ஏளனம் செய்யும். எப்பேர்ப்பட்ட மாமுனி ஆகியிருக்கிறீர்கள் நீங்கள் - அப்பேர்ப்பட்டவர் இனி உலகுக்கு திரும்பி வருவதா? எப்பேர்ப்பட்ட **மகாயோகி** ஆகிவிட்டவர்கள் நீங்கள். இனிப் போய் நீங்கள் திரும்பி வருவதா? இப்படியாக நீங்கள் சிக்கிக் கொண்டு விடுகிறீர்கள். இனி உங்களால் திரும்பிப் போக முடியாது.

ஹெராக்ளிட்டஸ் எளிமையானவர், எதார்த்தமானவர். அவரது போதனை குழந்தைப் பள்ளிக்குரியது அல்ல. ஆனால் அவர் ஒரு குழந்தை என்பது உண்மைதான் - குழந்தையைப் போன்றே அப்பாவியானவர் அவர். குழந்தையைப் போன்றே அறிவானவர் அவர். பதஞ்சலி தந்திரம் நிரம்பியவர், புத்திசாலி. ஆனால் பதஞ்சலிதான் உங்களுக்கு சரி. ஏனென் றால் நீங்கள் திரும்பிவிட முடியாத ஒரு கட்டத்துக்கு உங்களை தந்திரமான முறையில் இட்டுச் செல்கிறவர்தான் உங்களுக்கு தேவைப்படுகிறார். அதன்பின் அது முற்றிலும் தவிர்க்க முடியாததாகிறது.

இரண்டுவிதமான குருமார்கள் இருக்கிறார்கள் என்று குருட்ஜீப் கூறுவது வழக்கம்: எதார்த்தமும் எளிமையும் வாய்ந்தவர்கள் ஒரு விதத்தினர். இன்னொரு விதத்தினர். சூதும் சூழ்ச்சியும் நிரம்பியவர்கள். ''நான் இரண்டாவது வகையைச் சேர்ந்தவன்'' என்று தன்னைப் பற்றி அவரே கூறிக்கொள்கிறார். எல்லா தந்திரக்கார ஆசான்களுக்கும் 'தலைவர்' பதஞ்சலிதான். அவர்கள் உங்களை ரோஜாத் தோட்டத்துக்கு இட்டுச் செல்கிறார்கள். பின் திடீரென உங்களை படு பாதாளத்தை நோக்கித் தள்ளுகிறார்கள். மேலும் நீங்களே உருவாக்கிய ஒரு வலுவான பிடிக்குள் நீங்கள் சிக்கி விடுவதால், திரும்பிப் போகவும் உங்களால் முடிவதில்லை. நீங்கள் தியானம் செய்தீர்கள். உலகைத் துறந்தீர்கள். மனைவி மக்களைத் துறந்தீர்கள். பல ஆண்டுகளாக நீங்கள் ஆசனங்கள் போட்டு வந்தீர்கள். தவங்கள் செய்து வந்தீர்கள். உங்களைச் சுற்றிலும் நீங்களே உருவாக்கி விட்ட ஒளிவட்டத்தைக் கண்டு மக்கள் உங்களை வழிபடுகிறார்கள். லட்சக்கணக்கான மக்கள் உங்ளை ஓர் அவதாரமாகவே பார்க்கிறார்கள். இப்போது வருகிறது பாதாளம். இந்நிலையில் உங்கள் முகத்தைக் காப்பாற்றிக் கொள்ளவாவது நீங்கள் குதித்தாக வேண்டி உள்ளது: உங்கள் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ளவாவது! வேறெங்கே போவது? இனி நீங்கள் திரும்பிப் போக முடியாது.

புத்தர் நேரடியானவர் பதஞ்சலி நெளிவு சுளிவானவர். அறிவியல் அனைத்துமே தந்திரமானவைதான். இதைச் சரியாக புரிந்து கொள்ள

வேண்டும். இதை ஒரு கேவலப்படுத்தும் பொருளில் - கண்டனம் செய்யும் தொனியில் நான் சொல்லவில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஆயினும் அறிவியல் என்றாலே சூழ்ச்சிதான்.

ஒரு கதை: லாவோ சுவின் சீடராக வயதான விவசாயி ஒருவர் இருந்தார். அவர் கிணற்றில் இருந்து நீர் இறைத்துக் கொண்டிருந்தார். இறைப்பதற்கு உதவியாக எருதுகளையோ குதிரைகளையோ பயன் படுத்துவதற்குப் பதிலாக, வயதான அவரே தன் மகனுடன் சேர்ந்து மாடுகளைப் போல் வேலை செய்து கிணற்றில் இருந்து வேர்க்க விறுவிறுக்க நீர் இறைத்துக் கொண்டிருந்தார். பெரியவர் பெருமூச்சு வாங்கிக் கொண்டிருந்தார். அவருக்கு அது கடினமாகவே இருந்தது.

கன்பூசியசின் சீடர் ஒருவர் அவ்வழியாக போய்க் கொண்டிருந்தார். அவர் இந்த கிழவரிடம் சொன்னார், ''நீர் கேள்விப் பட்டதில்லையா? இது ரொம்ப பழைய காலத்து முறை. ஏன் உம் மூச்சை வீணாக்கிக் கொண்டிருக்கிறீர்? இனி இதற்கு மாடுகளைப் பயன்படுத்த முடியும், குதிரைகளைப் பயன்படுத்த முடியும். இப்போது நீர் செய்து கொண்டிருப்பதுபோல் பட்டணங்களிலும் நகரங்களிலும் இன்று யாரும் நீர் இறைப்பதில்லை என்பதை நீர் கேள்விப்பட்டதில்லையா? இது மிகவும் பழைய முறை. அறிவியல் இன்று மிகவும் முன்னேறி இருக்கிறது.''

கிழவர் சொன்னார், ''பொறு. இவ்வளவு சத்தம் போட்டு பேசாதே. என் மகன் போனபின் உனக்கு நான் பதில் சொல்கிறேன்.'' வேறு ஒரு வேலையாக மகன் அங்கிருந்து போனபின் அவர் சொன்னார், ''நீ ஓர் ஆபத்தான ஆசாமி. என் மகன் எப்போதாவது இதைக் கேட்டுவிட்டால் உடனடியாக அவன், நல்லதாப் போச்சு, இனிமேல் இதை இழுக்க எனக்கு விருப்பமில்லை. ஒரு மாடு செய்யக்கூடிய இந்த வேலையை நான் செய்ய முடியாது. இதற்கு ஒரு மாடு தேவை' என்று சொல்லி விடுவான்.''

கன்பூசியசின் சீடர் கூறுவார், ''அதனால் என்ன கெட்டுப் போகும்?'' கிழவர் சொன்னார், ''எல்லாமே கெட்டுப் போகும். ஏனெனில் இது ஒரு சூழ்ச்சி. எருதை ஏமாற்றுவதாகும் இது. குதிரையை ஏமாற்றுவதாகும் இது. மேலும், ஒரு காரியம் இன்றொன்றுக்கு இட்டுச் செல்கிறது. இளைஞனும் ஞானமற்றவனுமான இந்தப் பையன், விலங்குகளிடம் ஒருவன் சூழச்சியாக நடந்துகொள்ள முடியும் என்பதை ஒருமுறை கண்டுகொண்டால், பின் ஏன் மனிதரிடமும் நாம் அப்படியே நடந்து கொள்ளக் கூடாது என்று யோசிப்பான். சூழ்ச்சியின் மூலம் சுரண்ட முடியும் என்பதை ஒருமுறை அவன் அறிந்தாலே, பின் அதை அவன் எந்த அளவோடு நிறுத்திக் கொள்வான் என்பது எனக்கு தெரியவில்லை. தயவு செய்து இங்கிருந்து

போய்விடு. இனி ஒருபோதும் இந்தப் பாதை வழியாக திரும்பவும் வராதே. மேலும் இப்படிப்பட்ட சூழச்சியான சங்கதிகளை இந்த ஊருக்குக் கொண்டு வராதே. இப்போது நாங்கள் மகிழ்ச்சியாகவே இருக்கிறோம்.''

லாவோ சு அறிவியலுக்கு எதிராக இருந்தார். அறிவியல் சூழ்ச்சித் தன்மையானது என்கிறார் அவர். சூதுவாதான வழியில் இயற்கையை ஏமாற்றுவதாகும் அது, இயற்கையை சுரண்டுவதாகும் அது. இயற்கையை பலாத்காரம் செய்வதாகும் அது. மேலும் எந்த அளவுக்கு ஒரு மனிதர் அறிவியல் ரீதியானவராக ஆகிறாரோ அந்த அளவுக்கு அவர் தந்திரசாலி ஆகிறார். அப்படி ஆக வேண்டி இருக்கிறது. ஓர் அப்பாவி மனிதரால் அறிவியலாளராக வர முடியாது. கடினம். ஆனால் மனிதன் தந்திரமும் புத்திசாலித்தனமும் கூடியவனாகியே வந்திருக்கிறான். அறிவியல் தன்மையோடு இருப்பது என்பது சூழ்ச்சித் தன்மையோடு இருப்பதுதான் என்பதை நன்கு அறிந்துள்ள பதஞ்சலி, ஒரு புதிய சூழ்ச்சிமூலமே - ஒரு புதிய சாதனம் மூலமே - மனிதனை திரும்பவும் இயற்கையை நோக்கி ஈர்க்கமுடியும் என்பதையும் அறிந்திருக்கிறார்.

யோகம் என்பது உள்உயிரின் அறிவியல். நீங்கள் இப்போது வெகுளித்தனம் (*innocent*) இல்லை என்பதால் ஒரு மறைமுகமான வழிமுறைமூலமே மீண்டும் உங்களை வெகுளித் தன்மைக்கு கொண்டுவர வேண்டியிருக்கிறது. நீங்கள் வெகுளித்தனமுடையவராக இருந்தால் எவ்வித முயற்சியும் / சாதனமும் / வழிமுறையும் தேவைப்படாது. ஓர் எளிய புரிதல். ஒரு குழந்தையைப் போன்ற புரிதல் - அதுவே உங்களை அடியோடு மாற்றி விடும். ஆனால் நீங்கள் அப்படி இல்லை. எனவேதான் பதஞ்சலி மிகப் பெரியவராகத் தோன்றுவதாக நீங்கள் உணர்கிறீர்கள். இதற்குக் காரணம் தலைவழி செல்லும் மனமும், உங்கள் தந்திரப் புத்தியும்தான்.

நீங்கள் நினைவில் இருத்த வேண்டிய இரண்டாவது காரியம்: அவர் கடினமானவராகக் காட்சி அளிக்கிறார். அப்படியானால் ஹெராக்ளிட்டஸ் மட்டும் எளிமையானவர் என்று எண்ணுகிறீர்களா? ஏனென்றால் கடினமான வராக பதஞ்சலி தெரிகிறார். அதுவும் அகங்காரத்துக்கு ஒரு தூண்டுத லாகவே இருக்கிறது. அகங்காரம் எப்போதும் கடினமான ஏதாவது ஒன்றை சாதிக்கவே விரும்புகிறது. ஏனெனில் கடினமானதற்கு எதிராக நிற்கும்போது தான் உங்களை ஓர் ஆளாக உணர்கிறீர்கள் நீங்கள். ஏதாவது ஒன்று மிகவும் எளியது என்றால் அதைக் கொண்டு எப்படி அகங்காரம் ஊட்டம் பெற முடியும்?

மக்கள் என்னிடம் வந்து கூறுகிறார்கள், ''பேசாமல் உட்கார்ந்து ஒன்றும் செய்யாதிருப்பதன் மூலமே அது ஏற்படும் என்று சில சமயங்

களில் நீங்கள் போதிக்கிறீர்கள். அது எப்படி அவ்வளவு எளிதாக நிகழ முடியும்? அது எப்படி அவ்வளவு எளிமையானதாக இருக்க முடியும்?'' 'எளிதானதே சரியானது' என்கிறார் சுவாங் சு ஆனால் இந்த மனிதர்கள், ''இருக்கவே முடியாது, அது எப்படி அவ்வளவு எளிதாக இருக்க முடியும்? அது கடினமானதாகவே இருக்க வேண்டும் - மிகமிக கடினமானதாகவே / கடுமையானதாகவே இருந்தாக வேண்டும்,'' என்கிறார்கள்.

நீங்கள் ஏன் கடினமான காரியங்களை செய்ய விரும்புகிறீர்கள் என்றால் ஒரு கடினமான காரியத்துக்கு எதிராக - நீரோட்டத்துக்கு எதிரான திசையில் - நீங்கள் போராடும்போது உங்களை ஒரு பெரிய ஆளாக, வென்றவராக நீங்கள் உணர்கிறீர்கள். ஒரு காரியம் எளிமையானது என்றால், ஒரு குழந்தைகூட செய்துவிடக் கூடிய அளவுக்கு எளிதானது என்றால், பின் உங்கள் அகங்காரம் எங்கே போய் நிற்கும்? தடைகளையே நீங்கள் கோருகிறீர்கள். சிரமங்களையே நீங்கள் வேண்டுகிறீர்கள். சிக்கல் கள் ஏதும் இல்லை என்றால் அவற்றை நீங்கள் உருவாக்குகிறீர்கள். அவற்றுடன் நீங்கள் போரிட முடிவதற்காக, புயல் காற்றை எதிர்த்து பறக்க முடிவதற்காக, 'நான் ஒரு பெரிய ஆள், வெற்றியாளன்' என உணர முடிவதற்காக, அவற்றை நீங்கள் உருவாக்குகிறீர்கள்.

ஆனால் அவ்வளவு காரியவாதியாக (*smart*)இருக்காதீர்கள். 'காரியவாதி அலெக் (ஸ்மார்ட் அலெக்') என்ற தொடரை நீங்கள் கேள்விப்பட்ட தில்லையா? அது எதிலிருந்து வந்தது என்பது உங்களுக்கு தெரியாமல் இருக்கலாம். அது அலக்சாந்தரில் இருந்து வந்தது. அலெக்சாந்தர் என்பதன் சுருக்கமே அலெக். 'அலெக்சாந்தரைப் போல காரியவாதியாக இராதே'. எளிமையாயிரு. வெற்றியாளன் ஆக முயலாதே. ஏனெனில் அது முட்டாள்தனமானது. ஒரு பிரபலமாக ஆக முயலாதே.

ஆனால் பதஞ்சலி உகந்தவராகத் தெரிகிறார். இந்தியத் தன் முனைப்புக்கு இந்த பதஞ்சலி மிகவும் ஏற்புடையவராகத் தெரிகிறார். ஏனெனில் உலகிலேயே மிகவும் நுட்பமான அகங்காரிகளை இந்தியாவே உருவாக்கியுள்ளது. இந்தியாவில் நீங்கள் காண முடிவது போன்ற மிகவும் நுட்பமான அகங்காரிகளை உலகில் வேறெங்கும் உங்களால் காண முடியாது. ஓர் எளிமையான யோகியைக் கண்டுபிடிப்பது என்பது ஏறக்குறைய அசாத்தியமாகவே இருக்கிறது. யோகி எளிமையானவராக இருக்க முடியாது. ஏனெனில் அவர் அநேக ஆசனங்களையும் ஏராளமான முத்தரகளையும் செய்து வருகிறார்; மிகவும் கடுமையாக முயன்று வருகிறார். அப்படி இருக்க எப்படி அவரால் எளிமையானவராக இருக்க முடியும்? எல்லாரையும் விட தானே யோக்கியர் - வெற்றியாளர் என

தன்னைக் குறித்து தானே நினைத்துக் கொள்கிறார் அவர். அகில உலகமும் அவர்முன் மண்டியிட்டு வணங்க வேண்டும். ஏனெனில் அவரே உலகத்துக்கு உப்பாக, வாழ்க்கையில் சாரமாக இருக்கிறாராம்.

யோகிகளைப் போய் கவனித்துக் பாருங்கள்: அவர்கள் மிகமிக நுட்பம் அடைந்த அகங்காரங்களுடன் இருப்பதைக் காண்பீர்கள். இருந்தும் அவர்களது இதயக் கோயில் வெறுமையாகவே இருக்கிறது. உள்ளே இறைமை கொலுவேறி இருக்கவில்லை. அந்தக் கோயில் இன்னமும் அவர்களின் சொந்த தன்முனைப்புகளின் அரியணையாகவே இருக்கிறது. அவை மிகவும் நுட்பமுடையவையாக மாறி இருக்கலாம். எந்த அளவுக்கு அவர்களின் அகங்காரங்கள் நுட்பம் அடைந்திருக்கலாம் என்றால் அவர்கள் மிகவும் தாழ்ச்சி உடையவர்களாக தெரியலாம். ஆனால் அவர்களது அடக்கத்திலும் கூட - ஆழ்ந்து பார்த்தால் - அவர்களின் அகங் காரத்தை நீங்கள் கண்டுகொள்வீர்கள்.

தாம் அடக்கத்துடன் நடக்கிறோம் என்பதை அவர்கள் அறிந்து கொண்டு நடக்கிறார்கள் - அதுதான் சிக்கல். உண்மையாகவே பணிவுள்ள மனிதர் தான் பணிவாக நடந்து கொள்வதாக உணர்ந்திருப்பதில்லை. உண்மையாகவே பணிவுடைய மனிதர் அதைக் குறித்த உணர்வின்றி, இயல்பாகவே பணிவுடன் நடந்து கொள்கிறார். உண்மையாகவே பணிவுடைய மனிதர் ஒருபோதும் ''நான் பணிவுடையவன்'' என்று பெருமை பாராட்டுவதில்லை. ஏனெனில் எல்லா விதமான தற்பெருமை களும் அகங்காரத்தினுடையவையே. அடக்க இயல்பினால் தற்பெருமை பாராட்ட முடியாது. அடக்கமுடைமை என்பது தனக்குதானே உரிமை கொண்டாடும் ஒரு பெருமை அல்ல. அது இருத்தலின் ஒரு நிலைமை. ஆயின் எல்லா விதமான தற்பெருமைகளும் அகங்காரத்தையே நிறைவு செய்கின்றன. ஏன் இது நிகழ்ந்தது? ஏன் இந்தியா மிகவும் நுட்பமான அகங்காரமுடைய ஒரு நாடாக ஆயிற்று? மேலும் அகங்காரம் இருக்கும்போது நீங்கள் குருடராக ஆகிவிடுகிறீர்கள்.

இப்போது இந்திய யோகியரைக் கேட்டுப் பாருங்கள். அவர்கள் அகில உலகத்தையே விமர்சனம் செய்வார்கள். மேலை உலகம் பொருள்நாட்டம் உடையது என்கிறார்கள் அவர்கள். இந்தியா மட்டுமே ஆன்மிக நாட்டம் உடையது என்கிறார்கள். அகில உலகமும் உலகாயதமாம் - ஏதோ அதற்கொரு மொத்தக் குத்தகை இருப்பது போல! மேலும் எந்த அளவுக்கு அவர்கள் குருடர்களாக இருக்கிறார்கள் என்றால் நேர் எதிரான நிலவரமே உண்மை என்னும் எதார்த்தத்தையே அவர்களால் பார்க்க முடிவதில்லை.

இந்திய மனத்தையும் மேலை மனத்தையும் அதிகமதிகம் நான் கவனித்து வரவர, மேலை மனம் தான் இந்திய மனத்தைவிடவும் குறைந்த அளவு உலகாயத்தன்மை உடையது என்பதை நான் உணர்கிறேன். இந்திய மனமே அதிக உலகாயதத் தன்மை உடையதாயிருக்கிறது. பொருள்களை அதிகமாகத் தொற்றிக் கொண்டிருக்கிறது. பகிர்ந்துதர அதனால் முடிவதில்லை, கருமித்தனமாக நடந்து கொள்கிறது. மேலை மனத்தால் பகிர்ந்துதர முடிகிறது. அதனிடம் அதிகக் கருமித்தனம் காணப்படுவதில்லை. மேற்குலகம் மிகுந்த பொருள் வளத்தைப் படைத்திருக்கிறது என்பதாலே அது பொருளாயத நாட்டமுடையது என்பது பொருளில்லை. இந்தியா ஏழையாக உள்ளது என்பதாலேயே நீங்கள் எல்லாம் ஆன்மிக வாதிகள் என்று அர்த்தமுமில்லை.

வறுமைதான் ஆன்மிகம் என்றால் பின் ஆண்மை இன்மைதான் பிரம்மச்சரியமாயிருக்கும்! அப்படி இல்லை. வறுமை ஆன்மிகமும் அல்ல. அல்லது வளமை உலகாயதமும் அல்ல. உலகாயதம் என்பது பொருள்களின் போக்கு அல்ல. அது மனத்தின் பாங்கு. அவ்வாறே ஆன்மிகம் என்பதும் பற்றாக்குறையின் ஏகபோகம் அல்ல. பற்றற்ற உள்ளத்துக்கே - பகிர்ந்தளிக்கும் இதயத்துக்கே - உரிமையானது அது. இந்தியாவில் எவராவது எதையாவது பகிர்ந்து கொள்வதை எங்கும் நீங்கள் பார்க்க முடியாது. எவரும் இங்கு எதையும் பகிர்ந்து கொள்வதில்லை. எல்லாருமே இங்கு பதுக்கிக் கொள்கிறார்கள். மேலும் இவர்கள் இத்தகைய பதுக்கல்காரர்களாக இருப்பதால் பிச்சைக்காரர்களாகவும் இருக்கிறார்கள். ஏனெனில் மிகச்சிலரான பேர் மிக அதிகமாகப் பதுக்குவதால் மிகப் பலரான பேர் ஏழைகளாக ஆகிறார்கள்.

மேற்குலகம் பகிர்ந்து வந்திருக்கிறது. எனவேதான் மொத்த சமுதாயமும் வறுமையில் இருந்து வளமைக்கு உயர்ந்திருக்கிறது. இந்தியாவில் ஒரு சிலர் மிகவும் செல்வர்களாக ஆகிறார்கள். அப்பேர்ப்பட்ட செல்வர்களை வேறெங்கும் நீங்கள் காண முடியாது. ஒரு பிர்லாவுக்கு ஒரு பிச்சைக்காரருக்கும் இடையிலான ஏற்றத்தாழ்வு கடல்போல் பரந்தது. அத்தகையதோர் இடைவெளி வேறெங்கும் இருக்க முடியாது. இயற்கையில் எங்குமே இந்நிலை இல்லை. மேற்கிலும் பணக்காரர்கள் இருக்கிறார்கள், மேற்கிலும் ஏழைகள் இருக்கிறார்கள். ஆனால் இருவருக்கும் இடையிலான இடைவெளி மிகப் பெரியதாயில்லை. இங்கோ இடைவெளி அளவு கடந்ததாக இருக்கிறது. இத்தகையதோர் இடைவெளியை உங்களால் கற்பனை செய்துகூட பார்க்க முடியாது. இந்த இடைவெளியை எப்படி நிரப்ப முடியும்? இதை நிரப்பவே முடியாது. ஏனென்றால் மக்கள், இங்கு பொருள் முதல்வாதிகளாக இருக்கிறார்கள்.

இல்லாவிட்டால் எப்படி இவ்வளவு பெரிய இடைவெளி உருவானது? ஏன் இந்த இடைவெளி? நம்மால் பகிர்ந்து தர முடியாதா? முடியவே முடியாது! ஆனால் உலகம் முழுவதுமே, முழு உலகமுமே பொருள் முதல்வாத அடிப்படையில் இருக்கிறது என்கிறது இந்திய அகங்காரம்.

பதஞ்சலியிடமும் அவரைப் போலவே கடினமான முறைகளை வழங்குவோரிடமும் மக்கள் ஈர்க்கப்பட்டிருப்பதால் தான் இந்த நிலை பதஞ்சலியிடம் எந்தக் கோளாறும் இல்லை. ஆனால் இந்திய அகங்காரம் தான் தன்முனைப்புடன் விளங்குவதற்கு அழகான, நுட்பமான ஒரு வடிகாலை பதஞ்சலி போன்றோரில் கண்டு உள்ளது.

இதுவேதான் உங்களுக்கும் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. பதஞ்சலி உங்களைக் கவர்கிறார். அவர் முறை கடினமானது. ஹெராக்ளிட்டஸ் வெறும் குழந்தைகள் பள்ளி! ஏனெனில் அவர் அவ்வளவு எளிமையானவர். எளிமையின்மீது எப்போதுமே அகங்காரத்துக்கு கவர்ச்சி ஏற்படுவதில்லை. ஆனால், எளிமை உங்களைக் கவருமானால், பாதை தூரமில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். கடினமானதே கவர்ந்திழுக்குமானால் பாதை மிகவும் நீண்டதாகவே இருக்கப் போகிறது. ஏனென்றால் தொடக்கத்தில் இருந்தே அகங்காரத்தைக் கரைத்துக் கொண்டு போவதற்குப் பதில் அதை நீங்கள் சேர்த்துக் கொள்ள ஆரம்பித்துள்ளீர்கள்.

நான் பதஞ்சலியைப் பற்றிய பேசிக் கொண்டிருப்பது உங்களை இன்னும் அதிக தன்முனைப்புள்ளவர்களாக ஆக்குவதற்கு அல்ல. நிதானித்துப் பாருங்கள். பதஞ்சலியைக் குறித்துப் பேசுவதற்கு எப்போதுமே நான் தயங்கி வந்திருக்கிறேன். ஹெராக்ளிட்டசைப் பற்றி, பாஷோவைப்பற்றி, புத்தரைப் பற்றிப் பேச ஒரு போதும் நான் தயங்கிய தில்லை. உங்களுக்காகத்தான் நான் தயங்கினேன். பதஞ்சலி அழகானவர்தான். ஆனால் நீங்கள் கவரப்படுவது தவறான காரணங்களுக் காகத்தான். அவர் கடினமானவர் என்று நீங்கள் கருதினால் அது ஒரு தவறான காரணமாகிவிடும். அந்த 'கடினமானது' என்பதே கவர்ச்சியான தாக ஆகிறது. மிக உயர்ந்த சிகரமாகிய எவரெஸ்டை, வெல்லப் படாதிருந்த ஒரே சிகரமாகிய எவரெஸ்டை வென்றவர் எட்மண்ட் ஹில்லாரி, அவரிடம் யாரோ கேட்டார்கள், "ஏன்? எதற்காக இவ்வளவு சிரமத்தை மேற்கொண்டீர்கள்? என்ன தேவை? மேலும் அப்படியே நீங்கள் சிகரத்தை அடைவதாயினும் அங்கு என்ன செய்வீர்கள்? நீங்கள் திரும்பி வரத்தானே வேண்டும்?"

அதற்கு ஹில்லாரி சொன்னார், "மனிதனின் அகத்துக்கு அது ஒரு சவால். வெல்லப்படாத சிகரம் வெல்லப்பட்டாக வேண்டும்!" வேறு எந்த பயன்பாடும் இல்லை.... அங்கு போய் நீங்கள் என்ன செய்வீர்கள்?

அவரும்தான் என்ன செய்தார்? அவர் அங்கு போனார். ஒரு கொடியை நாட்டினார். திரும்பிவந்தார். என்ன ஓர் அபத்தம்! இத்தனைக்கும் இந்த முயற்சியில் பலபேர் இறந்திருந்தார்கள். ஏறக்குறைய நூறு ஆண்டுகளாக பல குழுக்கள் முயன்று வந்திருந்தன. பலரும் இறந்து போனார்கள். பலர் காணாமல் போனார்கள். பள்ளத்தாக்குகளில் தவறி விழுந்தார்கள். பிறகு ஒருபோதும் திரும்பி வரவே இல்லை. ஆனால் அடைவதற்கு அது எந்த அளவுக்கு கடினமாக ஆனதோ அந்த அளவுக்கு அதன் கவர்ச்சி அதிகரித்தது.

நிலவுக்கு ஏன் போகிறீர்கள்? அங்கு போய் என்ன செய்வீர்கள்? பூமியே போதாதா? ஆனால் அதுவல்ல விஷயம். நிலவு வெல்லப்படாமல் இருப்பதை மனிதனின் தன்முனைப்பால் சகித்துக்கொள்ள முடியாது என்பதே விஷயம். மனிதன் அதை எட்டியாக வேண்டும். அது கடினமான செயல். ஆகவே அது வெல்லப்பட்டாக வேண்டும். ஆக, தவறான காரணங்களுக்காகவே நீங்கள் கவரப்பட முடியும். இந்நிலையில் நிலவுக்குப்போவது ஒரு கவிதைத்தனமான முயற்சி அல்ல; சிறுகுழந்தைகள் தம் கைகளை நீட்டி நிலவைப் பிடிக்க முயல்வது போன்றது அல்ல இது.

மனிதகுலம் தோன்றியது முதலே, ஒவ்வொரு குழந்தையும் நிலவை எட்டிப்பிடிக்க ஏங்கி வந்துள்ளது. ஒவ்வொரு குழந்தையும் முயற்சி செய்திருக்கிறது. ஆனால் இதிலுள்ள வேறுபாடு ஆழமாக புரிந்து கொள்ளப்படவேண்டும்: குழந்தையின் முயற்சி அழகானது. நிலவு மிகவும் அழகாக உள்ளது. அதைத் தொடுவது - அதை அடைவது என்பது ஒரு கவிதைத்தன்மையான முயற்சி.அதில் எந்த தன்முனைப்பும் இல்லை. அது ஓர் எளிய கவர்ச்சி. ஒரு காதல் ஈடுபாடு. ஒவ்வொரு குழந்தையும் அந்த காதல் விவகாரத்தில் விழுகிறது. நிலவால் கவரப்படாத ஒரு குழந்தையை நீங்கள் காணமுடிந்தால் அது என்ன விதமான குழந்தை?

நிலவு ஒரு நுட்பமான கவிதையை, ஒரு நுட்பமான கவர்ச்சியை உருவாக்குகிறது. எவரும் அதனைத் தொட்டுணரவே விரும்புவர். எவரும் நிலவை எட்டிப் பிடிக்கவே விரும்புவர். ஆனால் விஞ்ஞானிகளின் காரணம் அதுவல்ல. விஞ்ஞானிகளுக்கு நிலவு ஒரு சவாலாக அங்கே இருக்கிறது. மனிதன் இங்கே இருந்தும் கூட அதை எட்டிப் பிடிக்க முடியாதபடி தொடர்ந்தும் ஒரு சவாலாக நீடிக்க அந்த நிலவுக்கு எவ்வளவு துணிச்சல்! அதை அவன் கைப்பற்றியாக வேண்டும்.

தவறான காரணங்களுக்காகவே நீங்கள் கவரப்பட முடியும். தவறு நிலவினுடையது அல்ல. அப்படியே தவறு பதஞ்சலியுடையதும் அல்ல. மாறாக நீங்கள்தான் தவறான காரணங்களுக்காக ஈர்க்கப்படக்கூடாது.

பதஞ்சலி கடினமானவர் - மிகமிக கடினமானவர். ஏனென்றால் பாதை முழுவதையும் அவர் பகுத்து ஆய்கிறார். ஒவ்வொரு பகுதியும் மிகவும் கடினமாகவே தோன்றுகிறது. ஆனால் அது கடினம் என்பதுவே உங்களை ஈர்க்கக் காரணமாக இருக்கக்கூடாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். பதஞ்சலியின் பாதை வழியாக நீங்கள் நடந்துபோக முடியும். ஆனால் நீங்கள் காதல் கொள்வது அந்த சிக்கலுடன் அல்ல; அந்த உள்ளொளி யின்மீது, பாதையின்மீது கொள்ளுங்கள். பதஞ்சலி பொழியும் அந்த ஒளியின் மீதே நீங்கள் மையல் கொள்ளுங்கள். ஒளியின் மீதே நீங்கள் காதல் கொள்ள வேண்டும். பாதையின் கடினத் தன்மைமீது காதல் கொண்டால் அது ஒரு தவறான காரணமாகவே இருக்கும்.

**ஹெராக்ளிட்டாஸ், கிறிஸ்து, ஸென் குருக்கள் ஆகியோரின் போதனைகள்பற்றி இதுவரை நீங்கள் சொல்லி வந்திருப்ப வற்றை, பதஞ்சலியின் போதனைகள்பற்றி இப்போது நீங்கள் சொல்லி உள்ளதுடன் ஒப்பிட்டால் அவையெல்லாம் மழலையர் பள்ளிப் பாடங்கள் போல்தான் உள்ளது.**

தயவுசெய்து ஒப்பிடாதீர்கள். ஒப்பீடு என்பது அகங்காரத்திலிருந்தே வருகிறது. புற யதார்த்தத்தில் பொருள்கள் எவ்வித ஒப்பீடும் இன்றியே நிலவுகின்றன... வானத்தில் 400 அடி உயரம்வரை ஓங்கியிருக்கும் மரமும் மிகமிகச் சிறிய புல்லின் பூவும் இருத்தலைப் பொறுத்தவரை சம மானவையே. ஆனால் நீங்கள் சொல்கிறீர்கள், ''இது ஒரு பெருமரம் இதுவோ? அற்பப் புல்.'' என்று ஒப்பீட்டை நீங்கள் உள்ளே கொண்டு வந்து விட்டீர்கள். ஒப்பீடு நுழையும் இடமெல்லாம் அசிங்கமும் நுழைந்து விடுகிறது. அழகான ஒரு நிகழ்வை நீங்கள் அவலட்சண மாக்கிவிட்டீர்கள்.

மரமானது தன் மரத்தன்மையில் பெரியது. புல்லானது தன்புல் தன்மையில் பெரியது. மரம் நானூறு அடி உயரம் வளர்ந்திருக்கலாம். அதன்பூக்கள் விண்ணை அளாவி மலர்ந்திருக்கலாம். புல்லோ பூமியோடு பூமியாக பதிந்திருக்கலாம். அதன் பூக்கள் மிகமிகச் சிறியனவாகவே இருக்கும். எப்போது அவை பூக்கின்றன, எப்போது அவை உதிர்கின்றன என்பதே கூட எவருக்கும் தெரியவராமல் இருக்கலாம். ஆனால் இந்தப் புல் பூக்கும் போதும் அந்த பூத்தல் நிகழ்வு அதே விதமாகவே இருக்கிறது. அந்த கொண்டாட்டம் அதே விதமாகவே இருக்கிறது. ஒரு துளி வேறுபாடுகூட இருப்பதில்லை. ஒன்றை நினைவில் கொள்ளுங்கள்: இயற்கையில் எந்த ஏற்றத்தாழ்வும் / ஒப்பிடுதலும் இல்லை. மனமே ஒப்பீட்டை உள்ளே கொண்டு வருகிறது. ''நீங்கள் அதிக அழகானவர்'' என்கிறது அது. ''நீங்கள் அழகானவர்'' என்று மட்டுமே உங்களால் சொல்ல முடியாதா? ஏன் அந்த ''அதிக''த்தை சேர்க்கிறீர்கள்?

முல்லா நசுருதீன் ஒரு பெண்ணிடம் காதல் கொண்டார். அவளை முல்லா முத்தமிட்டபோது பெண்கள் வழக்கமாக கேட்பதுபோல் அந்த பெண் கேட்டாள், ''என்னைத்தான் முதல் பெண்ணாக நீ முத்தமிடுகிறாயா? நான்தான் நீ முத்தமிடும் முதல் பெண்ணா? இதுதான் ஒரு பெண்ணுக்கு நீ தரும் முதல் முத்தமா?'' நசுருதீன் சொன்னார், ''ஆம், இதுதான் முதல் முத்தம். மிகவும் இனிமையான முத்தம்.''

ஒப்பிடுதல் உங்கள் ரத்தத்தில் ஊறி உள்ளது. ஒரு பொருளுடன் அது இருக்கிற நிலையிலேயே இணைந்திருக்க உங்களால் முடிவதில்லை. பெண்ணும் ஒப்பிடுவதைத்தான் வேண்டுகிறாள். இல்லாவிட்டால் இது முதல் முத்தமா இரண்டாவது முத்தமா என்றுஅவள் ஏன் கவலைப்பட வேண்டும்? ஒவ்வொரு முத்தமும் புதியதுதான், இனியதுதான். கடந்த காலத்தையோ வருங்காலத்தையோ சேர்ந்த வேறெந்த முத்தத்தோடும் இதற்கு எவ்வித உறவும் இல்லை. ஒவ்வொரு முத்தமும் தன்னளவில் ஒரு தனி உலகம்தான். அது அதன் ஏகாந்தத்தில் தன்னந்தனியாக நிலவுகிறது. தன்னளவில் ஒரு சிகரம் அது. கடந்த காலத்துடனோ வருங்காலத்துடனோ எந்த விதத்திலும் தொடர்பின்றி தனித்த ஓர் அலகு அது. அப்படி இருக்க அதுதான் முதல் முத்தமா என்று ஏன் கேட்கிறீர்கள்? மேலும் முதல் முத்தத்தில் என்ன கூடுதல் சிறப்பு உள்ளது? இரண்டாவது மற்றும் மூன்றாவது முத்தங்களில் ஏன் அது இருக்காது?

ஆனால் மனம் ஒப்பிடவே விரும்புகிறது. ஏன் மனம் ஒப்பிட விரும்புகிறது? ஏனெனில் ஒப்பிடுதல் மூலமே - ஏற்றத்தாழ்வின் மூலமே அகங்காரமானது ஊட்டம் பெறுகிறது. ''நான்தான் முதல் பெண். இதுதான் முதல் முத்தம்'' என்றால் அகங்காரம் ஊக்கம் பெறுகிறது. முத்தத்தில் உங்களுக்கு அக்கறை இல்லை - அதன் தன்மையில் உங்களுக்கு அக்கறை இல்லை. இந்தக் கணத்தில் இந்த முத்தம் இதயத்தின் ஒரு வாசலை திறந்துள்ளது - அதில் உங்களுக்கு ஆர்வம் இல்லை. அது உங்களுக்கு ஒன்றுமேயில்லை. அது முதலாவதா இல்லையா' என்பதில்தான் உங்களின் கவனம். அகங்காரமானது எப்போதும் ஒப்பீட்டிலேயே அக்கறை கொள்கிறது. *(Existence)* இருத்தலோ எவ்வித ஒப்பீட்டையும் அறிவ தில்லை. ஹெராக்ளிட்டாஸ், பதஞ்சலி போன்றோர் இருத்தலுக்குள் வாழ்கிறார்கள், மனத்துக்குள் அல்ல. அவர்களை ஒப்பிடாதீர்கள்.

பலரும் வந்து என்னிடம் கேட்கிறார்கள், ''யார் உயர்ந்தவர், புத்தரா யேசுவா'' என்று. என்ன மடத்தனமான கேள்வி! ''புத்தர் யேசுவைவிட உயர்ந்தவர், யேசுவோ புத்தரைவிட உயர்ந்தவர்!'' என்று நான் அவர்களுக்குச் சொல்கிறேன். ஏன் எப்போதும் ஒப்பிட்டுக் கொண்டே இருக்கிறீர்கள்? இதில் ஒரு நுட்பமான விஷயம் வேலை செய்து கொண்

டிருக்கிறது. நீங்கள் கிறிஸ்துவைப் பின்பற்றுபவர் என்றால் ''கிறிஸ்து உயர்ந்தவர்'' என்பதைத்தான் நீங்கள் விரும்புவீர்கள். ஏனெனில் 'கிறிஸ்து உயர்ந்தவர்' என்றால்தான் நீங்கள் உயர்ந்தவர் ஆக முடியும். உங்கள் சொந்த தன்முனைப்பின் நிறைவேற்றத்துக்கே அது. உங்களுடைய குருவாயிருப்பவர் எப்படி உயர்ந்தவராக இல்லாமல்போக முடியும்? அவர் உயர்ந்தவராகவே இருந்தாக வேண்டும். ஏனெனில் நீங்கள் ஓர் உயர்ந்த ரக சீடர் ஆயிற்றே! கிறிஸ்துவே உயர்ந்தவர் இல்லை என்றுவிட்டால் பின் கிறிஸ்தவர்கள் எங்கே இருப்பார்கள்? புத்தரே உயர்ந்தவர் இல்லை என்றுவிட்டால் பின் பவுத்தர்களின் அகங்காரம் என்னாவது?

ஒவ்வோர் இனமும், ஒவ்வொரு மதமும், ஒவ்வொரு நாடும் தானே பிற எல்லாரிலும் உயர்ந்தது என நினைக்கிறது - அந்த ஒரு நாடே உயர்ந்தது என்பதால் அல்ல, அந்த ஓர் இனமே உயர்ந்தது என்பதால் அல்ல: பிரபஞ்சத்தில் எல்லாமே உயர்ந்ததுதான். பேரியற்கையானது உயர்ந்ததை மட்டுமே உருவாக்குகிறது. ஒவ்வோர் உயிரும் தனிச்சிறப்புடையதாகவே இருக்கிறது. ஆனால் மனத்துக்கு அது உவப்புடையதாக இல்லை. ஏனெனில் பின் 'உயர்வு' என்பது பொதுவானதாகி விடுகிறது. எல்லாருமே சிறந்தவர்தானா? அப்படியானால் அதனால் என்ன பலன்? சிலராவது நம்மினும் சிறியோராகவே இருந்தாக வேண்டும். ஓர் ஏற்றத்தாழ்வு / மேல்கீழ் படிவரிசை உருவாக்கப்படவே வேண்டும்.

அன்று ஓர்இரவில் ஜார்ஜ் மைக்ஸ் என்பாரின் நூலை வாசித்துக் கொண்டிருந்தேன். அந்நூலில் அவர் சொல்கிறார்: ஹங்கேரியில் உள்ள புடாபெஸ்டில் - அவர் பிறந்த ஊரில் - ஓர் ஆங்கில பெண் அவர்மேல் காதல் கொண்டாள். ஹங்கேரியில் ஓர் ஆங்கில மாது அவர்மேல் காதல் கொள்கிறாள். ஆனால் அவருக்கு அவள்மேல் அவ்வளவு பிரியம் ஏற்படவில்லை. ஆனால் அதற்காக அவளிடம் அவள் மனம் புண்படும் விதத்தில் பேசிவிடவும் அவர் விரும்பவில்லை.எனவே, ''நாம் திருமணம் செய்துகொள்ள முடியாதா?'' என்று அவள் கேட்டதும், அவர் சொன்னார், ''அதில் சிக்கல் உள்ளது. ஏனென்றால் என் அம்மா சம்மதிக்க மாட்டார். நான் ஒரு வெளிநாட்டுப் பெண்ணை மணந்தால் அவர் மகிழ்ச்சி அடையமாட்டார். ''இதைக் கேட்டதும் அந்த ஆங்கில மாது மனம் மிகவும் புண்பட்டாள். அவள் சொன்னாள்,'' என்ன? நானா வெளிநாட்டுக்காரி? நான் வெளிநாட்டவள் அல்லள்! நான் ஆங்கிலேயள்! நீ வெளிநாட்டுக்காரன், உங்கள் அம்மா ஒரு வெளிநாட்டுக்காரி!''அதற்கு மைக்ஸ் சொன்னார், ''என் ஹங்கேரியில், என் புடாபெஸ்டில், நான் ஓர் அந்நியனா?'' அந்த பெண் சொன்னாள், ''ஆம்! ஏனெனில் புவியியலை சார்ந்தது அல்ல உண்மை'' - என்று .

ஒவ்வொருவரும் இப்படியேதான் நினைக்கின்றனர். தன் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காக மனமானது முயல்கிறது. அதுவே அதன் மிகவும் உச்சபட்ச நோக்கமாக இருக்கிறது. மதம், இனம் நாடு முதல் ஒவ்வொன்றைக் குறித்தும் நாம் விழிப்பாக - மிகவும் விழிப்பாக - இருக்க வேண்டி உள்ளது. அப்போதுதான் அகங்காரம் என்னும் இந்த நுட்பமான அம்சத்தைக்கடந்து உங்களால் மேற்செல்ல முடியும்.

> **ஹெராக்ளிட்டசும் கிறிஸ்துவும் ஸென் போதகர்களும் இறுதிப் படி கூட அருகில்தான் உள்ளது போல் காட்டு கிறார்கள் என்றால் பதஞ்சலியோ முதல் படியே கூட ஏறக்குறைய அசாத்தியமான ஒன்று என்பதுபோல காட்டுகிறார்.**

ஏனென்றால் அது இரண்டும்தான். ''அண்மையினும் அண்மை யானவன், தொலைவிலும் தொலைவானவன், அதே சமயம் சேய்மை யினும் சேய்மையானவன் அவன்'' என்கிறது உபநிடதம். அருகிலும் இருக்கிறான் தொலைவிலும் இருக்கி றான் அவன். அப்படித்தான் அவன் இருந்தாக வேண்டும். ஏனெனில் பின் யார் அப்பாலுக்கு அப்பால் இருப்பார்? அருகிலும் அவன்தான் இருந்தாக வேண்டும். ஏனென்றால் பின் யார் உங்களுக்கு அருகிலும் இருப்பார்? உங்கள் உடம்பைத் தொட்டுக் கொண்டிருப்பவனும் அவனே. அதே சமயம் எல்லைகளை எல்லாம் கடந்து பரவி இருப்பவனும் அவனே. இரண்டும் அவனே!

ஹெராக்ளிட்டஸ் ஓர் எளிய மனிதர் என்பதால் அவர் அண்மையை வலியுறுத்துகிறார். அவனே மிகவும் அருகில் இருக்கிறவன். எனவே இன்னும் அருகில் அவனைக் கொண்டுவர என்று எதுவும் செய்யத் தேவையில்லை என்கிறார் அவர். ஏறக்குறைய அவன் அங்கேயே தான் இருக்கிறான். வாயிலிலேயே காவல் இருக்கிறான், உங்கள் கதவைத் தட்டிக் கொண்டிருக்கிறான். உங்கள் இதயத்தின் அருகில் எதிர்நோக்கி இருக்கி றான். எனவே செய்வதற்கு ஒன்றுமில்லை. மௌனமாக இருங்கள். ஏறிட்டுப் பாருங்கள். அமைதியாக அமர்ந்திருந்து சும்மா பாருங்கள். ஒருபோதும் அவனை நீங்கள் இழந்ததில்லை. உண்மை என்பது அண்மையில் இருக்கிறது.

நிஜத்தில் அது அருகில் இருக்கிறது என்று சொல்வதுகூட துல்லியமற்றதே. ஏனெனில் நீங்களே உண்மைதான்! 'அருகில்' என்பதுகூட மிகமிகத் தொலைவில் என்பது போலவே தோன்றுகிறது. அண்மை என்று சொல்லும்போது கூட அதில் ஒரு பிரிவினை தெரிகிறது. ஒரு தூரம் தெரிகிறது. ஓர் இடைவெளி தெரிகிறது. அந்த அளவு இடைவெளி கூட

அங்கே இல்லை. நீங்களே அதுவாக இருக்கிறீர்கள்.உபநிடதம் கூறுகிறது:''நீயே அது: தத்வமசி சுவேதகேது.'' நீங்கள் ஏற்கனவே அதுவாகவே இருக்கிறீர்கள்: 'அவன் அருகில் இருக்கிறான்' என்று சொல்லும் அந்த அளவு தொலைவு கூட அங்கே இல்லை.

நீங்கள் உடனடியாகக் குதித்துவிட வேண்டும், காத்திருக்கக் கூடாது என்று ஹெராக்ளிட்டசும் ஸென் ஆசான்களும் விரும்புகிறார்கள். பதஞ்சலியோ அவன் மிக மிக தொலைவில் இருக்கிறான். என்கிறார். அவர் கூறுவதும் சரிதான்: அவன் மிக மிகத் தொலைவிலும் தான் இருக்கிறான். மேலும் அவர் கூறுவதுதான் உங்களுக்கு அதிக பொருத்தமாகத் தெரியும். ஏனெனில் அவன் அவ்வளவு அருகில் இருந்தும் கூட அவனை நீங்கள் அடைந்து கொள்ளவில்லை என்றால் நீங்கள் மிகமிக சோர்வடைந்து விடுவீர்கள். அவன் மிகமிக அருகில் இருந்தும் - பக்கத்து மூலையில்தான் பதுங்கி இருந்தும் - உங்களின் அண்மையில்தான் நின்று கொண்டிருந்தும் - அவனே உங்கள் பக்கத்தில் இருப்பவனாய் இருந்தும் எல்லாப் புறத்தில் இருந்தும் அவனே உங்களை சூழ்ந்திருந்தும் கூட அவனை நீங்கள் அடைந்து கொள்ளவில்லை என்றால், உங்கள் அகங்காரம் மிகமிக நிராசையாக உணரும். எப்பேர்ப்பட்ட மாமனிதர் நீங்கள், உங்களுக்கு எவ்வளவு அருகில் இருக்கிறான் அவன், அப்படி இருந்தும் நீங்கள் தவற விடுவதா? அது மிகவும் மனக்கசப்பு உண்டாக்குவதாக தோன்றுகிறது. ஆனால் அவன் மிகமிகத் தொலைவில் இருந்தால், பின் எல்லாமே சரியாகத்தான் இருக்கிறது. ஏனெனில் அதற்கு அவகாசம் அவசியம், முயற்சி தேவை, உங்கள் மேல் எந்தப்பிழையும் இல்லை, ஏனெனில் அவன் தான் மிகமிக தொலைவில் இருக்கிறானே!

தொலைவு என்பது ஒரு பரந்த விஷயம். உங்களுக்கு காலம் பிடிக்கும். நீங்கள் போவீர்கள், ஒருநாள் போய்ச் சேர்வீர்கள். அவன் அருகிலேயே இருந்தால் உங்களுக்கு குற்ற உணர்வு உண்டாகும். பின் ஏன் உங்களால் அவனைப்பிடிக்க முடியவில்லை? ஹெராக்ளிட்டசையும் பாஷோவையும் புத்தகரையும் படிக்கும்போது நாம் அசவுகரியமாக உணர்கிறோம். பதஞ்சலியிடம் அந்நிலை ஒருபோதும் நிகழ்வதில்லை; சவுகரியமாக / இயல்பாக உணர்கிறோம்.

மனதின் விசித்திரத்தைப் பாருங்கள். மிகவும் எளிதான மனிதர்களுடன் நாம் அசவுகரியமாக உணர்கிறோம். அந்த அசவுகரியம் வருவது உங்களுக்குள் இருந்து, ஹெராக்ளிட்டசுடனோ யேசுவுடனோ சேர்ந்து இயங்குவது மிகவும் அசவுகரியமானதே. ஏனெனில் கடவுளின் அரசு உங்களுக்குள்ளேயே உள்ளது. என்று அவர்கள் வலியுறுத்திக் கொண்டே போகிறார்கள். ஆனால் நீங்களோ உங்களுக்குள் நரகத்தைத்

தவிர வேறு எதுவுமே இல்லை என்பதை அறிந்திருக்கிறீர்கள். அவர்களோ கடவுளின் அரசு உங்களுக்குள் உள்ளது என வலியுறுத்து கிறார்கள். இது அசவுகரியமாக ஆகிறது.

கடவுளின் அரசு உங்களுக்குள் உள்ளது என்று சொன்னால், பின் உங்களுக்குள்தான் ஏதோ கோளாறு. ஏனெனில் ஏன் அதை உங்களால் பார்க்க முடிவதில்லை? மேலும் அது அந்த அளவுக்கு பிரசன்னமாகி இருந்தால் ஏன் இக்கணமே அது நிகழ முடியவில்லை? ஏனெனில் அதுதானே ஸென்னின் செய்தி? - அது உடனடியானது என்கிறது அது. எனவே காத்திருக்கத் தேவையில்லை. காலத்தை வீணடிக்கத் தேவையில்லை. இப்போதே, இக்கணமே அது நிகழ முடியும். எந்தத் தாமதமும் ஏற்படக்கூடாது - இது அசவுகரியத்தை உண்டாக்குகிறது. நீங்கள் வசதிக் குறைவாக உணர்கிறீர்கள். எந்தச் சாக்குப் போக்கையும் உங்களால் கண்டுபிடிக்க முடிவதில்லை. பதஞ்சலியின் பாதையில் போனால், கடவுள் தொலைவில் இருக்கிறார் என்று சொல்லி லட்சக்கணக்கான சாக்கு போக்குகளை உங்களால் கண்டுபிடிக்க முடியும். கோடிக்கணக்கான பிறவிகளின் முயற்சி தேவைப்படுகிறது. ஆம்,அதை அடைய முடியும், ஆனால் எப்போதும் அது வருங்காலத்திலேயே சாத்தியம். இது உங்களுக்கு மன சமாதானத்தை தருகிறது. அதைக்குறித்து எவ்வித அவசரமும் இல்லை. நீங்கள் இப்போது இருக்கிற படியே இருக்க முடியும். நாளை காலையில் இருந்து பாதையில் நீங்கள் பயணம் செய்யத் தொடங்கு வீர்கள், ஆயின் அந்த நாளையோ ஒருபோதும் வராது.

பதஞ்சலி உங்களுக்கு இடம், காலம் தருகிறார். அவர் கூறுகிறார், ''இன்னின்ன செய்து வாருங்கள். பையப்பைய ஒருநாள் நீங்கள் நிச்சயம் போய்ச் சேர்வீர்கள். எப்போதென்று யாரும் சொல்ல முடியாது. ஆனால் வருங்காலத்தில் ஏதாவது ஒரு பிறவியில் நிச்சயமாக போய்ச் சேர்வீர்கள.'' நீங்கள் நிதானமாக இருக்கிறீர்கள். ஓர் அவசரமும் இல்லை. இப்போது நீங்கள் இருக்கிறபடியே இருக்க முடியும்.எவ்வித பரபரப்பும் தேவை இல்லை.

இந்த ஸென் மக்கள் இருக்கிறார்களே, இவர்கள் உங்களுக்கு பைத்தியம் பிடிக்கும் அளவுக்கு உங்களை விரட்டுகிறார்கள். நானும் உங்களை அதற்குமேல் விரட்டுகிறேன். உம்? - ஏனென்றால் நான் இரண்டு தரப்பிலிருந்தும் பேசுகிறேனே! இது ஒரு வழிமுறைதான். இது ஒரு விடுகதைத் தான் (*Koan*) இது உங்களை பைத்தியமாக விரட்டும் ஒரு வழிமுறைதான். ஹெராக்ளிட்டசை நான் பயன்படுத்துகிறேன், பதஞ்சலி யையும் நான் பயன்படுத்துகிறேன், ஆனால் இவை எல்லாம் உங்களை ஒரு நெருக்கடிக்கு உள்ளாக்குவதற்கான தந்திரங்கள்தான். நீங்கள் ஓய்வாக

இருக்க அனுமதிக்க முடியாது. அவ்வளவே. எதிர்காலம் இருக்கிறது என்றால் நீங்கள் நலமாக உணர்வீர்கள். அந்நிலையில் மனம் ஆண்டவனை வேண்ட முடியும். அதில் உங்கள் தவறு என்றும் எதுவும் இல்லை. அந்த நிகழ்வே காலம் பிடிக்கக் கூடியதாகத் தான் இருக்கிறது. இது ஒரு சாக்காக மாறுகிறது.

பதஞ்சலியில் நீங்கள் தள்ளிப்போடமுடியும். ஸென்னில் நீங்கள் தள்ளிப்போட முடியாது. நீங்கள் தள்ளிப் போட்டால் தள்ளிப் போவது நீங்கள்தான், கடவுள் அல்ல. பதஞ்சலியில் நீங்கள் தள்ளிப் போட முடியும். ஏனெனில் அதில் கடவுளின் தன்மையே அவரை நீங்கள் படிப்படியான வழிகளில் மட்டுமே அடைய முடிவதாகவே இருக்கிறது. இது மிகமிகக் கடினம்: எனவேதான் கடினமான பாதையில் நீங்கள் வசதியாக உணர்கிறீர்கள்... எனவே இதுதான் விசித்திரம்: எளிது என கூறுபவர் களுடன் நீங்கள் அசவுகரியமாக உணர்கிறீர்கள். கடினம் என்று கூறுபவர்களுடன் நீங்கள் சவுகரியமாக உணர்கிறீர்கள். உண்மையில் நிலைமை. நேர் எதிராக இருக்க வேண்டும்.

ஆனால் இரண்டு நிலையும் உண்மைதான். அது உங்களையே பொறுத்தது. தள்ளிப் போட நீங்கள் விரும்பினால் பதஞ்சலியே மிகப் பொருத்தமானவர். இப்போதே இங்கேயே அதை நீங்கள் விரும்பினால் பிறகு நீங்கள் ஸென் கூறுவதைத்தான் கவனிக்க வேண்டி இருக்கும். முடிவு செய்ய வேண்டியது நீங்கள்தான். உங்களுக்கு அவசரமா? போதும் - போதும் என்னும் அளவுக்கு நீங்கள் துன்புற்றுவிட்டீர்களா? அப்படியானால் உங்களுக்கு ஸென்தான் சரியானது. ஸென்னுக்குள் குதியுங்கள். அல்லது நீங்கள் இன்னும் போதுமான அளவுக்கு துன்புறவில்லையா? இன்னும் அதிகமாக துன்புற விரும்புகிறீர்களா? அப்படியானால் பதஞ்சலிதான் பொருத்தமானவர். பதஞ்சலியைப் பின்பற்றுங்கள்.அப்போது தொலைதூர வருங்காலத்தில் எங்கோ நீங்கள் பேரின்பம் காண்பீர்கள். ஆனால் நீங்கள் போதுமான அளவுக்கு துன்புற்றிருந்தால் - அதுதான் முதிர்ச்சி. போதுமான அளவுக்கு நீங்கள் துன்புற்றுவிட்டீர்கள். என்ற புரிதலே முதிர்ச்சி.

இதில் ஹெராக்ளிட்டசையும் ஸென்னையும் குழந்தைகள் என்கிறீர் களா நீங்கள்? அவர்கள் மழலையர் பள்ளிகளா? 'நான் பட்டது போதும்'' என்று உணர்தல் மட்டுமே முதிர்ச்சி. இதை நீங்கள் உணர்வீர்கள் என்றால் பிறகு ஓர் அவசரம் உருவாக்கப்படுகிறது. பின் ஒரு நெருப்பு உருவாக்கப் படுகிறது. இக்கணமே ஏதாவது ஒன்று செய்தாக வேண்டி இருக்கிறது! இனியும் உங்களால் தள்ளிப் போட முடியாது. இனியும் தள்ளிப் போடு வதில் எந்தப் பொருளும் இல்லை. ஏற்கனவே போதுமான அளவுக்கு நீங்கள் தள்ளிப் போட்டு விட்டீர்கள். ஆனால் உங்களுக்கு வருங்காலம்

தேவையானால், இன்னும் கொஞ்சம் நீங்கள் துன்புற விரும்பினால், நரகத்துடன் உங்களுக்கு நன்றாகப் பழகிப் போயிருந்தால், 'இன்னும் கூடுதலாக ஒரே ஒருநாள் மட்டும்' இந்த நிகழ்கால நிலைமையிலேயே இருந்து கொள்ள நீங்கள் விரும்பினால்,அல்லது இருக்கிற நிலையிலேயே சிற்சில திருத்தங்களை மட்டும் நீங்கள் விரும்பினால்... பதஞ்சலியை பின்பற்றுங்கள்.

எனவேதான் பதஞ்சலி கூறுகிறார்: "இதைச் செய், பின் அதைச் செய். மெதுவாகச் செய். முதலில் ஒன்றை செய். பின் இன்னொன்றை செய்," என்கிறார். இப்படி செய்ய வேண்டிய காரியங்கள் லட்சக்கணக்கில் உள்ளன. அவற்றை எல்லாம் ஒரேயடியாக செய்துவிட முடியாது. எனவே உங்களையே கொஞ்சம் கொஞ்சமாக திருத்திக் கொண்டே போகிறீர்கள். இனி அகிம்சையாக நடப்பீர்கள் என இன்று நீங்கள் ஓர் உறுதிமொழி எடுக்கிறீர்கள். நாளை இன்னுமோர் உறுதிமொழி எடுப்பீர்கள். நாளை மறுநாள் முதல் கற்புடன் இருப்பதாக உறுதிமொழி எடுக்கிறீர்கள். இப்படியே இது போய்க் கொண்டே இருக்கிறது. அதற்குப் பிறகும் செய்வதற்கு லட்சக் கணக்கான காரியங்கள் மீதமிருக்கின்றன. பொய் சொல்வதைக் கைவிட வேண்டும், வன்முறையைக் கைவிட வேண்டும், ஆக்கிரமிப்பை கைவிட வேண்டும்; கோபம் - வெறுப்பு - பொறாமை - உடைமை மனப்பான்மை இப்படி லட்சக்கணக்கான காரியங்கள் படிப்படியாக நீங்கள் கைவிட உள்ளன. இதற்கிடையில் நீங்கள் பழைய விதமாகவே இருக்கிறீர்கள்.

வெறுப்பை நீங்கள் கைவிட்டுவிடாமல் (விடா விட்டால்) - கோபத்தை எப்படி உங்களால் கைவிட முடியும்? பொறாமையை நீங்கள் கைவிட்டுவிடாமல் கோபத்தை எப்படி உங்களால் கைவிட முடியும்? ஆக்கிரமிப்புக் குணத்தை நீங்கள் கைவிட்டுவிடாமல் கோபத்தை எப்படி உங்களால் கைவிட முடியும்? இவை ஒன்றுக்கொன்று உறவுள்ளவை. எனவே, இனி முதல் கோபம் கொள்வதில்லை' என்று நீங்கள் சொல்லலாம். ஆனால் நீங்கள் சொல்லிக் கொண்டிருப்பது அபத்தம்! ஏனெனில் நீங்கள் தொடர்ந்தும் வெறுப்புள்ளவராகவே இருப்பீர்கள். தொடர்ந்தும் நீங்கள் ஆக்கிரமிப்புக் குணமுள்ளவராகவே இருப்பீர்கள். ஆதிக்கம் செய்யவே விரும்புவீர்கள். எல்லாருக்கும் மேலாக இருக்கவே பிரியப்படுவீர்கள். ஆனால் கோபத்தை மட்டும் விட்டுவிடுவீர்களாக்கும்? அதை எப்படி உங்களால் கைவிட முடியும்? இவை ஒன்றுக்கொன்று உறவுள்ளவையாய் இருக்கின்றன.

ஸென் கூறுவது இதைத்தான்: ஒன்றை நீங்கள் கைவிட விரும்பினால், ஒவ்வொன்றும் தமக்கிடையில் உறவுள்ளவை என்ற அடிப்படையைப்

புரிந்து கொள்ளுங்கள். ஒன்று அதை இப்போதே கைவிடுங்கள். அல்லது ஒருபோதும் நீங்கள் கைவிடப் போவதில்லை. உங்களையே ஏமாற்றிக் கொள்ளாதீர்கள். இங்கு கொஞ்சம் அங்கு கொஞ்சமாக வெளிப்புறத்தில் சுண்ணாம்பு பூசிவிட முடியும். ஆனாலும் பழையவீடு உள்ளுக்குள் அதன் பழைய அம்சங்கள் அனைத்தோடும் அப்படியேதான் இருக்கிறது. மேலும் இவ்வாறு நீங்கள் வேலை செய்து கொண்டே போகிறபோது, சுவர்களுக்கு வண்ணமடித்தும் ஓட்டைகளை பூசிமெழுகியும் இன்ன பலவற்றையும் செய்தும் வருகிறபோது, இதன்மூலம் ஒரு புதிய வாழ்வை உருவாக்கிக் கொண்டிருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்கள். ஆனால் நடப்பில் பழைய விதமாகவே பிழைத்துக் கொண்டுள்ளீர்கள். இவ்வாறு நீங்கள் நடப்பது எவ்வளவு அதிக காலம் தொடருமோ அவ்வளவுக்கு அது அதிக ஆழமாக வேர் பிடிப்பதாகவே ஆகிறது.

ஏமாற்றிக் கொள்ளாதீர்கள். உங்களால் புரிந்து கொள்ள முடியுமானால், புரிதல் என்பது உடனடியானது - இதுவே ஸென்னின் செய்தி. உங்களால் புரிந்து கொள்ளமுடியாவிட்டால் பின் அதற்கு ஏதாவது செய்தாக வேண்டும். அப்போது பதஞ்சலி வசதியானது. நீங்கள் பதஞ்சலியைப் பின்பற்றலாம். என்றாவது ஒருநாள் நீங்கள் ஒரு புரிதலுக்கு வருவீர்கள். அன்று, இந்த மொத்த விவகாரமும் ஒரு சூழ்ச்சியே - யதார்த்தத்தை தவிர்ப்பதற்கான, யதார்த்தத்திலிருந்து தப்பிப்பதற்கான உங்கள் மனதின் சூழ்ச்சியே - என்பதை நீங்கள் காண்பீர்கள்: அந்த நாளில் திடீரென நீங்கள் துறந்து விடுவீர்கள்.

பதஞ்சலி படிப்படியானவர். ஸென்னோ உடனடியானது. உடனடியாக உங்களால் முடியாவிட்டால் பின் படிப்படியே மேலானது. ஒன்றுமில்லாமல் போவதைவிட, இரண்டும் கெட்டான் ஆவதைவிட, படிப்படியாகப் போவது மேல். பதஞ்சலியும் உங்களை அதே சூழ்நிலைக்கே கொண்டுவருவார். ஆனால் அவர் உங்களுக்கு கொஞ்சம் இடம் கொடுப்பார். அது அதிக வசதியானது. கடினமானது தான் - ஆனால் கூடுதல் வசதியானது. உடனடி நிலைமாற்றம் கட்டாயமில்லை. படிப்படியான முன்னேற்றத்துடன் பொருந்திப் போவது மனத்துக்கு எளிதாக முடிகிறது.

**ஹெராக்ளிட்டசும் கிறிஸ்துவும் ஸென் போதகர்களும் இறுதிப் படி அருகில்தான் உள்ளது போல் காட்டுகிறார்கள் என்றால், பதஞ்சலியோ முதல் படியே ஏறக்குறைய அசாத்தியமான ஒன்று என்பதுபோல் காட்டுகிறார். செய்யப்பட வேண்டிய வேலையின் உண்மையான அளவை எம்மைப் போன்ற மேல்நாட்டவர் இன்னும் உள்ளபடி உணர்ந்து கொள்ளவில்லை என்றே தோன்றுகிறது.**

அது உங்களைப் பொறுத்தது. வேலையில் நீங்கள் ஈடுபட விரும்பினால் அது உங்களால் கூடும். வேலையில் ஈடுபடாமலே அடைந்து கொள்ள நீங்கள் விரும்பினால் அதுவும் கூடும். அதுவும் சாத்தியமே! தேர்ந்து கொள்வது உங்களையே பொறுத்தது! கடின உழைப்பில் ஈடுபட நீங்கள் விரும்பினால் நான் உங்களுக்கு கடின வேலைகள் தருகிறேன். இன்னும் அதிக படிகளைக் கூட என்னால் உருவாக்க முடியும். பதஞ்சலியை இன்னும் அதிகமாய் இழுத்து நீட்ட முடியும். இலக்கை இன்னும் தள்ளிப் போட என்னால் முடியும். உங்களால் செய்ய முடியாத வேலைகளை எல்லாம் உங்களுக்குத் தர என்னால் முடியும். அது உங்கள் விருப்பத்தைப் பொறுத்தது. அல்லது உண்மையாகவே நீங்கள் உணர்ந்து கொள்ள விரும்பினால் இந்தக் கணமே அது ஏற்படமுடியும். அதுவும் உங்களையே பொறுத்தது. பதஞ்சலி என்பது ஒரு பார்வை முறை. ஹெராக்ளிட்டஸ் இன்னொரு பார்வை முறை.

ஒரு நடந்த சம்பவம்: நான் தெருவழியாக போய்க் கொண்டிருந்தேன். அப்போது ஒரு சிறு குழந்தை பெரிய தர்பூசணிப் பழத்தை சாப்பிட்டுக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். அந்தப் பழம் அதற்கு பெரியதாக இருந்தது. நான் அதைக் கவனித்துக் கொண்டிருந்தேன். அதைத் தின்று முடிக்க அது சற்று சிரமப்படுவதை நான் பார்த்தேன். எனவே நான் அதனிடம் கேட்டேன், ''உண்மையிலேயே உனக்கு இது ரொம்பவும் பெரியதாக இருக்கிறது, இல்லையா?'' அந்த குழந்தை என்னைப் பார்த்து, ''இல்லை, என் அளவுக்கு இது பெருசு இல்லை'' என்றது.

அது சொன்னதும் சரிதான். ஒவ்வொன்றையும் இரண்டு கோணங்களிலிருந்தும் பார்க்க முடியும். கடவுள் அருகிலும் இருக்கிறார், தொலைவிலும் இருக்கிறார். எங்கிருந்து குதிக்க விரும்புகிறீர்கள், அருகிலிருந்தா தொலைவிலிருந்தா என்பதை தீர்மானிப்பது இப்போது உங்களைப் பொறுத்தது. தூரத்திலிருந்து குதிக்க விரும்பினீர்கள் என்றால் அப்போதே எல்லா விதமான உத்திகளும் வருகின்றன. ஏனெனில் அவை உங்களை தூரத்துக்குக் கொண்டு செல்கின்றன. அங்கிருந்து நீங்கள் குதிக்க முடியும். இது, கடலின் இக்கரையில் நீங்கள் நின்று கொண்டிருப்பதைப் போன்றது. கடலானது இக்கரையிலும் இருக்கிறது, அக்கரையிலும் இருக்கிறது. அந்தக் கரை முற்றிலும் கண்ணுக்குத் தெரியாமல் இருக்கிறது. மிகமிகத் தொலைவில் இருக்கிறது. நீங்கள் இக்கரையில் இருந்தே கடலுக்குள் குதிக்க முடியும். ஏனெனில் இருப்பது ஒரே கடல்தான். ஆனால் மறுகரையிலிருந்து குதிக்கவே நீங்கள் முடிவு செய்தால் உங்களுக்கு ஒரு படகு தருகிறார் பதஞ்சலி.

யோகம் முழுவதும், குதிப்பதற்காக அக்கரைக்குச் செல்லப் பயன்படும் ஒரு படகுதான். முடிவெடுப்பது உங்களைப் பொறுத்தது. பயணத்தை நீங்கள் ரசிக்க முடியும். அதில் எந்தத் தவறும் இல்லை. அது தவறு என நான் சொல்ல மாட்டேன். அது உங்களைப் பொறுத்தது. நீங்கள் படகை எடுத்துக் கொண்டு அக்கரைக்குப் போக முடியும். அங்கிருந்து குதித்துவிட முடியும். ஆனால் அங்கும் இதே கடல்தான் இருக்கிறது. பின் ஏன் இக்கரையில் இருந்தே குதித்துவிடக் கூடாது? குதித்தல் என்பது ஒன்றுதான்; கடலும் ஒன்றுதான்; நீங்களும் அதே ஆள்தான். அப்படியானால் அக்கரைக்குப் போய் குதிப்பதில் என்ன சிறப்பு கூடுகிறது? அக்கரையிலும் ஆட்கள் நின்று கொண்டிருக்கிறார்கள் அவர்கள் இக்கரைக்கு வர முயன்று கொண்டிருக்கலாம். அங்கும் பதஞ்சலிகள் இருக்கிறார்கள். அவர்களும் படகுகளை தயாரித்திருக்கிறார்கள். அக்கரை மக்களும் தொலைவிலிருந்து குதிப்பதற்காக இக்கரை நோக்கி வந்து கொண்டிருக்கிறார்கள்.

ஒரு தடவை இப்படி நடந்தது: சாலையைக் கடக்க ஒரு மனிதன் முயன்று கொண்டிருந்தான். அது போக்குவரத்து உச்சமான நேரம். சாலையைக் கடப்பது கடினமாக இருந்தது. ஏராளமான கார்கள் அதிவேகமாக கடந்து கொண்டிருந்தன. அவனோ மிக மிக மெதுவான மனிதன். அவன் பல தடவை முயன்று திரும்பி வந்து விட்டான். அப்போது சாலையின் அக்கரையில் முல்லா நசுருதீனைப் பார்த்தான். முல்லா அவனுடைய நீண்டநாள் நண்பர். ''நசுருதீன், எப்படி சாலையைக் கடந்தீர்கள்?'' என்று கத்தினான். நசுருதீன் சொன்னார், ''நான் ஒருபோதும் கடந்தில்லை. நான் பிறந்ததே இக்கரையில்தான்.''

தொலைவில் இருக்கும் கரையைப் பற்றியே எப்போதும் சிந்தித்துக் கொண்டிருக்கும் மனிதர்கள் இருக்கிறார்கள். தூரம் எப்போதும் அழகாகத் தெரியும். தூரத்துக்கு, அதற்கே உரிய மாயக் கவர்ச்சி இருக்கிறது. ஏனெனில் அது மூடுபனியில் மறைந்துள்ளது. ஆனால் கடல் அதேதான். தேர்ந்தெடுக்க வேண்டியது நீங்கள்தான். அக்கரைக்குப் போவதில் எவ்விதத் தவறு மில்லை. ஆனால் சரியான காரணங்களுக்காகப் போங்கள். இக்கரையி லிருந்து குதிப்பதைத் தவிர்ப்பதுதான் உங்கள் நோக்கமாக இருக்கலாம். அப்படியானால் படகு உங்களை அக்கரைக்குப் போய்ச் சேர்த்தாலும் அக்கரையை நீங்கள் அடைந்த அக்கணமே நீங்கள் இக்கரையைப் பற்றி யோசிக்க ஆரம்பித்து விடுவீர்கள். ஏனெனில் அப்போது இக்கரைதான் தூரத்து நிலையாக இருக்கும். பல தடவை, பல பிறவிகள் இதை நீங்கள் செய்திருக்கிறீர்கள். கரையை நீங்கள் மாற்றி இருக்கிறீர்கள்; ஆனால் கடலில் குதிக்க மட்டும் செய்ததில்லை.

கடலின் இக்கரையிலிருந்து அக்கரைக்கும் அக்கரையிலிருந்து இக்கரைக்கும் நீங்கள் கடந்து கொண்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன். ஏனெனில் பிரச்சினை இதுதான்: நீங்கள் இங்கு இருப்பதால் அக்கரை என்பது தொலைவில் இருக்கிறது. நீங்கள் அங்கு போனபின் இக்கரை உங்களுக்கு தொலைவில் இருக்கும். மேலும் நீங்கள் எத்தனை ஆழமான தூக்கத்தில் இருக்கிறீர்கள் என்றால் அந்தக் கரையிலும் நீங்கள் இருந்திருக்கிறீர்கள் என்பதை மறுபடியும் மறுபடியும் அறவே நீங்கள் மறந்து விடுகிறீர்கள். மறுகரைக்கு நீங்கள் போய்ச் சேர்ந்த மறுகணமே நீங்கள் விட்டுவந்த கரையை நீங்கள் மறந்து விட்டிருக்கிறீர்கள். நீங்கள் போய்ச் சேர்ந்ததுமே முழு மறதி ஏற்பட்டு விடுகிறது.

நீங்கள் தொலைதூரத்தை நோக்குகிறீர்கள். மறுபடியும் யாராவது கூறுகிறார், ''ஐயா, இதோ படகு. இதைக் கொண்டு நீங்கள் அக்கரை செல்ல முடியும். அங்கிருந்து நீங்கள் குதிக்க முடியும். ஏனெனில் கடவுள் என்பவர் மிக மிக தொலைவில் இருக்கிறார்.'' என்று கூறுகிறார் உடனே மறுபடியும் நீங்கள் வேர்க்க விறுவிறுக்க இக்கரையை விட்டு நீங்குகிறீர்கள். அக்கரை போக படகு தருகிறார் பதஞ்சலி. ஆனால் நீங்கள் மறுகரையை அடைந் தாலும் ஸென் உங்களை எப்போதும் குதிக்கவே சொல்லும். இறுதிக் குதிப்பு எப்போதும் ஸென்னுடையதே. அதற்கிடையில் நீங்கள் அநேக காரியங்களை செய்ய முடியும். அது முக்கியம் இல்லை. எப்போது நீங்கள் குதிப்பதானாலும் அது திடீர்க் குதிப்பாகவே இருக்கும், படிப்படியானதாக இருக்க முடியாது!

'படிப்ப்டியாக செய்வது' அனைத்தும் இக்கரையிலிருந்து அக்கரை செல்வதற்கே. ஆனால் அதில் எந்தத் தவறும் இல்லை. பயணம் உங்களுக்குப் பிடித்திருந்தால் அது அழகானதே. ஏனெனில் அவன் இங்கும் இருக்கிறான், நடுவிலும் இருக்கிறான், அக்கரையிலும் இருக்கிறான். அக்கரையை நீங்கள் போய்ச் சேர்ந்தாக வேண்டிய தேவையும் இல்லை. இடையிலேயே - படகிலிருந்தே நீங்கள் குதித்து விடவும் முடியும். அப்போது படகே அக் கரையாகிறது. எங்கிருந்து நீங்கள் குதிக்கிறீர்களோ அதுவே உங்களுடைய கரை. ஒவ்வொரு கணமும் நீங்கள் குதிக்க முடியும். அப்போது அது கரையாகிறது. நீங்கள் குதிக்காவிட்டால் அப்போது அது கரை அல்ல. எல்லாம் உங்களைப் பொறுத்தது. இதை நன்றாக நினைவில் கொள்ளுங்கள்.

எனவேதான் எல்லா விதமான முரண்பாடான நிலைபாடுகள் பற்றியும் நான் பேசிக் கொண்டிருக்கிறேன். அப்போதுதான். எல்லா இடத்திலிருந்தும் உங்களால் புரிந்து கொள்ள முடியும். ஒவ்வொரு கோணத்தில் இருந்தும் யதார்த்தத்தை நீங்கள் மதிப்பிடவும் தெளியவும்

முடியும். கொஞ்சம் பொறுத்துக் குதிக்க நீங்கள் முடிவு செய்தால் அதுவும் அழகானதே. இக்கணமே குதித்துவிட நீங்கள் முடிவெடுத்தால் அதுவும் அழகானதே. என்னைப் பொறுத்தவரை ஒவ்வொன்றும் அழகானதே, மகத்தானதே. எனக்கு எந்த (Choice) விருப்பமும் பாகுபாடு கிடையாது. எல்லா (Choice) விருப்பங்களையும் உங்களிடம் நான் தந்துவிடுகிறேன், அவ்வளவே. ''நான் சற்று பொறுத்துப் பார்க்க விரும்புகிறேன்'' என்று நீங்கள் சொன்னால், ''நல்லது! உங்களுக்கு என் ஆசிகள். சற்று பொறுத்துப் பாருங்கள்'' என்று நான் கூறுகிறேன். ''நான் தயார். இப்போதே நான் குதிக்க விரும்புகிறேன்.'' என்று நீங்கள் சொன்னால், ''நல்லது, குதியுங்கள்! என் ஆசிகள்'' என்கிறேன் நான்.

எனக்கு எந்தத் தெரிவும் இல்லை. ஹெராக்ளிட்டசுக்கும் இல்லை. பதஞ்சலிக்கும்தான். ஏதாவது ஒரு வாயில் வழியாக நீங்கள் நுழையலாம் என்னும் நம்பிக்கையில் எல்லா வாயில்களையும் உங்களுக்கு நான் திறந்து விடுகிறேன், அவ்வளவே. ஆனால் மனத்தின் சூழ்ச்சிகளை மறந்து விடாதீர்கள்: ஹெராக்ளிட்டசைப் பற்றி நான் பேசும்போது அது ரொம்பவும் தெளிவில்லாமல் இருக்கிறது, ரொம்பவும் மறைபொருளாக இருக்கிறது, ரொம்பவும் எளிமையாக இருக்கிறது என்று நீங்கள் எண்ணுவீர்கள். பதஞ்சலியைப் பற்றி நான் பேசும் போதோ அது மிகவும் கடினமாக இருக்கிறது, ஏறக்குறைய நடைமுறை சாத்தியமற்றதாக இருக்கிறது என்று எண்ணுகிறீர்கள். கதவுகளை நான் திறந்து விடுகிறேன். அதற்கு நீங்களாக ஒரு பொருள் கொடுத்து கொள்ளுகிறீர்கள். ஒரு தீர்ப்பை மேற்கொண்டு உங்களை நீங்களே தடுத்து நிறுத்திக் கொள்கிறீர்கள். நீங்கள் தீர்ப்பிடு வதற்காக கதவு உங்களுக்கு திறக்கப்படவில்லை. நீங்கள் பிரவேசிப்ப தற்காகவே கதவு உங்களுக்கு திறந்திருக்கிறது.

**நம்பிக்கையிலிருந்து விசுவாசத்தை நோக்கி இயங்குவதைப் பற்றி நீங்கள் பேசினீர்கள். சந்தேகம் - நம்பிக்கை என்னும் இரு துருவங்களுக்கிடையிலே ஊசலாடிக் கொண்டிருக்கும் மனதைப் பயன்படுத்தி எப்படி எங்களால் அந்த இரு துருவங்களையும் கடந்து போக முடியும்?**

சந்தேகமும் நம்பிக்கையும் வெவ்வேறானவை அல்ல. ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள்தான் அவை. இதை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். ஏனென்றால் மக்கள் தாங்கள் ஒன்றை நம்பும்போது சந்தேகத்தை தாங்கள் கடந்து போய்விட்டதாக நினைக்கிறார்கள். ஆனால் நம்பிக்கையும் சந்தேகத்தைப் போன்றதுதான். ஏனெனில் இரண்டுமே மனத்தின் உடையவைதான். உங்கள் மனம் வாதிடுகிறது இல்லை என்கிறது. ஆம் என்று சொல்வதற்கு எந்த ஆதாரத்தையும் அது காண்பதில்லை.

உடனே நீங்கள் சந்தேகப்படுகிறீர்கள். பின் உங்கள் மனம் ஆம் என்று கூறுவதற்கு வாதங்களை தேடுகிறது, ஆம் என்பதற்கான ஆதாரங்களைக் கண்டுபிடிக்கிறது, உடனே நீங்கள் நம்புகிறீர்கள். ஆனால் இரண்டு நேர்வுகளிலும் நீங்கள் பகுத்தறிவையே நம்புகிறீர்கள். இரண்டு நேர்வுகளிலும் வாதங்களிலேயே நீங்கள் நம்பிக்கை வைக்கிறீர்கள். வேறுபாடுகள் வெறும் மேல் மட்டத்தில்தான். அடியாழத்தில் நீங்கள் பகுத்தறிவையே நம்புகிறீர்கள். பகுத்தறிவதிலிருந்து கழன்று கொள்வதே விசுவாசம். இது பைத்தியம். இதுவோ, வெறித்தனம்! அறிவீனம்! அபத்தம்!

அடுத்து விசுவாசம் என்பது நம்பிக்கை அல்ல என்றும் நான் கூறுகிறேன். விசுவாசம் என்பது சுயமாக எதிர்கொள்ளல் ஆகும். நம்பிக்கை என்பதோ பிறரால் வழங்கப்படுவதும் இரவலாக பெறப்படுவதும் ஆகும். ஒரு தளைக்கு உட்படுதலே ஆகும் அது. பெற்றோரும் பண்பாடும் சமூக சூழலும் உங்கள் மீது சுமத்தும் தளையே பழக்கமே நம்பிக்கை. அதைப் பற்றி நீங்கள் கவலைப்படுவது இல்லை. அதை ஒரு சொந்த கரிசனமாக நீங்கள் வரித்துக் கொள்வதில்லை. அது ஓர் இரவல் பொருளாகவே இருக்கிறது. ஆயின் வெளியிலிருந்து வாங்கப்படும் எதுவும் சுயமான வளர்ச்சியாக இல்லாத எதுவும் வெறும் ஒரு முன்தோற்றம்தான் பொய் முகம்தான், விழாக்கால வேஷம்தான்.

ஆறு நாள்கள் நீங்கள் ஒருவிதமாக இருக்கிறீர்கள். ஏழாம் நாள் கோயிலுக்குள் நுழையும்போது நீங்கள் வேறு ஒரு முகமூடியை அணிந்து கொள்கிறீர்கள். கோயிலில் மக்கள் நடந்துகொள்ளும் விதத்தைக் கூர்ந்து பாருங்கள். மிகவும் பயபக்தியாக, மிகவும் யோக்கியர்கள் போல நடந்து கொள்கிறார்கள் - அதே மனிதர்கள் ஒரு கொலைக்காரன் கூட கோயிலுக்குள் வந்து ஜெபிக்கும்போது அவன் முகத்தைப் பாருங்கள் - அது அவ்வளவு அழகாக, அவ்வளவு அப்பாவியாக தோன்றுகிறது. ஆனால் இந்த மனிதன் ஒரு கொலை செய்தவன்! கோயிலுக்குள் புழங்குவதற்கு என்றே ஒரு தனி முகத்தை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள், அதை எவ்வாறு பயன்படுத்துவது என்றும் கற்றிருக்கிறீர்கள். அது ஒரு பழக்கதோஷமாக மாறிவிட்டிருக்கிறது. குழந்தைப் பருவத்திலிருந்தே அது உங்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது.

நம்பிக்கை என்பது வழங்கப்படுவது. விசுவாசம் என்பது வளர்ச்சி யுறுவது. எதார்த்தத்தை நீங்கள் எதிர்கொள்கிறீர்கள். எதார்த்தத்தை நீங்கள் சந்திக்கிறீர்கள். எதார்த்தமாக நீங்கள் வாழ்கிறீர்கள். படிப்படியாக ஒரு புரிதலுக்கு நீங்கள் வருகிறீர்கள். அதாவது சந்தேகம் நரகத்துக்கும் அவலத்துக்குமே இட்டுச் செல்கிறது என்று புரிந்து கொள்கிறீர்கள். உங்கள் சந்தேகம் அதிகரிக்க அதிகரிக்க உங்கள் சங்கடமும் அதிகரிக்கிறது. முழுமையாக நீங்கள் சந்தேகிக்க முடிந்தால் நீங்கள் முழுமையான

அவலத்தில் இருக்கிறீர்கள். முழு அவலத்தில் நீங்கள் இல்லை என்றால் அதற்குக் காரணம், முழுமையாக உங்களால் சந்தேகிக்க முடிவதில்லை என்பதுதான். இன்னும் உங்களுக்கு விசுவாசம் இருக்கிறது. ஒரு நாத்திகர் கூட விசுவாசிக்க முடியும். உலகம் உள்ளதா இல்லையா என சந்தேகிக்கும் மனிதர் கூட விசுவாசம் வைக்கிறார். இல்லாவிட்டால் அவரால் உயிர்வாழ முடியாது. வாழ்க்கை அசாத்தியம் ஆகிவிடும்.

சந்தேகம் என்பது முழுமை பெற்றுவிட்டால் உங்களால் ஒற்றை கணம்கூட உயிர்தரிக்க முடியாது. சந்தேகம் எழுந்தால் எப்படி உங்களால் உள்மூச்சு வாங்க முடியும்? உண்மையாகவே நீங்கள் சந்தேகிப்பதானால் மூச்சுக்காற்றில் நச்சுப் பொருள் கலந்து இல்லை என்று எப்படி உங்களால் நம்ப முடியும்? கோடிக்கணக்கான கிருமிகள் உடம்புக்குள் புகவில்லை என்று யார்தான் கூறுமுடியும்? சுவாசம்மூலம் புற்றுநோய்க் கிருமி பரவவில்லை என யாருக்குத் தெரியும்? ஆக, மெய்யாகவே நீங்கள் சந்தேகிப்பதானால் உங்களால் சுவாசிக்கக்கூட முடியாது. ஒற்றைக் கணம்கூட உயிர்வாழ முடியாது. உடனடியாக நீங்கள் செத்து விடுவீர்கள். சந்தேகம் என்பது தற்கொலைக்கு சமானமே. ஆனால் நீங்கள் ஒருபோதும் முழுமையாக சந்தேகிப்பதில்லை. எனவே ஒருவாறு உயிரை வைத்துக் கொண்டு இருக்கிறீர்கள்; இழுத்துக் கொண்டு கிடக்கிறீர்கள்; எப்படியோ காலம் தள்ளிக் கொண்டு போகிறீர்கள். ஆனால் உங்கள் வாழ்க்கை முழுமையானதாக இல்லை. சற்றே சிந்தித்துப் பாருங்கள்: முழுமையான சந்தேகம் தற்கொலைக்கு சமமானால், முழுமையான விசுவாசம், முடிந்த அளவு முழுமையான வாழ்க்கையாக ஆகும்.

விசுவாசமுள்ள மனிதருக்கு இதுவே நிகழ்கிறது: அவர் விசுவாசம் கொள்கிறார். எந்த அளவுக்கு அவர் அதிக விசுவாசம் கொள்கிறாரோ அந்த அளவுக்கு அவர் அதிக விசுவாசத்துக்கு தகுதியானவர் ஆகிறார். எந்த அளவுக்கு அவர் அதிக விசுவாசத்துக்கு தகுதியானவர் ஆகிறாரோ அந்த அளவுக்கு அதிகமாய் வாழ்வின் வாசல் திறக்கிறது. அவர் அதிகமாக உணர்கிறார். அவர் அதிகமாக உயிர்வாழ்கிறார். அவர் தீவிரமாக வாழ்கிறார். அவரது வாழ்வே உண்மையான பேரின்பமாக ஆகிறது. இப்போது அவர் அதிகமாய் விசுவாசம் கொள்ள முடியும். இனி அவர் ஏமாற்றப்படவே மாட்டார் என்பதல்ல. ஏனெனில் நீங்கள் விசுவாசம் உடையவராக இருந்தால் இனி யாரும் உங்களை ஏமாற்றப் போவதில்லை என்று அதற்கு அர்த்தம் அல்ல. உண்மையில் இன்னும் அதிகமாகவே உங்களை ஏய்ப்பார்கள். ஏனெனில் இப்போது நீங்கள் தற்காப்பற்றவராக இருக்கிறீர்கள். முழுமையாக நம்பினால் அதிகமான பேர் உங்களை ஏமாற்றுவார்கள். ஆனால் உங்களை துன்பத்தில் ஆழ்த்த எவராலும்

முடியாது. இதுதான் புரிந்துகொள்ள வேண்டிய விஷயம். அவர்களால் ஏமாற்ற முடியும். உங்களிடமிருந்து பொருள்களை திருடிக் கொள்ள முடியும். உங்களிடம் பணத்தை கைமாற்று வாங்கிக் கொண்டு திருப்பி ஒருபோதும் தராதிருக்க முடியும் - ஆனால் ஒருபோதும் உங்களை வருத்தத்தில் ஆழ்த்த முடியாது.அது சாத்தியம் இல்லை. அவர்கள் உங்களை கொலையே செய்தாலும் உங்களை அவலத்துக்குள் ஆழ்த்த அவர்களால் முடியாது.

நீங்கள் விசுவாசிக்கிறீர்கள். முழு விசுவாசம் உங்களை தற்காப் பற்றவராக ஆக்குகிறது - ஆனால் முழு வெற்றியாளராகவும் ஆக்குகிறது. ஏனெனில் உங்களைத் தோற்கடிக்க யாராலும் முடியாது. அவர்கள் ஏமாற்ற முடியும், அவர்கள் திருட முடியும், நீங்கள் ஒரு பரதேசி ஆகிவிடலாம். ஆனால் அப்போதும் நீங்கள் ஒரு பேரரசாராகவே இருப்பீர்கள். விசுவாசம் பிச்சைக்காரர்களை பேரரசர்கள் ஆக்குகிறது. சந்தேகம் சக்கரவர்த்திகளை யும் பிச்சைக்காரர்களாக ஆக்குகிறது. விசுவாசம் வைக்கமுடியாத ஒரு வேந்தனைப் பாருங்கள். அவன் எப்போதும் பயந்து கொண்டே இருக்கிறான். தன் சொந்த மனைவியைக் கூட அவனால் நம்ப முடிவ தில்லை. தன் சொந்த பிள்ளைகளைக் கூட அவனால் நம்பமுடியாது. ஏனெனில் ஓர் அரசனிடம் அளவுக்கு அதிகமான செல்வம் இருக்கிறது. எனவே அவனது மகனே அவனைக் கொன்று விடுவான். அவனது மனைவியே அவனுக்கு விஷம் வைத்து விடலாம். அவனால் யாரையும் முழுமையாக நம்பமுடியாது. முழுமையான அவநம்பிக்கையிலேயே அவன் பிழைக்கிறான். இப்போதே அவன் நரகத்தில்தான் இருக்கிறான். அவன் தூங்கினாலும் அவனால் ஓய்வாக இருக்க முடியாது. தூங்கும் போது என்ன நடக்கும் என்று யாருக்கு தெரியும்!

விசுவாசம் உங்களை அதிகமதிகம் வெளிப்படையானவர் ஆக்குகிறது. பொதுவாகவே நீங்கள் வெளிப்படையாக இருக்கும்போது பல காரியங்களும் எளிதில் சாத்தியம் ஆகும். நீங்கள் வெளிப்படையாக இருக்கும்போது நண்பர்கள் உங்கள் இதயத்தை எட்ட முடியும். எதிரிகளும் உங்கள் இதயத்தை எட்ட முடியும் என்பது உண்மைதான். அவர்களுக்கும் கதவு திறந்தே இருக்கிறது. எனவே இரண்டு சாத்தியப்பாடுகள் உள்ளன: நீங்கள் பாதுகாப்பாக இருந்து கொள்ள விரும்பினால் கதவை முழுமையாக மூடி விடுங்கள். தாழ்ப்பாள் இடுங்கள். பூட்டுப்போட்டு உள்ளுக்குள் ஒளித்துக் கொள்ளுங்கள். இப்போது எந்த எதிரியும் நுழைய முடியாது. ஆனால் எந்த நண்பர்களும்கூட நுழைய முடியாது. கடவுளே வந்தாலும் அவராலும் நுழைய முடியாது. இப்போது யாராலும் உங்களை ஏமாற்ற முடியாது. ஆனால் அதனால் என்ன பயன்? நீங்கள் இருப்பது ஒரு

கல்லறையில். ஏற்கனவே நீங்கள் இறந்து விட்டீர்கள்; இனி யாரும் உங்களைக் கொல்ல முடியாது. அதற்குள்ளாகவே நீங்கள் இறந்து விட்டீர்கள். உங்களால் வெளியே வர முடியாது. நீங்கள் பாதுகாப்பாகத் தான் வாழ்கிறீர்கள். ஆனால் இது என்ன விதமான வாழ்க்கை? உண்மையில் நீங்கள் வாழ்வதே இல்லை. அப்படியானால் கதவைத் திறந்து விடுங்கள்.

சந்தேகிப்பது கதவை மூடுவதாகும். விசுவாசிப்பது வாயிலை திறப்பதாகும். வாசலை நீங்கள் திறக்கிறபோது எல்லா வாய்ப்புகளும் சாத்தியமாகின்றன: நண்பர் நுழையலாம், பகைவர் நுழையலாம். காற்று வரலாம். அது பூக்களின் நறுமணத்தைக் கொண்டு வரலாம். நோய்க் கிருமிகளையும் கொண்டு வரலாம். இப்போது நல்லது - கெட்டது எதுவுமே சாத்தியம். அன்பு வரலாம். வெறுப்பும் வரலாம். இனி கடவுளும் வரமுடியும், சாத்தானும் வரமுடியும். அப்படி ஏதாவது தவறு / கெடுதல் நேர்ந்துவிடலாம் - என்ற பயமே கதவை மூடிவிடச் சொல்கிறது. ஆனால் அதன்பின் எல்லாமே தவறாகிப் போகிறது. கதவைத் திறந்து வைத்தால் - ஏதாவது கெடுதல் நேர வாய்ப்பு இருக்கிறது. ஆனால் உங்களைப் பொறுத்தவரை ஒன்றும் கெட்டுப் போகாது, உங்கள் விசுவாசம் முழுமையாக இருந்தால். அந்நிலையில் எதிரியிலும்கூட நீங்கள் நண்பரைக் காண்பீர்கள். சாத்தானிலும்கூட நீங்கள் கடவுளைக் காண்பீர்கள். விசுவாசம் என்பது அத்தகைய ஒரு பண்புமாற்றமாக இருக்கிறது. எனவே உங்களால் கெட்டதையே காணமுடியாது. ஏனெனில் உங்களின் மொத்த கண்ணோட்டமே மாறி இருக்கிறது.

''உங்கள் எதிரிகளை நேசியுங்கள்,'' என்று யேசு சொன்னதற்கு இதுதான் பொருள். மற்றபடி உங்கள் எதிரியை உங்களால் எப்படி நேசிக்க முடியும். இது இன்னும் தீர்க்கப்படாத ஒரு சிக்கலாக இருந்து வருகிறது - கிறிஸ்தவ இறையியலாளருக்கு இது ஒரு புரியாத புதிர். உங்கள் எதிரியை உங்களால் எப்படி நேசிக்க முடியும்? ஆனால் விசுவாசம் உடைய மனிதரால் முடியும். ஏனெனில் விசுவாசம் கொண்ட மனிதர் எதிரிகளையே அறியார். விசுவாசமுள்ள மனிதர் நண்பர்களை மட்டுமே அறிவார். அந்த நண்பர் எந்த வடிவில் வந்தாலும் பரவாயில்லை. அவர் திருடரின் வடிவில் வந்தாலும் அவர் நண்பரே. கவர்ந்து கொள்ள வந்தாலும் அவர் நண்பரே. வாரி வழங்க வந்தாலும் அவர் நண்பரே. எந்தெந்த வடிவில் வந்தாலும் அவர் நண்பரே.

மாபெரும் மறைஞானியும் மகத்தான சூபியுமான அல் ஹில்லஜ் மன்சூருக்கு நடந்தது இதுவே. அவர் கொல்லப்பட்டார். படுகொலை செய்யப்பட்டார்; அந்நிலையிலும் வானத்தை ஏறெடுத்துப் பார்த்து அவர் கூறிய கடைசி வார்த்தைகள், ''ஆனால் என்னை உம்மால் ஏமாற்ற முடியாது'' என்பதுதான். பலபேர் அங்கு குழுமி இருந்தார்கள். அல்

ஹில்லஜ் புன்முறுவல் பூத்துக் கொண்டிருந்தார். வானத்தை நோக்கி அவர் சொன்னார், 'பாரும், நீர் என்னை ஏமாற்ற முடியாது.'' உடனே யாரோ கேட்டார்கள். ''என்ன சொல்கிறீர் நீர். யாரிடம் நீர் பேசிக் கொண்டிருக்கிறீர்?'' அவர் சொன்னார், ''நான் என் கடவுளிடம் பேசிக் கொண்டிருக்கிறேன்: எந்தெந்த வடிவில் நீர் வந்தாலும் உம்மால் என்னை ஏமாற்றிவிட முடியாது. உம்மை எனக்கு நன்றாக அடையாளம் காண முடியும். இப்போது நீர் மரணத்தின் வடிவில் வந்திருக்கிறீர். ஆனாலும் நீர் என்னை ஏமாற்ற முடியாது.''

விசுவாசியான மனிதரை ஏமாற்ற முடியாது. எந்தெந்த வடிவில் யார் யார் வந்தாலும் எப்போதுமே அவரிடம் இறைமையே வந்து கொண்டிருக்கிறது. ஏனெனில் விசுவாசம் எல்லாவற்றையும் தெய்விகம் ஆக்கிவிடுகிறது. விசுவாசம் ஒரு ரசவாதம். அது தன்மை மாற்றுவது தன்னை மட்டுமல்ல, தனக்காக தரணியையே அது தன்மைமாற்றி விடுகிறது. எங்கெங்கு காணினும் நீங்கள் அவனையே காண்கிறீர்கள். நண்பரிலும் பகைவரிலும் இரவிலும் பகலிலும் எங்கெங்கும். ஆம், ஹெராக்ளிட்டசின் கூற்று சரிதான். கோடையாகவும் குளிராகவும் இருப்பது கடவுளே. பகலாகவும் இரவாகவும் இருப்பது கடவுளே. பசியாகவும் நிறைவாகவும் இருப்பது கடவுளே. இதுதான் விசுவாசம். விசுவாசத்தையே அடித்தளமாக - அனைத்து விதமான வளர்ச்சிக்கும் அடிப்படையாக - ஆக்குகிறார் பதஞ்சலி.

**நம்பிக்கையிலிருந்து விசுவாசத்தை நோக்கி இயங்குவதைப் பற்றி நீங்கள் பேசினீர்கள் .....**

நம்பிக்கை என்பது வழங்கப்படுவது. விசுவாசம் என்பது கண்டுகொள்ளப்படுவது. நம்பிக்கை என்பது உங்களின் பெற்றோர்கள் தருவது. விசுவாசம் என்பது நீங்களே கண்டடைவது. நம்பிக்கையை சமுதாயம் தருகிறது. விசுவாசத்தை நீங்களே வெளியிலும் உள்ளிலும் தேடி விசாரித்து அடைந்து கொள்ள வேண்டி இருக்கிறது. விசுவாசம் அந்தரங்கமானது, அந்நியோன்னியமானது. நம்பிக்கை என்பது கடைச்சரக்கு போன்றது. கடை.வீதியில் அதை நீங்கள் விலைக்கு வாங்க முடியும்.

கடைத் தெருவில் அதை நீங்கள் விலைக்கு வாங்க முடியும் என்று நான் சொல்லும்போது மிகுந்த ஆராய்ச்சியோடும் அக்கறையோடுமே அதை கூறுகிறேன். நீங்கள் நேரே போய் ஒரு முகமதியர் ஆகிக் கொள்ள முடியும். நீங்கள் போய் ஓர் இந்துவாக ஆகிக் கொள்ள முடியும். ஓர் ஆரியக் கோயிலுக்குப் போனால் - நீங்கள் ஓர் இந்துவாக மதம் மாற்றப்பட்டு விட முடியும். அதில் எந்த சிரமமும் இல்லை. நம்பிக்

கையை கடைத் தெருவில் விலைக்கு வாங்க முடியும். முகமதியரில் இருந்து இந்துவாக நீங்கள் ஆக முடியும். இந்துவில் இருந்து ஒரு சமணராக நீங்கள் ஆகமுடியும், அது எந்த அளவுக்கு எளியது என்றால் எந்த ஒரு மூடப் புரோகிதனும் அதைச் செய்துவிட முடியும். ஆனால் விசுவாசம் என்பது பரிவர்த்தனைப் பண்டமல்ல. நீங்கள் நேரே கடைக்குப் போய் அதை கண்டுபிடித்துவிட முடியாது. அதை விலைக்கு வாங்கிவிட முடியாது. பல அனுபவங்களினூடாக நீங்கள் கடந்தாக வேண்டி இருக்கிறது. பையப் பைய அது எழுகிறது. பையப் பைய அது உங்களை மாற்றுகிறது. ஒரு புது குணம், ஒரு புது சுடர் உங்கள் ஜீவனுக்குள் எழுகிறது.'

ஐயத்தை அவலம் என்று நீங்கள் பார்க்கும் விசுவாசம் எழுகிறது. நம்பிக்கை இறந்தது என்பதை நீங்கள் காணும்போது விசுவாசம் எழுகிறது. நீங்கள் ஒரு கிறிஸ்தவராக இந்துவாக முகமதியராக இருக்கிறீர்கள். இந்நிலையில் நீங்கள் முற்றிலும் சவமாகி இருப்பதை எப்போதாவது உணர்ந்திருக்கிறீர்களா? என்ன விதமான கிறிஸ்தவர் நீங்கள்? மெய்யாகவே நீங்கள் ஒரு கிறிஸ்தவராக இருந்தால் நீங்கள் ஒரு கிறிஸ்தவாக இருப்பீர்கள் - அவருக்குக் குறைச்சலான எவராகவும் இருக்க மாட்டீர்கள். விசுவாசம் உங்களைக் கிறிஸ்துவாக ஆக்குகிறது. நம்பிக்கை உங்களைக் கிறிஸ்தவராக ஆக்குகிறது. இது ஒரு குறைச்சலான மாற்றுதான். எந்த விதத்தில் கிறிஸ்தவர் நீங்கள்? சர்ச்சுக்குப் போவதாலா? பைபிளை வாசிப்பதாலா? உங்கள் நம்பிக்கை அறிவில் இருந்து வரவில்லை. அறியாமையில் இருந்து வருகிறது.

ஒரு சூழல் கழகத்தில் (ரோட்டரி கிளப்பில்) ஒரு முறை இது நடந்தது: ஒரு பெரிய பொருளியல் அறிஞர் பேச வந்தார். பொருளியலின் புரியாத துறை மொழியில் அவர் பேசினார். அவ்வூரைச் சேர்ந்த பாதிரியாரும் அந்த பேச்சைக் கேட்பதற்காக வந்திருந்தார். உரை முடிந்த பின் அவர் வந்து அவரிடம் சொன்னார், ''ஓர் அருமையான சொற்பொழிவு ஆற்றினீர்கள். ஆனால் மனம் திறந்து சொல்ல வேண்டுமானால் நீங்கள் பேசியதில் ஒரு சொல் கூட விளங்கவில்லை.'' அதற்கு பொருளியல் அறிஞர் சொன்னார், ''அப்படியானால் நீர் உமது பக்தர்களிடம் கூறுவதையே நானும் உமக்குக் கூறுவேன்: (*Have faith*) நம்பிக்கை வையுங்கள்.

உங்களால் புரிந்து கொள்ள முடியாத போது, நீங்கள் அறியாமையில் இருக்கும்போது, மொத்த சமுதாயமும் உங்களிடம் ''நம்புங்கள்!'' என்கிறது. நானோ உங்களுக்குச் சொல்லுகிறேன்: தவறான நம்பிக்கை வைப்பதைவிட சந்தேகிப்பதை சாலச் சிறந்தது. சந்தேகிப்பதே சிறந்தது. ஏனெனில் சந்தேகம் துன்பத்தை உருவாக்கும். நம்பிக்கையோ போலி சமாதானத்தையே வழங்கும். சந்தேகமோ துன்பத்தை உருவாக்கும். அப்படி அவலம்

இருக்குமானால் விசுவாசத்தை நீங்கள் நாட வேண்டி வரும். இதுதான் இந்த உலகுக்கு நேர்ந்துள்ள சிக்கல், சங்கடம்: நம்பிக்கையோடிருப்பதன் விளைவாக, விசுவாசத்தை தேடுவது எப்படி என்பதை நீங்கள் மறந்த விட்டிருக்கிறீர்கள். நம்பிக்கையின் காரணமாக நீங்கள் விசுவாச மற்றவர்களாக இருக்கிறீர்கள். நம்பிக்கையின் விளைவாக நீங்கள் சவங்களைச் சுமந்து திரிகிறீர்கள் - அதாவது கிறிஸ்தவர்களாக, இந்துவாக, முகமதியர்களாக இருக்கிறீர்கள். இதன் மூலம் மொத்தக் குறிக்கோளையே இழக்கிறீர்கள் (மத)நம்பிக்கை கொண்டிருப்பதாலேயே நீங்கள் மதத் தன்மை உள்ளவர்கள் என நினைத்துக் கொள்கிறீர்கள். அத்துடன் உண்மைத் தேடல் நின்று விடுகிறது.

நேர்மையற்ற நம்பிக்கையை விட நேர்மையான சந்தேகம் உயர்ந்தது. நம்பிக்கையில் நீங்கள் வளர்ந்து செல்லவில்லை என்றால் உங்கள் நம்பிக்கை எல்லாம் பொய்யானதே. நம்பிக்கையே உங்கள் உணர்வும் உங்கள் உயிரும் உங்கள் உண்மையுமாக இல்லை என்றால், அனைத்து நம்பிக்கையும் பொய்யானதே! எனவே நேர்மையாக இருங்கள். ஐயப்படுங்கள்! அவதிப்படுங்கள்! துன்புறுதல் மட்டுமே உங்களைப் புரிதலுக்குக் கொண்டு சேர்க்கும். உண்மையாகவே நீங்கள் துன்புற்றால் ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் நீங்கள் புரிந்து கொள்வீர்கள் - சந்தேகமே என்னைத் துன்புறச் செய்கிறது என்று புரிந்து கொள்வீர்கள். அப்போதே தன்மை மாற்றம் சாத்தியமாகிறது.

**சந்தேகம் - நம்பிக்கை என்னும் இரு துருவங்களுக்கிடையிலுமே ஊசலாடிக் கொண்டிருக்கும் மனதைப் பயன்படுத்தி எப்படி எங்களால் அந்த இரு துருவங்களையும் கடந்து போக முடியும்?**

உங்களால் அதனைப் பயன்படுத்த முடியாது. ஏனெனில் ஒருபோதும் நீங்கள் ஒரு நேர்மையான சந்தேகியாக இருந்ததில்லை. உங்கள் நம்பிக்கை பொய்யானது. அதன் அடியாழத்தில் சந்தேகம் ஒளிந்துள்ளது. வெறும் வெளிப்புறத்தில் மட்டுமே நம்பிக்கை எனும் சுண்ணாம்பு பூசப்பட்டுள்ளது. உள்ளுக்குள் நீங்கள் சந்தேகப் பிராணிகளாகவே இருக்கிறீர்கள் என்பதை தெரிந்து கொள்ளப் பயப்படுகிறீர்கள். எனவே தொடர்ந்தும் உங்கள் நம்பிக்கையைப் பிடித்துத் தொங்கிக் கொண்டே இருக்கிறீர்கள். அந்த நம்பிக்கை சார்ந்த பாவனைகள் செய்து கொண்டே போகிறீர்கள். நீங்கள் பாவனைகள் செய்ய முடியும். ஆனால் பாவனைகள் மூலம் உங்களால் மெய்மையை அறிந்துகொள்ள முடியாது. நீங்கள் போய் ஒரு புனிதத் தலத்துக்குள் பணிந்து வணங்க முடியும். விசுவாசமுள்ள மனிதரின் செய்கையை நீங்கள் வெளிக்கு பாவனை காட்டிக் கொண்டு இருக்கிறீர்கள்.

ஆனால், உள்ளுக்குள் நீங்கள் வளர மாட்டீர்கள். ஏனெனில் உள்ளே விசுவாசம் இல்லை, சந்தேகம் மட்டுமே இருக்கிறது, அதன் மீது நம்பிக்கை மட்டுமே மேல் பூச்சாக பூசப்பட்டிருக்கிறது.

நீங்கள் காதலிக்காத ஒருவரை நீங்கள் முத்தமிடுவதைப் போன்றது. இது. வெளியிலிருந்து பார்த்தால் எல்லாமே ஒன்று போலவே இருக்கிறது: முத்தமிடுவதான சைகையை நீங்கள் செய்து கொண்டிருக்கிறீர்கள். எந்த அறிவியலாரும் அதில் எந்த வேறுபாட்டையும் கண்டுபிடிக்க முடியாது. நீங்கள் ஒருவரை முத்தமிட்டால், அதன் புகைப்படம் - அதன் உடலியல் நிகழ்வு - ஒருவரின் உதடுகளிலிருந்து மற்றவரின் உதடுகளுக்கு இடம் மாறும் கோடிக்கணக்கான நுண்ணுயிரிகளின் இடமாற்றம் எல்லாமே முற்றிலும் ஒரே மாதிரித்தான் இருக்கும், நீங்கள் அவரை காதலித்தாலும் காதலிக்காவிட்டாலும். ஓர் அறிவியலார் அதை கவனித்தால், அவதானித்தால், அதில் என்ன மாறுபாடு காண்பார்? எந்த வேறு பாட்டையும் காண மாட்டார்; இம்மியளவு வேறுபாட்டைக் கூட காணமாட்டார்; இரண்டும் முத்தங்களே, இரண்டு முத்தங்களும் முற்றிலும் ஒரே விதமானவையே என்பார் அவர்.

ஆனால் நீங்கள் ஒருவரை ஒருவர் காதலிக்கும் போது கண்ணுக்குப் புலனாகாத ஏதோ ஒன்று பரிமாறப் பெறுகிறது. அதை எந்த அறிவியல் கருவியாலும் கண்டறிய முடியாது - என்பது உங்களுக்கே தெரியும். ஒருவரை நீங்கள் நேசிக்காவிட்டால் அப்போதும் நீங்கள் முத்தம் தர முடியும். ஆனால் எதுவும் பரிமாறப்படுவதில்லை. எந்த ஆற்றல் பரிமாற்றமும் எந்த ஆன்மிகக் கூட்டுறவும் நிகழ்வதில்லை. நம்பிக்கை மற்றும் விசுவாசத்தின் விஷயத்திலும் இதே கதைதான். விசுவாசம் என்பது காதலுடன் கூடிய முத்தம். ஆழமான, அன்பான இதயத்துடன் கூடியது. நம்பிக்கை என்பதோ எவ்வித நேசமும் அற்ற முத்தம்.

ஆக எங்கிருந்து தொடங்குவது? சந்தேகத்துக்குள் ஆராய்ச்சி செய்வதே முதல் வேலை. பொய்யான நம்பிக்கைகளை உதறி எறியுங்கள். நேர்மையான - நாணயமுள்ள சந்தேகியாக மாறுங்கள். உங்கள் நாணயம் உதவும். ஏனெனில் நீங்கள் நேர்மையாக இருந்தால், சந்தேகம் துன்பத்தை உருவாக்குகிறது என்னும் உண்மையை உங்களால் எவ்வாறு தவறவிட முடியும்? நீங்கள் உண்மையுள்ளவராக இருந்தால் நீங்களும் அறிய வரவே வேண்டும். கூடிய விரைவில் நீங்கள் உணர்வீர்கள். சந்கேம் மிகஅதிக துன்பத்தை உருவாக்குகிறது என்பதை எவ்வளவு அதிகமாக நீங்கள் சந்தேகத்துக்குள் போகிறீர்களோ அவ்வளவு அதிக துன்பமே விளைகிறது என்பதை உணர்வீர்கள். மேலும், துன்பத்தின் வாயிலாக மட்டுமே ஒருவர் வளர முடியும்.

துன்பம் தாங்க முடியாததாக ஆகிவிட்டது. சகிக்க முடியாமல் போய்விட்டது என்ற நிலைமைக்கு நீங்கள் வந்ததும் அதை நீங்கள் கைவிடுகிறீர்கள். நீங்கள் அதை கைவிடுகிறீர்கள் என்பதை கூட நிஜமல்ல. அந்த சகிக்காமுடியாமையே தானாக கைவிடுவதாகிறது. அப்படி சந்தேகம் அற்றுப் போனதுமே, அதனால் நீங்கள் வேண்டியமட்டும் துன்புற்று விட்டதுமே, விசுவாசத்தை நோக்கி நீங்கள் இயங்கத் தொடங்குகிறீர்கள்.

விசுவாசமே (சிரத்தையே) பண்புமாற்றம் என்கிறார் பதஞ்சலி. சிரத்தையே (விசுவாசமே) சமாதி அனைத்துக்கும், கடவுள் தன்மையின் இறுதி அனுபவம் அனைத்துக்கும் அடித்தளம் என்கிறார் பதஞ்சலி.

□

# 3. முழு முயற்சி அல்லது சரணாகதி மூலம் வெல்வது

(SUCCEEDING THOUGH TOTAL EFFORT OR SURRENDER)

தீவிரமான, நேர்மையான முயற்சியாளருக்கு வெற்றி மிகமிக அருகில் உள்ளது.

முயற்சியின் அளவுக்குத் தகவே வெற்றிவாய்ப்புகள் அமைகின்றன.

கடவுளிடம் சரணடைவோருக்கும் வெற்றி கைகூடுகிறது.

கடவுளே உன்னத ஆட்சியாளர். இறை உணர்வின் தனித்துவ அம்சம் அவர். பிறவி, கருமம், கரும பலன் ஆகியவற்றின் அலைக்கழிப்புகளால் அவர் பாதிக்கப்படுவதில்லை.

கடவுளிடத்தில், விதையானது அதன் உச்சபட்ச அளவுக்கு வளர்ச்சி பெறுகிறது.

உண்மை தேடுவோர் மூன்று விதம். முதல் வகையினர் அறிந்து கொள்ளும் ஆர்வத்தினால் பாதையை வந்து அடைகிறார்கள். இவர்களை பதஞ்சலி குதூகல் என்று அழைக்கிறார். இவர்களுக்கு உண்மையான அக்கறை இருப்பதில்லை. தற்செயலாகவே பாதைக்கு அடித்து வரப்பட்டிருக்கிறவர்கள் இவர்கள். எதையாவது இவர்கள் வாசித்திருக்க லாம். கடவுளைப் பற்றி, மெய்மையைப் பற்றி, முக்தியைப் பற்றி யாராவது பேசுவதை இவர்கள் கேட்டிருக்கலாம். அதனால் இவர்களுக்கு ஆர்வம் ஏற்பட்டுவிட்டது.

இந்த வித ஆர்வம் அறிவு ரீதியானது. கண்ணில் படும் எல்லாவற்றின் மீதும் குழந்தை ஆர்வம் கொள்வதுபோல. கொஞ்ச நேரத்துக்குப் பின் அதிலிருந்து விலகிப் போகிறது. ஏனெனில் ஆர்வத்தைக் கிளறும் மேலும் பல விஷயங்கள், அடுத்தடுத்து அதன்முன் தம் கதவுகளை திறந்து கொண்டே இருக்கின்றன.

இது போன்ற மனிதர் ஒருபோதும் இலக்கினை அடைய மாட்டார். அறிந்து கொள்வதில் ஆர்வம் கொள்வதன்மூலம் உண்மையை உங்களால் அடைய முடியாது. ஏனெனில் உண்மையை அடைய விடாமுயற்சி, இடையறா தொடர்ச்சி, அசைவிலா ஊக்கம் ஆகியவை தேவை. வெறும் ஆர்வம் மிகுதியில் செயல்படுவோரிடம் இவை இருக்க முடியாது. தெரிந்துகொள்ள விரும்பும் மனிதர் ஒரு குறிப்பிட்ட செயலை ஒரு குறிப்பிட்ட காலத்துக்கே - அதுவும் அவரது மனநிலைக்கு ஒத்துவந்தால் - செய்ய முடியும். பின் அதில் ஓர் இடை வெளி விழும். அந்த இடை வெளியில், அதுவரை உருவாகி வந்தவை அனைத்தும் மறந்து விடுகிறது, மறைந்து விடுகிறது. மறுபடியும் ஆதியில் இருந்து அவர் தொடங்குவார். மறுபடியும் அதே கதிதான் ஏற்படும்.

இத்தகையவரால் பலன்களை அறுவடை செய்ய முடியாது. விதைகளை அவரால் விதைக்க முடியும். ஆனால் அவரால் காத்திருக்க முடியாது. ஏனெனில் எப்போதும் அவரை கோடிக்கணக்கான புதுப்புது விநோதங்கள் ஈர்த்துக் கொண்டிருக்கின்றன. அவர் தெற்கே ஓடுகிறார், பின் கிழக்கே ஓடுகிறார், பின் மேற்கே போகிறார், பின் வடக்கே போகிறார். கடலில் அலைக்கழியும் மரக்கட்டை போன்றவர் அவர். குறிப்பாக எதைநோக்கியும் அவர் போய்க் கொண்டிருக்கவில்லை. அவருடைய ஆற்றல் குறிப்பிட்ட குறிக்கோளை நோக்கி இயங்கிக் கொண்டிருக்க

வில்லை. சூழ்நிலை அவரை எங்கெல்லாம் கொண்டு தள்ளுகிறதோ அங்கெல்லாம் செல்கிறார்... அவர் ஒரு தற்செயல் மனிதர். தற்செயல் மனிதரால் உண்மையை/ இறைமையை அடைய முடியாது. அவர் அதிக சிரமப்படலாம். ஆனால் அதெல்லாம் வீண். ஏனெனில் பகலில் அவர் கட்டுவதை இரவில் அவரே கலைத்து விடுவார். அசைவிலா ஊக்கம் தேவைப்படுகிறது. தொடர்ச்சியான உருவாக்கம் தேவைப்படுகிறது.

ஜலாலுதீன் ரூமி ஒரு சிறிய பள்ளியை - ஞானப் பள்ளியை - நடத்திக் கொண்டிருந்தார். அவர் தன் சீடர்களை சுற்றுவட்டாரத்தில் இருந்த வயல்களுக்கும் பண்ணைகளுக்கும் கூட்டிச் செல்வது வழக்கம். குறிப்பாக ஒரு குறிப்பிட்ட பண்ணைக்கு - அங்கு நடந்திருப்பதை காட்டுவதற்காக - தன் புதிய சீடர்கள் எல்லாரையும் அவர் அழைத்துச் செல்வது வழக்கம். புதிதாக ஒரு சீடர் வந்து சேர்ந்ததுமே அவரை அந்தப் பண்ணைக்கு அவர் கூட்டிச் சென்று காட்டுவார். பார்க்க வேண்டிய ஒரு சமாசாரம் அங்கே இருந்தது. அங்கிருந்த பண்ணையார் ஒரு குறிப்பிட்ட மனநிலைக்கு எடுத்துக்காட்டாக விளங்கினார். அந்த விவசாயி ஒரு கிணறு தோண்டிக் கொண்டிருந்தார். பத்து அடி பதினைந்து அடிவரை தோண்டுவார். பின் தன் மனத்தை அவர் மாற்றிக் கொள்வார். ''இந்த இடம் சரியாகப் படவில்லை.'' எனவே அவர் இன்னோர் இடத்தில் குழி தோண்டுவார். பின் இன்னொன்றை தொடங்குவார்.

பல ஆண்டுகளாக இதை அவர் செய்து வந்தார். இப்போது அங்கு நிறைவுபெறாத எட்டுகுழிகள் இருந்தன. பண்ணை முழுவதுமே பாழாகிவிட்டது. இப்போது புதிதாக ஒன்பதாவது குழியைத் தோண்டிக் கொண்டிருந்தார். தன் புது சீடர்களிடம் ஜலாலுதீன் கூறுவார், ''பார்த்தீர்களா? இந்த விவசாயியைப் போல இருக்காதீர்கள். இவர் தன் முயற்சி முழுவதையும் ஒரே குழியில் ஈடுபடுத்தி இருந்தால் இந்நேரம் அந்த குழி குறைந்தது நூறு அடி ஆழமுடையதாக ஆகி இருக்கும். அவர் மிகுந்த முயற்சி செய்திருக்கிறார். மிகுந்த உழைப்பை தந்திருக்கிறார். ஆனால் அவரால் காத்திருக்க முடியவில்லை. பத்து, பன்னிரண்டு, பதினைந்து அடி தோண்டியதுமே அவர் சலிப்புற்று விடுகிறார். பின் வேறொரு குழியைத் தோண்டுகிறார். இம்முறையில் பண்ணை முழுவதுமே குழிமயம் ஆகிவிடும். கிணறுமட்டும் ஒருபோதும் உருவாகாது.''

இப்படிப்பட்டவர் தான் அறிவதில் ஆர்வம் கொண்ட மனிதர்; தற்செயல் மனிதர். இவர்தன் பணியைத் தொடங்கும்போது மிகுதியான - உண்மையில், அளவுக்கு அதிகமான - மனக் கிளர்ச்சியுடன் காணப் படுகிறார். ஆனால் இந்த அளவுகடந்த மனக்கிளர்ச்சி ஒரேசீராக தொடர முடிவதில்லை. தொடங்கும்போது அவர் காட்டும் அளவுக்கு மீறிய

ஆர்வத்தையும் வேகத்தையும் பார்த்ததுமே, விரைவிலேயே அவர் கைவிட்டு விடுவார் என்பதை நீங்கள் புரிந்து கொள்ளலாம்.

அகவுலகத் தேடலில் ஈடுபடும் இரண்டாம் வகை மனிதர் ஜிக்யாச மனிதர் - ஆழமான ஆய்வு மனோபாவம் கொண்ட மனிதர். இவர் வெறுமனே தெரிந்து கொள்ளும் ஆர்வத்தால் வரவில்லை. ஒரு தீவிர விசாரணை நோக்குடன் வந்திருக்கிறார். அவரது நோக்கம் உண்மையானது. ஆனால் இவரது மனப்பான்மையும் போதுமானதல்ல. ஏனெனில் அவரது அர்த்தம் அடிப்படையில் அறிவார்த்தம் ஆனது. அவர் ஒரு தத்துவவாதி ஆகலாம். ஆனால் அவர் ஒரு சமயத் தன்மை வாய்ந்த மனிதன் ஆக முடியாது. அவர் ஆழமாக ஆய்வு செய்வார். ஆனால் அவரது ஆய்வு அறிவு ரீதியானதே. அது தலை சார்ந்ததாகவே இருக்கிறது. அவரைப் பொறுத்த வரை அது தீர்வு காணப்பட வேண்டிய ஒரு சிக்கல், அவ்வளவே.

வாழ்வும் இறப்பும் ஈடுபடுவதில்லை. வாழ்வா சாவா என்ற கேள்வியுமில்லை. அது ஒரு புதிர், ஒரு விடுகதை. அதைத் தீர்ப்பதில் அவருக்கு களிப்பு ஏற்படுகிறது. ஒரு குறுக்கெழுத்துப் புதிரை விடு விப்பதில் நீங்கள் களிப்படைவது மாதிரி. ஏனெனில் அது உங்களுக்கு ஒரு சவாலாக இருக்கிறது. அதற்கு தீர்வு கண்டாக வேண்டும். அதை நீங்கள் தீர்க்க முடிந்தால் நீங்கள் மிகவும் நிறைவாக உணர்கிறீர்கள். ஆனாலு இது அறிவுரீதியானதே. அடியாழத்தில் உங்கள் அகங்காரமே செயல் படுகிறது. இந்த மனிதர் ஒரு தத்துவாதி ஆக மாறுவார். இவர் கடினமாக முயலுவார். கருத்துச் செலுத்துவார். தீர்க்கமாக ஆலோசிப்பார். ஆனால் ஒருபோதும் தியானிக்க மாட்டார். இவர் தர்க்க ரீதியாக, பகுத்தறிவு பூர்வமாகச் சிந்திப்பார். பல உபாயங்களை அவர் கண்டுபிடிப்பார். ஒரு கருத்தியல் மாளிகையையே அவர் கட்டுவார். ஆனால் மொத்த கட்டட மும் அவரது சொந்த கற்பனையாகவே இருக்கும்.

மெய்ம்மையை கண்டுகொள்ள நீங்கள் முழுமையாகத் தேவை. தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் கூட போதாது. முழுசாக நூறு சதவி கிதமும் நீங்கள் தேவைப்படுகிறீர்கள். இதில் தலையின் பங்கு வெறும் ஒரு சதவிகிதம் மட்டுமே. தலையில்லாமலே நீங்கள் வாழ முடியும். விலங்குகள் தலை இல்லாமல்தான் வாழ்கின்றன. மரங்கள் தலை இல்லாமல்தான் வாழ்கின்றன. தலை என்பது இருத்தலுக்கு அவ்வளவு அத்தியாவசியமான உறுப்பு அல்ல. எளிதாக உங்களால் வாழ முடியும். உண்மையைச் சொன்னால் தலையுடன் வாழ்வதை விடவும், தலையில்லாமல் நீங்கள் அதிக எளிதாகவே வாழ முடியும். கோடிக்கணக்கான குழப்பங்களை தலையானது உருவாக்குகிறது. தலை ஒரு கட்டாயத் தேவை அல்ல. இயற்கையே இதை அறிந்திருக்கிறது. தலையானது தேவைக்கும் அதிக

மான ஓர் ஆடம்பரம்தான். போதிய உணவு உங்களுக்கு கிடைக்காவிட்டால் அந்த குறைந்த உணவு எங்கே போக வேண்டும் என்பதை உடல் அறிந் திருக்கிறது: தலைக்கு உணவு வழங்குவதை அது நிறுத்தி விடுகிறது.

எனவேதான் ஏழை நாடுகளில் புத்திவளரமுடிவதில்லை. ஏனெனில் புத்தி ஓர் ஆடம்பரம். மற்றதெல்லாமே முடிந்தபின், தனக்குத் தேவையான எல்லாவற்றையும் உடல் முழுமையாகப் பெற்றபின் மட்டுமே, ஆற்றலானது தலையை நோக்கிப் போகிறது. உங்கள் அனுபவத்தில்கூட நாள்தோறும் இது நடக்கிறது. ஆனால் உங்களுக்குத்தான் உணர்வில்லை. அளவுக்கு அதிகமான உணவை உண்ணுவீர்களானால் உடனடியான நீங்கள் தூக்கக் கலக்கமாக உணர்கிறீர்கள். என்ன நடக்கிறது? உணவை ஜீரணிக்க உடலுக்கு ஆற்றல் தேவைப்படுகிறது. இந்நிலையில் தலையை மறந்து விட வேண்டியதுதான். ஆற்றலானது வயிற்றை நோக்கி இயங்குகிறது. தலை, மயக்கமாக தூக்கக் கலக்கமாக உணர்கிறது. தலையை நோக்கி ஆற்றல் இயங்குவதில்லை, இரத்தம் பாய்வதில்லை. உடம்புக்கு அதற்கே உரிய திட்டம் இருக்கிறது.

அத்தியாவசிய தேவைகளும் இருக்கின்றன. அத்தியாவசியம் இல்லாத தேவைகளும் இருக்கின்றன. அத்தியாவசியத் தேவைகளை தான் முதலில் நிறைவு செய்தாக வேண்டும். ஏனெனில் அத்தியாவசியம் இல்லாத தேவைகள் காத்திருக்க முடியும். உங்கள் தத்துவம் காத்திருக்க முடியும். அதற்கு பெரிய அவசரம் ஏதும் இல்லை. ஆனால் உங்கள் வயிறு காத்திருக்க முடியாது. முதலில் உங்கள் வயிறு நிறைவு செய்யப்பட்டாக வேண்டும். அந்தப் பசிதான் மிகவும் அடிப்படையானது. இந்த அடிப்படையை உணர்ந்ததால்தான் பல மதங்களும் உண்ணா நோன்பை கையாண்டுள் ளன. ஏனெனில் நீங்கள் பட்டினி கிடந்தால் தலையால் எண்ண முடியாது. ஏனெனில் அந்நிலையில் அந்த அளவுக்கு ஆற்றல் இராது. எனவே அது தலைக்கு வழங்கப்பட முடியாது. ஆனால் இது ஒரு மாயையே. ஆற்ற லானது போதிய அளவு சேர்ந்ததும் மறுபடியும் தலையானது எண்ண ஆரம்பித்து விடும். இவ்வித தியானம் போலியானது.

நீண்ட காலத்துக்கு - தொடர்ந்து சில நாள்கள் - நீங்கள் விரதமிருந் தால் தலையால் சிந்திக்க முடியாது. இதன் பொருள் நீங்கள் மனமற்ற நிலையை அடைந்து விட்டீர்கள் என்பதல்ல. உபரி ஆற்றல் ஏதும் தற்போது உங்களிடம் இல்லை என்பது மட்டுமே அதன் பொருள். முதல் தேவை உடலுக்கே. உடலின் தேவைகளே முதன்மையானவை, முக்கியமானவை. தலையின் தேவைகள் இரண்டாம்பட்சமானவை, மேலோட்டமானவை. இது உங்கள் குடும்பத்துக்கு நீங்கள் வைத்திருக்கும் பொருளாதாரத் திட்டம்

போன்றதே. உங்கள் குழந்தை சாகக் கிடந்தால் தொலைக் காட்சிப் பெட்டியை நீங்கள் விற்றுவிடுவீர்கள். அதனால் ஒன்றும் கெட்டு விடாது. குழந்தை சாகக் கிடக்கும் போது தட்டுமுட்டு சாமான்களை நீங்கள் விற்றுவிட முடிகிறது. பசியாய் இருக்கும்போது உங்கள் வீட்டைக் கூட விற்றுவிடத் துணிகிறீர்கள். முதன்மையான தேவைகளுக்கு முதல் இடம், இரண்டாம் நிலையானவற்றுக்கு இரண்டாம் இடம் - இப்படித்தான் பொருளாதாரத் திட்டம் அமைகிறது. தலைக்கு கடைசி இடம்தான். உங்கள் உடம்பில் அது ஒரு சதவிகிதமே. அதுவும் தேவையற்ற பகுதியே. (ஏனெனில்) அது இல்லாமலே உங்களால் உயிரோடியிருக்க முடியும்.

வயிறு இல்லாமல் உங்களால் உயிரோடிருக்க முடியுமா? இதயமில்லாமல் உங்களால் உயிரோடிருக்க முடியுமா? ஆனால் தலை (புத்தி) இல்லாமல் உங்களால் உயிரோடிருக்க முடியும். மேலும் தலையின் மீது நீங்கள் அளவுக்கு மீறிய கவனம் செலுத்தும்போது, முற்றிலும் நீங்கள் தலைகீழ் ஆகிறீர்கள் - சிரசாசனம் செய்பவர் போல் தலைகீழாக நின்று கொண்டிருக்கிறீர்கள். தலை இன்றியமையாதது அல்ல என்பதை முற்றிலுமாக நீங்கள் மறந்துவிட்டிருக்கிறீர்கள்.

ஆராய்வதில் தலையை மட்டுமே நீங்கள் ஈடுபடுத்தினால் அது **ஜிக்யாசா** ஆகிறது. அப்போது அது ஓர் ஆடம்பரம் ஆகிறது. நீங்கள் ஒரு தத்துவமேதையாக ஆக முடியும். ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு சாவகாசமாக சிந்தித்துக் கொண்டிருக்க முடியும். தத்துவ வாதிகள் ஆடம்பர நாற்காலி போன்றவர்கள். உங்களால் வாங்க முடிந்தால் நல்லதுதான். ஆனால் அது ஒரு உயிர்போகும் பிரச்சினை அல்ல. எனவேதான் **குதூகல** மனிதர் - ஆர்வ மனிதர் - அடைய முடியாது என்கிறார் பதஞ்சலி. அப்படியே **ஜிக்யாசா** மனிதரும் - ஆய்வு மனிதரும் - வெறும் தத்துவ வாதியாகவே ஆவார்.

அடுத்தது மூன்றாம் விதமான மனிதர். இவரைப் பதஞ்சலி **முமூக்சா** மனிதர் என்கிறார். இந்த **முமூக்சா** என்னும் சொல் மொழிபெயர்க்க கடினமானது.எனவே அதை நான் விளக்கி விடுகிறேன். **முமூக்சா** என்றால் ஆசையற்று இருப்பதில் ஆசை. முழுமையாக விடுபடுவதில் ஆசை. இருத்தலாகிய சக்கரத்தில் இருந்து வெளியேறும் ஆசை; மறுபடியும் பிறவாமல் மறுபடியும் இறவாமல் இருப்பதற்கான ஆசை; கோடானு கோடி தடவை மீண்டும் மீண்டும் பிறந்து இறந்து அதே நச்சுச் சுழலில் உழன்றது போதும் போதும் என்கிற உணர்வு. **முமூக்சா** என்றால் வாழ்க்கைச் சக்கரத்திலிருந்தே நிரந்தரமாக கழன்ற நிலைபெற்றவர் ஆவது என்பதே. துன்புற்று, சலித்து, அதிலிருந்து விட்டு வெளியேறினால் போதும் என

ஒருவர் விரும்புகிறார். விசாரனை இப்போது இருப்பதா சாவதா என்னும் உயிர்ப் பிரச்சினை ஆகிறது. உங்களின் முழு ஜீவனுமே இப்போது இடர்ப்பாடான நிலையில், போராடியாக வேண்டிய நிலையில் உள்ளது. முமூக்சா மனிதர் மட்டுமே, அதாவது மோட்ச/ விடுதலை வேட்டை உதித்திருக்கிற மனிதர் மட்டுமே, மதத் தன்மை வாய்ந்த மனிதர் ஆக முடியும். அப்போதும்கூட அவர் மிகமிக தர்க்க பூர்வமாக சிந்திப்பவராக இருப்பதாலேயே இது சாத்தியமாகிறது என்கிறார் பதஞ்சலி.

முமூக்சா மனிதரிலும் மூன்று பிரிவினர் இருக்கிறார்கள். முமூக்சா மனிதரில் முதல் வகையைச் சேர்ந்தவர் தன் மூன்றில் ஒரு பாகத்தையே முயற்சியில் ஈடுபடுத்துகிறார். முயற்சியில் உங்கள் ஜீவனின் மூன்றில் ஒரு பாகத்தை மட்டுமே ஈடுபடுத்தினால் நீங்கள் ஓரளவு அடைவீர்கள். ஆயின் நீங்கள் அடையப் போவது ஓர் எதிர்மறை சாதனையாகவே இருக்கும்: நீங்கள் இறுக்கமாக இருக்க மாட்டீர்கள்; ஆனால் நீங்கள் அமைதியாகவும் இருக்க மாட்டீர்கள். இதை மிக ஆழமாகப் புரிந்து கொள்ள வேண்டும். நீங்கள் பதட்டமாக இருக்க மாட்டீர்கள், பதட்டங்கள் போய்விடும்; ஆனால் நீங்கள் சாந்தமாக, சமாதானமாக, சாதுவாகவும் இருக்க மாட்டீர்கள். உங்களுக்குக் கிடைப்பது எதிர்மறையானதாகவே இருக்கும். நீங்கள் நோய்வாய்ப்பட்டு இருக்கமாட்டீர்கள்; ஆனால் நீங்கள் நலமாகவும் இருக்க மாட்டீர்கள். நோய் மறைந்துவிடும். இனி உறுத்தலாக உணரமாட்டீர்கள். நிராசையாக உணரமாட்டீர்கள். ஆனால் நிம்மதியாகவும் உணரமாட்டீர்கள். எதிர்மறை போய்விடும், ஆனால் உடன்பாடு ஏற்பட்டிருக்காது. முட்கள் போய்விடும். ஆனால் பூ மலர்ந்திருக்காது.

இதுதான் முமூக்சுவின் முதல் நிலை. இத்துடன் நிலைகுத்தி நின்றுவிடும் மனிதர்கள் பலரை நீங்கள் பார்க்க முடியும். அவர்களில் ஒரு குறிப்பிட்ட தன்மையை நீங்கள் உணர்வீர்கள்: அவர்கள் எதிர்வினை புரிவதில்லை. அவர்கள் எரிச்சல் அடைவதில்லை. அவர்களுக்கு நீங்கள் கோபமூட்ட முடியாது. அவர்களுக்கு நீங்கள் மன உளைச்சல் உண்டாக்க முடியாது. அவர்கள் ஒரு நிலையை எட்டி இருக்கிறார்கள். ஆனாலும் ஏதோ குறைவுபடுவதை நீங்கள் உணர்வீர்கள்: அவர்கள் சமாதானமாய் இல்லை. அவர்களில் கோபம் இல்லை; என்றாலும் அவர்களில் கருணையும் இல்லை. அவர்கள் உங்களிடம் கோபிக்காமல் இருக்கலாம். ஆனால் உங்களை மன்னிக்கவும் அவர்களால் முடியாது. இந்த வேறுபாடு நுட்பமானது. அவர்கள் கோபிப்பதில்லை என்பது சரிதான். ஆனால் அவர்களின் கோபமற்ற தன்மையிலும் மன்னிக்கும் தன்மை இருப்பதில்லை. அங்கேயே அவர்கள் நின்றுவிட்டார்கள்.

உங்களை அதாவது உங்களின் அவமதிப்பை அவர்கள் பொருட் படுத்துவதில்லைதான். ஆனால் ஒருவகையில் உறவுகளில் இருந்து அவர்கள் துண்டித்துக் கொண்டு விட்டிருக்கிறார்கள். அவர்கள் பகிர்ந்து கொள்வதில்லை. கோபம் கொள்ளாமல் இருப்பதற்காக தாம் செய்யும் முயற்சியில், எல்லா உறவுகளில் இருந்தும் அவர்கள் வெளியேறி விடுகிறார்கள். தீவுகளைப் போல் ஆகியிருக்கிறார்கள் அவர்கள். மூடப்பட்டு இருக்கிறார்கள். ஆயினும் நீங்கள் தீவான, தனிமையாக, மூடுண்டு இருக்கும்போது நீங்கள் வேரறுந்தவராக இருக்கிறீர்கள். உங்களால் மலர முடிவதில்லை, மகிழ முடிவதில்லை. உங்களால் நிறைவாகத் திகழ முடிவதில்லை. அது ஓர் எதிர்மறை சாதனையாகத்தான் இருக்கிறது. எதையோ, கைவிட்டு விட்டீர்கள், ஆனால் எதையும் கைக்கொண்டு விடவில்லை. இனி பாதை சுலபமானது என்பது உண்மையே. ஒன்றை கைவிட்டாலும்கூட மிகவும் நல்லதே. ஏனெனில் இப்போது சாத்தியப்பாடு உருவாகிவிட்டது: இனி உங்களால் ஒன்றைக் கைக்கொள்ள முடியும்.

இவர்களை பதஞ்சலி **மிருது** - மென்மையானவர்கள் என்கிறார். அடைந்துவிட்டதன் முதல் படிநிலை எதிர்மறையானதே. 'இந்நிலையில் இருக்கும் பல இந்து சந்நியாசிகள் மற்றும் கத்தோலிக்க மடாலயங்களில் நீங்கள் காணமுடிகிற பல துறவிகள், முதல் படியில் நின்று விட்டவர்களே. அவர்கள் நல்லவர்கள் தான். ஆனால் அவர்கள் மந்தமானவர்களாக இருப்பதையும் நீங்கள் காணலாம். கோபம் கொள்ளாதிருப்பது மிகவும் நல்லதுதான். ஆனால் அது போதுமானதல்ல. ஏதோ ஒன்று குறைகிறது. நேரடியாக எதுவும் நிகழ்ந்திருக்கவில்லை. அவர்கள் வெற்றுப் பாத்திரங்களாகவே இருக்கிறார்கள். அவர்கள் தம்மைத் தாமே வெறுமை செய்து விட்டார்கள். ஆனால் எதனாலோ அவர்கள் தம்மை மறுபடியும் நிரப்பிக் கொள்ளவில்லை. கீழ்மை கைவிடப்பட்டிருக்கிறது ஆனால் மேன்மை / உன்னதம் இறங்கி இருக்கவில்லை.

அடுத்து முமூக்சுவின் இரண்டாம் படிநிலையினர் - சரியான தேடுபவரின் இரண்டாம் வகையினர். இவர் தன் ஜீவனின் மூன்றில் இரு பாகங்களை முயற்சியில் ஈடுபடுத்துகிறார். ஆனால் இதுவும் முழுமை அல்ல, பாதியளவே. இப்படி நடுவழியில் நிற்பதால் இவர்களை மத்யா் - நடுவழியினர் என்கிறார் பதஞ்சலி. இவர் ஒன்றை சாதித்திருக்கிறார். முதல்நிலை மனிதரும் இவருக்குள் இருக்கிறார். ஆனால் அத்துடன் கூடுதலாகவும் ஒன்றை அடைந்திருக்கிறார் இவர்: சமாதானமாக, சாந்தமாக, அமைதியாக, அடக்கமானவராக இருக்கிறார் இவர். இந்த உலகில் எது நடந்தாலும் அது இவரைப் பாதிப்பதில்லை. ஆசையற்றவராக,

பாதிப்பற்றவராக இருக்கிறார். அவர் ஒரு சிகரம்போல்: மிகவும் அமைதி நிறைந்தவராக ஆகிறார்.

உங்களின் அருகில் அவர் வந்தால் அவரது அமைதி, உங்களைச் சூழ்ந்து கொள்வதை நீங்கள் உணர்வீர்கள். இது எதைப் போன்றது என்றால், நீங்கள் ஒரு தோட்டத்துக்குள் போனதும், இதமான காற்றும் பூக்களின் இனிய மணமும் பறவைகளின் இன்னிசையும் எல்லாப் புறமிருந்தும் உங்களைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டு உங்களைத் தழுவுவதை நீங்கள் உணர முடிவதைப் போன்றதே. முதல்நிலை மனிதரில் - மிருதுவில் - எதையும் நீங்கள் உணர மாட்டீர்கள். ஒரு வெறுமையை மட்டுமே, ஒரு பாலை வனத்தைப் போன்ற ஜீவனையே நீங்கள் உணர்வீர்கள். மேலும் முதல் வகை மனிதர் உங்களை உறிஞ்சி விடுவார். அவர் அருகில் நீங்கள் போனால் அவர் உங்களை காலிசெய்து விடுவதை நீங்கள் காண்பீர்கள். உங்களை யாரோ உறிஞ்சிவிட்டதைப் போல் உணர்வீர்கள். ஏனெனில் அவர் ஒரு பாலையாக இருக்கிறார். அவருடன் இருக்கையில் நீங்கள் பொசுக்கப் படுவதாக உணர்வீர்கள். நீங்கள் அச்சப்படுவீர்கள்.

பல சந்நியாசிகளிடமும் இதை நீங்கள் உணரலாம். அவர்களின் அருகில் நீங்கள் போனால் அவர்கள் தமக்கு தெரியாமலே உங்களை உறிஞ்சுவதை நீங்கள் உணரலாம். அவர்கள் முதல் நிலையை அடைந்து விட்டிருக்கிறார்கள் அவர்கள் வெறுமையாகி இருக்கிறார்கள். அந்த வெறுமையே ஒரு துணைபோல ஆகிறது. அதன் வழியாக தானாகவே நீங்கள் உறிஞ்சப்படுவீர்கள்.

இப்படிப்பட்ட முதல்நிலை மனிதர் எங்காவது காணப்பட்டால் அவரை நகருக்குள் நடமாட அனுமதிக்கக்கூடாது என்று திபெத்தில் ஒரு வழக்கம் உள்ளதாகக் கூறப்படுகிறது. திபெத்தில் முதல்நிலை அடைந்ததும் லாமாக்கள் மடங்களை விட்டு வெளியே வருவது தடை செய்யப் பட்டுள்ளது. ஏனெனில் இந்த மனிதர் யாருக்கு அருகில் வருவாரோ அவரை உறிஞ்சிவிடுகிறார். அப்படி உறிஞ்சுவது, அவருடைய கட்டுப்பாட்டையும் மீறியே நடந்துவிடுகிறது. அதைக் குறித்து அவரால் எதுவும் செய்ய முடிவதில்லை. அவர் ஒரு பாலையாக இருக்கிறார். அவரின் அருகில் வரும் எதுவும் உறிஞ்சப்படுகிறது, சுரண்டப்படுகிறது.

முதல்நிலை லாமாக்கள் மரங்களைத் தொட அனுமதிக்கப்படுவ தில்லை. ஏனெனில் அவர் தொட்டுவிடும் மரம் பட்டுவிடுகிறது என்று கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. இமயமலையில் கூட ஓர் இந்து சாமியார் மரங்களைத் தொட அனுமதி இல்லை, அவை இறந்துவிடும் என்பதால். அவர் ஓர் உறிஞ்சியாக இருக்கிறார். இந்த முதல் நிலை லாமா எந்த வீட்டுத்

திருமணத்திலும் கலந்து கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. ஏனெனில் அவர் ஓர் அழிவுசக்தியாக ஆகிவிடுவார். யாரையும் ஆசீர்வதிக்க அவருக்கு அனுமதிஇல்லை. ஏனெனில் அவரால் ஆசிவழங்க முடியாது. ஆசிவழங்கும் போதுகூட அவர் உறிஞ்சிக் கொண்டே இருக்கிறார். நீங்கள் அதை அறிந்து கொள்ளாமல் இருக்கலாம். ஏனெனில் இந்த முதல்நிலை லாமாக்கள், சாமியார்கள், சாதுக்கள், மடங்கள் உருவானால் அவர்கள் தமக்கே உரிய மூடுண்ட உலகில், வெளியே நடமாடும் அனுமதியின்றி, வாழமுடியும். இரண்டாம் நிலையை அவர்கள் அடையும்வரை யாருக்கும் ஆசிவழங்க அவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை.

தன் ஜீவனில் மூன்றில் இரண்டு பாகத்தை உண்மையைத் தேடும் முயற்சியில் ஈடுபடுத்தி இருக்கிற இரண்டாம் நிலை சாதகர் சமாதானமாக, அமைதியானவராக ஆகிறார். அவரது அருகில் நீங்கள் போனால் உங்களுக்குள் அவர் பொழிகிறார். அவர் பகிர்ந்துகொள்கிறார். இப்போதெல்லாம் அவர் பாலைவனமாக அல்ல, பசுமைவனமாக இருக் கிறார். அமைதி, மோனம், சாந்தம் - இப்படி பலவும் அவருள் வந்து நிறை கின்றன. நீங்களும் அதை உணர்கிறீர்கள். ஆனால் இதுவும் முடிவான நிலையல்ல. பலர் இங்கேயே மாட்டிக் கொள்கிறார்கள். அமைதியாக இருப்பதே போதுமானதல்ல. என்ன விதமான சாதனை இது? பேசாம விருப்பதே ஒரு சாதனையா? வேறும் அமைதியாவதா? இது இறப்பு போன்றது. ஆனால் கொண்டாட்டம் இல்லை, ஆனந்தம் இல்லை.

மூன்றாம் நிலை சேர்ந்த சாதகர் தன் ஜீவன் முழுவதையுமே முயற்சியில் ஈடுபடுத்துகிறார். இவர் ஆனந்தத்தை அடைந்து கொள்கிறார். ஆனந்தம் ஒரு நேரடி நிகழ்வு. அமைதி வெறும் வழியிலுள்ளதுதான். ஆனந்தம் நெருங்கி வரவர நீங்கள் அமைதி பெறுகிறீர்கள். ஆனந்தத்தின் தூரத்துத் தாக்கமே அப்படி உங்களின் அருகில் வந்து கொண்டிருக்கிறது. இது ஓர் ஆற்றின் அருகில் வருவதைப் போன்றதே. தூரத்தில் வரும் போதே காற்று சில்லென்று வீசுவதை நீங்கள் உணர ஆரம்பிக்கிறீர்கள். தாவரங்களின் தன்மை மாறியிருப்பதைக் கவனிக்கி றீர்கள். மரங்கள் அதிக பச்சையாகவும் அதிக இலை தழைகளோடும் உள்ளன. காற்று குளுகுளு வென்று உள்ளது. ஆற்றை இன்னும் அடையவில்லை நீங்கள். ஆயினும் அது அருகில் எங்கோ தான் உள்ளது. நீர் ஆதாரம் பக்கத்தில் எங்கோதான் இருக்கிறது. வாழ்வின் ஊற்று அண்டையில் எங்கோதான் உள்ளது என்னும் நிலையில் நீங்கள் அமைதி நிரம்பியவராக ஆகிறீர்கள். ஆனால் இன்னும் அதை நீங்கள் அடைய வில்லை, அடையும் வழியிலே தான் இருக்கிறீர்கள். இந்த நிலையில் உள்ள மனிதரை பதஞ்சலி மத்தியர் - நடுநிலை மனிதர் என்கிறார்.

இவரும் இலட்சியம் அல்ல. ஆனந்தத்தால் நீங்கள் ஆடிப் பாட முடியாத வரை.... ,இலட்சியத்தை அடையவில்லை. இந்த மனிதரால் ஆடமுடியாது. இந்த மனிதரால் பாட முடியாது. ஏனெனில் பாடுவது என்பது சூழலின் அமைதியைப் குலைப்பதுபோல் இவருக்குத் தோன்றும். ஆடுவது என்பது பைத்தியக் காரத்தனம் போல் தோன்றும். நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? - சிலைபோல் உட்கார்ந்திருக்க மட்டுமே இந்த மனிதரால் முடியும். அமைதியாகத்தான் இருக்கிறார். ஆனால் மலரவில்லை. பசுமையாகவே இருக்கிறார். ஆனால் இன்னும் பூத்தல் நிகழவில்லை. முக்திநிலை இன்னும் இறங்கி வரவில்லை. இதற்கு அடுத்தபடியாக மூன்றாம் நிலை மனிதர்: இவரால் ஆட முடிகிறது. பார்ப்பதற்கு பித்தரைப் போல் தெரிவார் இவர். ஏனெனில் இவரிடம் அபரிமிதமாக இருக்கிறது. அதனை அவரால் கட்டுப்படுத்த முடிவதில்லை. அதனை அவரால் அடக்கி வைக்க முடியாததால் அவர் ஆடுவார், பாடுவார், ஓடுவார், பகிர்ந்து கொள்வார். அவர்மேல் முடிவின்றி தூவப்படும் விதைகளை அவர் எல்லாவிடத்தும் எடுத்து இறைக்கிறார். இவரே மூன்றாம் நிலை மனிதர்.

**பதஞ்சலி கூறுகிறார்:**

**தீவிரமான, நேர்மையான முயற்சியாளருக்கு வெற்றி மிகமிக அருகில் உள்ளது.**

**முயற்சியின் அளவுக்குத் தகவே வெற்றி வாய்ப்புகள் அமைகின்றன.**

தீவிரமாக, நேர்மையாக முயல்பவருக்கு வெற்றி மிகமிக அருகில் உள்ளது. உங்களின் முழுமையான ஈடுபாடே தேவைப்படுகிறது. ஒன்றில் நீங்கள் முழுமையாக ஈடுபடும் போதெல்லாம் நிகழும் ஒரு தன்மையே நேர்மை என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஆனால் நேர்மை என்பதைப் பற்றி பெரும்பாலும் மக்கள் பிழையான கருத்தையே கொண்டிருக்கிறார்கள்: பிடிவாதமாக / சீரியவர்களாக (சீரியஸ்) இருப்பதுதான் நேர்மை யானவர்களாக இருப்பதாகும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். சீரிய குணத்துடன் இருப்பது நேர்மைக் குணத்துடன் இருப்பதாகாது. எது ஒன்றிலும் நீங்கள் முழுமையாக இருக்கும்போது நிகழும் தன்மையே நேர்மை ஆகும். தன் பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடும் குழந்தை, விளையாட்டில் முழுமையாக, தன்னை மறந்து, தன்னிடம் எதையும் மிச்சம்வைக்காமல், ஒன்றையும் நிறுத்தி வைத்துக்கொள்ளாமல் ஈடுபடும்போது அது நேர்மையாக இருக்கிறது. உண்மையில் அது அங்கே இல்லை. விளையாட்டு மட்டுமே நடந்து கொண்டிருக்கிறது.

எதையும் நீங்கள் பிடித்து நிறுத்திக் கொள்ளவில்லை என்றால் நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்? நீங்கள் முழுமையாக அச் செயல்பாட்டில் ஒன்றி விடுகிறீர்கள். அதன்பின் அங்கே செய்பவர் இருப்பதில்லை. அதன்பின் அங்கே எழுவாய் இருப்பதில்லை. செய்பவர் இல்லாத போதுதான் நேர்மை இருக்கிறது. நீங்கள் எப்படி சீரியராக இருக்க முடியும்? ஏனெனில் சீரிய தன்மை பிடிவாதத்தன்மை (கண்டிப்புத்தன்மை) என்பது செயல்புரி வோருக்கே உரியது. எனவேதான் மசூதிகளிலும் கோயில்களிலும் சர்ச்சுகளிலும் நீங்கள் இரண்டு விதமான மக்களைக் காணலாம்: சீரிய மக்கள், நேரிய மக்கள். சீரிய மக்களின் முகங்கள் சீறிப் போய் இருக்கும் - ஏதோ ஒரு மிகப் பெரிய காரியத்தை, புனிதமான காரியத்தை, புண்ணியமான காரியத்தை தாம் செய்து கொண்டிருப்பது போல் தம் முகங்களை அவர்கள் உம்மென்று வைத்துக் கொண்டிருக்கி றார்கள். இதுவும் அகங்காரமே. நீங்கள் ஏதோ செயற்கரிய செயலை செய்து கொண்டிருப்பது போல், நீங்கள் செயல் புரிவதன்மூலம் அகில உலகத்தையும் நீங்களே ஆதரிப்பது போல் நடந்து கொள்வது அகங்காரம்தானே.

ஆன்மிக வாதிகளை - அதாவது அவ்வாறு அழைக்கப்படுபவர்களை - பாருங்கள். உலகம் முழுவதையும் அவர்கள் தான் பாதுகாப்பது போன்ற பாவனையுடன் அவர்கள் நடந்து கொள்கிறார்கள். அவர்கள்தான் உலகத்துக்கு உப்பாக இருக்கிறார்கள். அவர்கள் மறைந்துவிட்டால் அகில உலகமும் மறைந்துவிடும். அவர்களே அதை தாங்கிக் கொண்டிருக்கி றார்கள். அவர்கள் இருப்பதால் தான் - அவர்களின் பிரார்த்தனைகளால் தான் - வாழ்க்கை இருக்கிறது. அவர்கள் எப்போதும் சீரிய முகபாவனை யுடனேயே இருப்பதை நீங்கள் காணலாம்.

கண்டிப்பு/பிடிவாத தன்மையானது அகங்காரத்துக்கு, செயல் படுபவனுக்குச் சொந்தமானது. தொழில்கூடத்திலோ அலுவலகத்திலோ, வேறு எங்கோ வேலை செய்து கொண்டிருக்கும் தந்தையைப் பாருங்கள். அவர் தன் மனைவியை, மக்களை நேசிக்காவிட்டால் அவர் முகம் கடுமையாகவே இருக்கும். ஏனெனில் அந்நிலையில் அது ஒரு கடமை. அவரே அதை செய்து வருகிறார். அதன்மூலம் அவரைச் சார்ந்த யாவரை யும் காத்து வருகிறார். ''என் மனைவிக்காக பாடுபடுகிறேன், என் குழந்தை களுக்காக பாடுபடுகிறேன்'' என்று எப்போதும் கூறுகிறார் அவர். ஆயின் இந்த மனிதர் தன் இந்த சீரிய தன்மையின் மூலம் அவருடைய குழந்தை களின் கழுத்தில் கட்டித் தொங்கும் பாறாங்கல்லாக ஆகிறார். மேலும் இப்படிப்பட்ட தந்தையை ஒருபோதும் அவர்கள் மன்னிக்க மாட்டார்கள். ஏனெனில் அவர்களை அவர் ஒருபோதும் நேசித்ததில்லை.

உங்களிடம் நேசம் பாசம் இருந்தால் ஒருபோதும் இத்தகைய சொற்களை நீங்கள் சொல்ல மாட்டீர்கள். உங்கள் குழந்தைகளை நீங்கள் நேசித்தால் ஆடிப் பாடிக் கொண்டு அலுவலகம் போவீர்கள். அவர்களை நீங்கள் நேசிக்கிறீர்கள். இதன்மூலம் அவர்களுக்கு எந்த நன்றியையும் நீங்கள் செய்துவிடவில்லை. ஒரு கடமையை நீங்கள் நிறைவேற்றிக் கொண்டிருக்கவில்லை. அது உங்கள் அன்பின் வெளிப்பாடு. உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் நன்மை செய்ய வாய்ப்புக் கிடைத்ததுபற்றி நீங்கள் மகிழவே செய்வீர்கள். உங்கள் துணைவிக்கு ஒரு நல்லது செய்ய முடிவது குறித்து நீங்கள் மகிழ்ச்சியும் பூரிப்பும் நிறைந்தவராகிறீர்கள். ஏனென்றால் காதல் என்பது அவ்வளவு தவிப்புடையது. செய்ய முடிவதற்கும் கூடுதலான நன்மைகள் செய்ய அன்பானது விரும்புகிறது. அதுதான் அன்பு. ''எந்தளவுக்கு செய்ய வேண்டுமோ அந்தளவுக்கு நான் செய்யவில்லை,'' என்றே அன்பு எப்போதும் உணர்கிறது. கடமை? கடமையோ, ''செய்ய தேவையானதற்கும் அதிகமாகவே நான் செய்து வருகிறேன்'' என்றே எப்போதும் கருதுகிறது. கடமை சீரியது. அன்பு, நேர்மை ஒருவருடன் முழுமையாக ஈடுபடுவதே, ஒருவருடன் முழுமையாக ஒன்றிவிடுவதே அன்பு. இருமை இதில் மறைகிறது. ஒருசில கணங்களுக்கேனும் இருமை அங்கு இருப்பதில்லை. இருவராக இருப்பதும் ஒருவரே. ஒரு பாலம் உருவாகிறது. அன்பு நேர்மையானது. ஒருபோதும் சீர்மையானதல்ல. மேலும், எப்போதெல்லாம் ஒன்றில் நீங்கள் உங்கள் முழு ஜீவனையும் நீங்கள் ஈடுபடுத்த முடிகிறதோ அப்பொழுது அது அன்பாக ஆகிறது. நீங்கள் தோட்டக்காரராக இருந்து நீங்கள் அன்பானவராகவும் இருந்தால் தோட்டக்கலையில் உங்கள் முழு ஜீவனையும் நீங்கள் ஈடுபடுத்துகிறீர்கள். அப்போது அங்கே நேர்மை நிகழ்கிறது.

நேர்மையை உங்களால் விளைவிக்க முடியாது. சீரிய குணத்தை உங்களால் விளைவிக்க முடியும். ஆனால் நேரிய குணம் - தானே நிகழ்வது. ஒன்றனுள் முழுமையாக ஈடுபட்டுக் கொள்வதன் உடன் நிகழ்வே நேர்மை ஆகும். பதஞ்சலி கூறுகிறார்:

**தீவிரமான, நேர்மையான முயற்சியாளருக்கு வெற்றி மிகமிக அருகில் உள்ளது.**

தீவிரம் என்றும் நேர்மை என்றும் இரண்டு விதமாக சொல்ல தேவையில்லைதான். நேர்மையே எப்போதும் தீவிரமானதுதான். இருந்தும் பதஞ்சலி ஏன் தீவிர, நேரிய என்கிறார்? அதற்கு ஒரு காரணம் இருக்கிறது. நேர்மை எப்போதும் தீவிரமானதே. ஆனால் தீவிரம் எப்போதும் நேர்மையாகவே இருக்கிறது என்று சொல்ல முடிவதில்லை. ஒன்றில் நீங்கள் தீவிரமாய் இருக்கலாம். ஆனால் அதில் நேர்மையில்லாமல் இருக்கலாம்.

எனவேதான் அவர் இந்த பண்பையும் சேர்த்து தீவிரமும் நேர்மையும் ஆன என்று சொல்லுகிறார். ஏனெனில் உங்களின் சீரிய தனத்தில் கூட நீங்கள் தீவிரம் காட்ட முடியும். உங்கள் பாதியளவான ஜீவனுடனேயே நீங்கள் தீவிரமாக இருக்க முடியும். ஒரு குறிப்பிட்ட மனோ நிலையில் உங்களுக்கு தீவிரம் ஏற்பட முடியும். உங்கள் கோப குணத்தில் நீங்கள் தீவிரமாக இருக்க முடியும். உங்கள் மோகத்தில் நீங்கள் தீவிரமாக இருக்க முடியும். கோடிக்கணக்கான விஷயங்களில் நீங்கள் தீவிரமாக இருக்க முடியும், ஆனால் நேர்மையாக இராமல் போகலாம். ஏனெனில் ஒன்றில் நீங்கள் முழுமையாக இருக்கும் போதுதான் நேர்மை நிகழ்கிறது.

காமத்தில் நீங்கள் தீவிரமாக இருக்க முடியும். ஆனால் நேர்மையாக இல்லாமல் போகலாம். ஏனெனில் காமம் கண்டிப்பாக அன்பாக இருக்க வேண்டியதில்லை. உங்களின் காம உணர்வில் நீங்கள் மிகமிக தீவிரமாக இருக்கலாம். ஆனால் காமத் தேவை ஒருமுறை நிறைவேறியதும், முற்றுப்பெற்றதும், அந்தத் தீவிரம் போய்விடுகிறது. அன்பானது அவ்வளவு தீவிரமானதாகத் தெரியாமல் இருக்கலாம். ஆனாலும் அது நேர்மையானது. மேலும் அது நேரியது என்றால் அதன் தீவிரம் தொடர்ந்தும் நீடிக்கிறது. உண்மையில், உண்மையாகவே நீங்கள் அன்பாயிருந்தால் அங்கு காலம் மறைந்து விடுகிறது. உண்மை அன்பு எப்போதும் தீவிரமாகவே இருக்கிறது. இதை தெளிவாகப் பாகுபடுத்திக் கொள்ளுங்கள்: நேர்மையற்ற தீவிரத்துடன் நீங்கள் இருந்தால், எப்போதுமே நீங்கள் தீவிரமாக இருக்க முடியாது. அவ்வப்போதுதான் உங்களுக்கு வீரம் வரும். ஆசை எழும் போது நீங்கள் தீவிரமாக இருக்கிறீர்கள். உண்மையில் அது உங்களின் தீவிரமும் அல்ல; ஆசையின் உந்தலே அது.

காமம் எழுகிறது. நீங்கள் ஒரு பசியை, பட்டினியை உணர்கிறீர்கள். முழு உடலும் முழு உயிராற்றலும் ஒரு விடுதலை கோருகிறது. நீங்கள் தீவிரமானவராக ஆகிறீர்கள். ஆனால் இந்தத் தீவிரம் உங்களுடையது அல்ல. இது உங்களின் உள்ளார்ந்த ஜீவனில் இருந்து வருவதல்ல. உங்களைப் போர்த்தி உள்ள உடல் எனும் கூட்டினால் ஏற்படும் உந்தல்தான் இது. உங்கள் ஜீவனின் மீது உடல் சுமத்தும் பலவந்தம்தான் இது. இது மையத்திலிருந்து வரவில்லை. விளிம்பிலிருந்து திணிக்கப்படுகிறது. நீங்கள் தீவிரம் செய்வீர்கள். காமம் நிறைவேற்றப்படும். இப்போது தீவிரம் போய்விடும். இனி பெண்களை நீங்கள் கண்டு கொள்ள மாட்டீர்கள்.

தாம் ஏமாற்றப்பட்டு விட்டதாக, மோசம் போய் விட்டதாக உணர்வதாக பல பெண்கள் என்னிடம் கூறி இருக்கிறார்கள். தாம் பயன் படுத்திக் கொள்ளப்படுவதாகவே அவர்கள் உணர்கிறார்கள். ஏனெனில் அவர்களின் கணவர்கள் அவர்களுடன் காதல் உறவு கொள்ளும்போது

எல்லாம், தொடக்கத்தில் அவர்கள் மிகுந்த காதலாக, மிகுந்த தீவிரமாக உணர்கிறார்கள். மிகுந்த மகிழ்ச்சியாக உணர்கிறார்கள். ஆனால் காம வேகம் தீர்ந்த அக்கணமே அவர்கள் திரும்பிப் படுத்துத் தூங்கத் தொடங்கு கிறார்கள். அவர்கள் - பெண்ணுக்கு என்ன நடக்கிறது என்று கொஞ்சம் கூட அக்கறை காட்டுவதில்லை. உடலுறவை முடித்த பின் உபசாரத்துக்காகக் கூட ஒரு சொல் நீங்கள் சொல்வதில்லை. நீங்கள் நன்றி பாராட்டுவ தில்லை. தான் பயன்படுத்தப்பட்டு விட்டதாகவே உணர்கிறாள் பெண்.

உங்கள் தீவிரம் உடலியலானது; உடலுடையது. அது உங்களிட மிருந்து வருவதல்ல. காமத்தின் தீவிரத்தில் ஒரு முன் சரசம் ஃபோர்ப்ளே இருக்கிறது, ஆனால் பின்சரசம் (ஆஃப்ட்டர்ப்ளே) இருப்பதில்லை. அப்படி ஒரு சொல்லே புழக்கத்தில் இல்லை. காமம் பற்றி எழுதப்பட்டுள்ள ஆயிரமா யிரம் புத்தகங்களை நான் படித்திருக்கிறேன். அவற்றின் எதிலும் 'ஆஃப்பட்டர்ப்ளே' என்ற சொல் வரவில்லை. அப்படியானால் இது என்ன காதல்? உடல் தேவை தீர்கிறது. நிறைவு பெறுகிறது. பெண் பயன்படுத்தப் படுகிறாள். அதன்பின் அவளை நீங்கள் வீசி எறிந்தவிட முடிகிறது. ஒரு பொருளைப் பயன்படுத்திவிட்டு தூக்கியெறிவது போல. ஒரு பிளாஸ்டிக் தம்ளரைப் பயன்படுத்திவிட்டு கசக்கி எறிவது போல. தீர்ந்தது! மறுபடியும் ஆசை எழும்போதே மறுபடியும் பெண்ணை ஏறெடுத்துப் பார்ப்பீர்கள். அந்தப் பெண்மீது மிகவும் தீவிரம் காட்டுவீர்கள்.

பதஞ்சலி கூறும் தீவிரம் இந்த விதமான தீவிரம் அல்ல. எடுத்துக்காட்டி விளக்கவே நான் காமத் தீவிரத்தை எடுத்துக் கொண்டேன். ஏனென்றால் அதுமட்டுமே உங்களிடம் மிஞ்சி இருக்கும் ஒரே தீவிரம். வேறெந்த எடுத்துக் காட்டுக்கும் சாத்தியமில்லை. உங்கள் வாழ்வில் நீங்கள் மிகவும் ஆர்வம் குறைந்தவர்களாக ஆகி இருக்கிறீர்கள். மிகவும் தாழ்ந்த அளவு ஆற்றல் மட்டத்திலேயே உயிர்பிழைத்து வருகிறீர்கள். எனவேதான் அதில் எவ்விதத் தீவிரமும் இல்லை. ஏனோதானோ என்றே நீங்கள் வேலைக்குப் போகிறீர்கள். சாலையின் ஓரத்தில் நின்று கொண்டு, தத்தம் பணியிடங்களுக்கு மக்கள் விரைகையில் அவர்களின் முகங்களைப் பாருங்கள் - எல்லாம் தூங்கி வழியும்.

எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள்? ஏன் போகிறீர்கள்? போவதற்கு வேறு போக்கிடம் இல்லாததால்தான் அவர்கள் பணியிடங் களுக்குப் போகிறார்கள் என்றே தோன்றுகிறது. அவர்களால் போகாதிருக்க முடியவில்லை. ஏனெனில் வீட்டில் இருந்து அவர்கள் என்ன செய்யப் போகிறார்கள்? எனவேதான் சலிப்போடு, தன்போக்காக, யந்திரம் போல் வேளைக்கு கிளம்புகிறார்கள். எல்லாரும் போவதால் தாமும் போகிறார்கள். புறப்படும் நேரமாகி விட்டதால் போகிறார்கள். மேலும் நீங்கள் போக

விரும்பாவிட்டாலும் வேறு என்னதான் செய்வீர்கள்? விடுமுறை நாள்கள் பெருத்த தலைவலியாக ஆகி உள்ளன. அவற்றில் எவ்விதமான விறுவிறுப்பும் இருப்பதில்லை. மாலையில் வீட்டுக்கு திரும்பி வரும் மனிதர்களைப் பாருங்கள்: தாம் ஏன் திரும்பி வருகிறோம் என்பதே தெரியாமல் தான் வருகிறார்கள். ஆனால் திரும்பிவர வேறு இடம் இல்லை. எவ்விதமாகவோ வாழ்க்கை இழுத்துக் கொண்டு போகிறது. சுரத்தின்றி இருக்கிறது. ஆற்றல் அழிந்த நிலவரமாய் இருக்கிறது.

எனவேதான் நான் காமம் என்னும் எடுத்துக் காட்டை எடுத்துக் கொண்டேன். ஏனெனில் வேறெதிலும் உங்களுக்கு தீவிரம் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நீங்கள் பாடுவதில்லை. ஆடுவதில்லை. எதையுமே தீவிரமாக நீங்கள் நாடுவதில்லை. நீங்கள் சிரிப்பதில்லை, அழுவதில்லை. எல்லாவற்றிலுமே தீவிரம் போய்விட்டிருக்கிறது. காமத்தில் மட்டும் ஒரு சிறிது தீவிரம் எஞ்சியுள்ளது. அதுவும் உங்களால் அல்ல! இயற்கையால்!

'தீவிர, நேரிய'' என்கிறார் பதஞ்சலி. உண்மையில் மதமும் காமத்தைப் போன்றதே. காமத்தைக் காட்டிலும் ஆழமானது அது. காமத்தைக் காட்டிலும் மேன்மையானது அது. காமத்தைக் காட்டிலும் புனிதமானது அது. ஆனாலும் அது காமத்தைப் போன்றதே. தனிமனிதர் முழுமையுடன் கூடுவதாகும் அது. அது ஓர் ஆழமான கலவி இன்பம். முழுமைக்குள் நீங்கள் கலக்கிறீர்கள். முழுமையாகவே மாறுகிறீர்கள். பிரார்த்தனை என்பதும் காதலைப் போன்றதே. காதலைப் போன்றே ஆழமான, தீவிரமான, நேரியதான கூடல் யோகத்திலும் நிகழ்கிறது - இருமை மறைகிறது. உண்மையில் யோகம் என்னும் சொல்லுக்கே, கூடல், ஒன்றுகலத்தல் , இரண்டும் சந்தித்தல் என்றே பொருள். இதில் வரம்புகள் மயங்கி ஒருமையே நிலவுகிறது. வேறு எவ்விதமாகவும் அது இருக்க முடியாது. நீங்கள் நேர்மையும் தீவிரமும் இல்லாமல் இருந்தால் உங்கள் முழு ஜீவனையும் ஈடுபடுத்துங்கள். அப்போது மட்டுமே அறுதி விடுதலை (முக்தி) சாத்தியம். உங்களை நீங்கள் முழுவதுமாகப் பணயம் வைக்க வேண்டி உள்ளது. அதற்குக் குறைவான எவ்வளவும் பயன்படாது.

**முயற்சியின் அளவுக்கு தகவே வெற்றி வாய்ப்புகள் அமைகின்றன.**

- இது ஒரு பாதை: சித்தத்தின் (*will*) பாதை. பதஞ்சலியின் பாதை அடிப்படையில் சித்தத்தின் பாதையே. ஆனால் இன்னொரு பாதையும் இருக்கிறது என்பதையும் அவர் அறிந்துள்ளார். அதையும் அவர் தெரிந்தே உள்ளார். எனவே அதற்கு ஓர் அடிக்குறிப்பு தருகிறார்.

அந்த அடிக்குறிப்பு:

**ஈஸ்வரப்ரணிதானாத்வா: கடவுளிடம் சரணடைவோருக்கும் வெற்றி கைகூடுகிறது.**

ஓர் அடிக்குறிப்பு மட்டுமே. மற்றொரு பாதையும் இருக்கிறது என்று சுட்டிக் காட்ட மட்டுமே. பதஞ்சலி காட்டும் பாதை சித்தத்தின் பாதை - தீவிர, நேரிய, முழுமையான முயற்சியின் பாதை. உங்களின் முழு ஜீவனையும் அதில் நீங்கள் ஈடுபடுத்தியாக வேண்டும். ஆனால் மற்ற பாதையையும் பதஞ்சலி உணர்ந்தே இருந்தார். ஞானிகள் அனைவரும் இதனை உணர்ந்தே இருக்கிறார்கள். மேலும் பதஞ்சலி மிகவும் கரிசனம் உடையவர். மிகவும் அறிவியல் ரீதியான மனம் உடையவர். ஒரே ஒரு குறிப்பைக் கூட தவறவிட மாட்டார். ஆனாலும் அது அவர் வழி அல்ல. எனவேதான் அப்படியும் ஒரு பாதை இருக்கிறது என்று பதிவு செய்வதற்காக, ஓர் அடிக்குறிப்பாக மட்டும் தெரிவிக்கிறார்:

**ஈஸ்வரப்ரணி தானாத்வா: கடவுளிடம் சரணடைவோருக்கும் வெற்றி கைகூடுகிறது.**

முயற்சியோ சரணாகதியோ இரண்டு பாதைக்கும் அடிப்படை ஒன்றுதான் - அதுதான் உங்களின் முழுமையும் தேவை என்பது. பாதைகள் வேறுபடலாம். ஆனால் அதற்காக அவை முற்றிலுமாக வேறுபட்டுவிட முடியாது. அவற்றின் வடிவம், தோற்றம், திசை வேறுபடலாம். ஆனால் அவற்றின் உட்பொருள், முக்கியத்துவம் ஒரு விதமாகவே இருந்தாக வேண்டும். ஏனெனில் இரண்டுமே இறைவனிடமே இட்டுச் செல்வன. முயற்சி எனில் அது உங்களின் முழுமையான முயற்சியாக வேண்டும். சரணாகதி எனிலோ அதுவும் உங்களின் முழுமையான சரணாகதியாக வேண்டும். எனவே என்னைப் பொறுத்தவரை ஒரே ஒரு வழிதான் உள்ளது. அதுதான். முழுமையாக ஈடுபடுதல் என்பது.

அதை முயற்சியின் - யோகத்தி ன்- மூலம் கொண்டு வருவீர்களாயின் அது உங்களைப் பொறுத்ததே. அல்லது அதை அர்ப்பணித்தார் - சரணாகதியின் / வாயிலாகக் கொண்டு வருவதும் உங்களைப் பொறுத்ததே. ஆனால் எவ்வழியிலாயினும் நீங்கள் முழுமையாக ஈடுபடுதலே முக்கியம் என்பதை மட்டும் எப்போதும் நினைவில் இருத்துங்கள். உங்களை நீங்கள் முழுமையாக அர்ப்பணிக்க வேண்டி இருக்கும். இது ஒரு சூதாட்டம்தான். அறியப்படாத ஒன்றுடன் நடத்தும் சூதாட்டம். மேலும் எப்போது அது நிகழும் என்பதை யாராலும் சொல்ல முடியாது; யாராலும் முன்னறிந்து கூற முடியாது. யாரும் உங்களுக்கு உறுதிதர முடியாது. உங்கள் ஆட்டத்தில் நீங்கள் வெல்லலாம், வெல்லாமல் போகலாம். வெல்லாமல் போவதற்கான

சாத்தியம் எப்போதும் அதில் உள்ளது. ஏனெனில் அது மிகவும் சிக்கலான ஒரு போக்கு. பார்வைக்கு தோன்றும் அளவுக்கு எளிதானது அல்ல அது. ஆனால் நீங்கள் பணயம் வைத்துக் கொண்டே போய்க் கொண்டிருந்தால் என்றேனும் ஒருநாள் அது நிகழ்ந்தே ஆக வேண்டும்.

ஒரு தடவை நீங்கள் தவறிவிட்டால் அதற்காகச் சோர்ந்து போகாதீர்கள். ஏனெனில் ஒரு புத்தர்கூட பல தடவை தவற நேர்கிறது. நீங்கள் வீழ்ந்துவிட்டால் அப்படியே எழுந்துநின்று மறுபடியும் துணியுங்கள். சிலநேரங்களில் உங்களுக்கே தெரியாத ஏதோ ஒரு முறையில் மொத்த இயற்கையும் உங்களுக்கு உதவ ஒன்று திரளுகிறது. சில நேரங்களில் உங்களுக்கே தெரியாத ஏதோ ஒரு முறையில் மிகச் சரியான நேரத்தில் - கதவு திறந்திருக்கும் போதே - இலக்கை நீங்கள் எய்துகிறீர்கள். ஆனால் அதற்கு பல தடவை நீங்கள் எய்ய வேண்டி இருக்கிறது. உங்கள் உணர்வென்னும் அம்பை ஓயாமல் நீங்கள் எய்து கொண்டே போகிறீர்கள். விளைவைப் பற்றி அலட்டிக் கொள்ளக்கூடாது. காரிருளாக இருக்கிறது. இலக்கு தெளிவாக, திட்டமாக இல்லை. அதுவும் இடம் மாறிக் கொண்டே போகிறது. ஆக இருளில் உங்கள் அம்பை நீங்கள் எறிந்து கொண்டே போகிறீர்கள். பல தடவை நீங்கள் தவற விடுகிறீர்கள். அதற்காக நீங்கள் தளரக் கூடாது என்பதற்காகவே இதை நான் கூறுகிறேன். ஒவ்வொருவரும் பல சந்தர்ப்பங்களில் தவற விடவே செய்கிறார்கள். இதன் தன்மையே இத்தகையதுதான். ஆனாலும் நீங்கள் தளராமல் மேலும் மேலும் மேலும் முயன்று கொண்டே இருந்தால் அது நிகழவே செய்யும். எப்போதுமே இப்படித்தான் நிகழ்ந்துள்ளது. எனவேதான் அளவுகடந்த பொறுமை அவசியமாகிறது.

கடவுளிடம் சரணடைதல் என்றால் என்ன? எவ்வாறு நீங்கள் சரணடைய முடியும்? சரணாகதி எவ்விதம் சாத்தியம் ஆகும்? அதுவும் கூட நீங்கள் பல முயற்சிகள் எடுத்தால்தான், பல தடவை, இடறி விழுந் தால்தான் சாத்தியமாகிறது. நீங்கள் பல முயற்சிகள் மேற்கொள்கிறீர்கள். உங்களையே நீங்கள் சார்ந்திருக்கிறீர்கள். முயற்சி என்பது உங்களையே சார்ந்துள்ளது. அது மனோதிடத்தின் வழி, சித்தத்தின் பாதை. உங்களையே நீங்கள் சார்ந்து நிற்கிறீர்கள். மறுபடியும் மறுபடியும் மறுபடியும் நீங்கள் வீழ்கிறீர்கள். மறுபடியும் எழுந்து நடக்கத் தொடங்குகிறீர்கள். பின் ஒரு கட்டம் வருகிறது. மீண்டும் மீண்டும் மீண்டும் தோற்றுப் போய்விட்ட நிலையில், உங்களின் முயற்சியே தோல்விக்குக் காரணம் என்பதையும், ஏனெனில் உங்களின் முயற்சியே உங்களின் தன்முனைப்பாக மாறி இருக்கிறது என்பதையும் நீங்கள் காணத் தொடங்குகிறீர்கள்.

சித்தத்தின் பாதையில் ஏற்படும் சிக்கலே இதுதான். ஏனெனில் சித்தத்தின் பாதையில் முன்னேறும் ஒருவர் - முயற்சிகள், முறைகள், உத்திகள் இன்ன பலவற்றில் ஈடுபட்டு வரும் ஒருவர் - அதன் மூலமாக ''தான்'' எனும் தன்முனைப்பை வளர்த்துக் கொள்ளவே செய்கிறார். ''நான் உயர்ந்தவன்'', ''தனிச் சிறப்பானவன்'', ''அசாதாரணமானவன்''; விதவிதமான விரதங்கள், தவங்கள், சாதனைகளைக் கடைப்பிடித்தவன்'' என்கிற எண்ணங்களை வளர்த்துக் கொள்கிறார்.

சித்தத்தின் பாதையில் செல்லும் ஒருவர் தன்முனைப்பைக் குறித்து மிகமிக விழிப்பாக இருக்க வேண்டும். ஏனெனில் இப்பாதையில் தன்முனைப்பு தலையெடுத்தே தீரும். அகங்காரத்தை உங்களால் கவனிக்க முடிந்தால், அகங்காரத்தை நீங்கள் வளர்த்துக் கொள்ளவில்லை என்றால் சரணாகதிக்கு அவசியமில்லை. ஏனெனில் அகங்காரம் இல்லை என்றால் சரணடைய ஒன்றுமில்லை. இதை மிகமிக ஆழமாகப் புரிந்து கொள்ள வேண்டும். பதஞ்சலியை நீங்கள் புரிந்து கொள்ளும்போது - புரிந்து கொள்ள முயலும்போது கவனத்தில் கொள்ள வேண்டிய மிகவும் அடிப்படையான செய்தி இது.

பல பிறவிகளாக தொடர்ச்சியாக நீங்கள் முயற்சி மேற்கொள்ளும் போது அகங்காரம் தலைதூக்கவே செய்யும். நீங்கள்தான் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். நீங்கள் செயல்புரிய வேண்டும். எல்லா முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டும். ஆனால் தன் முனைப்பை மட்டும் வளரவிடக் கூடாது. அப்போது சரணடையத் தேவை இராது. சரணடையாமலேயே இலக்கை எய்திட முடியும். நோய் இல்லாவிட்டால் மருந்து தேவைப்படாது.

அகங்காரம் எழுந்தால் பின் சரணடையவும் தேவை எழுகிறது. எனவேதான் பதஞ்சலி கூறுகிறார் - தீவிர, நேரிய, முழுமுயற்சி பற்றிப் பேசிய பிறகு திடீரென அவர் கூறுகிறார்:

**ஈஸ்வரப்ரணிதானாத்வா: கடவுளிடம் சரணடைவோருக்கும் வெற்றி கைகூடுகிறது.**

தொடர்ச்சியாக நீங்கள் தோற்றே வருவதாக நீங்கள் உணர்ந்தால், பின் அதற்கு காரணம் கடவுள் அல்ல என்பதை கவனத்தில் கொள்ளுங்கள். உங்கள் தன்முனைப்பின் காரணமாகவே தோல்வி ஏற்படுகிறது. அம்பு எங்கிருந்து எய்யப்படுகிறதோ அந்த மூலத்தானமாகிய உங்கள் ஜீவனில் என்னவோ நடந்து கொண்டிருக்கிறது. ஒரு திரிபு ஏற்பட்டுள்ளது. அகங்காரம் அங்கே சேர்ந்துள்ளது. அந்நிலையில் ஒரே ஒரு வழிதான் உள்ளது: அதைச் சமர்ப்பித்து விடுவதுதான் வழி! அதனுடன் கூட இருந்து

பல வழிகளில் முயன்றும் நீங்கள் முழுத் தோல்வி அடைந்துவிட்டீர்கள். பலவற்றையும் நீங்கள் பண்ணிப் பார்த்தீர்கள். பலதையும் முயன்றீர்கள். ஆனால் திரும்பத் திரும்பத் தோற்றுப் போய் நிராசையே முடிவாகும்போது, இனி என்ன செய்வது என்றே உங்களுக்கு புலப்படாதபோது, ''கடவுளிடம் சரணடையுங்கள்,'' என்கிறார் பதஞ்சலி.

இந்த விதத்தில் பதஞ்சலி மிகவும் அபூர்வமானவர். அவருக்கு கடவுள் நம்பிக்கை கிடையாது. அவர் ஓர் ஆத்திகர் அல்லர். கடவுளும் அவருக்கு ஒரு செய்முறை உத்தியே. எந்தக் கடவுள்மீதும், கடவுள் என்று ஒருவர் இருக்கிறார் என்ற கருத்தின்மீதும் பதஞ்சலிக்கு நம்பிக்கை இல்லை. கடவுள் என்பது ஓர் உத்தி, அவ்வளவுதான் என்கிறார் அவர். திரும்பத் திரும்ப தோற்றுப் போனவருக்கும் கடைசியாக இந்த உத்தி உதவலாம். இதிலும் நீங்கள் தோற்றுப் போனால் பின் உங்களுக்கு வழியே இல்லை. கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பது கேள்வியே அல்ல என்கிறார் பதஞ்சலி. அது ஒரு பிரச்சினையே அல்ல. கடவுள் ஒரு கற்பிதம் என்பதே விஷயம். கடவுள் என்று ஒன்று இல்லாவிட்டால் சரணடைவது கடினம். ''யாரிடம் சரணடைவது?'' என்று நீங்கள் கேட்பீர்கள்.

எனவே சரணடைய உதவுவதற்காகவே கடவுள் என்ற கற்பனை இருக்கிறது. நீங்கள் சரணடைந்த நிலையில், கடவுள் என்று ஏதும் இல்லை என்பதை நீங்களே அறிவீர்கள். ஆனால் அது நீங்கள் சரணடைந்த நிலையில்தான்; நீங்கள் உணர்ந்துவிட்ட நிலையில்தான். பதஞ்சலியைப் பொறுத்தவரை கடவுள் என்பதும்கூட உங்களுக்கு உதவுவதற்கான ஒரு சாதனமே. மற்றபடி அது ஒரு பொய்யே. எனவேதான் பதஞ்சலி படுசூழ்ச்சியான ஒரு குரு என்று முன்பு சொன்னேன். கடவுள் என்பது ஓர் உதவிதான். சரணாகதியே அடிப்படையனாது, கடவுள் அல்ல. இந்த வேறுபாட்டை நீங்கள் குறித்துக் கொள்ள வேண்டும். ஏனெனில், ''கடவுளே அடிப்படையானது, ஏனெனில் கடவுள் இருப்பதால்தானே அவரை சரண் புகுகிறோம்?'' என்று மக்கள் நினைத்துக் கொள்கிறார்கள்.

ஆனால் ''சரணடைய ஒருவர் தேவை என்பதால் தான் கடவுளைக் கற்பித்துக் கொள்கிறோம்'' என்கிறார் பதஞ்சலி. கடவுள் என்பது கற்பித்துக் கொள்ளப்பட்ட ஒரு கருத்து, நீங்கள் சரணடைந்த நிலையில் நீங்களே நகைப்பீர்கள். ஏனெனில் கடவுள் என்று யாரும் இல்லை! ஆனால் இன்னுமொரு செய்தி: கடவுள் என்று ஒருவர் இல்லை என்றாலும் கடவுள்கள் இருக்கிறார்கள். பெருந்திரளான கடவுள்கள் இருக்கிறார்கள். எப்படி என்றால் நீங்கள் சரணடைந்ததுமே நீங்கள் ஒரு கடவுளாகிறீர்கள். எனவே பதஞ்சலியின் கடவுளை கிறிஸ்தவ, யூத கடவுள்களுடன் போட்டுக் குழப்பிக் கொள்ள வேண்டாம். ஒவ்வோர் உயிரியின் உள்ளுறை

ஆற்றலையே கடவுள் என்கிறார் பதஞ்சலி. மனிதர் என்பவர் / ஒவ்வொரு மனிதரும் கடவுளின் விதை போன்றவர் - அந்த விதை மலர்ந்து கனிந்ததும் அது ஒரு கடவுளாகி விடுகிறது. எனவே ஒவ்வொரு மனிதரும், ஒவ்வோர் உயிரும் முடிவில் ஒரு தெய்வமாக ஆகலாம்.

அறுதி உயர்நிலை என்பதே, அறுதி மலர்ச்சி என்பதே கடவுள் என்பதன் பொருள். கடவுள் இல்லை. ஆனால் கடவுள்கள் இருக்கிறார்கள். கணக்கில்லாத கடவுள்கள் . இது முற்றிலும் புதுமையான ஒரு கருத்தாக்கம். முகமதியர்களைக் கேட்டால் ஒன்றே கடவுள் என்பார்கள். கிறிஸ்தவர் களைக் கேட்டால் அவர்களும் கடவுள் ஒருவரே என்கிறார்கள். ஆனால் பதஞ்சலியோ அதிக அறிவியல் தன்மை உள்ளவர். கடவுள் என்பது ஒரு சாத்தியப்பாடுதான் என்கிறார். அவர் ஒவ்வொருவரும் அதனை தம் உள்ளத்தில் பெற்றிருக்கிறார்கள். கடவுளாக ஆவதற்கான ஒரு விதையாகவே - ஒரு சாத்தியப்பாடாகவே ஒவ்வொருவரும் இருக்கிறார் கள். அதற்கப்பால் ஏதும் இல்லாத உச்ச நிலையை நீங்கள் அடைந்ததும் நீங்கள் ஒரு கடவுளாக ஆகி விடுகிறீர்கள். உங்களுக்கு முன்னும் பலர் அடைந்துள்ளார்கள், உங்களுக்கு பின்னும் பலர் வந்து சேர்வார்கள்.

ஒவ்வொருவரும் கடைசியாக ஒரு கடவுளாகவே ஆகிறார்கள். ஏனென்றால் சாராம்சத்தில் ஒவ்வொருவரும் ஒரு கடவுளாகவே இருக் கிறார்கள். ஆக கணக்கற்ற கடவுள்கள். ஆனால் கிறிஸ்தவர்களால் இதைப் புரிந்துகொள்ள முடிவதில்லை: ராமனையும் நீங்கள் கடவுள் என்கிறீர்கள். கிருஷ்ணனையும் கடவுள் என்கிறீர்கள். புத்தரையும் கடவுள் என்கிறீர்கள். மகாவீரரையும் கடவுள் என்கிறீர்கள். (ரஜ்னீஷையும் நீங்கள் கடவுள் என்கிறீர்கள்).

இதைப் புரிந்து கொள்வது ஒரு கிறிஸ்தவருக்கு அசாத்தியமாக இருக்கிறது. நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? அவர்களைப் பொறுத்தவரை இவ்வுலகைப் படைத்த ஆண்டவர் ஒருவரே இருக்கிறார். பதஞ்சலியைப் பொறுத்தவரை இவ்வுலகை யாரும் படைக்கவில்லை. ஆனால் கோடிக்கணக்கான கடவுளர்கள் இருக்கிறார்கள். ஒவ்வொரு வரும் தான் ஒரு கடவுளாகும் பாதையிலேயே இருக்கிறார்கள். உங்கள் கர்ப்பத்துக்குள் ஒரு கடவுளை நீங்கள் சுமந்து கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் இதை தெரிந்தோ - தெரியாமலோ இருக்கலாம். பல தடவை நீங்கள் தவறலாம். ஆனால் கடைசி வரைக்குமே எப்படி நீங்கள் தவறிவிட முடியும்? கடவுளின் விதையை - கடவுள் ஆவதற்கான விதையை - உங்களுக்குள் நீங்கள் தாங்கி இருப்பதால் ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் அந்த விதை பூத்துக் குலுங்கவே போகிறது. இறுதி வரைக்குமே அதை நீங்கள் தவற விட்டு விட முடியாது. முடியவே முடியாது!

இது முற்றிலும் மாறுபட்ட ஒரு கருத்து. கிறிஸ்தவ கடவுள் மிகப் பெரும் சர்வாதிகாரியாக தோன்றுகிறார். அகில அண்டத்தையும் அவர் ஆட்டிப் படைக்கிறார். பதஞ்சலியின் கடவுள் அதிக ஜனநாயக நீதி யானவர். இவர் யதேச்சதிகாரி அல்லர். சர்வாதிகாரி அல்லர். தன் ஒரே பேறான மகனாகிய கிறிஸ்து வலப்புறத்திலும் புனிதர்கள் புடை சூழவும் அரியணைப் பீடத்தின் சிகரத்தில் வீற்றிருக்கும் சர்வாதிகாரி அல்லர் அவர். இக்கருத்தே அபத்தமானது. சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கும் சக்கரவர்த்தியின் சாயலிலேயே இந்த மொத்த கருத்தாக்கமும் உருவாக்கப்பட்டுள்ளது. பதஞ்சலியோ முற்றிலும் ஜனநாயகமானவர். கடவுள் தன்மை என்பது ஒவ்வொருவரின் சுய தன்மையே என்கிறார் அவர். ஏற்கனவே நீங்கள் அதைப் பெற்றிருக்கிறீர்கள். அதை அதன் முழுமைக்கு கொண்டு போவது உங்களையே பொறுத்தது. நீங்கள் அதை விரும்பவில்லை என்றால் அதுவும் உங்களையே பொறுத்தது.

உலகத்தின் உச்சியில் யதேச்சதிகாரியாக யாரும் உட்கார்ந்து கொண்டிருக்கவில்லை. உங்களை படைக்கவோ ஆட்டிப் படைக்கவோ யாரும் அங்கு இல்லை. சுதந்தரம் என்பது முற்றாக முழுமையானது. சுதந்தரம் இருப்பதால்தான் நீங்கள் பாவம் செய்ய முடிகிறது. சுதந்தரம் இருப்பதால்தான் சுதந்தரத்திடம் இருந்தே நீங்கள் விலகிப் போக முடி கிறது. சுதந்தரம் இருப்பதால் தான் உங்களால் துன்புற முடிகிறது. இதை நீங்கள் புரிந்து கொண்டால் பின் நீங்கள் துன்புறத் தேவை இல்லை. நீங்கள் திரும்பி வர முடிவதும் சுதந்தரம் இருப்பதாலேயே. வேறு யாரும் உங்களைத் திருப்பிக் கொண்டு வருவதில்லை. தீர்ப்புச் சொல்லும் நாள் என்று எதுவும் வரப் போவதில்லை. உங்கள் சொந்த இருத்தலைத் தவிர தீர்ப்புச்சொல்ல இங்கே யாரும் இல்லவும் இல்லை. வினைபுரிபவரும் நீங்களே, தீர்ப்புச் சொல்பவரும் நீங்களே. குற்றவாளியும் நீங்களே, சட்டமும் நீங்களே. எல்லாமே நீங்கள்! நீங்கள் ஒரு குட்டிப் பிரபஞ்சம்.

> **கடவுளே பிரதானமானவர். இறை உணர்வின் தனித்துவ அம்சம் அவர். பிறவி, கருமம், கருமபலன் ஆகியவற்றின் அலைக்கழிப்புகளால் அவர் பாதிக்கப்படுவதில்லை.**

கடவுள் என்பது ஓர் உணர்வு நிலை. அது ஓர் ஆள் (பெர்சன்) அல்ல என்பது உண்மையே. ஆனால் அது ஒரு தனித்தன்மை (இன்டின ஜுவல்). எனவே ஆள்தன்மைக்கும் (பெர்சனாலிட்டி) தனித்தன்மைக்கும் (இன்டிஜுவாலிட்டி) இடையிலான வேறுபாட்டை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டி உள்ளது. ஆள்தன்மை என்பது வெளிப்புறத்தில் உள்ளது. மற்றவர்களுக்கு எப்படி நீங்கள் தென்படுகிறீர்களோ அதுவே உங்களின்

ஆள்தன்மை ''இனிமையான ஆள், அழகான ஆள், அசிங்கமான ஆள்'' என்கிறீர்கள் நீங்கள். இப்படியே பிறருக்கும் நீங்கள் தோன்றுகிறீர்கள். உங்கள் ஆள் தன்மை என்பது உங்களைப் பற்றி மற்றவர்கள் கொள்ளும் தீர்மானம், அபிப்பிராயம். இந்தப் பூமியில் நீங்கள் மட்டுமே இருந்தால் உங்களுக்கு ஆள் தன்மை என்று ஏதாவது இருக்குமா? இருக்காது. ஏனெனில் நீங்கள் அழகன் என்றோ முட்டாள் என்றோ பெரிய தலைவர் என்றோ அப்போது யார் சொல்வார்கள்? உங்களைப் பற்றி எதைச் சொல்லவும் அப்போது யாருமிருக்க மாட்டார்கள். அபிப்பிராயம் என்பது அங்கே இராது. உங்களுக்கும் ஆளுமை எதுவும் இராது.

ஆளுமை (பெர்சனாலிட்டி) என்ற சொல் பெர்சனா என்ற கிரேக்க சொல்லில் இருந்து வருகிறது. கிரேக்க நாடகத்தில் நடிகர்கள் முகமூடிகள் அணிய வேண்டி இருந்தது. அந்த முகமூடிகள் பெர்சனா எனப்பட்டன. அந்தச் சொல்லில் இருந்தே பெர்சனாலிட்டி (ஆளுமை) என்ற சொல் வருகிறது. உங்கள் மனைவியை பார்க்கும்போது நீங்கள் அணிந்து கொள்ளும் புன்னகை முகம் தான் ஆளுமை (பெர்சனா). அப்போது உங்களுக்குச் சிரிக்கத் தோன்றுவதில்லை. ஆனாலும் சிரித்து வைக்க வேண்டி உள்ளது. ஒரு விருந்தினர் வருகிறார். அவரை நீங்கள் வரவேற்கிறீர்கள். ஆனால் அவர் உங்களிடத்துக்கு வருவதை உள்ளுக்குள் நீங்கள் விரும்பவே இல்லை. உள்ளுக்குள் உங்களுக்கு எரிச்சல் எரிச்சலாக இருக்கிறது. ''இப்போது இந்த ஆளை என்ன செய்யலாம்.'' என்று . ஆனால் நீங்கள் புன்னகை செய்தபடி அவரை வரவேற்கிறீர்கள். ''மிகவும் மகிழ்ச்சி'', என்கிறீர்கள்.

நீங்கள் காட்டும் பாவனையே, முகமே, முகமூடியே ஆளுமை. ஆனால் உங்கள் குளியல் அறையில் வேறு யாரும் இல்லாதபோது உங்களுக்கு எவ்வித ஆளுமையும் இருப்பதில்லை, கண்ணாடியில் நீங்கள் பார்க்கும் வரை. கண்ணாடியில் பார்த்ததும் உடனடியாக ஆளுமை என்பது வந்து விடுகிறது. ஏனெனில் அபிப்பிராயம் என்று மற்றவர் செய்யும் வேலையை இப்போது நீங்களே செய்யத் தொடங்கி விடுகிறீர்கள். கண்ணாடியில் உங்கள் முகத்தைப் பார்த்து, ''ஆகா!'' என்கிறீர்கள். இப்போது நீங்கள் பிளவுபட்டு விடுகிறீர்கள். இப்போது நீங்கள் இரண்டாகிறீர்கள். உங்களைப் பற்றி நீங்களே அபிப்பிராயம் கூறிக் கொண்டு இருக்கிறீர்கள். ஆனால் குளியலறையில் வேறு யாரும் இல்லாத போது நீங்கள் முற்றிலும் பயமற்றவராக இருக்கும்போதும் யாரும் உங்களை சாவித் துவாரம் வழியாக பார்த்துக் கொண்டிருக்கவில்லை

ஏனெனில் யாராவது சாவித்துளை வழியாகப் பார்த்தால் ஆளுமை என்பது வந்து விடுகிறது, நீங்கள் நடிக்கத் தொடங்கி விடுகிறீர்கள்.

குளியலறையில் மட்டுமே நீங்கள் உங்கள் ஆளுமையை கைவிடுகிறீர்கள். எனவேதான் குளியலறை என்பது அந்தளவுக்கு புத்துணர்ச்சி ஊட்டுவதாக இருக்கிறது குளித்து முடித்து வெளியே வரும்போது நீங்கள் மிகுந்த அழகாக, புத்தம் புதிதாக, எவ்வித ஆளுமையும் இன்றி வெளிவருகிறீர்கள். நீங்கள் ஒரு தனிநபராக ஆகிறீர்கள். தனித்தன்மை என்பது தான் உங்களின் சுயத்தன்மை. ஆன் தன்மை - ஆளுமை என்பது உங்களைப் பற்றி நீங்கள் காட்டிக் கொள்ளும் தன்மை. ஆளுமை என்பது உங்களின் முகம் - முகமூடி.. தனித்துவம் என்பது உங்களின் அகம்- சுயம். பதஞ்சலியின் கருத்தில் கடவுள் என்பவருக்கு ஆளுமை கிடையாது. அவர் ஒரு தனிக்குழு.

நீங்கள் வளர்ச்சி பெற்றுச் சென்றால் பின் படிப்படியாக மற்றவர் களின் அபிப்பிராயம் என்பது சிறுபிள்ளைத்தனமாகத் தோன்றத் தொடங்கி விடுகிறது. அவற்றைப்பற்றி நீங்கள் கவலைப்படுவதில்லை. அவர்கள் கூறுவதெல்லாம் அர்த்தமற்றது.பொருள் என்பது அவர்கள் கூறுவதில் இருப்பதல்ல. அது உங்களிடமே இருக்கிறது. நீங்களே அது. அழகானவர் என அவர்கள் கூறுவதில் பொருள் இல்லை. அதில் பயனில்லை. உண்மையில் நீங்கள் என்னவாக இருக்கிறீர்கள் என்பதிலேயே பொருள் இருக்கிறது. நீங்களே அழகாக இருந்தால் தான் அதில் அர்த்தமிருக்கிறது. அவர்கள் கூறுவது அநாவசியம். உண்மையில் நீங்கள் என்னவாக இருக்கிறீர்கள் என்பதே முக்கியம். உண்மையான நீங்கள் எதுவோ அதுவே உங்களின் தனித்துவம்.

ஆளுமைகளை நீங்கள் விட்டுவிடும்போது நீங்கள் ஒரு சந்நியாசி ஆகிறீர்கள். ஆளுமைகளை நீங்கள் துறந்து விடும்போது நீங்கள் ஒரு சந்நியாசி ஆகிறீர்கள். நீங்கள் ஒரு தனிப்பிறவி ஆகிறீர்கள். இப்போது நீங்கள் உங்கள் மெய்யான மையத்தில் வாழ்கிறீர்கள். நீங்கள் பாவனை காட்டுவதில்லை. நீங்கள் பாவனை காட்டாதபோது நீங்கள் கவலைப்படுவ தில்லை. பாவனை காட்டாதபோது மற்றவர் அபிப்பிராயங்களால் நீங்கள் பாதிக்கப்படுவதில்லை. பாவனை அற்ற நிலையில் நீங்கள் பற்றற்ற நிலையிலேயே இருக்கிறீர்கள். ஆளுமையோ தனித்த நிலையில் தங்கி இருக்கவே முடியாது. அது மிகவும் பலவீனமான ஒரு தோற்றம். உங்களுக்கும் மற்றவருக்கும் இடையிலேயே அது நிலவுகிறது. மற்றவரையே அது சார்ந்துள்ளது. எந்த நிமிஷமும் அவர் தன் மனத்தை மாற்றிக் கொள்ள முடியும், உங்களை முற்றிலுமாக நாசமாக்கிவிட முடியும்.

ஒரு பெண்ணை நீங்கள் பார்க்கிறீர்கள். அவள் புன்னைக்கிறாள். அவளது புன்னகையால் உங்களை நீங்கள் மன்மதனாக உணர்கிறீர்கள். மாறாக அவள் தன் கண்களில் வெறுப்பைத் தேக்கி முகத்தை திருப்பிக் கொண்டால் அப்படியே நொறுங்கிப் போகிறீர்கள். உண்மையில் உங்கள் ஆளுமை காலில்போட்டு மிதிக்கப்படுதால்தான் நீங்கள் நொறுங்கிப் போகிறீர்கள். உங்கள் மேல் ஏறி மிதித்துச் சென்றுவிடுகிறாள் அவள். உங்களை ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை.

யாராவது உங்கள் ஆளுமையை நசுக்கிவிடக் கூடுமொன ஒவ்வொரு கணமும் நீங்கள் நடுங்கிக் கொண்டிருக்கிறீர்கள். இந்நிலையில் உலக முழுவதும் ஒரு பதற்றமாக ஆகிறது. கடவுளுக்கு தனித்தன்மை இருக்கும், ஆளுமை இராது. அவரிடம் என்ன இருக்கிறதோ அதையே அவர் காட்டுகிறார். அவருக்குள் என்னென்ன இருக்கிறதோ அதுவே அவரிடமிருந்து வெளிப்படுகிறது. உள்ளபடி சொன்னால் உள், வெளி என்பனவை அவரைப் பொறுத்தவரை மறைந்து விட்டிருக்கின்றன.

*கடவுளே உன்னதமானவர்.*

ஆங்கிலத்தில் இது 'கடவுளே உன்னத ஆட்சியாளர்' என்று மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. எனவேதான் பதஞ்சலியைப் பற்றிய தவறான ஒரு கருத்து நிலவுகிறது என்கிறேன் நான். சமஸ்கிருத்தில் அவர் அவரை '**புருஷ் - விசேஷ்**'= உன்னதப் பிறவி என்கிறார், ஆட்சியாளர் என்பதில்லை. நானோ எனில் 'கடவுளே உன்னதம்' என்றே மொழி பெயர்க்'க விரும்புவேன். இறை உணர்வின் தனிநகர் அம்சம் அவர். 'தனிநபர்' தான், 'பிரபஞ்சம்' அல்ல என்பதை நினைவில் வையுங்கள். ஏனெனில் ஒவ்வொரு தனிநபரும் ஒரு கடவுளே என்கிறார் பதஞ்சலி.

> **பிறவி, கருமம், கரும பலன் ஆகியவற்றின் அலைக் கழிப்புகளால் அவர் பாதிக்கப்படுவதில்லை.**

ஏன்? ஏனெனில் எந்த அளவுக்கு நீங்கள் ஒரு தனிமனிதர் ஆகிறீர்களோ அந்த அளவுக்கு உங்கள் வாழ்க்கை ஒரு தனித்தன்மையை மேற்கொள்கிறது. ஒரு புதிய பரிமாணம் - விளையாட்டு என்னும் பரிமாண்ம் - தொடங்குகிறது. ஆளுமை என்பது வெளிப்பக்கம்; மேல் பாகம்; விளிம்பு: இவற்றைக் குறித்து நீங்கள் அதிகமதிக கவனம் கொள்ளும் அளவுக்கு ... உங்கள் வாழ்வின் /செயல்கள் மற்றும் அவற்றின் பலன்கள் பற்றிய கவலையின் பரிமாணமாக இருக்கிறது; இலக்கை நீங்கள் அடைவீர்களா மாட்டீர்களா, எப்போதுமே சூழ்நிலை உங்களுக்கு உதவிவருமா உதவாதா, நாளை என்ன நடக்குமோ என்னும் அங்கலாய்ப்பின் பரிமாணமாக அது இருக்கிறது.

எவரது வாழ்வு ஒரு விளையாட்டாக / லீலையாக ஆகி இருக்கிறதோ அவர் நாளையைப் பற்றி கவலைப்படுவதில்லை. ஏனெனில் அவர் இன்றில் மட்டுமே இருக்கிறார். ''அல்லி மலர்களைப் பாருங்கள். அவ்வை எவ்வளவு அழகாக உள்ளன!'' என்கிறார் யேசுநாதர். ஏனெனில் வாழ்க்கை அவற்றுக்கு ஒரு கடமையாக இல்லை. நதிகளைப் பாருங்கள், விண்மீன்களைப் பாருங்கள். மனிதரைத் தவிர எல்லாமே அழகாக உள்ளன. புனிதமாக உள்ளன. ஏனெனில் மொத்த பிரபஞ்சமும் ஒரு விளையாட்டு. வினையை, அதன் விளைவைப் பற்றி இங்கு யாருக்கும் கவலையில்லை. பூக்கள் வருமா வராதா என்று மரம் கவலைப்படுகிறதா? கடலை அடைவோமா மாட்டோமா என்று நதி அலட்டிக் கொள்கிறதா? மனிதரைத் தவிர வேறு யாருக்குமே கவலை இல்லை. மனிதர் மட்டும் ஏன் கவலைப்படுகிறார்? ஏனெனில் வாழ்க்கையை அவர் விளயைாட்டாகப் பார்ப்பதில்லை. வேலையாகப் பார்க்கிறார் - ஆனால் அகில உலகமும் ஒரு விளையாடலாகத் தான் இருக்கிறது.

தன்னிலேயே மையம் கொண்டவராக ஒருவர் ஆனதும் அவர் ஒரு விளையாட்டுப் பிள்ளை ஆகிறார் என்கிறார் பதஞ்சலி. அவர் விளையாடுகிறார். வாழ்க்கை ஒரு விளையாட்டு. அது அழகானது. அதன் முடிவைப்பற்றி கவலைப்படத் தேவையில்லை. பலன் ஒரு பொருட் டில்லை. அது முற்றிலும் அநாவசியம். நீங்கள் செய்து கொண்டிருக்கும் காரியம் அதனளவிலேயே மதிப்புடையதே. நான் பேசிக் கொண்டிருக்கி றேன். நீங்கள் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் ஒரு நோக்கத்துடன் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். நானோ நோக்கமின்றிப் பேசிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் ஒரு நோக்கத்துடன் கவனித்துக் கொண்டிருக்கிறீர்கள். கேட்பதன் மூலம் ஏதோ ஒன்றை அடையும் உத் தேசம் உங்களுக்கு இருக்கிறது. ஏதோ ஓர் அறிவை, வழிகாட்டுதலை, உத்தி களை, முறைகளை, புரிதலை அடையப் போகிறீர்கள். பின் அவற்றை நீங்கள் நடைமுறைப்படுத்திப் பார்க்கப் போகிறீர்கள். நீங்கள் ஒரு விளைவை எதிர்பார்த்து இருக்கிறீர்கள். நானோ எதையும் எதிர்பார்க்கா மல் பேசிக் கொண்டிருக்கிறேன். பேசுவதிலேயே மகிழ்ந்து கொண்டிருக்கி றேன் - அவ்வளவுதான்.

''ஏன் நாள்தோறும் நீங்கள் பேசிக்கொண்டே இருக்கிறீர்கள்?'' என்று மக்கள் என்னிடம் கேட்கிறார்கள். பேசுவதை நான் ரசிக்கிறேன். இது பறவைகள் பாடுவதைப் போன்றதே. அதற்கு என்ன நோக்கம்? ஏன் பூத்துக் கொண்டே இருக்கிறாய் என்று ரோஜாவிடம் கேட்பீர்களா? அதற்கு என்ன நோக்கம்? நான் ஏன் உங்களிடம் பேசிக் கொண்டிருக்கிறேன் என்றால்

என்னை இம்முறையில் உங்களுடன் பகிர்ந்து கொள்வதே அதனளவில் மதிப்புடையதாக இருக்கிறது. அது ஓர் உள்ளார்ந்த மதிப்பைக் கொண்டுள்ளது. இதற்கும் வெளியிலிருந்து ஒரு பலனை நான் எதிர்பார்க்க வில்லை. இதன்மூலம் நீங்கள் நிலைமாற்றம் அடைவீர்களா மாட்டீர்களா என்பதைப் பற்றி நான் கவலைப்படுவதில்லை. எந்தச் சஞ்சலமும் இல்லை. நீங்கள் என்னைக் கவனித்தால் அதுவே போதுமானது. மேலும், நீங்களும் அலட்டிக் கொள்ளவில்லை என்றால் பின் நிலைமாற்றம் இந்தக் கணமே நிகழ முடியும். ஏனெனில் இதை எப்படி பயன்படுத்திக் கொள்ளலாம் என்று நீங்கள் கவலைப்பட்டால், நான் என்ன சொன்னாலும், அதை பயன்படுத்திக் கொள்வது எப்படி, ?அதைக் கொண்டு என்னென்ன செய்யலாம்.''

அப்போதே நீங்கள் எதிர்காலத்தில் இருக்கிறீர்கள். நிகழ் காலத்தில் நீங்கள் இல்லை. நீங்கள் விளையாட்டுக் களத்தில் இல்லை, தொழில் களத்தில் இருக்கிறீர்கள். விளையாட்டை நீங்கள் விளையாடிக் கொண டில்லை. அதிலிருந்து என்ன ஆதாயம் பெறலாம் என்றே எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். நானோ முற்றிலும் நோக்கமற்றவனாயிருக்கிறேன். அப்படித்தான் என்னையே நான் உங்களிடம் பகிர்ந்து கொள்கிறேன். எதிர்காலத்தில் ஏதாவது செய்வதற்காக நான் பேசிக் கொண்டிருக்கவில்லை. இக்கணமே இந்தப் பகிர்தல் மூலம் ஒன்று நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதனாலேயே நான் பேசிக் கொண்டிருக்கிறேன் - அதுவே போதுமானதாயிருக்கிறது.

'உள்ளார்ந்த மதிப்பு'என்ற சொற்களை நினைவில் கொள்ளுங்கள். உங்களுடைய ஒவ்வொரு செயலும் ஓர் உள்ளார்ந்த மதிப்பு உடையதாக இருக்கும்படி செய்யுங்கள். விளைவைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். ஏனெனில் விளைவைப்பற்றி யோசிக்கும் அக்கணத்திலேயே, நீங்கள் செய்யும் எதுவும் ஒரு வழிமுறையாக ஆகிறது. அதன் முடிவு வருங்காலத்துக்குப் போகிறது. வழிமுறையையே முடிவாக ஆக்குங்கள். பாதையையே இலக்காக ஆக்குங்கள். இந்தக் கணத்தையே முக்தி நிலை யாக மாற்றுங்கள். இதற்கு அப்பால் ஏதும் இல்லை. இதுவே இறைநிலை. நீங்கள் விளையாட்டாக இருக்கும் போதெல்லாம் அதன் (சிறு அனுப வங்கள்) கணநேர காட்சிகள் சிலவற்றை நீங்கள் காண்பீர்கள்.

குழந்தைகள் விளையாடுகின்றன. குழந்தைகளின் விளையாட்டை விடவும் தெய்விகமான வேறொன்றைக் கண்டுபிடிப்பது கடினம். எனவே தான் யேசு கூறுகிறார், ''நீங்கள் குழந்தைகளைப் போல ஆகாவிட்டால் என் கடவுளின் அரசில் உங்களால் நுழையமுடியாது.'' சிறுபிள்ளைகள் போல் ஆகுங்கள். இதன் பொருள், சிறுபிள்ளைத் தனமாக நடந்துகொள்ளுங்கள் என்பதல்ல. சிறுபிள்ளைத்தனம் அது முற்றிலும் வேறு விதமான விஷயம். குழந்தைத்தனம் - முற்றிலும் வேறுவிதமான விஷயம். சிறுபிள்ளைத்தனம்

கைவிடப்பட வேண்டியது. அது முதிர்ச்சியற்றது, முட்டாள்தனமானது. குழந்தைகளைப் போல் ஆவது என்பது அதிகரிக்கப்பட வேண்டியது. அதன் பொருள், அப்பாவியாக இருப்பதாகும். நோக்கமற்ற நிர்மலமாக இருப்பதாகும். லாபநோக்கமே நச்சுத் தன்மையை புகுத்துகிறது. விளைவை எதிர் நோக்குவதே உங்களை விஷமானவர்கள் ஆக்குகிறது. அந்நிலையில் களங்கமற்ற தன்மை காணாமல் போகிறது.

**உன்னதநிலையே கடவுள். இறை உணர்வின் தனிநபர் அம்சம் அவர். பிறவி, கருமம், கரும பலன் ஆகியவற்றின் அலைக்கழிப்புகளால் அவர் பாதிக்கப்படுவதில்லை.**

இக்கணமே நீங்கள் ஒரு கடவுளாக முடியும். ஏனென்றால் ஏற்கனவேயே நீங்கள் அதுவாகவே இருக்கிறீர்கள். அந்த உண்மையை உணர்தலே தேவை. இப்போதே நீங்கள் கடவுளாகவே இருக்கிறீர்கள். நீங்கள் ஒரு கடவுளாக வளர வேண்டும் என்பதில்லை. ஏற்கனவேயே நீங்கள் அப்படித்தான் இருக்கிறீர்கள் என்பதை நீங்கள் உணர வேண்டி உள்ளது. சரணாகதி வாயிலாக இது நிகழ்கிறது.

ஒரு கடவுளை நீங்கள் நம்புகிறீர்களே; அங்கே எங்கே - உலகத்தின் உச்சியில் - வானத்தின் மேலே இருக்கும் ஒரு கடவுளில் நீங்கள் முழுநம்பிக்கை வைத்து சரணடைகிறீர்களே; அந்த கடவுள், உங்களின் சரணாகதிக்கு உதவுவதற்கான ஓர் உதவி மட்டுமே என்கிறார் பதஞ்சலி. சரணாகதி நிகழ்ந்ததும் நீங்களே ஒரு கடவுள் ஆகிறீர்கள். ஏனெனில் 'சரண்' என்றாரே, ''இனி விளைவைப் பற்றி நான் கவலைப்படுவதில்லை. எதிர்காலம் பற்றி எனக்குக் கவலை இல்லை. என்னைக் குறித்தே, எனக்கு எவ்வித நோக்கமும் இல்லை. நான் சரண்புகுகிறேன்!'' என்றே பொருள்.

''நான் சரணடைகிறேன்,'' என்று நீங்கள் கூறும்போது, எது சரணடைகிறது? 'நான்' என்னும் அகங்காரம் தான்! ஆயின், அகங்காரம் இல்லாத நிலையில், நோக்கம் - விளைவு' பற்றி எப்படி நீங்கள் எண்ண முடியும்? யார் அதை எல்லாம் எண்ணுவது? அந்நிலையில் நீங்கள் ஒரு விட்டுவிடுதலையான தன்மையில் இருக்கிறீர்கள். அந்நிலையில் அது உங்களை எங்கெல்லாம் இட்டுச் செல்கிறதோ அங்கெல்லாம் நீங்கள் மிதந்து செல்கிறீர்கள். இப்போது முழுமையே முடிவு செய்கிறது. உங்கள் தீர்மானம் செய்வதை நீங்கள் சமர்ப்பித்து விட்டீர்கள். இரண்டு வழிகள் இருக்கின்றன என்கிறார் பதஞ்சலி. ஒன்று, முயற்சியை முழுமையாக்குதல். இவ்வழியில் அகங்காரத்தை நீங்கள் குவித்துக் கொண்டு போகாதிருந்தால் பின் முழுமையான முயற்சியே தானாக சரணாகதியாக ஆகும். அகங்காரத்தை நீங்கள் சேகரித்துக் கொண்டு போனால் அப்போது அதற்கு வேறு வழி இருக்கிறது: அதுதான் கடவுளைச் சரணடைதல்.

**கடவுளில், விதையானது அதன் உச்சபட்ச அளவுக்கு வளர்ச்சி பெறுகிறது.**

நீங்களே விதை; கடவுளே வெளிப்பாடு. நீங்களே விதை; கடவுளே மெய்ப்பாடு. நீங்கள் உள்ளுறை; சாத்தியம்; அவரே புறயதார்த்தம். கடவுளே உங்களின் விதி. பலப்பல பிறவிகளாக நீங்கள் உங்கள் விதியை/ ஊழை ஏறிட்டும் பார்க்காமல் அதை சுமந்து வந்திருக்கிறீர்கள். ஏனெனில் உங்கள் கண்கள் எப்போதும் எதிர்காலத்தில்தான் எங்கோ நிலைத்துள்ளன. நிகழ்காலத்தை அவை பார்ப்பதே இல்லை. நீங்கள் பார்க்கத் தயார் என்றால் இங்கேயே இப்போதே எல்லாமே அவை எப்படி இருக்க வேண்டுமோ அப்படியே இருக்கின்றன. இதற்குமேல் அதிகமாக எதுவுமே தேவையில்லை. எந்தக் காரியமும் தேவையில்லை. ஒவ்வொரு கணமும் இருத்தலானது செம்மையாகவே இருக்கிறது. ஒருபோதும் அது செம்மையின்றி இருந்ததில்லை. அப்படி இருக்க முடியாது. அது செம்மையற்றிருந்தால் பின் எப்படி அது செம்மையாக ஆகும்? அதை செம்மை செய்வது யார்?

இயற்கை உலகம் செம்மையானது. அதில் எதுவுமே செய்யத் தேவையில்லை. இதை நீங்கள் புரிந்துகொண்டால், பின் சரணாகதி சாத்தியம். எவ்வித முயற்சியோ, பிராணாயாமமோ, பஸ்திரிகாவோ, சிரசாசனமோ, யோக ஆசனங்களோ, தியானமோ எதுவுமே தேவை யில்லை. தான் இருக்கிற நிலையிலேயே பிரபஞ்சம் செம்மையாகவே உள்ளது என்பதை நீங்கள் புரிந்து கொண்டால் பின் மேற்சொன்ன எதுவுமே தேவையில்லை. உள்ளே பாருங்கள்; வெளியே பாருங்கள். எல்லாமே எந்த அளவுக்கு செம்மையாக உள்ளன என்றால் கொண்டாடுவதைத் தவிர இங்கு வேறெதுவும் செய்வதற்கு இல்லை. சரணடைகிற மனிதர் கொண்டாடத் தொடங்குகிறார்.

□

## இடையில் இடைவெளி இல்லாமல் ஒரு விதை எப்படி மலராக முடியும் என்பதை தயவு செய்து விளக்குவீர்களா?

இடைவெளி இல்லாமலே, இடைவேளை இல்லாமலே விதையானது மலராக ஆக முடியும். ஏனெனில் ஏற்கனவே விதை மலர்கிறது. இப்போதே என்னவாக நீங்கள் ஆகமுடியுமோ அதுவாகவே நீங்கள் இருக்கிறீர்கள். அப்படி இல்லை என்றால், பிறகு விதையானது இக்கணமே மலர முடியாது.

அந்நிலையில் அவகாசம் தேவைப்படும்; அந்நிலையில் ஸென் சாத்தியப்படாது; அந்நிலையில் பதஞ்சலிதான் வழி; நீங்கள் வேறொன்றாக நிலைமாற வேண்டுமானால் அதற்கு போதிய கால அவகாசம் கட்டாயம் தேவைப்படும். ஆனால் ஒன்றை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். அறிந்தவர் அனைவரும், நிலைமாற்றம் என்பது ஒரு கனவே என்பதையும் அறிந்துள்ளார்கள். ஏற்கனவே நீங்கள் ஜீவனாகவே (being) இருக்கிறீர்கள். இருக்கிற நிலையிலேயே நீங்கள் மிகச் சரியாகவே இருக்கிறீர்கள்.

நீங்கள் ஆழமான உறக்கததில் இருப்பதால்தான் சரியில்லாமை தோன்றுகிறது. பூ ஏற்கனவே பூத்துத்தான் இருக்கிறது. உங்கள் கண்கள்தான் மூடி உள்ளன. விதை பூவாக வேண்டுமெனில் அதற்கு அதிக காலம் தேவைப்படும். மேலும் இது சாதாரண பூவுமல்ல. கடவுளே உங்களுள் பூக்க வேண்டி உள்ளது. அப்படியானால் அதற்கு எல்லையற்ற காலம் கூட போதாது. அந்நிலையில் அது ஏறக்குறைய அசாத்தியமாகும். இனித்தான் நீங்கள் மலர வேண்டுமானால் பின் அது ஏறக்குறைய முடியாத காரியம். அது நிகழப் போவதே இல்லை. அது நிகழ முடியாது. அதற்கு எல்லையற்ற காலமும் தேவைப்படும்.

இல்லை, விஷயம் அதுவல்ல. இப்போதே அது நிகழ முடியும். இக்கணமே! ஒரே ஒரு வினாடியைக் கூட வீணாக்க வேண்டியதில்லை. விதை பூவாக வேண்டிய விஷயம் அல்ல இது; கண்களைத் திறந்து கொள்ளும் காரியமே இது. இக்கணமே நீங்கள் உங்கள் கண்களை திறக்க முடியும். அப்போது, மலர் எப்போதும் மலர்ந்தே இருப்பதை நீங்கள் காண்பீர்கள். ஒருபோதும் அது வேறுவிதமாக இல்லை; வேறு விதமாக அது இருக்கவும் முடியாது.

எப்போதும் உங்களுக்குள்ளேயே கடவுள் இருக்கிறார். ஒரு பார்வை பார்த்தாலே போதும், அது வெளிப்படுகிறது. விதைக்குள் அது மறைந்திருந்தது என்பதல்ல; நீங்கள் அதைப் பார்க்கவில்லை என்பதே.

எனவே இவ்வளவுதான் தேவை: அதை நீங்கள் பார்க்க வேண்டும் என்பதே தேவை. நீங்கள் என்னவாக இருந்தாலும் அதைப் பாருங்கள். அதைக் குறித்த உணர்வுடன் இருங்கள். தூக்கத்தில் நடப்பவர் போல இயங்காதீர்கள்.

எனவேதான் ஸென் குருமார்கள் பலரும் ஞானம் பெற்றதும் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தார்கள் என்று கூறுப்படுகிறது. அவர்களின் சீடர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. இப்போது என்ன நடந்து விட்டது என்பதையே அவர்களின் சக பயணிகளால் விளங்கிக் கொள்ள முடிய வில்லை. ஏன் அவர்கள் பைத்தியக்காரர்கள் மாதிரி விழுந்து விழுந்து சிரிக்கி றார்கள்? ஏன் இந்த இடிமுழக்கச் சிரிப்பு? மொத்த அபத்தத்தையும் பார்த்தே அவர்கள் சிரித்தார்கள். ஏற்கனவே தாம் அடைந்துவிட்ட ஒன்றை அவர்கள் தேடிக் கொண்டிருந்தார்கள்! தேடுவோருக்குள்ளேயே மறைந்திருந்த ஒன்றை அவர்கள் (வெளியே) தேடிக் கொண்டிருந்தார்கள்.

தேடுபவரே தேடப்படும் பொருள். பயணியே பயணத்தின் இலக்கு. வேறெங்கோ நீங்கள் சென்று சேர வேண்டியதில்லை. உங்களையே நீங்கள் அடைய வேண்டியுள்ளது. (எனவே) ஒற்றைக் கணத்தில் இது நிகழ்ந்துவிட முடியும். ஒரு கணத்தின் சிறுபகுதி நேரம்கூடப் போதுமானது. ஏனெனில் அந்த மலர் கடவுள் எனும் மலர். நீங்கள் ஏற்கனவே கடவுள்தான். திரும்பிப் பார்த்தாலே போதும், உள்ளே பார்த்தாலே போதும், அது நிகழ்ந்துவிட முடியும். அப்படி இல்லாவிட்டால் இதை ஒரு மலராக ஆக வேண்டு மானால் பின் அதற்கு எல்லையற்ற காலமும் கூடப் போதாது.

பிறகு எதற்கு பதஞ்சலி? பதஞ்சலி தேவைப்படுவது உங்களால் தான் உங்கள் உறக்கத்திலிருந்து வெளி வருவதற்கு அவ்வளவு நீண்ட காலம் எடுத்துக் கொள்கிறீர்கள் நீங்கள். கனவிலிருந்து வருவதற்கு அவ்வளவு நீண்டகாலம் எடுத்துக் கொள்கிறீர்கள். அந்த அளவுக்கு கனவுகளில் நீங்கள் மூழ்கிப் போயிருக்கிறீர்கள். அந்த அளவுக்கு உங்கள் கனவுகளில் நீங்கள் முதலீடு செய்திருக்கிறீர்கள். எனவேதான் காலம் தேவைப்படுகிறது. காலம் தேவைப்படுவது, விதையானது மலராக ஆவதற்காக அல்ல. காலம் தேவைப்படுவது, நீங்கள் உங்கள் கண்களைத் திறக்க முடியாமல் இருப்பதால்தான் கண்களை மூடிய நிலைக்கு நீங்கள் அந்தளவுக்கு பழகிவிட்டிருக்கிறீர்கள். அது ஓர் அழுத்தமான பழக்கமாகி விட்டுள்ளது. அது மட்டுமல்ல: கண்மூடித்தனமாகத்தான் நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள் என்பதையே நீங்கள் முற்றிலுமாக மறந்து விட்டிருக்கிறீர்கள். அதை அறவே நீங்கள் மறந்துவிட்டீர்கள்! "நீங்கள் சொல்வது சுத்தப்பிதற்றலாக இருக்கிறது. என் கண்கள் நன்றாக திறந்து தானே உள்ளன!" என்று நீங்கள் நினைக்கிறீர்கள். ஆனால் உங்கள் கண்கள் மூடித்தான் உள்ளன!

''உங்கள் கனவுகளில் இருந்து வெளியேறுங்கள்'' என்று நான் சொன்னால், ''நான் இப்போது விழித்துக் கொண்டுதானே இருக்கிறேன்'' என்று நீங்கள் சொல்கிறீர்கள் - ஆனால் இதுவும் ஒரு கனவுதான். நீங்கள் விழித்திருப்பதாக உங்களால் கனவுகாண முடியும். உங்கள் கண்கள் திறந்தே இருப்பதாக நீங்கள் கனவுகாண முடியும். ஆகவே காலம் அதிகம் தேவைப் படுகிறது - பூ ஏற்கனவே பூத்திருக்கவில்லை என்பதற்காக அல்ல. நீங்கள் விழித்துக் கொள்வது அவ்வளவு கடினமாக உள்ளது என்பதுதான். உங்கள் உறக்கத்தில் பல முதலீடுகள் செய்யப்பட்டுள்ளன. அந்த முதலீடுகளை புரிந்து கொண்டாக வேண்டும். அகங்காரமே அடிப்படை யான முதலீடு/ சிக்கல். கண்களைத் திறந்து பார்த்தால் நீங்கள் மறைந்துவிடுவீர்கள். (எனவே) கண்களைத் திறந்து பார்ப்பது என்பது சாவை - தற்கொலையை ஒத்ததாகத் தோன்றுகிறது. அது உண்மையும் கூட. எனவேதான் நீங்கள் அதைப் பற்றிப் பேசுகிறீர்கள், அதைப் பற்றி கேட்கிறீர்கள், அதைப் பற்றி எண்ணுகிறீர்கள்; ஆனால் ஒருபோதும் உங்கள் கண்களை மட்டும் திறப்பதில்லை. ஏனெனில் உண்மையாகவே நீங்கள் கண்களை திறந்து விட்டால் நீங்கள் மறைந்துவிடுவீர்கள் என்பதை அறிந்து கொள்கிறீர்கள். அதற்குப் பிறகு நீங்கள் யார்? நீங்கள் யாருமில்லை! நீங்கள் ஒன்றுமில்லை! இந்த ஒனறுமில்லா தன்மை என்பது நீங்கள் உங்கள் கண்களைத் திறந்ததுமே இருக்கிறது. எனவே 'கண்கள் ஏற்கனவே'திறந்துதான் உள்ளன' என்று நம்பிக் கொள்வதே மேல். யாராவதாக / ஏதாவதாக இருந்து கொள்வது மேல்.

அகங்காரமே முதல் சிக்கல். நீங்கள் தூங்கும்போது மட்டுமே அகங்காரம் தோன்ற முடியும். நீங்கள் தூங்கும்போது மட்டுமே கனவுகள் தோன்ற முடியும் என்பதைப் போன்றதே இது. நீங்கள் தூக்கத்தில் இருக்கையில் மட்டுமே தன்முனைப்பு நிலவ முடியும். கண்களைத் திறங்கள்! முதலில் நீங்கள் மறைகிறீர்கள். பின் கடவுள் தோன்றுகிறார்: இதுதான் பிரச்சினை . நீங்கள் மறைந்து விடலாம் என நீங்கள் அஞ்சு கிறீர்கள். ஆனால் அதுதான் வாசல். எனவேதான், சொல்வதை நீங்கள் கேட்டுக் கொள்கிறீர்கள், அதைக் குறித்து எண்ணுகிறீர்கள்; ஆனால் நாளை - நாளை - நாளை என்று நாளைத் தள்ளிப் போட்டு கொண்டே போகிறீர்கள்.

எனவேதான் பதஞ்சலி தேவைப்படுகிறார். உடனடியாக கண்களைத் திறக்கத் தேவையில்லை என்கிறார் பதஞ்சலி. பல படிக்கட்டுகள் உள்ளன. படிப்படியாக, சிறிதுசிறிதாக உங்கள் உறக்கத்திலிருந்து நீங்கள் வெளிவர முடியும். சில காரியங்களை இன்று செய்யுங்கள். சிலவற்றை நாளை, சிலவற்றை நாளை மறு நாள் செய்யுங்கள். இப்படிச் செய்தால் அதிக காலம்

பிடிக்கும். இது உங்களுக்கு ஏற்புடையதாக உள்ளது. ஏனெனில் தூங்குவதற்கு இன்னும் அவகாசம் தருகிறார் பதஞ்சலி. உங்கள் தூக்கத்திலிருந்து இப்போதே நீங்கள் வெளியேறத் தேவையில்லை, கொஞ்சம் திரும்பிப் படுத்தால் போதும் என்கிறார். அதற்குப் பின் இன்னும் கொஞ்சம் தூங்குங்கள். பின் / வேறுஏதாவது ஒன்றைச் செய்யுங்கள். பின் மெது மெதுவாக, சிறிது சிறிதாக காரியங்கள் நடக்கும்.

இணங்கச் செய்வதில் கெட்டிக்காரர் அவர். உங்கள் உறக்கத்திலிருந்து நீங்கள் வெளியேறும்படி உங்களை அவர் இணங்கச் செய்கிறார். உங்கள் உறக்கத்திலிருந்து உங்களை உலுக்கி எழுப்புகிறது ஸென். எனவேதான் ஒரு ஸென் குருவினால் உங்களை நடுமண்டையில் தாக்க முடிகிறது. பதஞ்சலியைப் போன்றவர் ஒருபோதும் இப்படி நடந்துகொள்ள மாட்டார். ஒரு ஸென் குருவினால் உங்களை சன்னல் வழியாக வீசி எறிய முடியும். பதஞ்சலியைப் போன்றவர் ஒருபோதும் அப்படிச் செய்யமாட்டார். ஏனெனில் ஸென் குரு அளிப்பது அதிர்ச்சி வைத்தியம். உங்கள் உறக்கத்திலிருந்து உங்களை உலுக்கி எழுப்பிவிட முடியும்போது ஏன் காலம்பிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டுக் கொண்டும் உங்களை அதற்கு இணங்கச் செய்து கொண்டும் இருக்க வேண்டும்? காலத்தை ஏன் வீணாக்க வேண்டும்?

பையப் பைய, பையப்பைய உங்களைக் கொண்டு வருகிறார் பதஞ்சலி. அவர் என்ன செய்து கொண்டிருக்கிறார் என்பதை நீங்களே உணரமுடியாதபடி பக்குவமாக அவர் உங்களை வெளியே கொண்டு வருகிறார். அவர் ஒரு தாயைப் போன்றவர். அவர் செய்வது நேர்மாறான வேலைதான். ஆனால் அதை ஒரு தாயைப் போலவே அவர் செய்கிறார். தாய் தன் குழந்தை தூங்குவதற்கு அதை இணங்கச் செய்கிறாள். அவர் தூக்கத்திலிருந்து வெளியே வர இணங்கச் செய்கிறார். அவள் ஒரு தாலாட்டுப் பாடலாம். தாய் இங்கு இருக்கிறாள் பயப்பட தேவையில்லை என்று குழந்தை உணரும்படி செய்யலாம். ஒரே வரியையே திரும்பத் திரும்ப இசைக்கும்போது குழந்தை உறக்கத்துக்குள் ஆழ்த்தப்படுகிறது. தாயின் கையைப் பிடித்தவாறே தூக்கத்தில் வீழ்கிறது. கவலைப்பட தேவையில்லை. அம்மா அருகில்தான் இருக்கிறாள். பாடிக் கொண்டிருக்கிறாள். அந்த பாட்டும் அருமையாக உள்ளது. ''பேசாமல் தூங்கு'' என்று நேரடியாக அவள் அதட்டுவதில்லை. ஏனெனில் அது கலவரப்படுத்தும். மறைமுகமாகவே குழந்தையை இணக்கப்படுத்துகிறாள் அவள். பின் மெதுமெதுவாக தன் கையை விடுவித்து கொள்வாள். போர்வையை போர்த்தி விட்டு அறையை விட்டு வெளியேறுகிறாள். குழந்தை நல்ல தூக்கத்தில் ஆழ்கிறது.

இதையேதான் நேர் எதிர்த்திசையில் செய்கிறார் பதஞ்சலி. பையப் பைய அவர் உங்களை உங்களின் உறக்கத்தலிருந்து வெளியே கொண்டு வருகிறார். எனவேதான் காலம் தேவைப்படுகிறது. மற்றபடி பூ ஏற்கனவே பூத்துத்தான் இருக்கிறது. கண்திறந்து பாருங்கள்! இதோ அது இருக்கிறது. கண்களைத் திறந்தாலே அது இருக்கிறது. கதவைத் திறந்ததுமே அவர் அங்கே உங்களுக்காக காத்துக் கொண்டு நின்றுகொண்டிருக்கிறார். எப்போதுமே அவர் அங்கேயேதான் நின்று கொண்டிருக்கிறார்.

அது உங்களையே பொறுத்தது. அதிர்ச்சி வைத்தியத்தை நீங்கள் விரும்பினால் அப்போது ஸென் உங்கள் பாதை. மிகவும் படிப்படியான ஒரு நடைமுறையையே நீங்கள் விரும்பினால் அதற்கு யோகா தான் வழி. தேர்ந்து கொள்ளுங்கள்! தேர்ந்தெடுப்பதிலும்கூட நீங்கள் ஏமாற்றுபவராக இருக்கிறீர்கள். ''என்னால் எப்படி தேர்ந்தெடுக்க முடியும்?'' என்று என்னிடம் சொல்கிறீர்கள். இதுவும் ஒரு தந்திரம்தான் எல்லாமே தெள்ளத்தெளிவாக இருக்கிறது. உங்களுக்கு காலம் தேவை என்றால் பதஞ்சலியைத் தேர்ந்தெடுங்கள். அதிர்ச்சி முறைகளைக் குறித்து உங்களுக்கு அச்சம் இருந்தால் பதஞ்சலியை தேர்ந்தெடுங்கள். ஆனால் தேர்ந்தெடுக்காமல் இருக்காதீர்கள்! இல்லாவிட்டால் தேர்ந்தெடுக்காமையே தள்ளிப் போடுதலாகிவிடும். அந்நிலையில் ''தேர்ந்தெடுப்பது கடினமாக உள்ளது. ஆனால் தேர்ந்தெடுக்காத வரை எப்படி என்னால் முன்செல்ல முடியும்?'' என்ற நீங்கள் கேட்பீர்கள்.

அதிர்ச்சி மருத்துவம் உடனடியானது. அது உங்களை உடனடியாக வீட்டுக்குக் கொண்டு வருகிறது. என் சொந்த முறைகளும் அதிர்ச்சி முறைகளே. அவை படிப்படியானவை அல்ல. என்னுடன் இருந்தால் இப்பிறவியிலேயே நீங்கள் அடைந்துவிட முடியும் என நம்பலாம். பதஞ்சலியின் பாதையில் போனால் பல பிறவிகள் தேவைப்படும். என்னுடன் இருக்கையில் இக்கணமே கூட நீங்கள் அடைந்துவிட முடியும் என நம்பலாம். ஆனால் அதை அடைவதற்கு முன் உங்களுக்குச் செய்ய வேண்டியவை பல இருக்கின்றன.

தன்முனைப்பு மறைந்துவிடும், காமம் மறைந்துவிடும் என்பதை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். விழிப்படைந்ததும் காமத்துக்கு இடமில்லை. அது அபத்தமாக ஆகிறது. அற்பமானதாகப்படுகிறது. எனவே நீங்கள், ''இன்னும் கொஞ்சம் துய்ப்போம். காத்திருப்பதில் என்ன தவறு? இன்னும் கொஞ்சம் கூடுதலாக அனுபவித்துக் கொள்வோம்.'' என்று எண்ணுகிறீர்கள் கோபம் சாத்தியமின்றி போய்விடும். வன்முறைக்குச் சாத்தியமில்லை.

அந்நிலையில் பொறாமை இராது. உடைமை மனப்பான்மை, சூழ்ச்சித் திறத்துடன் கையாளுதல் எல்லாமே மறைந்து விடும்.

''இவை எல்லாமே மறைந்துவிட்டால் பின் நான் என்னவாக இருப்பேன்'' என திடீரென்று உங்களுக்குத் தோன்றுகிறது. ஏனென்றால் நீங்கள் என்பது இவை எல்லாம் கலந்த ஒரு சேர்க்கைதான். இவை எல்லாவற்றின் ஒரு பொட்டலமன்றி - வேறு ஒன்றுமில்லை. இவை எல்லாம் மறைந்துவிட்டால் அதன்பின் சூனியம் மட்டுமே மீதமிருக்கும். அந்தச் சூனியம் உங்களை அச்சுறுத்துகிறது. அது ஒரு படுபாதாளம்போல் தோன்றுகிறது. எனவே நீங்கள் உங்கள் கண்களை மூடிக்கொள்ளவும் இன்னும் கொஞ்சம் கனவு காணவுமே விரும்புகிறீர்கள். காலையில் நீங்கள் கண் விழித்ததும் நீங்கள் ஓர் ஐந்து நிமிடம் புரண்டுபடுத்து இன்னும் கொஞ்சம் கனவு காண விரும்புவதைப் போன்றதே இது - அந்த கனவும் மிகவும் அருமையாக இருக்கிறது.

ஒருநாள் இரவு முல்லா நசுருதீன் தன் மனைவியை எழுப்பி அவளிடம், ''என் மூக்குக் கண்ணாடியை உடனே கொண்டுவா. மிக அருமையான ஒரு கனவு கண்டேன். இன்னும் அருமையான காட்சிகள் வரும்போல் இருக்கிறது.'' என்றார்.

ஆசைகள் உங்களுக்கு வாக்குறுதி அளித்துக் கொண்டே போகின்றன. இன்னும் அருமையான காட்சிகளைக் காட்டுவதாகவே எப்போதும் அவை வாக்களிக்கின்றன. ''இதை செய், அதை செய், ஞானநிலை பேறு எப்போது வேண்டுமானாலும் சாத்தியம் என்கிற போது ஏன் இப்படிப் பதறுகிறாய்? எந்த நேரத்திலும் அதை நீ அடைய முடியும். எந்த அவசரமும் இல்லை. அதை நீ ஒத்திவைக்க முடியும். அது ஒரு நித்தியமான பிரச்சினை. நிரந்தரமான கரிசனை. எனவே இந்த நிமிஷத்தை நீ ஏன் மகிழ்ச்சியாக கழிக்கக் கூடாது?'' என அவை கூறுகின்றன.

மனம் ஆனால் ஒருபோதும் நீங்கள் மகிழ்ச்சியை அனுபவித்த தில்லை. ஏனெனில் அகத்தைப் பற்றிய புரிதல் இல்லாத மனிதரால் எதையுமே அனுபவித்து மகிழ முடியாது. அவர் அவதியுற மட்டுமே செய் கிறார். ஒவ்வொன்றும் அவருக்கு ஒரு துன்பமாகவே ஆகிறது. காதல் என்பது எவ்வளவு இனிமையானது - அங்கும் அவர் துன்புறவே செய் ககிறார். தூக்கத்தில் இருக்கும் மனிதருக்கு சாத்தியமான மிகவும் அழகான நிகழ்வு காதலே. ஆனால் அதன் மூலம்கூட அவர் துன்பமே அடைகிறார். நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கும் காலத்தில் காதலைவிட சிறந்த ஒன்று சாத்தியமில்லை. அந்நிலையில் காதலே இன்பத்துக்கான மாபெரும் வாய்ப்பு. ஆனால் அதனாலும்கூட நீங்கள் துன்புறவே முடிகிறது.

ஏனெனில் காதலா, வேறொன்றா என்பதல்ல கேள்வி; உறக்கமே துன்பம். எனவே என்னென்ன நேர்ந்தாலும் நீங்கள் துன்புறவே செய்வீர்கள். உறக்கமானது ஒவ்வொரு கனவையும் ஒரு தீக்கனவாக மாற்றி விடுகிறது. அழகானதாகவே இது தொடங்கிறது. ஆனால் எப்போதும் ஏதோ ஓர் இடத்தில் ஏதோ ஒன்று தவறாகிப் போகிறது. முடிவில் நீங்கள் அடைவது நரகமே.

ஒவ்வோர் ஆசையும் நரகத்துக்கே இட்டுச் செல்கிறது. எல்லா சாலையும் ரோமாபுரிக்கே இட்டுச் செல்கிறது என்பார்கள் - அது உண்மையா என்பது எனக்கு தெரியாது. ஆனால் ஒன்று எனக்கு நிச்சயமாகத் தெரியும்: எல்லா ஆசையும் நரகத்துக்கே இட்டுச் செல்கிறது. தொடக்கத்தில் ஆசை உங்களுக்கு நிறைய நம்பிக்கைகளை, கனவுகளை வழங்குகிறது. அதுதான் சூழ்ச்சி. அப்படித்தான் வலையில் நீங்கள் சிக்கிக் கொள்கிறீர்கள். தொடக்கத்தில் இருந்தே ஆசையானது, ''எச்சரிக்கையாக இரு, உன்னை நான் நரகத்துக்கே கூட்டிப் போகிறேன்'' என்று சொல்லுமானால், அதை நீங்கள் பின்பற்ற மாட்டீர்கள். மாறாக ஆசை உங்களுக்கு சொர்க்கம் காட்டுவதாக வாக்களிக்கிறது. ''இன்னும் ஒரு சில காலடிகள்தான் - நீ அடைந்து விடலாம். என்கூட வந்தாலே போதும்'' என்று அது உறுதி கூறுகிறது. அது உங்களை கவர்ந்து மயக்குகிறது, உங்களை வசியம் செய்கிறது, பலவற்றையும் உங்களுக்கு வாக்களிக்கிறது நீங்களும் கஷ்டத்தில் இருப்பதால், ''முயற்சி செய்வதில் என்ன தவறு? இந்த ஆசையையும் தான் கொஞ்சம் அனுபவித்துப் பார்ப்போமே'' என நினைக்கிறீர்கள்.

அதுவும் உங்களை நரகத்துக்கே இட்டுச் செல்லும். ஏனெனில் ஆசை என்பதே நரகத்துக்கான பாதைதான். எனவேதான், ''நீங்கள் ஆசையற்றவர் களாக ஆகாதவரை நீங்கள் ஆனந்தமானவர்களாக ஆகமுடியாது'' என்கிறார் புத்தர். ஆசையே துன்பம். ஆசை என்பது ஒரு கனவு. நீங்கள் தூங்கும்போது மட்டுமே ஆசை நிலவமுடிகிறது. நீங்கள் விழித்தெழும் போது, விழிப்புநிலையில் இருக்கும்போது, ஆசைகள் உங்களை முட்டாளாக்க செய்ய முடியாது. அந்நிலையில் உங்களால் ஊடுருவிப் பார்க்க முடிகிறது. அப்போது உங்களுக்கு எல்லாமே மிகவும் தெளிவாக தெரிகிறது. எனவே யாரும் உங்களை ஏமாற்ற முடியாது. பணம் எப்படி உங்களை முட்டாளாக்க முடியும்? பணம் மட்டும் இருந்தால் நீங்கள் மிகமிக மகிழ்ச்சியாக இருப்பீர்கள் என்று எப்படி அதனால் சொல்லமுடியும்? அப்படியானால் பணக்காரர்களைப் பாருங்கள். அவர்களும் நரகத்தில்தானே இருக்கிறார்கள் - வேண்டுமானால் அது ஒரு வசதியான

நரகமாக இருக்கலாம். ஆனால் அது எந்த வேறுபாட்டையும் ஏற்படுத்துவதில்லை. வசதியில்லாத நரகத்தைவிட அதிக வசதியான நரகம் அதிக மோசமாகவே இருக்கப்போகிறது. ஏனெனில் இப்போது அவர்கள் பணத்தை சேர்த்துவிட்டதால் எப்போதும் பதற்றமான மனோநிலையில் மட்டுமே அவர்கள் இருக்கிறார்கள்.

முல்லா நசுருதீன் நிறைய சொத்து சேர்த்துவிட்ட நிலையில் ஒரு மருத்துவமனைக்குள் நுழைந்தார். ஏனெனில் அவருக்கு தூக்கம் வரவில்லை. அமைதியிழந்து காணப்பட்டார். ஓயாமல் அஞ்சி நடுங்கிக் கொண்டிருந்தார். குறிப்பாக இன்னதைக் குறித்த பயம் என்று இல்லாமல் மொத்தமாகப் பயந்து கொண்டிருந்தார். ஏழைக்கு ஏதாவது ஒன்றைக் குறித்து பயம் இருக்கும். பணக்காரனோ எல்லாவற்றுக்கும் பயந்து நடுங்குகிறான். எதையாவது ஒன்றைக் குறித்து நீங்கள் பயப்படுகிறீர்கள் என்றால் அதற்கு ஏதாவது பரிகாரம் தேட முடியும். ஆனால் அவர் காரணமில்லாமல் பயந்து கொண்டிருந்தார். ஏன் பயம் - என்ன பயம் என்றே அவருக்கு தெரியவில்லை. ஏனெனில் அவருக்கு எல்லாமே இருந்தது. அவர் பயப்பட தேவையே இல்லை. ஆனால் உள்ளபடியே அவர் பயந்து நடுங்கிக் கொண்டிருக்கிறார்.

மருத்துவமனைக்குள் நுழைந்தார் அவர். காலை உணவுக்கு சில பண்டங்கள் கொண்டு வரப்பட்டன. அவற்றில், ஒரு கோப்பையில் இருந்த தளும்பிக் கொண்டிருந்த இறைச்சிக் கொழுப்பும் அடங்கும். ''இதை என்னால் சாப்பிட முடியாது'' என்றார் அவர். ''இதற்கு ஏன் இவ்வளவு பிடிவாதம் பிடிக்கிறீர்கள்?'' என்றார் மருத்துவர். ''என்னைவிடவும் அதிகமாய் நடுங்கிக் கொண்டிருக்கும் எதையும் என்னால் சாப்பிட முடியாது'' என்றார் முல்லா.

பணக்காரன் பயந்து நடுங்கிக் கொண்டுதான் இருக்கிறான். ஆயின் அவனது பயத்துக்கு - படபடப்புக்கு அடிப்படை என்ன? அவன் ஏன் இவ்வளவு பீதியுடன் இருக்கிறான்? ஏனெனில் எல்லா ஆசைகளும் நிறைவேற்றிய நிலையிலும் கூட நிராசையே எஞ்சியுள்ளது. இனி அவனால் கனவுகாணக்கூட முடியாது. ஏனெனில் அவனது எல்லா கனவுகளும் நிறைவேறிவிட்டன. ஆனால் அவை அவனை எங்கும் கொண்டு சேர்க்கவில்லை. அவனால் கனவுகாணவும் முடியாது. தன் கண்களைத் திறப்பதற்கான துணிவையும் அவனால் சேகரித்துக் கொள்ள முடியாது. ஏனெனில் அதில் பல சிக்கல்கள் உள்ளன. தன் தூக்கத்தில் அவன் பல வாக்குறுதிகள் அளித்துவிட்டிருக்கிறான்.

ஒருநாள் இரவு தன் அரண்மனையிலிருந்து புத்தர் காணாமல் போனபோது, ''நான் போகிறேன்'' என்று தன் மனைவியிடம் சொல்லிக் கொள்ள அவர் விரும்பினார். பிறந்து ஒருநாளே ஆகி இருந்த குழந்தையை தொட்டுப் பார்க்க அவர் ஆசைப்பட்டார். ஏனெனில் இனி அவர் திரும்பிவரப் போவதில்லை. அறையின் கதவு வரை கூட அவர் போய்விட்டார். மனைவியைப் பார்த்தார். அவள் ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தாள். அவள் அப்போது கனவு கண்டு கொண்டு இருந்திருக்க வேண்டும் - அவள் முகம் அழகாக, புன்னகையுடன் காணப்பட்டது. கைகளில் குழந்தையுடன் உறங்கிக் கொண்டிருந்தாள். கதவருகில் நின்றபடி சில நொடிகள் தயங்கினார் அவர். பின் திரும்பிவிட்டார். முதலில் சொல்லிவிட்டுப் போக விரும்பினார். பின் அவருக்கு அச்சம் ஏற்பட்டு விட்டது. அவர் அதை சொல்லிவிட்டால், அவர் மனைவி நிச்சயம் அழுது புலம்பி ஓர் உணர்ச்சிக் கொந்தளிப்பை உருவாக்கி விடுவாள்.

தன்னைக் குறித்தும் அவருக்குப் பயம் இருந்தது. ஏனெனில் அவள் அழுது புலம்பினால்; ''நான் உன்னை என்றென்றும் காதலிப்பேன், நான் உன்னை என்றென்றும் காப்பாற்றுவேன்'' என்னும் தன் பழைய வாக்குறுதிகளையும் அவர் நினைவுக்குக் கொண்டுவர வேண்டி வரலாம். அத்துடன், பிறந்து ஒருநாளே ஆகியிருந்த இந்த பச்சிளம் குழந்தையின் நிலை என்ன? மேலும், குழந்தையை என்னிடம் அவள் தூக்கி நீட்டவும் நீட்டுவாள். ''நீர் எனக்கு செய்துவிட்டுப் போவதென்ன என்பதைப் பாரும். பின் ஏன் இந்த குழந்தையைப் பெறச் செய்தீர்? இனி இதற்கு அப்பா யார்? நான் மட்டுமா இதற்குப் பொறுப்பு? ஒரு பேடியைப் போல தப்பி ஓடுகிறீரே,'' என்று சொல்லுவாள். இந்த எண்ணங்கள் எல்லாம் அவருக்கு ஏற்பட்டன. ஏனெனில் தன் தூக்கநிலையில் பலவாறும் அவர் வாக்களித்திருக்கிறார். ஒவ்வொருவரும் வாக்குறுதிகளை வாரி வழங்குகிறார்கள் - அவற்றை தாம் எப்படி நிறைவேற்ற முடியும் என்பதை அறியாமலேயே. ஆனால் தூக்க நிலையில் இது நடந்துவிடுகிறது. ஏனெனில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதைப்பற்றி உணர்வு எவருக்கும் இருப்பதில்லை.

இந்தப் பிரச்சினைகள் எல்லாம் கிளம்பும் என்பதை உடனடியாக அவர் உணர்ந்துகொண்டார். உடனே குடும்பமே கூடிவிடும். அப்பா முதற் கொண்டு எல்லாமே வந்துவிடுவார்கள். அப்பாவுக்கு அவர் ஒரேமகன். அப்பா அவரை நல்லபடி கவனித்துக் கொண்டிருக்கிறார். தன் தூக்கத்தில் அவருக்கும் அவர் வாக்குறுதி தந்திருக்கிறார். எனவே மூச்சுக் காட்டாமல் நழுவினார். ஒரு திருடனைப் போலவே தப்பி ஓடிவிட்டார்.

பன்னிரண்டு ஆண்டுகள் கழித்து அவர் திரும்பிவந்ததும் அவர் மனைவி அவரிடம் கேட்ட முதல் கேள்வி, வீட்டைவிட்டு நீங்கிச் சென்ற அன்று இரவு அவர் மனதில் தோன்றிய அதே கேள்விதான். மனைவி கேட்டாள், ''ஏன் என்னிடம் சொல்லாமல் கொள்ளாமல் சென்றீர்கள்? நான் தெரிந்து கொள்ள விரும்புகிற முதல்விஷயம் இதுதான் - இந்த பன்னிரண்டு ஆண்டுகளாக உங்களுக்காக நான் காத்துக் கொண்டிருக்கிறேன், என்னிடம் ஏன் நீங்கள் சொல்லிக் கொள்ளவில்லை? இது என்ன நேசம்? நீங்கள் சும்மா என்னை விட்டுவிட்டுப் போய்விட்டீர்கள் நீங்கள் ஒரு கோழை.''

அமைதியாக கவனித்தார் புத்தர். மனைவி நிறுத்தியதும் அவர் சொன்னார், ''இந்த எண்ணங்கள் எல்லாம் எனக்கும் ஏற்பட்டன. கதவு வரை கூட வந்துவிட்டேன். கதவைத் திறந்தும் விட்டேன். உன்னைப் பார்த்தேன். என் தூக்கநிலையில் உன்னிடம் பல வாக்குறுதிகள் அளித்திருந்தேன். ஆனால் நான் விழிப்படையப் போய் கொண்டிருந்ததால் தூக்கத்திலிருந்து விடுபட்டுக் கொண்டிருக்கும்போது, தூக்கத்தில் அளித்த வாக்குறுதிகளை எல்லாம் என்னால் காப்பாற்ற முடியாது. அந்த வாக்குறுதிகளைக் காப்பாற்ற நான் முயன்றிருந்தால் பின் நான் விழிப்படைந்திருக்க முடியாது.

''நீ சொல்வதும் சரியே. நான் ஒரு கோழை என நீ நினைக்கலாம். அரண்மனையில் இருந்து ஒரு வீரனைப் போல் அல்லாமல் ஒரு கள்வனைப் போல் நான் தப்பி ஓடியதாக நீ கருதலாம். ஆனால் உனக்கு நான் சொல்கிறேன்: இதற்கு நேர் எதிரான கருத்தே உண்மை. ஏனெனில் நான் தப்பிச் சென்று கொண்டிருந்தபோது, அந்தக் கணத்தில் அதுவே எனக்கு மாபெரும் வீரச் செயலாக இருந்தது. ஏனெனில், 'இதுசரியல்ல, கோழையாக இராதே' என என் முழு இருத்தலும் என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தது. அதைக் கேட்டு நான் நின்று விட்டிருந்தால், தூக்கநிலையில் இருந்த என் ஜீவன் சொன்னதற்கு நான் செவிகொடுத்திருந்தால், பின் நான் விழிப்புணர்வு பெற வாய்ப்பே ஏற்பட்டிருக்காது.

''இப்போது நான் உன்னிடம் வந்திருக்கிறேன். இப்போது நான் ஒன்றைக் கூறினால் அதை என்னால் நிறைவேற்ற முடியும். ஏனெனில் விழிப்புணர்வு பெற்ற மனிதனால் மட்டுமே நிறைவேற்ற முடியும். அறியாமையில் இருக்கிற மனிதனால் எப்படி தான் கூறும் எதையும் நிறைவேற்ற முடியும்? இப்போது நான் உன்னிடம் வந்திருக்கிறேன். அன்றைக்கு அந்த கட்டத்தில் பேசாமல் நான் தங்கிவிட்டிருந்தால், ஒருபோதும் என்னால் உனக்கு எதையும் வழங்கி இருக்க முடியாது. ஆனால் இப்போது நான் என்னுடன் ஒரு மாபெரும் புதையலைக் கொண்டு வந்திருக்கிறேன். எனவே இப்போது உனக்கு என்னால் வழங்கமுடியும்.

அழாதே. தேம்பாதே. கண்களைத் திற. என்னைப் பார். அன்று இரவு உன்னை கைவிட்டுச் சென்ற அதே மனிதனாக இப்போது நான் இல்லை. இப்போது உன் வாசலுக்கு வந்திருப்பது முற்றிலும் வேறு ஒரு பிறவி. இப்போது நான் உன் கணவன் அல்லன். நீ என் மனைவியாக இருக்கலாம் ஏனெனில் அது உன் கண்ணோட்டம். என்னைப் பார் - நான் முற்றிலும் மாறுபட்ட ஒரு மனிதன். இப்போது உனக்கு நான் செல்வங்களைக் கொண்டு வந்திருக்கிறேன்: உன்னையும் விழிப்புள்ளவளாக, ஞானம் அடைந்தவளாக ஆக்க இப்போது என்னால் முடியும்.''

மனைவி கவனித்துக் கேட்டாள். எப்போதும் எல்லாருக்கும் ஏற் படுகிற அதே பிரச்சினை: குழந்தைப் பற்றி யோசிக்கத் தொடங்கி விட்டாள் அவள். அவளும் ஒரு துறவியாகி - அவளது முன்னால் கணவரும் இந்நாள் / பிச்சைக்காரரும் ஆகிய இந்த பரதேசியுடன் - அவளும் போய் விட்டால்.... குழந்தையின் கதி? மறுமொழி ஒன்றும் சொல்லவில்லை அவள். மாறாக புத்தரே சொன்னார்.'' இப்போது நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய் என்பது எனக்கு தெரிகிறது. ஏனென்றால் தூக்க நிலையில் வாக்குறுதிகள் வழங்கும் அந்தக் கட்டத்தைக் கடந்துதான் நானும் வந்திருக்கிறேன். அந்த நிலையில் எல்லாரும் கும்பலாக சேர்ந்துகொண்டு 'என்ன காரியம் செய்து கொண்டிருக்கிறாய்? உன் குழந்தை.....?' என்பார்கள். நீயும், குழந்தைக்கு இன்னும் கொஞ்சம் வயதாகட்டும், அவனுக்கு திருமணம் ஆகட்டும், அரண்மனையையும் அரசையும் ஆள முடியும் பக்குவம் அவனுக்கு வரட்டும். அப்புறம் நான் (இவரை) பின்தொடர்வேன்' என்று நினைப்பாய். ஆனால் ஒன்றை நினைவில் வை: எதிர்காலம் என ஒன்று இல்லை. நாளை என ஒன்றும் இல்லை. ஒன்று இப்போதே என்னுடன் கிளம்பு, இன்றேல் நீ என்னை ஒருபோதும் பின்தொடர்வதில்லை.''

ஆனால் அந்த மனைவி.... பொதுவாக பெண்மனம் ஆண் மனத்தை விட அதிக உறக்கநிலையில் உள்ளது. அதற்குக் காரணங்கள் உள்ளன: பெண் அதிகமாகக் கனவு காண்கிறாள்.. அதிகமும் நம்பிக்கைகளிலும் கனவு களிலுமே வாழ்கிறாள். அதிகமான தூக்க நிலையில்தான் அவள் இருக்க வேண்டி உள்ளது. இல்லாவிட்டால் அவள் தாயாகும்படி இயற்கை அவளை பயன்படுத்திக் கொள்வது கடினமாகும். பெண்ணானவள் ஆழமான மயக்க நிலையில் இருக்க வேண்டி உள்ளது அப்போதுதான் தன் கர்ப்பத்தில் ஒன் பது மாதங்கள் ஒரு குழந்தையை சுமக்கும் துன்பத்தை யும், பின் பேறுகாலத் துன்பத்தையும், பின் இந்தக் குழந்தையை வளர்க்கும் துன்பத்தையும் அவளால் தாங்கிக் கொள்ள முடியும். பின் ஒருநாள் இந்தக் குழந்தை எளிதாக அவளை விட்டுவிட்டு இன்னொரு பெண்ணிடம் போகிற போதும்... அவளே துன்புற வேண்டி உள்ளது.

இது அப்படி ஒரு நீண்ட, நெடிய துன்பம். எனவே ஆணைவிடவும் பெண் அதிக உறக்கநிலையிலேயே இருந்து தீரவேண்டி உள்ளது. இல்லாவிட்டால் இவ்வளவு அதிக துன்பத்தை எப்படி ஒருவரால் தாங்க முடியும்? இதற்குப் பிறகும் அவள் எதிர்பார்க்கிறாள். இன்னொரு குழந்தையை எதிர்பார்க்கிறாள். பின் இன்னொரு குழந்தையை எதிர்பார்க்கிறாள். இப்படி அவளது வாழ்க்கை முழுவதுமே வீணாகிறது.

எனவேதான் புத்தர் சொன்னார், ''நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய் என்பதை நான் அறிவேன். என்னைவிட நீ பெரிய கனவுகளுடையவள். என்பதையும் நான் அறிவேன். ஆனால் உன் தூக்கத்தின் ஆணிவேர்கள் அனைத்தையும் அறுத்தெறியவே இப்போது நான் வந்திருக்கிறேன். குழந்தையை கொண்டுவா. எங்கே என் மகன்? அவனை அழைத்து வா'' என்றார். பெண்மனம் மறுபடியும் ஒரு தந்திரம் செய்துபார்க்கிறது: மகன் ராகுலனை அவள் அழைத்து வருகிறாள். பையனுக்கு அப்போது பன்னிரண்டு வயதாகி இருந்தது. அவள் சொன்னாள், ''இவர்தான் உன் அப்பா. பிச்சைக்காரராகி வந்திருக்கும் அவரைப் பார். பார்த்து பிதுரார்ஜிதம் - மரபுரிமை என்ன என்று கேள். இவர்தான் உனக்கு அப்பா. இவர் ஒரு கோழை! என்னிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் திருடனைப் போல தப்பி ஓடியவர். நீ பிறந்து ஒரு நாளே ஆகியிருந்த நிலையில் உன்னை கைவிட்டு போய்விட்டவர். அவரிடம் உனது பரம்பரை செல்வத்தை கேள்!'' என்றாள்.

புத்தர் சிரித்தார். ''என் பிச்சைப் பாத்திரத்தைக் கொண்டு வா'' என்று ஆனந்தரிடம் சொன்னார். அதை ராகுலன் கையில் கொடுத்து சொன்னார், ''இதுவே என பிதுரார்ஜிதம். உன்னை ஒரு பிட்சுவாக ஆக்குகிறேன். உனக்கு தீட்சை வழங்கினேன். இனி நீ ஒரு துறவி.''மேலும் தன் மனைவியிடம் அவர் கூறினார்'', நான் ஆணிவேரையே அறுத்துவிட்டேன் இனி கனவுகள் தேவை இல்லை. நீயும் விழித்துக்கொள்; இதுதான் வேர் - ராகுல் சன்யாசி ஆகிவிட்டான் நீயும் விழி. யசோதரையே நீயும் விழு - ஒரு சன்யாசினியாகமாறு என்றார்.

எங்கே தூக்கம் விழிப்புணர்வாக மாறுகிறதோ அந்த மாறுதல் கட்டத்தில் நீங்கள் இருக்கும் போதுதான் எப்போதும் 'அந்தத் தருணம்' வருகிறது. கடந்த காலம் உங்களை பின்னுக்கு இழுத்துப் பிடிக்கும். கடந்த காலத்துக்கு ஆற்றல் அதிகம்தான். தூக்கமாக இருக்கும் மனிதருக்கு எதிர்காலம் என்பதே ஆற்றல் குறைந்ததாக உள்ளது. தூக்க நிலையில் இல்லாத மனிதருக்கு வருங்காலமே ஆற்றல் மிக்கதாக இருக்கிறது. ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருக்கும் மனிதருக்கோ கடந்தகாலமே ஆற்றல் மிக்கதாக தெரிகிறது. ஏனெனில் ஆழ்ந்து உறங்கும் மனிதர் கனவுகளை மட்டுமே

அறிவார். அவை அவரது கடந்தகாலத்தில் அவர் கண்ட கனவுகளே. வருங்காலம்பற்றி எதையும் அவர் உணர்ந்திருக்கவில்லை. எதிர்காலம்பற்றி அவர் எண்ணினாலும்கூட அது மீண்டும் அவரது கடந்த காலத்தின் வெறும் பிரதிபலிப்பு மட்டும்தான். விழிப்பாயிருக்கிற மனிதர் மட்டுமே வருங்காலம் பற்றியும் விழிப்பானவர் ஆகிறார். பிறகு இறந்தகாலம் என்பது ஒன்றும் இல்லை.

இதை மனதில் கொள்ளுங்கள்: இப்பொழுது உங்களால் புரிந்துகொள்ள முடியாமல் போகலாம். ஆனால் ஒருநாள் நீங்கள் புரிந்து கொள்ளலாம். தூக்கமாக இருக்கும் மனிதருக்கு விளைவைவிட காரணமே அதிக ஆற்றலுடையதாகத் தெரிகிறது. மலரைவிட விதையே அதிக ஆற்றலுடையதாக தெரிகிறது. விழிப்பாயிருக்கிற மனிதருக்கு காரணத்தை விட விளைவே அதிக ஆற்றலுடையதாக இருக்கிறது. விதையைவிட மலரே அதிக ஆற்றலுடையதாக இருக்கிறது. 'காரணம் விளைவை உருவாக்கு கிறது, விதையே மலரை உருவாக்குகிறது' என்பது தூக்கத்தின் தர்க்கம் ஆனால் விழிப்பின் தர்க்கம் நேர் எதிரானது: பூவே விதையை உற்பத்தி செய்கிறது, விளைவே காரணத்தை உருவாக்குகிறது என்பது விழிப்பின் தர்க்கம். எதிர்காலமே இறந்தகாலத்தை உருவாக்குகிறது. இறந்த காலம் எதிர்காலத்தை உருவாக்குவதில்லை. ஆனால் தூக்க மனத்துக்கு இறந்ததே - கடந்த காலமே - கழிந்துபோனதே அதிக ஆற்றலுடையதாக இருக்கிறது அது அப்படி இல்லை....

நிகழஇருப்பதே அதிக ஆற்றலுடையது: பிறக்க இருப்பதே அதிக ஆற்றலுடையது. ஏனெனில் அதில்தான் உயிர் இருக்கிறது. முடிந்து போனதில் உயிர் இருப்பதில்லை. பின் எப்படி அது ஆற்றலுடையதாக இருக்க முடியும்? இறந்தகாலமானது ஏற்கனவே கல்லறையில் இருக்கிறது. உயிர் ஏற்கனவே அதிலிருந்து கடந்து போய் விட்டிருக்கிறது. எனவேதான் அது கடந்த காலத்ததாகி இருக்கிறது. உயிர் அதைவிட்டுப் போய் விட்டது. ஆனால் உங்களைப் பொறுத்தவரை கல்லறையே அதிக ஆற்றலுடைய தாகத் தெரிகிறது. வர இருப்பது, பிறக்க இருப்பது, புத்தம் புதியது, நிகழப் போவது - இவையே விழிப்புணர்வு பெற்ற மனிதருக்கு அதிக ஆற்றலுடையவையாக தெரிகின்றன. இறந்த காலத்தால் அவரை இழுத்துப் பிடித்து நிறுத்திக் கொள்ள முடியாது.

இறந்த காலம் உங்களைப் பின்னுக்கு இழுக்கிறது உங்களை தடுத்து நிறுத்துகிறது. கடந்த காலப் பொறுப்புகளைக் குறித்தே எப்போதும் நீங்கள் கவலைப்படுகிறீர்கள். கல்லறையைச் சுற்றியே எப்போதும் வட்டமிடுகிறீர் கள். பிணங்களுக்கு மரியாதை செய்ய திரும்பத் திரும்பக் கல்லறைக்குப்

போய் வருகிறீர்கள். அதைவிடுத்து, பிறக்க இருப்பவற்றுக்கே எப்போதும் மரியாதை செய்யுங்கள். ஏனெனில் அதில்தான் உயிர் இருக்கிறது.

**இடைக்கட்டங்கள் இல்லாமல் ஒருவிதை எப்படி மலராக முடியும் என்பதை தயவு செய்து விளக்குவீர்களா?**

ஆம், அது மலராக முடியும். ஏனெனில் ஏற்கனவே அது மலராகவே இருக்கிறது. அந்த மலரானது விதையை உருவாக்குகிறது. விதை மலரை உருவாக்குவதில்லை. மலரே இருக்கப் போகிறது. முழு விதையையும் அதுவே படைத்திருக்கிறது. ஆனால் நீங்கள் நினைவில் கொள்ள வேண்டியது: உங்களுக்கு ஒரு திறப்பு மட்டுமே தேவை என்பதாகும். கதவுகளைத் திறவுங்கள். சூரியன் அங்கே ஏற்கனவே உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. உயிர் வாழ்க்கை என்பது உண்மையில் இருத்தலில் ஒரு முன்னேற்றப் போக்கு அல்ல. தூக்க நிலையிலேயே அது ஒரு முற்போக்கு போல் தோன்றுகிறது.

இருத்தல் /ஜீவன் /உயிர்/வாழ்வு ஏற்கனவே இங்கு இருக்கிறது. எல்லாமே ஏற்கனவே செம்மையாக, முழுமையாக, பேரின்ப நிலையில் உள்ளன. அதனுடன் எதையும் சேர்க்க முடியாது. அதில் எதையும் மேம்படுத்த வழி இல்லை. பின் என்ன தேவை? நீங்கள் உணர்வு பெற்றவராகி, அதைப்பார்ப்பது மட்டுமே தேவை. இரண்டு வழிகளில் இது நிகழமுடியும். ஒன்று, உங்களை உங்கள் உறக்கத்திலிருந்து உலுக்கி எழுப்ப முடியும். இதுதான் ஸென். அல்லது உங்களை உங்கள் உறக்கத்திலிருந்து இணக்கமான முறையில் வெளிக் கொண்டு வர முடியும். அதுதான் யோகம். ஏதாவது ஒன்றை எடுங்கள் இரண்டுக்கும் இடையில் தொங்கிக் கொண்டிருக்காதீர்கள்.

**இரண்டாம் கேள்வி:**

**இறைவனிடம் சரணடைவதும் குருவினிடம் சரணடைவதும் ஒன்றுதானா?**

சரணாகதி என்பது, எதனிடம் சரணடைகிறோம் என்பதைப் பொறுத்ததல்ல. உங்கள் ஜீவனுக்குள் நீங்கள் கொண்டுவரும் ஒரு தன்மையாகும் அது. யாரிடம் நீங்கள் சரணடைகிறீர்கள் என்பது முக்கியமில்லை. எதனிடம் வேண்டுமானாலும் சரணடையலாம். ஒரு மரத்திடம் நீங்கள் சரணடைய முடியும். ஒரு நதியிடம் நீங்கள் சரணடைய முடியும். உங்கள் துணைவியிடம், துணைவரிடம், குழந்தையிடம் என யாரிடமும் நீங்கள் சரண் அடைய முடியும். புறப்பொருள் அல்ல முக்கியம். எந்தப் பொருளாயினும் போதும். சரணாகதிதான் முக்கியம்.

சரணடைவதாலேயே அற்புதம் நிகழ்கிறது. இன்னாரிடம் சரணடைந் தால்தான் நிகழும் என்பது இல்லை. மேலும் நீங்கள் புரிந்து கொள்ள வேண்டிய மிக அருமையான விஷயம் என்னவென்றால், யாரிடம் / எதனிடம் நீங்கள் சரணடைவீர்களோ அதுவே உங்களின் கடவுள் ஆகிறது. கடவுளிடம் சரண் புகுதல் என்னும் பேச்சுக்கே இடமில்லை. சரணடைவதற் கான கடவுளை எங்கே போய் தேடுவீர்கள்? உங்களால் கண்டுபிடிக்கவே முடியாது. முதலில் சரணடைதல்! எங்கே நீங்கள் சரணடைகிறீர்களோ அங்கே கடவுள் இருக்கிறார். குழந்தை கடவுளாக முடியும். கணவன் கடவுளாக முடியும். மனைவி கடவுளாக முடியும். குரு கடவுளாக முடியும். ஏன், ஒரு கல்கூட கடவுளாக முடியும்.

கற்கள் மூலம்கூட மக்கள் அதை அடைந்திருக்கிறார்கள். ஏனெனில் எதனிடம் நீங்கள் சரணடைகிறீர்கள் என்பது ஒரு பிரச்சினையே அல்ல. நீங்கள் சரணடைகிறீர்கள். அதுவே மொத்த மாறுதலையும் கொண்டு வருகிறது. அதுவே வாசல் கதவை திறக்கிறது. சரணாகதியானது, சரணடை வதற்கான முயற்சியானது, உங்களுக்கு ஒரு திறப்பைத் தருகிறது. ஒரு கல்லின் முன்னிலையில் நீங்கள் திறந்த தன்மையோடு இருந்தால் மொத்த பிரபஞ்சத்துக்கும் நீங்கள் திறந்தவராக ஆகிறீர்கள். ஏனெனில் திறந்த தன்மை என்பது மட்டுமே தேவை. கல்லிடம் நீங்கள் திறந்த தன்மையில் இருக்கும்போது, மரத்திடம் நீங்கள் எப்படி திறந்த தன்மையில் இல்லாதிருக்க முடியும்? திறந்த தன்மையை ஒருமுறை நீங்களும் அறிந்துவிட்டாலே; அது கொண்டுவரும் அகமகிழ்வை ஒருதடவை நீங்கள் அனுபவித்து விட்டாலே; ஒரு சாதாரணக் கல்லின்முன் திறந்து கொள்வதால் கூட பரவசம் ஏற்படுவதை ஒருமுறை நீங்கள் உணர்ந்து விட்டாலே, பின் மீதப் பிரபஞ்சம் முழுவதற்கும் தன்னை மூடிக்கொள்பவனைப் போன்ற முட்டாளை நீங்கள் வேறெங்கும் காண முடியாது. ஒரு கல்லிடம் திறந்து கொள்ளும்போது கூட அவ்வளவு பரவசம் ஏற்படுமானால் பின் ஏன் எல்லாவற்றுக்குமே (உங்களை ) திறந்து விடக் கூடாது?

தொடக்கத்தில் ஒருவர் குறிப்பிட்ட ஏதோ ஒன்றிடம் சரணடைகிறார். பின் எல்லாவற்றிடமும் அவர் சரணடைகிறார். ஒரு குருவிடம் நீங்கள் சரணடைந்தால் அந்த சரணாகதி அனுபவத்தில் ஒரு வழியே நீங்கள் கற்றுக் கொள்கிறீர்கள் என்பதே இதன் பொருள். இப்போது அனைத்திடமும் நீங்கள் சரணடைய முடிகிறது. நீங்கள் கடந்து செல்வதற்கான ஒரு வழியாகவே குரு இருக்கிறார். அவர் ஒரு வாயிலாக ஆகிறார். அந்த வாயிலின் வாயிலாக முழுவதையும் நீங்கள் காண முடிகிறது. சரணடைவதற்கு வேண்டிய கடவுளை நீங்கள் கண்டுபிடிக்க முடியாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஆனால் பலரும் அப்படித்தான்

நினைக்கிறார்கள். இவர்கள் மிகவும் தந்திரமான மனிதர்கள். ''கடவுள் உண்டு என்றால் நாங்கள் அவரிடம் சரணடைவோம்'' என இவர்கள் நினைக்கிறார்கள். அப்படியானால் அது நடக்கவே போவதில்லை. ஏனெனில் சரணடைந்தால் மட்டுமே கடவுள் இருக்கிறார். சரணாகதியானது எதையும் கடவுளாக மாற்றிவிட வல்லது சரணாகதி உங்களுக்கு கண்களைத் தருகிறது. அந்த கண்களின்முன் வருவது எதுவாயினும் அது கடவுளாகிறது. இறைமை, தெய்விகம் என்பதெல்லாம் சரணாகதி வழங்கும் ஒரு தன்மையாகும்.

இந்தியாவில் கிறிஸ்தவர்கள், யூதர்கள், முகமதியர்கள் ஆகியோர், இந்தியாவில் இந்துக்களைப் பார்த்துச் சிரிக்கிறார்கள். ஏனெனில் இந்துக்கள் ஒரு மரத்தை வழிபட்டுக் கொண்டிருக்கலாம். அல்லது ஒரு கல்லை கும்பிட்டுக் கொண்டிருக்கலாம். அந்தக் கல் செதுக்கப்பட்டுக் கூட இராது. ஒரு சிலை வடிவில் கூட இருக்காது. பாதை ஓரத்தில் இருந்த ஒரு கல்லை அவர்கள் கண்டெடுப்பார்கள்; அப்படியே அதை ஒரு கடவுள் ஆக்கிவிடுவார்கள். எந்தவித கலைஞரும் தேவையில்லை. ஏனெனில் சரணாகதிதான் கலை. சிற்பமாகச் செதுக்க தேவையில்லை. விலை உயர்ந்த கல்லாக இருக்க வேண்டியதில்லை. பளிங்குக் கல்லாக இருக்கவும் தேவையில்லை. எந்த ஒரு சாதாரணமான - புறக்கணிக்கப்பட்டுக் கிடக்கிற - கூழாங்கல்லையும் கூட (அதை சந்தையில் விற்க முடியாது, எனவேதான் அது யாராலும் கண்டு கொள்ளப்படாமல் தெருவோராம் கிடக்கிறது) உடனடியாக ஒரு கடவுளாக ஆக்கிவிட இந்துக்களால் முடிகிறது நீங்கள் சரணடைந்தால் அது கடவுள் தன்மையதாகிறது. சரணடைந்தோரின் கண்களுக்கு எல்லாவிடத்தும் கடவுள் தன்மையைத் தவிர வேறு எதுவுமே தென்படுவதில்லை.

மற்றவர்கள் சிரிக்கிறார்கள். அவர்களுக்கு விளங்குவதில்லை. இவர்கள் கல்லைக் கும்பிடுபவர்கள், சிலை வழிபாடாளர்கள் என்று அவர்கள் நினைக்கிறார்கள். அப்படி இல்லை! இந்துக்கள் தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் விக்கிரக ஆராதனையாளர் கள் அல்லர். அவர்கள் ஒரு திறவுகோலைக் கண்டுபிடித்துள்ளார்கள். அது என்னவென்றால், நீங்கள் சரணடைந்தால் எதையும் உங்களால் கடவுள் தன்மையதாக ஆக்க முடியும் என்பதாகும். நீங்கள் சரணடையாவிட்டால் பின் நீங்கள் கோடிக்கணக்கான பிறவிகளாகக் கடவுளைத் தேடிக் கொண்டே போக முடியும். ஆனால் ஒருபோதும் அவரை நீங்கள் கண்டுகொள்ள மாட் டீர்கள். ஏனெனில் கண்டு கொள்வதற்கான தன்மை, சந்திக்க முடிவதற்கான மனப்பான்மை உங்களிடம் இல்லை. எனவே சரணடையும் மனநிலையே முதன்மையானது. யாரிடம் சரணடைகிறோம் என்னும் புறநிலை முதன்மையானதல்ல.

ஆயினும் கண்டிப்பாக பிரச்சினைகள் உள்ளன. திடீரென ஒரு கல்லிடம் நீங்கள் சரணடைந்து விட முடியாது. ஏனெனில், ''இது வெறும்'' கல்தான். என்ன காரியம் செய்து கொண்டிருக்கிறாய்?'' என்ற உங்கள் மனம் சொல்லிக் கொண்டே இருக்கும். அப்படி மனமானது, ''இது வெறும் கல்தான் என்ன காரியம் செய்துகொண்டிருக்கிறாய்?'' என்று தொடர்ந்து கேட்டுக்கொண்டே இருக்குமானால் உங்களால் சரணடைய முடியாது. ஏனெனில் சரணடைய உங்களின் முழுமை தேவைப்படுகிறது.

இங்குதான் குருவின் முக்கியத்துவம் வருகிறது. குரு என்றால் எல்லைக் கோட்டில் - மனிதத்துக்கும் இறைமைக்கும் இடையிலான எல்லைக் கோட்டில் - நின்று கொண்டிருக்கும் ஒருவர் என்று பொருள். அவரும் உங்களைப் போலவே ஒரு மனிதப் பிறவியாக இருந்தவர்தான். ஆனால் இப்போது அவர் உங்களைப் போல் இல்லை. அவருக்குள் ஏதோ வேறு ஒன்று நிகழ்ந்திருக்கிறது. ஏதோ ஒன்றுகூடியவராக இருக்கிறார் அவர். மனிதத் தன்மையுடன், கூட ஒன்றும் அவருக்குள் சேர்ந்து இருக்கிறது. எனவே அவரது கடந்த காலத்தை நீங்கள் நோக்கினால் அவர் உங்களைப் போலவே இருக்கிறார். ஆனால் அவரது நிகழ்காலத்தையும் வருங் காலத்தையும் நீங்கள் நோக்கினால் அந்த கூடுதலை நீங்கள் பார்க்கிறீர்கள். அப்போது அவர் இறைத்தன்மையில் இருக்கிறார்.

ஒரு கல்லிடமோ நதியிடமோ சரணடைவது கடினம். மிகமிக கடினம். ஒரு குருவிடம் சரணடைவது கூட மிகவும் கடினமானதே. அப்படியானால் ஒரு கல்லின் முன் சரணடைவது மிகவும் கடினமாகவே இருக்கும். ஏனெனில் நீங்கள் ஒரு குருவை பார்க்கும் போதெல்லாம் இவரும் உங்களைப் போன்ற ஒரு மனிதப் பிறவிதானே என்று மீண்டும் மீண்டும் உங்கள் மனது சொல்லுமானால் பின் ஏன் அவரிடம் சரணடைய வேண்டும்? மேலும் உங்கள் மனத்தால் நிகழ்காலத்தை / கண்முன் இருப்பதை பார்க்க முடியாது. கடந்த காலத்தை மட்டுமே மனதால் காண முடியும். அதாவது இந்த மனிதர் உங்களைப் போலவே பிறந்தார்; உங்களைப் போலவே உண்ணுகிறார், உறங்குகிறார். அப்படியானால் அவரிடம் போய் ஏன் சரணடைய வேண்டும்? அவரும் உங்களைப் போலவே தானே இருக்கிறார்?

ஆம். அவர் அப்படி இருக்கிறார். அப்படி இல்லாமலும் இருக்கிறார். அவர் யேசுவாகவும் இருக்கிறார், கிறிஸ்துவாகவும் இருக்கிறார். யேசு என்னும் மனிதனாக, ஒரு மனிதனின் மகனாக இருக்கிறார். கிறிஸ்து என்னும் கூடுதல் அம்சமாகவும் இருக்கிறார். கண்ணுக்குப் புலப்படுவதை மட்டுமே நீங்கள் கவனித்தால் அவர் கல்தான். அவரிடம் உங்களால் சரணடைய முடியாது. நீங்கள் நேசித்தால், நீங்கள் அந்நியோந்நியம்

ஆனால், அவரது (அவர் இருப்பை) பிரசன்னம் உங்களுக்குள் ஆழ்ந்து செல்ல நீங்கள் அனுமதித்தால், ஓர் - ஆம், அவரது ஜீவனுடன் உங்கள் ஜீவனின் ஓர் ஒத்திசைவை /ஆன்மநேயத்தை - உங்களால் கண்டுகொள்ள முடிந்தால் திடீரென இந்த கூடுதல் அம்சத்தை நீங்கள் உணர்ந்தவர் ஆகிறீர்கள். அவர் மனித அம்சத்திலும் கூடுதலானவர். அறியப்படாத ஏதோ ஒரு முறையில், நீங்கள் பெற்றிராத ஏதோ ஒன்றை அவர் பெற்றிருக்கிறார். புலப்படாத ஏதோ ஒரு வழியில், மனிதத் தன்மைக்கு அப்பாலும் அவர் ஊடுருவி இருக்கிறார். ஆனால் உங்களுக்குள் ஓர் ஒத்திசைவு /ஆன்மநேயம் இருந்தால் மட்டுமே அதை உங்களால் உணரமுடியும்.

- அதைத்தான் பதஞ்சலி சிரத்தை - ஈடுபாடு என்கிறார். சிரத்தை ஒத்திசையை உருவாக்குகிறது. ஒத்திசைவு என்பது கண்ணுக்கு புலப்படாத இரண்டுக்கிடையிலான உள் இணக்கமாகும். அன்பு ஓர் ஒத்திசைவாகும். சிலருடன் நீங்கள் எளிதாகப் பொருந்துகிறீர்கள் - நீங்கள் இருவரும் ஒருவர் மற்றவருக்காகவே பிறந்ததுபோல். அதை நீங்கள் காதல் என்கிறீர்கள். ஒரே கணத்தில், முதல் பார்வையிலேயே, சிலர் எளிதாக உங்களுடன் ஒட்டிக் கொண்டு விடுகிறார்கள். - நீங்கள் இருவரும் ஒட்டியே பிறந்து பின் பிரிக்கப்பட்டு விட்டது போலவும், இப்போது மறுபடியும் சந்தித்துக் கொண்டது போலவும்.

உலகம் முழுவதிலும் உள்ள பழைய புராணங்களில் ஆணும் பெண்ணும் ஒன்றாகவே படைக்கப்பட்டதாக சொல்லப்பட்டுள்ளது. இந்திய புராணங்களில் மிகவும் அழகான ஒரு பழங்கதை உள்ளது. அதன்படி மனைவியும் கணவனும் ஆதியில் இரட்டைப் பிறவிகளாக, உடன்பிறப்புக ளாகவே படைக்கப்பட்டார்கள். இருவரும் சேர்ந்தே பிறந்தார்கள். மனைவியும் கணவனும் இரட்டைக் குழந்தைகளாக, ஒரே கருப்பையில் ஒருவரோடொருவர் பொருந்தி இருந்தார்கள். வெகு தொடக்கத்தில் இருந்தே ஓர் ஒத்திசைவு நிலவியது. முதல் கணத்திலிருந்தே ஓர் ஒத் திசைவு இருந்தது. ஒரே கர்ப்பத்தில் ஒருவரை ஒருவர் அணைத்தபடி அவர்கள் சேர்ந்திருந்தார்கள். அதுவே ஒத்திசைவு பின் ஏதோ துரதி ருஷ்டவசத்தால் அந்த நேசம் பூமியிலிருந்து மறைந்துவிட்டது.

ஆனால் இன்னும் ஓர் உறவு உள்ளது என அந்த பழங்கதை கூறுகிறது. ஓர் ஆணும் ஓர் பெண்ணும்...ஒரு ஆண் இங்கே பிறந்திருக்க லாம். பெண் ஆப்பிரிக்காவில், அல்லது அமெரிக்காவில் அல்லது வேறெங்காவது பிறந்திருக்கலாம். ஆனாலும் ஒத்திசைவு உள்ளது. அவர்கள் ஒருவரை ஒருவர் கண்டுபிடிக்காத வரை சிரமம்தான். மேலும் ஒருவரை ஒருவர் கண்டுகொள்வதும் மிகவும் கடினமானதே. உலகம் மிகப்

பெரிது. எனவே எங்கே தேடுவது, எங்கே கண்டுபிடிப்பது என்பது உங்களுக்கு தெரியாது. அது நிகழ்ந்தால், தற்செயலாகவே நிகழ்கிறது.

இப்போது அறிவியலாரும், கூடிய விரைவில் அந்த அறிவியல் கருவிகள் மூலம் மதிப்பிட - அளவிட முடியுமென நம்புகிறார்கள். அதன் படி திருமணம் செய்து கொள்ளுமுன் அந்த ஜோடி ஒரு சோதனைச் சாலைக்குப் போய் அவர்களின் உடல் ஆற்றல் பரஸ்பரம் பொருந்துகிறதா இல்லையா என கண்டு பிடித்துக் கொள்ள முடியும். அது ஒத்து வரவில்லை என்றால், பின் அவர்களின் காதல் ஓர் ஏமாற்றம் தான். அந்தத் திருமணம் வெற்றிபெறாது....தாம் மிகவும் மிகழ்ச்சியாக இருப்போம் என அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் அவர்களால் முடியாது. ஏனெனில் /உள் உடல் ஆற்றல் பொருந்தி வரவில்லை.

எனவே ஒரு பெண்ணின் மூக்கு உங்களுக்குப் பிடித்திருக்கலாம். உங்கள் கண்கள் அந்தப் பெண்ணுக்கு பிடித்திருக்கலாம். ஆனால் அது முக்கியம் அல்ல. கண்கள் மீதான பிரியம் பயன்படாது. மூக்கின் மேலுள்ள விருப்பம் உதவாது. ஏனெனில் இரண்டு நாள்களுக்குப் பின் மூக்கை யாரும் நோக்குவதில்லை. கண்களை யாரும் கண்டுகொள்வதில்லை. அதன்பின் உயிராற்றலே பிரச்சினை. உள் ஆற்றல்கள் சந்தித்து ஒன்றுடன் ஒன்று கலந்தால் ஈர்ப்பு நீடிக்கும். இல்லாவிட்டால் அவர்கள் ஒருவரை ஒருவர் மறுக்கச் செய்வார்கள். இது உங்களுக்கு இரத்தம் ஏற்றுவதைப் போன்றதே. உங்கள் உடல் அதை ஏற்றுக் கொள்கிறது அல்லது நிரா கரிக்கிறது. ஏனெனில் இரத்தத்தில் பல பிரிவுகள் உள்ளன. ஒத்த பிரிவை சேர்ந்ததாய் இருந்தால் மட்டுமே உடல் அதை ஏற்கிறது. இல்லாவிட்டால் முற்றிலுமாக மறுத்துவிடுகிறது.

திருமணத்திலும் இதுவே நிகழ்கிறது. உடலாற்றலுக்கு ஏற்புடை தாயின் ஏற்றுக் கொள்கிறது. இதை அறிந்து கொள்ள அறிவுபூர்வமான வழி ஏதும் இல்லை. அன்பு - காதல் என்பது மிகவும் போலியான ஒன்று. ஏனெனில் காதல் என்பது எப்போதும் ஏதாவது ஒரு குறிப்பிட்ட அம்சத்தின் மீது மட்டுமே கவனத்தைக் குவிக்கிறது. அந்தப் பெண்ணின் குரல் இனிமை, அதில் நீங்கள் மயங்கிப் போகிறீர்கள். ஆனால் அது முழுமை அல்ல. அது ஒரு பகுதிதான். முழுமையும் பொருந்த வேண்டும். உங்கள் இருவரின் உடல் - ஆற்றல்களும் ஒன்றை ஒன்று மிக முழுமையாக ஏற்றுக் கொள்ள வேண்டும் - எந்த அளவுக்கெனில் உங்கள் ஆழத்தில் நீங்கள் இருவரும் ஒருவராக ஆகிறீர்கள். இதுவே ஒத்திசைவு. காதலில் இது அரிதாகவே கைகூடுகிறது. எனில் இதை அறிந்து கொள்வது எப்படி? இது இன்னும் கடினமே. காதல் வயப்படுவதே உறுதியான அளவுகோல் ஆகிவிடாது.

ஆயிரம் ஜோடிகளில் தொளாயிரத்து தொண்ணூற்று ஒன்பது ஜோடிகள் பொருந்தாமலே போகின்றன. காதல் வெற்றிபெறாத ஒன்று என்பது நிரூபணமாகிவிட்டது.

அதைவிட அதிகமான ஒருமைப்பாடு, ஓர் ஆசானுடன் ஏற்படுகிறது. காதலைவிட பெரியது அது. அதுதான் சிரத்தை (விஷ்வாசம்)- ஈடுபாடு உங்கள் உடல் ஆற்றல்கள் மட்டுமல்ல, உங்கள் ஆன்மாக்களே சந்தித்து ஒன்றாகப் பொருந்துகின்றன. எனவேதான் ஒருவர் சீடராக ஆனதும் அவர் பித்தராகி விட்டார் என உலகம் முழுவதுமே நினைக்கிறது. ஏனெனில் அதிலுள்ள சூட்சுமத்தை முழு உலகத்தாலும் காண முடிவதில்லை. இந்த மனிதரின் பின்னால் ஏன் நீங்கள் பைத்தியமாகிப் போய்க் கொண் டிருக்கிறீர்கள்? மேலும், உங்களாலும் அதனை விளக்கிக்கூற முடிவதில்லை. ஏனெனில் அதை விளக்க முடியாது என்னதான் நிகழ்ந்துள்ளது என்பதை நீங்களே கூட உணர்வுபூர்வமாக அறியாதிருக்கலாம். ஆனால் திடீரென ஒரு மனிதரிடம் உங்களுக்கு ஈடுபாடு ஏற்படுகிறது. திடீரென ஏதோ ஒன்று சந்திக்கிறது. ஒன்றாகிறது. அதுதான் ஒத்திசைவு. (அந்யோன்யம்)

அத்தகைய ஒத்திசைவை ஒரு கல்லுடன் கொண்டிருத்தல் கடினம். ஏனெனில் உயிருள்ள ஒரு குருவுடன் கூட அத்தகைய ஒத்திசைவைக் கொண்டிருத்தல் கடினம் என்கிறபோது, ஒரு கல்லிடம் உங்களுக்கு ஒத்திசைவு எப்படி வரும்? ஆனால் அது நிகழுமானால், உடனடியாக அந்த குரு உங்களுக்கு கடவுளாகிறார். சீடருக்கு குரு எப்போதும் கடவுள்தான். மற்றவர்களுக்கு அவர் கடவுளாக இல்லாமல் இருக்கலாம். அதுவல்ல விஷயம். ஆனால் ஒரு சீடருக்கு குரு தான் கடவுள். அவர் வாயிலாக தெய்விகத்தின் கதவுகள் திறக்கின்றன. இப்போது உங்களிடம் திறவுகோல் இருக்கிறது. உள் ஒத்திசைவே திறவுகோல். சரணாகதியே திறவுகோல். இனி நீங்கள் முயன்று பார்க்க முடியும்: உதாரணத்திற்காக ஒரு நதியிடம் சரணடைந்து பாருங்கள்...

ஹெர்மன் ஹெஸ்ஸின் 'சித்தார்த்தா' நூலை நீங்கள் வாசித்திருப் பீர்கள். அவன் நதியிடமிருந்து பல விஷயங்களை கற்றுக் கொள்கிறான். நதியைக் கவனித்தபடி இருப்பதன்மூலம் தெரிந்துகொள்கிற நதியின் அநேகவிதமான வெளிப்பாடுகளை / சாயல்களை ஒரு புத்தரிடமிருந்து கூட நீங்கள் கற்றுக் கொள்ள முடியாது. அவன் ஒரு படகோட்டியாகி நதியை சூழ்ந்திருக்கிற ஆயிரக்கணக்கான சூழ்நிலைகளை வெறுமனே கவனித்த படி இருக்கிறான். சில நேரங்களில் நதி மகிழ்ச்சியாக, கும்மாளத்துடன் நடைபோடுகிறது. சில நேரங்களில் மிகமிக சோகமாக, அசைவே இல்லாதது போல் இருக்கிறது. சில நேரங்களில் மிகவும் கோபமாக, முழு பிரபஞ்சத்துக்கும் எதிராக ஆர்ப்பரித்துக் கொண்டு செல்கிறது. சில

நேரங்களில் ஒரு புத்தரைப் போல் அவ்வளவு அமைதியாக சமாதானமாக இருக்கிறது. இத்தனைக்கும் சித்தார்த்தன் ஒரு சாதாரண படகோட்டிதான். நதியைக் கடக்க உதவுபவன். நதியின் அருகில் வாழ்ந்தபடி, நதியையே கவனித்தபடி இருப்பவன். செய்வதற்கு வேறு எதுவும் இல்லாதவன். அது ஓர் ஆழமான தியானம் ஆகிறது. ஓர் ஒத்திசைவு ஆகிறது. நதியின் மூலம் அதன் ''நதித் தன்மையை'' அவன் அடைகிறான். ஹெராக்ளிட்டஸ் கண்ட அதே காட்சியை அவன் காணுகிறான்.

ஒரு நதிக்குள் நீங்கள் கால் வைக்கையில் ஒரே நதியில்தான் நீங்கள் கால் வைத்திருக்கிறீர்கள் என்றும் சொல்ல முடியும்; இல்லை என்றும் சொல்ல முடியும். நதி அதேதான், இல்லையும்தான். அது ஒரு பாய்வு. நதியின் மூலமாக, அதனுடனான ஒத்திசைவு வாயிலாக பிரபஞ்சம் முழுவதையும் ஒரு நதியாக ஒரு ''நதித் தன்மை''யாக அவன் அறியவருகிறான்.

எதனுடனும் இது நிகழ முடியும். நினைவில் கொள்ள வேண்டிய ஒரே அடிப்படை, சரணாகதி என்பதே.

**இறைவனிடம் சரணடைவதும் குருவினிடம் சரணடைவதும் ஒன்றுதானா?**

ஆம் எப்போதும் சரணடைவது என்பது ஒன்றுதான். யாரிடம் உங்களால் சரணடைய முடியும் என்பது உங்களைப் பொறுத்தது. ஆளைத்தேடுங்கள், நதியைத் தேடுங்கள் கண்டுபிடித்து சரணடையுங்கள். இது ஒரு துணிகர முயற்சிதான். இருப்பதிலேயே மாபெரும் துணிகர முயற்சி இது. எனவேதான் சரணடைவது அவ்வளவு கடினமாக உள்ளது. இது ஓர் அபாயகரமான முயற்சி! அறியப்படாத பிரதேசத்துக்குள் நீங்கள் போய்க் கொண்டிருக்கிறீரக்ள. நீங்கள் சரணடையும் ஆள் அல்லது பொருளுக்கு அதீத ஆற்றலை வழங்கிக் கொண்டிருக்கிறீர்கள்.

என்னிடம் நீங்கள் சரணடைந்தால் எனக்கு சர்வாதிகாரத்தை நீங்கள் தந்து கொண்டிருக்கிறீர்கள். இனி நான் சரி ஆம் என்றால் நீங்களும் ஆம்தான். நான் இல்லை என்றால் நீங்களும் இல்லைதான். பட்டப்பகலைக் கூட இது இரவு என்று நான் சொன்னால் ''ஆம் இது இரவுதான்'' என்றே நீங்களும் சொல்வீர்கள். மொத்த சக்தியையும் ஒருவரிடம் நீங்கள் ஒப்படைத்து விடுகிறீர்கள். அகங்காரம் இதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கிறது. ''இது நல்லதல்ல, கட்டுப்பாட்டை உன்னிடமே வைத்துக்கொள். இந்த ஆள் உன்னை எங்கே கொண்டுபோய் சேர்ப்பான் என்று யாருக்கு தெரியும். 'மலை உச்சியில் இருந்து குதி' என அவன் கூறியபடி. நடந்து செத்துப்

போகமாட்டாய் என யாருக்கு தெரியும். இவன் உன்னை தன் விருப்பப்படி கையாள மாட்டான், கட்டுப்படுத்த மாட்டான், ஏமாற்றமாட்டான் என யாருக்கு தெரியும்'', என்று மனம் கூறுகிறது. இந்த ஐயங்களை எல்லாம் மனம் கொண்டு வரும். இது ஒரு சூழ்ச்சி. எல்லா விதமான பாதுகாப்பு ஏற்பாடுகளையும் மனமானது மேற்கொள்கிறது.

''எச்சரிக்கை. இந்த ஆளை கொஞ்சம் விழிப்பாகவே கவனித்திரு'' என்று மனம் கூறிக்கொண்டு இருக்கிறது. மனம் கூறுவதை நீங்கள் கேட்டுக் கொண்டிருந்தால் அமைதி சாத்தியமில்லை. மனம் கூறுவதும் சரிதான். இது ஓர் அபாயகரமான முயற்சிதான்! ஆனால் இந்த முயற்சியை எப்போது நீங்கள் மேற்கொண்டாலும் அப்போதெல்லாம் அது அபாயகரமானதாகவே இருக்கப் போகிறது. கவனித்துக் கொண்டே இருப்பது பெரிதாக உதவாது. காலகாலத்துக்கும் நீங்கள் கவனித்தபடியே இருக்க முடியும். அப்போதும் உங்களால் முடிவு எடுக்க முடியாமல் போகலாம். ஏனெனில் மனத்தால் ஒருபோதும் முடிவு எடுக்க முடியாது. மனம் ஒரு குழப்பம். அது ஒருபோதும் தீர்மானிப்பதில்லை. என்றாவது ஒருநாள் மனத்தை நீங்கள் கைவிட்டுச் செல்ல வேண்டியதை. ''நீ பொறு நான் போகிறேன். குதிக்கப்போகிறேன். என்ன தான் நடக்கும் என்று பார்க்கப் போகிறேன்'' என்று மனதிடம் நீங்கள் சொல்ல வேண்டி இருக்கும்.

இழப்பதற்கு உண்மையில் உங்களிடம் என்ன இருக்கிறது? சரணடைவதால் இழந்துவிடுவோமோ என்று அஞ்சுமளவுக்கு அப்படி உங்களிடம் என்னதான் இருக்கிறது, சரணடையும்போது எதைத்தான் நீங்கள் கொண்டு வந்தீர்கள் என எப்போதும் நான் ஆச்சரியப்படுகிறேன். உங்களிடம் ஒன்றுமில்லை. அதன்மூலம் உங்களால் ஆதாயம் பெறமுடியும். ஆனால் நீங்கள் எதையும் இழக்க முடியாது. ஏனெனில் இழப்பதற்கு உங்களிடம் ஒன்றுமில்லை. எப்போதும் அதன்மூலம் நீங்கள் லாபம் பெறவே முடியும். எனவே எந்த விதமான நட்டத்துக்கும் வாய்ப்பில்லை. ஏனெனில் நட்டப்படுவதற்கு எதையும் நீங்கள் பெற்றிருக்கவில்லை.

உலகப் பாட்டாளிகளே ஒன்று சேருங்கள், ஏனெனில் உங்கள் அடிமைச் சங்கிலிகளைத் தவிர இழப்பதற்கு உங்களிடம் எதுவுமில்லை என்னும் காரல் மார்க்சின் புகழ்பெற்ற வாசகத்தை நீங்கள் கேள்விப் பட்டிருக்கலாம். அது உண்மையாக இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம். ஆனால் தேடுபவருக்கு இதுதான் பொருத்தமான வசனம். உங்களின் அடிமைச் சங்கிலிகளை, உங்கள் அறியாமையை, உங்கள் அவலத்தைத் தவிர இழப்பதற்கு உங்களிடம் என்ன இருக்கிறது? ஆனால் மக்கள் தம் அவலத்தின் மீது கூட மிகுந்த பற்றுக் கொண்டவர்களாக ஆகி இருக்கிறார்கள்.

தம் அவலத்தையே ஒரு பொக்கிஷத்தைப் போல் அவர்கள் போற்றிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களின் அவலத்தை அவர்களிடமிருந்து எடுத்துவிட யாராவது ஒருவர் விரும்பினால் அதற்கு எல்லா விதமான, தடங்கல் களையும் உருவாக்குகிறார்கள்.

இந்த விதமான தடைகளையும் தந்திரங்களையும் ஆயிரக்கணக்கான மக்களிடம் நான் பார்த்துக் கொண்டு வருகிறேன். அவர்களின் அவலத்தை நீங்கள் அகற்றிவிட விரும்பினால்கூட அதை அவர்கள் விடாமல் பற்றி/ தொற்றிக் கொள்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட விஷயத்தை அவர்கள் சுட்டிக் காட்டுகிறார்கள். ஏனெனில் வேறெதுவும் அவர்களிடம் இல்லை. அதுமட்டுமே அவர்கள் பெற்றிருக்கும் ஒரே சொத்தாக இருக்கிறது. அதைப் பிடுங்கி விடாதீர்கள். ஏனெனில் ஒன்றுமில்லாதிருப்பதை விடவும் ஏதாவது ஒன்றை பெற்றிருப்பதுதான் எப்போதும் சிறந்தது. ஒன்றுமில்லா திருப்பதை விட, முற்றிலும் வெறுமையாக இருப்பதைவிட, அனாமதேய மாக இருப்பதைவிட, ஏதாவது ஒன்றை - குறைந்த பட்சம் இந்த அவலத்தை யாவது - பெற்றிருப்பது எப்போதும் நல்லது என்பதுதான் அவர்களின் தர்க்கம்.

நீங்கள் துயரத்தில் நிலையில் இருந்தாலும்கூட நீங்கள் ஒரு நிலையில் இருக்கிறீர்கள். நீங்கள் நரகத்தில் இருந்தாலும் கூட நீங்கள் ஓர் இடத்தில் இருக்கிறீர்கள். ஆனால் இதைக் கவனியுங்கள், உற்று நோக்குங்கள்: நீங்கள் சரணடையும்போது நீங்கள் கொடுப்பதற்கு எதுவும் இல்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஒரு குரு உங்கள் துயரத்தையே எடுத்துக் கொள்கிறார், வேறெதையும் அல்ல. உங்கள் வாழ்வை அவர் பறித்துக் கொள்ளவில்லை. ஏனெனில் உங்களிடம் அது இல்லை. உங்கள் சாவையே அவர் எடுத்துக் கொள்கிறார். மதிப்புக்குரிய எதையும் உங்களிடமிருந்து அவர் எடுப்பதில்லை. ஏனெனில் அப்படி எதுவும் உங்களிடம் இல்லை. குப்பையை மட்டுமே அவர் எடுத்து விடுகிறார். பலப்பல பிறவிகளாக நீங்கள் குவித்து வைத்துள்ள குப்பையையே, அந்த குப்பைமேட்டின் உச்சியில் ஏறி உட்கார்ந்து கொண்டு அதுதான் எனது அரசாங்கம் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கும் அந்த குப்பைக் குவியலையே உங்களிடமிருந்து அவர் அகற்றுகிறார்.

எதையும் அவர் எடுத்துக் கொள்வதில்லை. துயரத்தை அவரிடம் தந்துவிட நீங்கள் தயார் எனில் அவரது அருளைப் பெற நீங்கள் அருகதை உடையவர் ஆவீர்கள். இதுவே சரணடைதல். அதன்பின் குருவே ஆண்டவன் ஆகிறார். நீங்கள் சரண்புகும் எதுவும், எவரும் இறைமையாக

ஆகிறது/ஆகிறார். சரணாகதியே இறைமையை உருவாக்குகிறது. சரணகதியே கடவுளைப் படைக்கிறது. சரணாகதியே படைப்பாற்றல்.

## சட்டோரிக்குப் பின் குரு - தேவையா?

ஆம். இன்னும் மிக அதிகமாகத் தேவை. ஏனெனில் **சட்டோரி** என்பது ஒரு கணநேரக் காட்சிதான். இந்தத் தரிசனம் என்பது அபாயகரமானது. ஏனெனில் அறிந்துகொள்ளாத ஒரு பிரதேசத்துக்குள் இப்போது நீங்கள் பிரவேசிக்கிறீர்கள். இதற்கு முன் என்றால், குரு அவசியமில்லை. ஏனெனில் இதுவரை நீங்கள் அறிந்து கொண்ட உலகில் இயங்கிக் கொண்டிருந்தீர்கள். **சட்டோரிக்கு** /தரிசனத்துக்குப் பிறகு மட்டுமே அவர் முற்றிலும் தேவைப்படுபவர் ஆகிறார். ஏனெனில் இப்போது உங்கள் கைகளைப் பிடித்துக் கொள்ள ஒருவர் தேவை. ஒரு (கணநேர) காட்சியாக / தரிசனமாக மட்டும் இல்லாமல் முழுமையான யதார்த்தமாகவே ஆகிற ஒன்றை நோக்கி உங்களை அழைத்துச் செல்ல ஒருவர் தேவை. சட்டோரிக்குப் பிறகு அதில் நீங்கள் சுவை கண்டு விடுகிறீர்கள். அந்த சுவை அதிக ஆவலைக் கிளறுகிறது. மேலும் அந்த சுவை மிகவும் ஈர்க்கக் கூடியதாக ஆகிறது. அதன்மீது ஆவேசமாகப் பாய்ந்து அதை அடைய நீங்கள் விரும்புகிறீர்கள். இந்நிலையில் குரு தேவைப்படுகிறார்.

**சட்டோரி** / தரிசனத்துக்குப் பிறகு மேலும் பல விசேஷங்கள் நிகழப் போகின்றன. சட்டோரி என்பது எவரெஸ்ட் எனப்படும் கவுரிசங்கர் சிகரத்தை பள்ளத்தாக்கிலிருந்து பார்ப்பதைப் போன்றது. ஒருநாள், வானம் தெளிவாயிருக்கும் ஒரு காலை வேளையில், வெளியில் காயும் ஒரு காலையில், பனிமூட்டம் இல்லாத போது, ஆயிரக்கணக்கான மைல் தூரத்தில் இருந்தே அழகிய கவுரிசங்கர் சிகரம் வானில் உயர்ந்து நிற்பதை நீங்கள் பார்க்க முடிகிறது. இதுதான் சட்டோரி. இப்போது உண்மையான பயணம் தொடங்குகிறது. இப்போது அகில உலகமும் பயனற்றதாகத் தோன்றுகிறது.

இது ஒரு திருப்புமுனை. இதுவரை நீங்கள் அறிந்திருந்த அனைத்தும் இப்போது பயனற்றது ஆகிறது. இதுவரை நீங்கள் அடைந்திருந்த அனைத்தும் இப்போது வீண் சுமை ஆகிறது. உலகமும், இதுவரை நீங்கள் வாழ்ந்துவந்த வாழ்க்கையும் இப்போது திடுமென ஒரு கனவுபோல் மறைந்து விடுகிறது. ஏனெனில் அதைவிட பெரியது. நிகழ்ந்துள்ளது. இதுதான் **வெறும் சட்டோரி** /சிறுநேற/தரிசனம்மட்டுமே. விரைவில் மீண்டும் பனிமூடும். சிகரம் புலப்படாமல் போகும். மேகங்கள்

சூழும். சிகரம் மறைந்துவிடும். அப்போது நீங்கள் முற்றிலும் நிச்சயமற்ற உணர்வுடன் இருப்பீர்கள்.

நீங்கள் கண்ட எதுவாயினும் அது நிஜமா அல்லது வெறும் கனவா என்று புரிந்துகொள்வதே முதல் விஷயம். ஏனெனில் இப்போது அது எங்கே? அது மறைந்துவிட்டது. அது ஓர் இடைநிகழ்வாக, இடை வெளியாக மட்டுமே இருந்திருக்கிறது. திரும்பவும் நீங்கள் உங்கள் சொந்த பழைய உலகுக்கே தூக்கி வீசப்பட்டிருக்கிறீர்கள்.

சந்தேகங்கள் எழும்:. நீங்கள் கண்ட எதுவாயினும் அது நிஜமா? மெய்யாகவே அது ஏற்பட்டதா அல்லது அதைப் பற்றி நீங்கள் கனவு காண்டீர்களா அல்லது அதை கற்பனை செய்து கொண்டீர்களா? இதுபோல கற்பனை செய்துகொள்வதற்கு சாத்தியங்கள் உள்ளன. பலரும் கற்பனை செய்து கொள்கிறார்கள். எனவே இந்த சந்தேகம் தவறாகாது. பல தடவை நீங்கள் கற்பனை செய்வீர்கள். எது மெய் - எது பொய் என பாகுபடுத்தி - இனம் பிரித்துக் காண உங்களால் முடிவதில்லை. ''கவலைப்படாதே, அது நிஜமானதே'' என்றோ, அல்லது ''அதை விட்டுவிடு, அது வெறும் கற்பனையே'' என்றோ கூற ஒரு குருவால் மட்டுமே முடியும்.

சிகரத்தை அறிந்திருக்கிறவர் மட்டுமே - பள்ளத்தாக்கில் இருந்தல்ல, சிகரத்தையே அடைந்து அறிந்திருக்கிறவர் மட்டுமே - தானே ஒரு சிகரமாகி இருக்கிறவர் மட்டுமே - உங்களுக்கு எடுத்துச் சொல்ல முடியும். ஏனெனில் அவரிடம் அளவுகோல் இருக்கிறது. அவரிடம் உரைகல் இருக்கிறது. ''வீசி எறி குப்பையை! அது உனது கற்பனை மட்டுமே'' என்று அவரால்தான் கூறமுடியும். ஏனெனில் இந்தக் காரியங்களைக் பற்றி சாதகர்கள் சிந்தித்துக் கொண்டே போகும்போது மனம் கனவுகாணத் தொடங்கி விடுகிறது.

பலபேர் என்னிடம் வருகிறார்கள். அவர்களில் ஒரு சதவிகிதம் பேருக்கே மெய்யான காரியம் நடந்திருக்கிறது. தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் பேர் போலியான விவரங்களையே கொண்டு வருகிறார்கள். ஆனால் அவர்கள் தீர்மானிப்பது கடினம். கடினம் மட்டும் அல்ல, அசாத்தியம். அவர்களால் தீர்மானிக்கவே முடியாது. உங்கள் முதுகெலும்பில், தண்டுவடத்தில் திடீரென ஓர் ஆற்றல் மேலெழும்புவதாக நீங்கள் உணர்கிறீர்கள். அது நிஜமானதா பொய்யானதா என்பதை உங்களால் எவ்வாறு முடிவு செய்ய முடியும்? அதைக் குறித்து அளவுக்கு அதிகமாக நீங்கள் ஆலோசித்திருக்கிறீர்கள். அதை நீங்கள் விரும்பியும் இருக்கிறீர்கள். அது நிகழவேண்டும், குண்டலினி எழும்ப வேண்டும். என்ற ஆசை விதைகளை உங்களை அறியாமலேயே நீங்கள் விதைத்

திருக்கிறீர்கள். அடுத்து, பதஞ்சலியை நீங்கள் படித்திருக்கிறீர்கள். அதைக் குறித்து நீங்கள் பேசியும் வந்திருக்கிறீர்கள். மேலும் தம் குண்டலினி எழும்பிவிட்டதாக கூறும் பலரை நீங்கள் சந்தித்தும் இருக்கிறீர்கள். உங்களிடம் தன்முனைப்பும் இருக்கிறது. இனி இந்த எல்லாமே கலந்து விடுகின்றன.

திடீரென ஒரு நாள் எழுச்சியை நீங்கள் உணர்கிறீர்கள். அது மனதின் ஓர் உருவாக்கமே அன்றி வேறல்ல. உங்களை திருப்திப்படுத்துவதற்காக மனம், ''கவலைப்படாதே. ரொம்பவும் வருத்தப்படாதே. இதோ பார் குண்டலினி எழும்பிவிட்டது'' என்கிறது. மனத்தின் கற்பனையே இது. இந்நிலையில் தீர்மானிப்பது யார்? எப்படி நீங்கள் தீர்மானிப்பீர்கள்? ஏனெனில் உண்மை எதுவென உங்களுக்குத் தெரியாது. இந்த நிலவரம் நிஜமா அல்லவா என்பதைத் தீர்மானிக்கும் அளவுகோலாக உண்மைதான் இருக்க முடியும்.

முதல் சட்டோரிக்கு பிறகுதான் குரு இன்னும் அதிகமாகத் தேவைப்படுகிறார். மூன்று சட்டோரி நிலைகள் உள்ளன. முதல் சட்டோரி வெறும் கணநேர காட்சிதான். சிலநேரங்களில் போதைப் பொருள்களின் மூலம்கூட இது சாத்தியமாகிறது. வேறுபல விதங்களிலும் சட்டோரி நிகழ சாத்தியமுள்ளது - சில சமயங்களில் விபத்துகளால் இது சாத்தியமாகிறது. சில நேரங்களில் ஒரு மரத்தின்மேல் நீங்கள் ஏறி தவறி விழுந்து விடுகிறீர்கள். அந்த அதிர்ச்சி எப்பேர்ப்பட்டதாக இருக்கிறது என்றால் ஒருகணம் மனமே நின்று விடுகிறது. அப்போது தரிசனம் தெரிகிறது. அப்போது உங்கள் உடலிலிருந்து நீங்கள் வெளியே எடுக்கப்பட்டு விட்டதாக உணர்கிறீர்கள். ஏதோ ஒன்றை நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள்.

ஒரு நொடிக்குள் நீங்கள் திரும்பி விடுகிறீர்கள். மனம் செயல்பட ஆரம்பித்து விடுகிறது. அது ஓர் அதிர்ச்சி மட்டுமே. மின் அதிர்ச்சி மூலமும் இது சாத்தியம். இன்சுலின் அதிர்ச்சி மூலம் இது சாத்தியம். போதைப் பொருள் மூலமும் இது சாத்தியம். சில நேரங்களில் நோயிலும் இது நிகழ்கிறது. நீங்கள் மிகுந்த பலவீனமாக இருக்கையில் மனத்தால் செயல்பட முடிவதில்லை. திடீரென ஒரு கணநேரக் காட்சி உங்களுக்கு கிடைக்கிறது. காமத்தின் மூலமும் தரிசனம் சாத்தியம். புணர்ச்சிப் பரவசத்தில் முழு உடலும் அதிரும்போதும் அது சாத்தியமாகிறது.

முதல் நிலை தரிசனம் ஆன்மிக முயற்சியின் மூலமாகவே கிடைக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. எனவேதான் எல்எஸ்டி, மெஸ்கலைன், மரிஜுவானா போன்றவை இந்த அளவுக்கு முக்கியத்துவ

மும் கவர்ச்சியும் பெற்றுள்ளன. இவற்றின்மூலம் முதல்நிலை காட்சி சாத்தியமே. முதல்முறை காட்சியினால் நீங்கள் போதைப் பொருள்களில் சிக்கிவிட முடியும். அது ஒரு நிரந்தர இன்ப மயக்கமாக ஆகவும் முடியும். அந்நிலையில் அது மிகவும் அபாயகரமானது. ஏனெனில் கணநேர தரிசனங்கள் பயன்படுவதில்லை. அவை உதவ முடியும். ஆனால் கட்டாயம் அவற்றிலிருந்து உதவி கிடைக்கும் என கூறமுடியாது. ஓர் ஆசானின் சந்நிதியில் மட்டுமே அவை உதவமுடியும். ஏனெனில் அப்போது அவர், ''இனி கணநேர தரிசனத்தை நாடி ஓடாதே. தரிசனம் கிடைத்துவிட்டது அல்லவா, இனி சிகரத்தை அடைய பயணம் தொடங்கு,'' என்பார். ஏனெனில் சிகரத்தை அடைவது மட்டுமல்ல தேவை. இறுதியாக ஒருவர் தானே சிகரமாகவும் ஆகவேண்டும்.

இவையே மூன்று நிலைகள்: முதல்நிலை, கணநேர தரிசனம். இதுபல வழிகளில் கிடைக்கும். சமயத்தின் வாயிலாகவே அது கிடைக்க வேண்டும் என்ற அவசியமில்லை. ஒரு நாத்திகரும்கூட தரிசனம் பெற முடியும். சமயத்தில் அக்கறை இல்லாதவர்கூட தரிசனம் பெற முடியும். போதைப் பொருள்களும் வேதிப் பொருள்களும் உங்களுக்கு தரிசனம் வழங்க முடியும். அறுவை சிகிச்சைக்குப் பின்கூட, மயக்க மருந்திலிருந்து நீங்கள் விடுபட்டுக் கொண்டிருக்கும் நிலையில், உங்களுக்கு கணக்காட்சி ஏற்படக்கூடும். உங்களுக்கு மயக்கமருந்து (குளோரோப்பாம்) தரப்படும் போது, நீங்கள் உள்ளே ஆழ்ந்து செல்லச்செல்ல, அத்தகைய காட்சியை நீங்கள் பெற முடியும்.

பலரும் முதல் நிலை **சட்டோரி**யை அடைந்திருக்கிறார்கள். அது மிகப் பெரிய முக்கியத்துவம் உடையது அல்ல. இரண்டாம் நிலை **சட்டோரி**க்கு அதை ஒரு படிக்கட்டாகப் பயன்படுத்த முடியும். இரண்டாம் நிலை **சட்டோரி** என்பது சிகரத்தை அடைதல். இது ஒருபோதும் தற்செயலாக நடைபெறுவதில்லை. முறைகள், உத்திகள், குழுப்பயிற்சிகள் மூலம் மட்டுமே அது நிகழ முடியும். ஏனெனில் இரண்டாம் நிலை **சட்டோரி**யை அடைதல் ஒரு நீண்ட முயற்சியின் பயனாகும்.

அடுத்தது மூன்றாம் நிலை **சட்டோரி**. இதையே பதஞ்சலி **சமாதி** என்கிறார்: இந்த மூன்றாம் நிலை 'தானே சிகரமாக ஆவது' என்பதாகும். ஏனெனில் இரண்டாம் நிலையிலிருந்தும்கூட நீங்கள் இறங்கிவிட முடியும். சிகரத்தை நீங்கள் அடைகிறீர்கள். அது தாங்கிக் கொள்ள முடியாததாக இருக்கலாம். ஆனந்தத்தைக்கூட சில நேரங்களில் தாங்க முடிவதில்லை. பெரும் துன்பத்தை மட்டுமல்ல, பேரின்பத்தைக்கூட தாங்க முடிவதில்லை. அது அதிகப்படியானதாக இருக்கிறது. எனவே மீண்டும் ஒருவர் பள்ளத்தாக்குக்கு திரும்பிவிடக் கூடும்.

உயர்ந்த சிகரத்திலேயே வாழ்வது என்பது கடினம். மிகவும் கடினம். எனவே எவரும் திரும்பி இறங்கிவிடவே விரும்புவார். நீங்கள் சிகரமாக ஆகாதவரை, அனுபவிப்பவரே அனுபவமாக ஆகாதவரை, அது இழக்கப்பட்டுவிட முடியும். ஆகவே மூன்றாம் நிலை பெற - சமாதியை அடைய - ஆசான் தேவை. இறுதியான, அறுதியான சமாதி நிகழ்ந்து விட்டால் அதன் பிறகு மட்டுமே ஆசான் தேவையில்லை.

> **நீங்கள் கூறுவதை கவனித்துக் கொண்டிருக்கும்போது, சில நேரங்களில் சில சொற்கள் மிகவும் ஆழமாகப் போகின்றன. அப்போது திடீரென ஒரு தெளிவும் புரிதலும் கிடைக்கிறது. நீங்கள் பேசும் சொற்களை நான் ஊன்றி கேட்கும்போது மட்டுமே இது நிகழ்வதாகத் தோன்றுகிறது. ஆனால் உங்கள் சொற்களைக் குறிப்பாகக் கவனிக்காமல் நீங்கள் பேசுவதை சும்மா கேட்டுக் கொண்டிருக்கும் போது சூழும் அமைதியும் அதைப் போலவே ஆனந்தமயமாக உள்ளது. ஆனால் அப்போது சொற்களும் அவற்றின் பொருளும் பிடிபடாமல் போய்விடுகிறது. எனவே உங்கள் பேச்சைக் கவனிக்கும் கலையைப்பற்றி ஒரு வழிகாட்டுதல் வழங்க வேண்டுகிறேன். ஏனெனில் சரியான முறையில் கவனிப்பதும் உங்களின் மிகச் சிறந்த தியான முறைகளில் ஒன்றாயிற்றே.**

சொற்கள் மற்றும் அவற்றின் பொருள்பற்றி அதிகமாக அலட்டிக் கொள்ள வேண்டாம். சொற்கள் மற்றும் அவற்றின் பொருள்மீது அதிக ஆர்வம் காட்டினால் அது அறிவுரீதியானதாக ஆகிவிடுகிறது. சில நேரங்களில் நீங்கள் தெளிவடைவீர்கள். என்பது உண்மைதான். திடீரென மேகங்கள் விலகிவிடுகின்றன. சூரியன் அங்கே இருக்கிறது. ஆனால் இவை தற்காலிகமான நிலைமை மட்டுமே. இந்தத் தெளிவு அதிகம் பயன்படாது. அடுத்த கணமே அது இருப்பதில்லை. அறிவு ரீதியான தெளிவினால் அதிகம் பயனில்லை.

சொற்கள் மற்றும் அவற்றின் பொருளை கவனிப்பதால் பல செய்தி களை நீங்கள் புரிந்து கொள்ளலாம். ஆனால் என்னை நீங்கள் புரிந்து கொள்ள மாட்டீர்கள். உங்களையும் நீங்கள் புரிந்து கொள்ள மாட்டீர்கள். அந்த பல செய்திகள் என்பவை மதிப்புக்குரியவை அல்லன. சொற்களை யும் அவற்றின் பொருள்களையும் குறித்து அலட்டிக்கொள்ள வேண்டாம். நான் ஒரு பேச்சாளன் அல்லன், ஒரு பாடகன் மாதிரி; நான் உங்களிடம் சொற்களைக் கொண்டு பேசிக் கொண்டு இருக்கவில்லை, ஒலிகளைக்

கொண்டு பேசிக் கொண்டு இருப்பது என்பதுபோல்; ஒரு கவிஞன் என்பது போல் என்னைக் கவனியுங்கள்.

பேச்சின் பொருளை; நான் சொல்ல வருவது என்ன என்பதை புரிந்து கொள்ள முயல வேண்டாம். சொற்கள் மற்றும் அவற்றின் பொருள்கள்மீது எந்த கவனமும் குவிக்காமலே வெறுமனே என்னைக் கவனிப்பதன்மூலம் ஓர் மாறுபட்ட தெளிவுநிலை உங்களை வந்தடையும். நீங்கள் பரவசமாக உணர்வீர்கள். அதுதான் உண்மையான தெளிவு. நீங்கள் மகிழ்ச்சியாக உணர்வீர்கள். நீங்கள் அமைதியாகவும் மௌனமாகவும் சமாதானகமாகவும் உணர்வீர்கள். அதுதான் உண்மையான பொருள் - அர்த்தம்.

நான் இங்கே இருப்பது, சில செய்திகளை உங்களுக்கு விளக்கு வதற்காக அல்ல; உங்களின் ஜீவனில் குறிப்பிட்ட தன்மையைப் படைப் பதற்காகவே இங்கே நான் இருக்கிறேன். ஒன்றை விளக்குவதற்காக நான் பேசிக் கொண்டு இருக்கவில்லை. ஒன்றை உருவாக்குவதற்காகவே நான் பேசிக் கொண்டு இருக்கவில்லை. நான் உங்களுக்கு - புத்தகங்கள் மூலம் முடிகிற எதையும் விளக்க முயலவில்லை. அத்தகைய விவரங்களைப் புரிந்து கொள்ள, லட்சக் கணக்கான வேறு வழிகளும் உள்ளன. உங்களின் நிலைமாற்றத்துக் காகவே இங்கு நான் இருக்கிறேன்.

சொற்களையும் அவற்றின் பொருளையும் பற்றி எந்த விதமான சஞ்சலத்தையும் வளர்த்துக் கொள்ளாமல், எளிமையாக - எதார்த்தமாக என்னைக் கவனியுங்கள். அந்தத் தெளிவைக் கைவிடுங்கள். அதனால் பெரிய பயன் ஒன்றும் இல்லை. நீங்கள் என்னை வெறுமனே கவனிக் கையில், சூதுவாது இல்லாமல் - அறிவு ரீதியில் அல்லாமல் கவனிக்கையில், இதயபூர்வமாக - அடியாழத்திலிருந்து - ஜீவனோடு ஜீவன் உறவு கொள்ளும் முறையில் கவனிக்கையில்; பேச்சாளர் மறைகிறார், கவனிப்பவரும் மறைகிறார். அந்நிலையில் நான் இங்கு இருப்பதில்லை, நீங்களும் இருப்பதில்லை. ஓர் ஒத்திசைவு / இருக்கிறது. கவனிப்பவரும் பேசுபவரும் ஒன்றாகி விடுகிறார்கள். அந்த ஒருமையில் நீங்கள் தன்மை மாற்றம் அடைவீர்கள். அந்த ஒருமை நிலையை அடைவதே தியானம். இதை ஒரு தியானம் ஆக்குங்கள். சிந்தனை ஆக்காதீர்கள். யோசனை ஆக்காதீர்கள். அப்போது வார்த்தைகளை மீறிய ஒன்று - அர்த்தங்களைக் கடந்த ஒன்று உங்களுக்குத் தெரிவிக்கப்படும் அந்த உண்மையான அர்த்தம், முடிவான அர்த்தம், சாத்திரங்களில் இல்லாத அர்த்தம் - இருக்கமுடியாத அர்த்தம் உங்களை வந்தடையும்.

பதஞ்சலியை நீங்களாகவே படித்துக் கொள்ள முடியும். சிறிது முயற்சி எடுத்தால் அவரை நீங்களே புரிந்து கொள்வீர்கள். எனவே பதஞ்சலியை

நீங்கள் புரிந்து கொள்ள முடிவதற்காக நான் இங்கே பேசிக் கொண்டு இருக்கவில்லை. இதன் நோக்கம் அது அல்லவே அல்ல. என்னைப் பொறுத்தவரை பதஞ்சலி ஒரு சாக்குப்போக்கு மட்டுமே. சாத்திரங்களுக்கு அப்பாற்பட்ட ஒன்றை அவர் மேல் நான் சார்த்திக் கொண்டு இருக்கிறேன்.

என் சொற்களை நீங்கள் கவனித்தால், பதஞ்சலியை நீங்கள் புரிந்து கொள்வீர்கள்; ஒரு தெளிவும் கிடைக்கும். ஆனால் என் ஒலியை /சப்தத்தை நீங்கள் கவனித்தால், என் வார்த்தைகளை அன்றி என்னை நீங்கள் கவனித்தால், பின் உண்மையான அர்த்தம் உங்களுக்கு வெளிப்படும். அந்த அர்த் தத்துக்கும் பதஞ்சலிக்கும் சம்பந்தமில்லை. அந்த அர்த்தம், சாத்திரங் களைக் கடந்த ஒரு பரிமாற்றம்.



**கால வரம்புகளைக் கடந்து இருப்பதால் அவர் குருமார்களின் குருவாக இருக்கிறார். ஓம் என அறியப்படுகிறார் அவர். ஓம் என்பதைச் சொல்லித் தியானம் செய்யுங்கள். ஓம் என்பதை திரும்பத் திரும்பச் சொல்வதாலும், தியானிப்பதாலும் எல்லாத் தடைகளும் மறைகின்றன. ஒரு புதிய உணர்வு நிலை விழிப்படைகிறது.**

கடவுள் என்னும் நிகழ்வைப்பற்றி பதஞ்சலி பேசிக் கொண்டிருக்கிறார். கடவுள் என்பது படைப்புக் கர்த்தர் அல்ல. பதஞ்சலியைப் பொறுத்தவரை தனிமனித உணர்வின் உன்னத மலர்ச்சியே கடவுள். ஒவ்வொருவரும், ஒவ்வொன்றும் கடவுளாக ஆவதற்கான பாதையிலேயே இருக்கிறார். நீங்கள் மட்டுமல்ல, கற்கள் - பாறைகள் மற்றும் இருத்தலின் ஒவ்வோர் அலகும் கடவுளாக ஆகும் பாதையிலேயே இருக்கிறது. சிலர் ஏற்கனவே ஆகி இருக்கிறார்கள். சிலர் ஆகிக்கொண்டிருக்கிறார்கள். சிலர் ஆவார்கள்.

கடவுள் படைப்புக் கர்த்தா அல்லர். அதுவே உச்சம், சிகரம், இருத்தலின் உன்னதம். அவர் தொடக்கம் அல்ல. அவரே முடிவு. மேலும் ஒருவிதத்தில் அவர் தொடக்கத்திலும் இருக்கிறவர்தான். ஏனெனில் தொடக்கத்தில் இருந்தே ஒருவிதையாக எப்போதும் இருந்து வருகிற ஒன்றுதான் முடிவில் மலர முடியும். கடவுள் ஓர் உள்ளாற்றல். மறைந்திருக்கும் சாத்தியப்பாடு. இதை நினைவில் கொள்ள வேண்டும். எனவே பதஞ்சலியில் ஒரே ஒரு கடவுள் என்பது இல்லை. கணக்கற்ற கடவுள்கள் இருக்கிறார்கள். இருத்தல் முழுவதுமே கடவுள்களால் நிரம்பி உள்ளது.

கடவுள்பற்றிய பதஞ்சலியின் கருத்தை ஒருதடவை நீங்கள் புரிந்துகொண்டபின் உண்மையாகவே கடவுள் என்பது வழிபடுவதற்குரிய ஒன்று அல்ல; நீங்களே அப்படி ஆகிக்கொள்ள வேண்டிய ஒன்று - இது மட்டுமே ஒரே வழிபாடு. நீங்கள் கடவுளை வழிபட்டுக் கொண்டே போனால் அது உதவாது. உண்மையில் அது மடத்தனமானது. உண்மையான வழிபாடு, நீங்களே ஒரு கடவுளாக ஆவதில்தான் உள்ளது. உங்கள் உள்ளாற்றல் வெடித்து ஒரு நடைமுறை யதார்த்தமாக ஆவதை நோக்கியே - விதையானது உடைந்து, காலாகாலமும் மறைந்திருந்தது வெளிப்படை ஆவதை நோக்கியே - மொத்த முயற்சியும் அமைய வேண்டும். நீங்கள் ஒரு வெளிப்படை ஆகாத கடவுள். வெளிப்படை ஆகாததை வெளிப்படும் நிலைக்கு கொண்டு வருவது எவ்வாறு, வெளிப்பாட்டு தளத்துக்கு அதை கொண்டு வருவது எவ்வாறு என்பதே செய்ய வேண்டிய வேலை.

**கால வரம்புகளைக் கடந்து இருப்பதால் அவர் குருமார்களின் குருவாய் இருக்கிறார்.**

அவர் தன் கடவுள் கருத்தைப்பற்றி பேசிக் கொண்டிருக்கிறார், ஒருவர் ஒரு மலராக ஆகும்போது, ஒருவரின் ஜீவன் ஒரு தாமரையாக ஆகும்போது, அவருக்குப் பல காரியங்கள் நிகழ்கின்றன. அவர் வழியாக பல காரியங்கள் இருத்தலுக்குள் நிகழத் தொடங்குகின்றன. அவர் ஒரு பேராற்றலாக, அளவுகடந்த ஆற்றலாக ஆகிறார். அவர் வழியாக பலர் பலமுறைகளில் தம் சொந்த ஒளியில் கடவுளர் ஆவதற்கு உதவி பெறுகிறார்கள்.

கால வரம்புகளைக் கடந்து இருப்பதால் அவர் குருமார்களின் குருவாய் இருக்கிறார்.

மூன்றுவிதமான குருமார்கள் இருக்கிறார்கள். ஒருவர் உள்ளபடி ஒரு குரு அல்ல, மாறாக அவர் ஓர் ஆசிரியர் ஆகவே இருக்கிறார். தானே உணர்ந்திராத விஷயங்களை பிறருக்கு கற்பிப்பவரே, அவற்றை பிறர் அறிய உதவுகிறவரே ஆசிரியர். சிலநேரங்களில் ஆசிரியர்கள் ஆயிரக் கணக்கான மக்களை கவர்ந்துவிட முடிகிறது. அதற்குத் தேவையான ஒரே விஷயம் அவர்கள் நல்ல ஆசிரியர்களாக இருக்க வேண்டும் என்பதுதான். தம்மையே அவர்கள் அறிந்திராதவர்களாக இருக்கலாம். ஆனால் அவர்களால் பேச முடியும், வாதிட முடியும், போதிக்க முடியும். அவர்களின் சொற்பொழிவு களை - போதனையை - பிரசங்கங்களை நோக்கி பலர் ஈர்க்கப்படவும் முடியும். மேலும் தொடர்ச்சியாக கடவுளைப்பற்றிப் பேசிக் கொண்டிருப்ப தால் அவர்கள் தம்மைத்தாமே ஏமாற்றிக் கொண்டிருக்க லாம். தமக்கு தெரியும் என்றே போகப்போக அவர்கள் உணரத் தொடங்கலாம்.

நீங்கள் ஒரு விஷயத்தைப்பற்றி பேசும்போது அது உங்களுக்குத் தெரியும் என நீங்கள் நம்பத் தொடங்கிவிடுவதே மிகப்பெரும் அபாயமாகும். ஆரம்பத்தில் நீங்கள் பேச, கற்பிக்க தொடங்கும்போது (அதிலும் கற்பித்தல் என்பது ஓரளவு கவர்ச்சிகரமானதே, ஏனெனில் அகங்காரத்துக்கு அது மிகுந்த நிறைவளிப்பதாக உள்ளது), ஒருவர் உங்களை கூர்ந்து கவனிக்கும் போது, அடியாழத்தில் உங்கள் அகங்காரத்துக்கு அது ஒரு நிறைவைத் தருகிறது. அதாவது உங்களுக்குத் தெரியும், அவருக்கு தெரியாதென்னும் நிறைவு. நீங்கள் அறிந்தவர் அவர் அறியாதவர் என்னும் நிறைவு.

நடந்த கதை ஒன்று:- ஒரு பாதிரியார், மிகப்பெரும் பாதிரியார் ஒரு பைத்தியக்கார விடுதியில் உள்ளவர்களுக்கு சில வார்த்தைகள் கூற அழைக்கப்பட்டார். அவர்களிடம் பாதிரி பெரிதாக எதிர்பார்க்கவில்லை, ஆனால் அவர் ஆச்சரியப்படும்படியாக ஒரு பைத்தியக்காரன் அவரை

மிகவும் கூர்ந்து கவனித்தான். அந்தளவு உன்னிப்பாக இதுவரை எவரும் அவர் பேச்சைக் கவனித்து கேட்டதில்லை. அவன் அப்படியே முன்னோக்கி வளைந்துவிட்டான். ஒவ்வொரு வார்த்தையையும் அவன் தன் இதயத்துக்குள் எடுத்துக் கொண்டிருந்தான். அந்த மனிதன் கண்களை சிமிட்டக்கூட இல்லை. அந்த அளவுக்கு அவன் கூர்ந்து கவனித்தான் - வசியப்பட்டவிட்டவனைப் போல.

பாதிரி தன் பிரசங்கத்தை முடித்தார். அப்போது அதே மனிதன் கண்காணிப்பாளரிடம் சென்று அவரிடம் ஏதோ சொன்னான். அவருக்கு ஆர்வம் மேலிட்டது. அவசரமாக கண்காணிப்பாளரிடம் போய், ''அந்த மனிதன் உங்களிடம் என்ன சொல்லிக் கொண்டிருந்தான்? என் பிரசங்கத்தைப் பற்றி எதுவும் சொன்னானா?'' என்று கேட்டார். ''ஆம்'' என்றார் கண்காணிப்பாளர். ''அவன் என்ன சொன்னான் என்று சொல்ல முடியுமா?'' என்று கேட்டார் பாதிரி. கண்காணிப்பாளர் சிறிது தயங்கினார். பிறகு, ''ஓ! 'பார்த்தீர்களா? நான் உள்ளே இருக்கிறேன், அவர் வெளியே போய்விட்டார். என்று சொன்னான்'' என்றார் கண்காணிப்பாளர்.

நீங்கள் இருக்கும் அதே நிலையில்தான், அதே இடத்தில்தான் ஆசிரியரும் இருக்கிறார். அவரும் விடுதிக்குள்தான் இருக்கிறார். உங்களைக் காட்டிலும் அதிகமாக அவரிடம் எதுவுமில்லை; சற்று கூடுதல் தகவல் மட்டும் இருக்கிறது. தகவல்களுக்கு ஒரு மதிப்பும் இல்லை. உங்களால் திரட்டிக் கொள்ள முடியும். தகவல்களை குவித்துக்கொள்ள சாதாரண, சராசரி அறிவுத் திறமையே போதுமானது. அதற்கு ஒருவர் மாமேதையாக இருக்கத் தேவை இல்லை. மிகுந்த திறமைசாலியாக இருக்கத் தேவை இல்லை. வெறும் சராசரி புத்தியே போதுமானது. நீங்கள் தகவல்களை சேகரித்துக்கொள்ள முடியும். சேகரித்து திரட்டிக் கொண்டே போக முடியும். ஓர் ஆசிரியராக ஆக முடியும்.

அறிதலைப்பற்றி எதுவும் அறியாதவரே ஆசிரியர். அவர் சிறந்த பேச்சாளராயிருந்தால், சிறந்த எழுத்தாளர் ஆக இருந்தால், சிறந்த ஆளுமை பொருந்தியவராக இருந்தால், ஒருவித வசீகரம் உள்ளவராக இருந்தால், காந்தக் கண்களும், ஆற்றல்மிக்க உடம்பும் கொண்டவராக இருந்தால் மக்களை அவர் கவர்கிறார். பையப்பைய அவர் அதிகமதிக தேர்ச்சிபெற்ற வர் ஆகிறார். ஆனால் அவரைச் சூழ்ந்துள்ளவர்கள் சீடர்களாக ஆக முடியாது. அவர்கள் என்றும் மாணவர்களாகவே இருப்பார்கள். தான் ஒரு குரு என அவர் பாவனை செய்தாலும்கூட உங்களை ஒரு சீடராக ஆக்க அவரால் முடியாது. அதிகபட்சம் உங்களை ஒரு மாணவராக ஆக்கவே அவரால் முடியும். மாணவர் என்பவர் அதிகத் தகவல்களைத் தேடுபவர். ஆசிரியர் என்பவர் அதிக தகவல்களை திரட்டிவைத்திருப்பவர். இவர்தான் முதல் வகை குரு. - உண்மையில் இவர் குருவே அல்லர்.

அடுத்தது, இரண்டாம் குரு. இவர் தன்னை அறிந்தவர், அவர் எதைச் சொன்னாலும், ஹெராக்ளிட்டசைப் போல் ''நான் தேடினேன்'' என்று சொல்ல முடியும். அல்லது புத்தரைப்போல் ''நான் கண்டுகொண்டேன்'' என்று சொல்ல முடியும். ஹெராக்ளிட்டஸ் அதிக அடக்கமுள்ளவராக இருக்கிறார். புத்தரைப்போல் ''நான் கண்டுகொண்டேன்'' என்று சொன்னால் அதை விளங்கிக்கொள்ள முடியாத மக்களிடமே அவர் பேசிக்கொண்டிருந் தார். புத்தரோ, ''என்னைப் போன்ற மிகச் செம்மையான ஞானி ஒருகாலத்திலும் தோன்றியதில்லை'' என்கிறார். இது தன்முனைப்பான வாசகம்போல் தோன்றுகிறது. ஆனால் அது அத்தகையதல்ல. அதில் அகங்காரமே இல்லை என்பதைப் புரிந்துகொள்ளக் கூடிய மக்களிடமே புத்தர் பேசிக்கொண்டிருந்தார்.

ஹெராக்ளிட்டஸ் பேசியது சீடர்களிடம் அல்ல, சாதாரண மக்களிடமே. அவர்கள் புரிந்துகொண்டிருக்க மாட்டார்கள். ''தேடினேன்'' என அடக்கத்துடன் கூறி, ''கண்டுகொண்டேன்'' என்ற மற்ற பகுதியை உங்கள் கற்பனைக்கு விட்டுவிடுகிறார் அவர். புத்தரோ தேடினேன்'' என்பதை ஒருபோதும் கூறுவதில்லை. ''கண்டுகொண்டேன்! என்றே கூறினார். அதற்கு முன்னதாக இந்த ஞானம் ஒருபோதும் வாய்த்ததில்லை. இது முற்றிலும் தனித்துவம் வாய்ந்தது என்கிறார்.

கண்டுகொண்டவர் குரு. இவர் சீடர்களை ஏற்றுக்கொள்வார். மாணவர்கள் தடுக்கப்படுகிறார்கள். மாணவர்கள் தாமாக அங்கு செல்லமுடியாது. தப்பித்தவறி அவர்கள் எவ்வாறோ அவ்விடத்தை அடைந்தாலும் கூடிய சீக்கிரத்தில் அவர்கள் கிளம்பிவிடுவார்கள். ஏனெனில் அதிக அறிவைச் சேகரிக்க அவர் உதவமாட்டார். உங்களை அடியோடு மாற்றவே அவர் முயல்வார். அவர் உங்களுக்கு அறிவை அல்ல, ஜீவனைக் கொடுப்பார். அதிக அறிவை அல்ல, அதிக ஜீவனையே அவர் உங்களுக்கு அளிப்பார். உங்களை மையங்கொண்டவராக ஆக்குவார். அந்த மையமோ தொப்புளுக்கு அருகில் ஓரிடத்தில் உள்ளது, தலையில் அல்ல.

தலையில் மையங்கொண்டு வாழும் எவரும் ஒரு விசித்திரப் பிறவியாகவே (*Eccentric*) இருக்கிறார். இந்த ஆங்கிலச் சொல் அழகானது. எக்சென்ட்ரிக் என்றால் மையத்திற்கு அப்பால், மையத்திலிருந்து திரிந்த, விலகிய என்று பொருள். நிஜமாகவே தலையில் வாழும் எவரும் பித்தராகவே இருக்கிறார். தலை என்பது சுற்றுவட்டமே. நீங்கள் தலையில் வாழ்வது போலவே காலிலும் வாழ முடியும். இரண்டும் மையத்திலிருந்து ஒரே தூரமாகவே உள்ளது. மையமோ தொப்புளுக்கருகில் ஓரிடத்தில் உள்ளது.

நீங்கள் மிக அதிகமாக தலையில் வேர்கொள்ள ஆசிரியர் உதவுகிறார். குருவோ உங்களை தலையிலிருந்து பிடுங்கி வேறிடத்தில் நடுகிறார். சரியாக சொன்னால் அது ஒரு மறு நடுகைதான். அதில் மிகுந்த வேதனை இருக்கிறது, துன்பம், துயரம் இருக்கிறது. இருக்கத்தான் செய்யும். நீங்கள் பிடுங்கி நடும்போது செடியை அதன் மண்ணிலிருந்து அடியோடு பறித்தெடுக்க வேண்டி உள்ளது. எப்போதுமே அப்படித்தான். அதன் பின், மறுபடியும், புது மண்ணில் அதைத் திரும்ப நட வேண்டி உள்ளது. இதற்கு காலம் தேவைப்படும்! பழைய இலைகள் உதிரும். செடி முழுவதும் துயரம், நிச்சயமின்மை வழியாக கடந்து செல்லும். தான் பிழைப்போமோ மாட்டோமா என அதற்குத் தெரியாதிருக்கும். அது ஒரு மறுபிறவிதான்! ஆசிரியரிடம் இருந்தால் புதுப்பிறவி இல்லை. ஆசானிடம் புதுபிறப்பு கிடைக்கிறது.

சாக்ரடீஸ் சரியாகச் சொன்னார்: "நான் ஒரு பேறுகால மருத்துவச்சி" என்கிறார் அவர். ஆம், குருவானவர் பிரசவம் பார்க்கும் மருத்துவச்சி யாகவே இருக்கிறார். நீங்கள் மீண்டும் பிறக்க அவர் உங்களுக்கு உதவுகிறார். ஆனால் அதன் பொருள், நீங்கள் இறந்தாக வேண்டும் என்பதே. அப்போதுதான் உங்களால் புதிதாகப் பிறக்க முடியும். எனவே குரு ஒரு மருத்துவச்சி மட்டுமல்ல. சாக்ரடீஸ் பாதி உண்மையை மட்டுமே கூறுகிறார். குரு ஒரு கொலைகாரரும் ஆவார். அவர் ஒரு கொலையாளியும் மருத்துவரும் ஆக இருக்கிறார். முதலில் நீங்கள் இருக்கும் நிலையில் உங்களை அவர் கொலை செய்வார். அதன்பிறகு மட்டுமே புதியது உங்களிடமிருந்து பிறப்பெடுக்க முடியும். உங்களின் சாவிலிருந்தே உயிர்ப்பு.

ஆசிரியர் உங்களை ஒருபோதும் மாற்றுவதில்லை. நீங்கள் எப்படி இருந்தாலும், யாராக இருந்தாலும் அவர் உங்களுக்கு அதிகத் தகவலைத் தருகிறார், அவ்வளவே. அவர் உங்களில் சேர்க்கிறார். உங்கள் தொடர்ச் சியை அவர் பேணுகிறார். அவர் உங்களைத் திருத்தி அமைக்கலாம். உங்களை செப்பம் செய்யலாம். அதிக பண்பட்டவராக, அதிக மெருகேறியவராக நீங்கள் ஆகலாம். ஆனாலும் நீங்கள் அப்படியேதான் இருப்பீர்கள். உங்கள் அடிப்படை மாறாமலே இருக்கும்.

குருவோடு இருக்கும்போது, தொடர்ச்சியின்மை நிகழ்கிறது. உங்கள் கடந்தகாலம், அது ஒருபோதும் உங்களுடையதல்ல என்பதுபோல், வேறு எவரோ ஒருவருக்கு சொந்தமானது போல், அது உங்களின் கனவு என்பதுபோல் ஆகிறது. அது நிஜம் அல்ல. அது ஒரு கொடுங்கனவு. தொடர்ச்சி உடைகிறது. இடைவெளி விழுகிறது. பழையது உதிர்கிறது, புதியது வருகிறது. இந்த இரண்டுக்கும் இடையில் ஓர் இடைவெளி இருக்கிறது. அந்த இடைவெளிதான் பிரச்சினையே. அது கடக்கப்பட்டாக

வேண்டும். அந்த இடைவெளியைக் கண்டு பலரும் அப்படியே மிரண்டு திரும்பிவிடுகிறார்கள். வேகமாக ஓடி தம் இறந்த காலத்தையே மீண்டும் போய் தொற்றிக்கொள்கிறார்கள்.

இந்த இடைவெளியைக் கடக்க ஒரு குரு உங்களுக்கு உதவுகிறார். ஆனால் ஓர் ஆசிரியரிடம் இதுபோன்ற எதுவும் இல்லை. எந்த பிரச்சினையும் இருப்பதில்லை. நீங்கள் கூடுதலாக கற்கவே ஆசிரியர் உதவுகிறார். குருவைப் பொறுத்தவரை நீங்கள் கற்றதை மறக்க, அவற்றை உங்கள் நினைவில் இருந்து அகற்ற உங்களுக்கு உதவுவதே அவரது முதல் வேலை. இதுதான் வேறுபாடு.

ரமண மகரிஷியிடம் ஒருவர், ''நான் நீண்ட தூரத்தில் இருந்து வந்துள்ளேன். உங்களிடமிருந்து கற்றுக்கொள்வதற்காக வந்துள்ளேன். எனக்கு கற்பியுங்கள் என்றும் கேட்டார். ரமணர் சிரித்தார். பிறகு ''நீ கற்றுக்கொள்ள வந்திருந்தால் வேறு எங்காவது போ. ஏனென்றால் இங்கு நாங்கள் கற்றதை மறக்கடிக்கவேச் செய்கிறோம். இங்கு நாங்கள் கற்பிப்பதில்லை. உனக்கு ஏற்கனவே அளவுக்கதிகமாக தெரிந்திருக்கிறது. அதுவே உன் பிரச்சினை. அதிகம் கற்பதால் அதிக பிரச்சினைகளே இருக்கும். கற்றதை அகற்றுவது எப்படி(கற்றியதை) பின்சுற்றுவது எப்படி என்பதையே நாங்கள் சொல்லித் தருகிறோம்.'' என்று சொன்னார்.

குரு சீடர்களைக் கவர்கிறார். ஆசிரியர் மாணவர்களையே கவர்கிறார். சீடர் என்றால் யார்? ஒவ்வொன்றையும் நுணுக்கமாகப் புரிந்துகொள்ள வேண்டி உள்ளது. அப்போது மட்டுமே பதஞ்சலியை உங்களால் புரிந்துகொள்ள முடியும். சீடர் என்பவர் யார்? மாணவருக்கும் சீடருக்கும் என்ன வேறுபாடு? மாணவர் அறிவைத் தேடுகிறார். சீடர் மாற்றத்தை, தன்மை மாற்றத்தைத் தேடுகிறார். தன்மீதே அவருக்கு மிகுந்த சலிப்பு ஏற்படுகிறது. ''நான் உள்ள நிலை மிகவும் இழிந்தநிலை, குப்பையைத் தவிர ஒன்றுமில்லை. நான் உள்ள நிலையில் எந்த மதிப்பும் இல்லை'' என்று அவர் உணர வருகிறார்.

ஒரு புதிய பிறப்பை, ஒரு புதிய இருப்பை அடைந்துகொள்ளும் இடத்துக்கு அவர் வந்திருக்கிறார். சிலுவை வழியாகவும், மரணம் மறுபிறப்பு என்பவற்றின் தாங்கமுடியாத துன்பம் வழியாகவும் கடந்து செல்ல அவர் தயாராக இருக்கிறார். எனவேதான் *(Disciple)* சீடர் என்ற சொல். டிசைப்பிள் என்பது *(Discipline)* ஒழுங்கு என்ற சொல்லில் இருந்து வருகிறது. எவ்வித ஒழுங்கின் ஊடாகவும் கடந்து செல்ல அவர் தயார். குரு கூறும் எதையும் பின்பற்ற அவர் ஆயத்தமாயிருக்கிறார். இதுவரை, பலபிறவிகளாக தன் சொந்த மனத்தையே அவர் பின்பற்றி வந்தார். அது

அவரை எங்கும் கொண்டு சேர்க்கவில்லை. தன் சொந்த மனம் கூறுவதை அவர் கவனித்து கேட்டார். அதனால் மிக அதிகத் துன்பத்தையே அடைந்தார். இப்போது ''இதற்கு மேல் முடியாது!'' என்பதை உணரும் கட்டத்துக்கு அவர் வந்துவிட்டார்.

அவர் குருவை சரணடைகிறார். இதுவே ஒழுங்கின் முதல் படி. ''இனி நீங்கள் சொல்வதை நான் கவனிப்பேன். என்னை நான் வேண்டியமட்டும் கவனித்துவிட்டேன். என் மனத்தை பின்பற்றி செல்பவனாக நான் இருந்தேன். அது என்னை எங்கும் கொண்டு செல்லவில்லை. இதை நான் உணர்ந்துவிட்டேன். இனி நீங்களே என் குரு.'' இதன் பொருள்: இனி நீங்களே என் மனம். நீங்கள் எதை கூறினாலும் நான் கேட்பேன். நீங்கள் எங்கே கூட்டிச் சென்றாலும் நான் வருவேன். உங்களை நான் கேள்வி கேட்க மாட்டேன். ஏனெனில் அந்தக் கேள்வி என் மனதில் இருந்து வருவதே.''

மனமே துன்பத்தின் காரணகர்த்தா, அவலங்களின் ஆணிவேர் மனமே என்னும் பாடத்தை வாழ்ந்து கற்றுக்கொண்டுவிட்டவரே சீடர். ''வேறொருவர்தான் என் துயரங்களுக்கு காரணம், நானல்ல'' என்றே உங்கள் மனம் எப்போதும் கூறுகிறது. இது ஒரு தந்திரம். இது மனத்தின் ஒரு தந்திரம், சூழ்ச்சி வலை என்பதை அறிந்து கொண்டுவிட்டவரே சீடர். ''வேறொருவர்தான் பொறுப்பாளி, நானல்ல'' என்றே எப்போதும் மனம் கூறுகிறது. இப்படித்தான் அது தன்னை காப்பாற்றி, பாதுகாத்து தப்பித்துக்கொள்கிறது. இது தவறு, மனதின் சூழ்ச்சியே இது என்பதை புரிந்துகொண்டு விட்டவரே சீடர்.

மனத்தின் மொத்த அபத்தத்தையும் நீங்கள் ஒரு தடவை உணர்ந்துகொண்டு விட்டால்...மனம் உங்களை ஆசையுட் செலுத்துகிறது. ஆசை உங்களை ஏமாற்றத்துக்கு இட்டுச் செல்கிறது. மனம் உங்களை வெற்றியை நோக்கி அழைத்து செல்கிறது. ஒவ்வொரு வெற்றியும் ஒரு தோல்வியாக ஆகிறது. மனம் உங்களை அழகை நோக்கி அழைத்துச் செல்கிறது. ஒவ்வோர் அழகும் ஓர் அசிங்கமென்று தெரிய வருகிறது. ஆசை உங்களை மேலே மேலே இட்டுச் செல்கிறது. தன் எந்த வாக்குறுதியையும் அது ஒருபோதும் நிறைவேற்றுவதில்லை. அது உங்களுக்கு வாக்குறுதிகளை வாரி வழங்குகிறது...இல்லை, ஒரே ஒரு வாக்குறுதியைக்கூட அது நிறைவேற்றுவதில்லை. அது உங்களுக்கு சந்தேகத்தையே தருகிறது. சந்தேகம் இதயத்தை ஒரு புழுவாக துளைத்தெடுக்கிறது. அது ஒரு நஞ்சு. அது உங்களை விசுவாசம் கொள்ள அனுமதிக்காது. விசுவாசம் இல்லாவிட்டால் வளர்ச்சி என்பது இல்லை.

இந்த மொத்த விஷயத்தையும் நீங்கள் புரிந்துகொண்டால் மட்டுமே நீங்கள் ஒரு சீடராக ஆக முடியும்.

ஓர் ஆசானிடம் நீங்கள் வந்ததும் உங்கள் தலையை அவருடைய பாதத்தில் வைக்கிறீர்கள். இது உங்கள் தலையை கைவிடுவதன் குறியீடு ஆகும். அதற்கே உங்கள் தலையை அவர் பாதத்தில் வைக்கிறீர்கள். ''இனி நான் தலை இல்லாமலே இருப்பேன். இனி நீங்கள் என்ன சொன்னாலும் அதுவே என் வாழ்வு'' என்று நீங்கள் சொல்கிறீர்கள். இதுவே சரணாகதி. ஓர் ஆசானிடம் இருக்கும் சீடர்கள் சாகவும் மறுபடியும் பிறக்கவும் தயாராக இருக்கிறார்கள்.

அடுத்து மூன்றாமவர் - குருமார்களின் குரு. மாணவர்களின் ஆசிரியர் முதல்வகை. சீடர்களின் குரு இரண்டாம் வகை. மூன்றாவதோ குருமார் களின் குரு. பதஞ்சலி கூறுகிறார்: ஒரு குரு கடவுளாக ஆகிறபோது அவர் ஆசான்களுக்கு ஆசானாக ஆகி இருக்கிறார். கடவுளாக ஆவது என்றால் காலத்தை கடந்து நிற்பதாகும். இவருக்கு காலம் இருப்பதில்லை. இல்லாமல் போகிறது. இவருக்கு காலம் என்பது கிடையாது. காலமற்ற நிலையை, எல்லை அற்றதை அவர் உணர்ந்துகொள்ளும்போது தன்மைகள் மாறி நல்லவராகி இருப்பது மட்டுமல்ல, உணர்வுள்ளவராக விழிப்புள்ளவராக ஆகி இருப்பது மட்டுமல்ல, காலத்தைக் கடந்தும் போய்விட்டிருக்கிறார் குருமார்களின் குரு ஆகிவிடுகிறார். இப்பொழுது அவர் ஒரு கடவுள்!

இவர் இந்த குருமார்களின் குரு. பிறகு என்னதான் செய்வார்? ஒரு குரு அவரது உடலை விட்டு நீங்கிய பிறகு மட்டுமே இந்த கட்டம் வருகிறது. அதற்கு முன் ஒருபோதுமில்லை. ஏனெனில் உடலில் இருக்கும்போதே காலம் இல்லை என்பதை நீங்கள் உணர முடியும், தெளிய முடியும். ஆனால் உடலுக்குள் ஒரு உயிரியல் கடிகாரம் இருக்கிறது. அது பசியை உணர்கிறது. குறிப்பிட்ட கால இடைவெளிக்குப்பிறகு மறுபடியும் பசி - பசி, தூக்கம், நோய், நலம் என உணர்கிறது. இரவானால் உடல் தூங்கப்போயாக வேண்டும். காலையில் அது விழித்தெழுந்தாக வேண்டும். உடலில் ஓர் உடலியல் கடிகாரம் உள்ளது. எனவே இந்த மூன்றாம் வகை குரு, உடலை அவர்விட்டுச் செல்லும்போது மட்டுமே, மீண்டும் உடலுக்கு அவர் திரும்பி வருவதில்லை என்ற நிலையில் மட்டுமே, நிகழ்கிறார்.

புத்தர் இரண்டு பதங்களை பயன்படுத்துகிறார். முதலாவதை அவர் 'நிர்வாணா' விழிப்படைதல் என்கிறார். விழிப்புணர்வு நிலை அடைந்தபிறகும் புத்தர் உடலில் தங்கி இருந்தார். இதுவே விழிப்படைதல், நிர்வாணம் ஆகும். பின் நாற்பது ஆண்டுகளுக்கு பிறகு அவர் தன் உடலைவிட்டு நீங்கினார். அதை அவர் முழு நிர்வாணா - மகாபரிநிர்வாணா

என்கிறார். இப்போது அவர் குருமார்களுக்கெல்லாம் குரு ஆகிறார். குருமார்களின் குருவாகவே இருந்து வருகிறார்.

ஒவ்வொரு குருவும், உடலை அவர் நிரந்தரமாக விட்டு நீங்கியபின், இனி திரும்பவும் உடல் எடுப்பதில்லை என்றானதும், குருமார்களின் குரு - மகாகுரு ஆகிறார். முகமது, யேசு, மகாவீரர், புத்தர் பதஞ்சலி போன்றோர் குருமார்களின் குருவாய் இருந்து வருகிறார்கள். இவர்கள் சீடர்களுக்கல்ல, குருமார்களுக்கே தொடர்ந்து வழிகாட்டி வந்திருக்கிறார்கள்.

பதஞ்சலியின் பாதையில் சென்று ஒருவர் ஒரு குருவாக ஆகும் போதெல்லாம் உடனடியாக அவருக்கு பதஞ்சலியுடன் ஒரு தொடர்பு ஏற்பட்டு விடுகிறது. பதஞ்சலியின் ஆன்மா, தனிநபர் உணர்வு எல்லையின்மையில் / அனந்தத்தில் மிதந்து கொண்டிருக்கிறது. அதையே அவர் கடவுள் என்கிறார். பதஞ்சலியின் பாதையைப் பின்பற்றி ஒருவர் விழிப்புணர்வுபெற்று, குருவாக ஆகும்போது இப்போது கடவுளாக இருக்கிற ஆதி குருவுடன் ஒரு தொடர்பு உடனடியாக ஏற்பட்டு விடுகிறது.

புத்தரைப் பின்பற்றும் எவராவது விழிப்புணர்வு அடையும் போதெல்லாம், உடனடியாக இருத்தலில் ஓர் உறவு ஏற்படுகிறது. உடனடியாக அவர் புத்தருடன் இணைப்பு ஏற்பட்டவராகிறார். புத்தர் இப்போது தன் உடலுடன் இல்லை. காலத்துக்குள் இடத்துக்குள் அவர் இல்லை. இருந்தாலும் அவர் இருக்கிறார். முழுமையில் முழுமையாக புத்தர் கலந்துவிட்டார். ஆயினும் அவர் இருக்கிறார்.

இது மிகவும் முரண்பாடானதுதான். புரிந்துகொள்ள மிகவும் கடினமானதுதான். ஏனென்றால் காலத்தை கடந்த எதையும் நம்மால் புரிந்துகொள்ள முடிவதில்லை. நமது புரிதல் மொத்தமும் காலத்துக்கு உட்பட்டதாகவே உள்ளது. நமது மொத்த புரிதலும் வெளிக்குள் (*space*) அடங்கியதாகவே உள்ளது. புத்தர், காலத்தையும் வெளியையும் கடந்தவராக இருக்கிறார் என ஒருவர் கூறும்போது அது நமக்கு எந்தப் பொருளையும் தருவதில்லை.

இடவெளிக்கு அப்பால்பட்டு புத்தர் இருக்கிறார் என்று நீங்கள் கூறும்போது குறிப்பிட்ட எந்த ஓர் இடத்திலும் அவர் இருக்கவில்லை என்றும் பொருளாகிறது. ஆயின் குறிப்பிட்ட எந்த இடத்திலும் இல்லாமல் ஒருவர் எப்படி இருக்கமுடியும்? அவர் இருக்கிறார். அவர் இருக்கிறார் - அவ்வளவுதான்! எங்கே என்று நீங்கள் சுட்டிக் காட்ட முடியாது. அவர் இருக்கும் இடத்தை உங்களால் கூறமுடியாது. அந்தப் பொருளில் அவர் எங்குமில்லை. அதே பொருளில் அவர் எங்கும் இருக்கிறார். இடவெளியில்

வாழும் மனத்தால் இடவெளி கடந்த ஒன்றை புரிந்துகொள்வது மிகவும் கடினம். ஆனால் புத்தரின் முறைகளைக் கடைப்பிடித்து ஒரு குருவாக ஆகிற எவருக்கும் உடனடியாக ஓர் இணைப்பு ஏற்படுகிறது. தன் பாதையை பின்பற்றும் மக்களுக்கு புத்தர் இன்னும் வழிகாட்டிக் கொண்டே இருக்கிறார். தன் பாதையைப் பின்பற்றும் மக்களுக்கு யேசு இன்னும் வழிகாட்டிக் கொண்டே இருக்கிறார்.

திபெத்தில் கைலாசத்தின்மேல் ஓர் இடம் இருக்கிறது. அங்கு ஒவ்வோர் ஆண்டும் புத்தர் இவ்வுலகை விட்டுச் சென்ற நாளான்று வைசாக மாதத்தின் பவுணர்மி இரவில் ஐநூறு குருமார்கள் ஒன்று கூடுகிறார்கள். இந்த இடத்தில் ஒவ்வோர் ஆண்டும் ஐநூறு குருமார்கள் ஒன்றுகூடுவதன் காரண்மாக புத்தர் மறுபடியும் கண்கூடாக இறங்கிவரும் படியான ஓர் உணர்வை அடைகிறார்கள்.

இது ஒரு பழைய வாக்குறுதி. இதை இன்றும் புத்தர் நிறை வேற்றுகிறார். ஐநூறு குருமார்கள் அங்கு இருந்தாக வேண்டும். ஒருவர் கூட குறையக் கூடாது. ஏனெனில் அப்போது அது சாத்தியமாகாது. இந்த ஐநூறு குருமார்களும் ஒரு நிறையாக, ஒரு நங்கூரம்போல் புத்தர் இறங்கிவர உதவுகிறார்கள். ஒரே ஒரு குரு குறைந்தாலும் அந்த நிகழ்வு நிகழ்வதில்லை. ஏனெனில் சிலநேரங்களில் அப்படியும் ஏற்படுகிறது - ஐநூறு குருமார்கள் இருப்பதில்லை. அப்படியானால் அந்த ஆண்டு இணைப்பு கிடைக்காது. புலப்படும்படியான இணைப்பு ஏற்படாது.

ஆனால் திபெத்தில் நிறைய குருமார்கள் உள்ளனர். எனவே அதில் எந்தச் சிக்கலும் இல்லை. திபெத் மிகுந்த ஞானம்பெற்ற நாடாக இருக்கிறது. இன்று வரை அது அப்படியே நீடிக்கிறது. வருங்காலத்தில் அது அப்படி இராது. 'மாவோ' (*Mao*)க்கு நன்றி. திபெத் உருவாக்கியுள்ள அந்த நுட்பமான அமைப்பு முழுவதையும் அவர் அழித்துவிட்டார். நாடு முழுவதுமே ஒரு மடாலயமாக இருந்தது. மற்ற நாடுகளிலும் மடங்கள் உள்ளன. திபெத்தோ மடாலயங்களிலேயே இருந்தது.

ஒவ்வொரு குடும்பத்தில் இருந்தும் ஒருவர் சந்நியாசம் ஏற்க வேண்டும், லாமா ஆக வேண்டும் என்ற விதி இருந்தது. ஒவ்வோர் ஆண்டும் குறைந்தது ஐநூறு குருமார்கள் எப்போதும் கிடைக்கச் செய்வதற்காகவே அந்த விதி இயற்றப்பட்டது. கைலாசத்தில் சரியாக நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு ஐநூறு குருமார்கள் ஒன்று கூடும்போது புத்தர் மீண்டும் கண்ணுக்குள்த் தெரிகிறார். காலத்திற்குள்ளும் இடத்துக் குள்ளும் அவர் இறங்கி வருகிறார்.

அவர் வழிநடத்தியே வந்திருக்கிறார். ஒவ்வொரு குருவும் வழிநடத்தியே செல்கிறார். ஒரு குருவின் அருகில், ஆசிரியரின் அருகில் அல்ல, ஆசானின் அருகில். நீங்கள் அண்டியதுமே உங்களால் விசுவாசம்கொள்ள முடிகிறது. இந்த வாழ்வில் நீங்கள் விழிப்புணர்வு அடையாவிட்டாலும் தொடர்ச்சியாக ஒரு நுட்பமான வழிகாட்டுதல் உங்களுக்கு கிடைத்தபடியே இருக்கும் - நீங்கள் வழிநடத்தப்பட்டுக் கொண்டிருப்பதாக நீங்களே உணர்ந்துகொள்ளாவிட்டாலும் கூட இது நடக்கிறது.

குருட்ஜீப்பின் சீடர்கள் பலர் என்னிடம் வந்திருக்கிறார்கள். அவர்களை என்னிடம் குருட்ஜிப் தள்ளிக் கொண்டே இருப்பதால்தான் அவர்கள் என்னிடம் வருகிறார்கள். குருட்ஜீப்பைத் தவிர வேறு யாரும் அவர்களை தள்ளிவிட முடியாது. இது துரதிருஷ்டவசமானதே. ஆனால் வேறு வழியில்லை - குருட்ஜீப்பின் முறையில் இயங்கும் குரு இப்போது வேறு யாரும் இல்லை. எனவே அவரால் தொடர்பு கொள்ள வழியில்லை. குருட்ஜீப்பின் சீடர்கள் பலர் கூடிய விரைவில் இங்கு வருவார்கள்; என்ன நடக்கிறது என்பதை அவர்களாலேயே புரிந்துகொள்ள முடியாது - எனவே அவர்கள் அறியாமலே வருவார்கள். இது வெறும் தற்செயலானதே என்று அவர்கள் நினைக்கிறார்கள்.

ஒரு குறிப்பிட்ட பாதையில் ஒரு குரு, காலத்திலும், வெளியிலும் (*in time and space*) இருந்தால் ஆதிகுரு உத்தரவுகளை அனுப்பிக்கொண்டே போக முடியும். இப்படித்தான் சமயங்கள் எப்போதும் உயிருடன் நீடித்து வந்துள்ளன. சங்கிலி இணைப்பு அறுந்துவிட்டால் அந்த மதம் இறந்து விடுகிறது. உதாரணமாக, மகாவீரர் புதுப்புது உத்தரவுகளை அனுப்பிக் கொண்டே இருக்கும்போது, அதை ஏற்கும் ஒரே ஓர் ஆசான் கூட இல்லாததால், சமணமதம் இறந்துவிட்டது. ஏனெனில் ஒவ்வொரு காலத்துனுடம் சூழல்கள் மாறுகின்றன, மனம் மாறுகிறது, உத்திகளும் மாறியாக வேண்டும், புதிய முறைகள் வகுக்கப்பட்டாக வேண்டும், புதிய விஷயங்கள் சேர்க்கப்பட்டாக வேண்டும், பழைய காரியங்கள் கழித்துக்கட்டப் பட்டாகவேண்டும். (*Everyage*)ஒவ்வொரு யுகத்திற்கும் மிகுந்த வேலை தேவைப்படுகிறது.

ஒரு குரு குறிப்பிட்ட பாதையில் இருந்தால் பின் இப்போது கடவுளாக இருக்கும் மூலகுரு தொடரமுடியும். ஆனால், அதற்கு பூமியில் ஒரு குரு இல்லாவிட்டால், பின் சங்கிலி அறுந்துவிடுகிறது, அந்த மதம் இறந்து விடுகிறது. இப்படி பல தடவை நடக்கிறது.

உதாரணமாக, ஒரு புதிய மதத்தை உருவாக்கும் உள்நோக்கம் யேசுவுக்கு ஒருபோதும் இருந்ததில்லை. அவர் அதை ஒருபோதும்

எண்ணிப் பார்த்ததில்லை. அவர் ஒரு யூதர். கடவுளராகி விட்ட பழைய யூத குருமார்களிடமிருந்து நேரடி உத்தரவுகளை அவர் பெற்றுக் கொண்டிருந்தார். ஆனால் புதிய உத்தரவுகளை யூதர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. ''சாத்திரங்களில் இப்படி எழுதப்படவில்லை. நீர் என்ன பேசிக் கொண்டிருக்கிறீர்?'' என்பார்கள் அவர்கள். ஒருவன் உன்னை செங்கல்லால் அடித்தால் அவன் மீது ஒரு பாறையை வீசி தாக்கு என்று தான் சாத்திரங்களில் எழுதி உள்ளது: கண்ணுக்கு கண், உயிருக்கு உயிர் என எழுதி உள்ளது. ஆனால் யேசுவோ உன் எதிரியையும் நேசி என்றும் அவன் உன்னை ஒரு கன்னத்தில் அடித்தால் மறுகன்னத்தையும் காட்டு என்றும் சொல்லத் தொடங்கினார்.

யூத சாத்திரங்களில் இது எழுதப்படவில்லை. ஆனால் இது புதிய உத்தரவு. ஏனெனில் காலம் மாறி உள்ளது. செய்து பார்க்க வேண்டியே ஒரு புதுமுறை இது. கடவுளர்களிடமிருந்து நேரடியாக பெற்றுக்கொண்டிருந்தார் யேசு. கடவுளர்கள் என்பது பதஞ்சலியின் அர்த்தத்தில்: பழைய தீர்க்க தரிசிகளே. கடவுளர். ஆனால் சாத்திரங்களில் அது எழுதப்பட்டிருக்க வில்லை. தாம் செய்தது. இன்னதென அறியாமலேயே யேசுவை யூதர்கள் கொன்றார்கள். ஆகவேதான் கடைசி நிமிடத்தில் யேசு சொன்னார். சிலுவைமேல் இருந்த போது அவர் சொன்னார், ''கடவுளே, இந்த மக்களை மன்னியுங்கள். ஏனெனில் தாம் செய்கிறது இன்னதென அவர்களுக்குத் தெரியவில்லை. அவர்கள் தற்கொலை செய்து கொண்டிருக்கிறார்கள். தம்மைத் தாமே கொன்று கொண்டிருக்கிறார்கள். ஏனெனில் தம் சொந்த குருமார்களுடனான இணைப்பையே அவர்கள் துண்டித்துக் கொண்டிருக்கிறார்கள்.''

நடந்ததும் அதுவே. யேசுவின் படுகொலை யூதரின் மாபெரும் சீரழிவாக ஆயிற்று. தொடர்பு அற்றுப்போனதால் இரண்டாயிரம் ஆண்டுகளாக அவர்கள் துன்புற்று வருகிறார்கள். அவர்கள் சாத்திரங்க ளுடன் வாழ்கிறவர்கள். உலகத்திலேயே பெரிதும் சாத்திர சம்பிரதாயங்க ளுடன் வாழும் மக்கள் அவர்கள்தான். தால்மூத், தோரா எனும் சாத்திரங்களுடன் அவர்கள் வாழ்கிறார்கள். காலவெளிகடந்த உயர் ஆதாரங்களில் இருந்து இணைப்பு முயற்சி மேற்கொள்ளப்படும் போதெல்லாம் அதை அவர்கள் கவனிப்பதில்லை.

இப்படி பல தடவை நடந்துள்ளது. இப்படித்தான் புதிய சமயங்கள் பிறக்கின்றன. இது அநாவசியம் - தேவையே இல்லை! ஆனால் பழைய மனிதர்கள் கவனிக்கமாட்டார்கள். ''எங்கே எழுதி இருக்கிறது அப்படி?'' என்பார்கள் அவர்கள். அது எழுதப்பட்டிருக்கவில்லை. அது ஒரு புதிய உத்தரவு, ஒரு புதிய ஏற்பாடு. புதிய சாத்திரத்துக்கு நீங்கள் செவிமடுக்க வில்லை என்றால், புதிய உத்தரவு புதிய மதமாக ஆகும். மேலும்

எப்போதுமே புதிய மதமே பழைய மதத்தைவிட அதிக பலம் வாய்ந்ததாக தோன்றுவதையும் காண்க. ஏனெனில் அதனிடம் தான் அண்மைக்கால உத்தரவுகள் உள்ளன. எனவே மனிதருக்கு அதனால் அதிகமாக உதவ முடிகிறது.

யூதர்கள் பழைய நிலையிலேயே இருந்தார்கள். கிறிஸ்தவமோ பாதி பூமியில் பரவிவிட்டது. இன்று உலகில் பாதி கிறிஸ்தவம். சமணர்கள் இந்தியாவில் மட்டுமே இருக்கிறார்கள். அதிலும் மிகச்சிறிய சிறுபான்மைய ராகவே இருக்கிறார்கள். ஏனெனில் அவர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. உயிருள்ள குரு எவரும் அவர்களிடத்தில் இல்லை. அவர்களிடம் பல சாதுக் கள், துறவிகள் இருக்கிறார்கள். நிறையவே இருக்கிறார்கள். ஏனெனில் அவர்களால் ஆதரிக்க முடியும் - அவர்கள் ஒரு பணக்கார சமூகம் என்ப தால். ஆனால் ஒரே ஒரு வாழும் குரு அவர்களிடையே இல்லை. எனவே மேலிடங்களில் இருந்து எந்த உத்தரவுகளும் தரப்பட முடிவ தில்லை. இந்த யுகத்தில் இந்திய இறையியலின் (*Theosophy of India*) மாபெரும் வெளிப்பாடுகளில் ஒன்று இது: அதாவது குருமார்கள் உலகமுழுவதற்கும் தொடர்ச்சியாக உத்ரவுகள்தந்துகொண்டே போகிறார்கள். இவர்கள் தான் மூன்றாம் வகை குருமார்கள். குருமார்களுக்கெல்லாம் குரு என்கிறார் பதஞ்சலி. கடவுள் என்பதன்மூலம் அவர் குறிப்பிடும் பொருள் இதுவே.

**கால வரம்புகளைக் கடந்து இருப்பதால் அவர் குருமார்களின் குருவாக இருக்கிறார்.**

காலம் என்றால் என்ன? ஒருவர் எப்படி காலத்தைக் கடந்து செல்வது? இதைப் புரிந்துகொள்ள முயலுங்கள். காலம் என்றால் ஆசை. ஏனெனில் ஆசைக்கு காலம் தேவை. ஆசையின் உருவாக்கமே காலம். காலம் இல்லாவிட்டால் எப்படி நீங்கள் ஆசைப்பட முடியும்? காலம் இல்லையெனில் ஆசை இயங்க அங்கு இடமில்லை. ஆசை இயங்க வருங்காலம் தேவை. எனவேதான் கோடிக்கணக்கான ஆசைகளுடன் வாழும் மக்கள் எப்போதும் சாவுக்குப் பயப்படுகிறார்கள். சாவைக் குறித்து அவர்கள் ஏன் பயப்படுகிறார்கள்? ஏனெனில் காலத்தை திடும்என அறுத்துவிடுகிறான் காலன். அதற்குமேல் காலம் இல்லை. உங்களிடமோ கோடிக்கணக்கான ஆசைகள் உள்ளன. அதற்குள் இதோ மரணம் வந்துவிட்டது.

மரணம் என்றால் இனி எதிர்காலம் இல்லை என்று பொருள். மரணம் என்றால் இனி காலம் இல்லை என்று பொருள். கடிகாரம் தொடர்ந்து ஓடிக்கொண்டு போகலாம். ஆனால் உங்களுக்குள் ஓட்டம் இருக்காது. ஆசைகள் நிறைவேற காலம் - எதிர்காலம் தேவை. நிகழ்காலத்தில் நீங்கள் ஆசையோடிருக்க முடியாது. நிகழ்காலத்தில் ஆசை இருப்பதில்லை. நிகழ்காலத்தில் எதையேனும் நீங்கள் ஆசைப்பட முடியுமா? எப்படி

ஆசைப்படுவீர்கள்? ஏனெனில் நீங்கள் ஆசைப்பட்டதும் உடனடியாகவே எதிர்காலம் நுழைந்து விடுகிறதே! எதிர்காலம் என்பது நாளையாக இருக்கலாம் அல்லது மறு நிமிடமாகவும் இருக்கலாம். இந்தக் கணத்தில் இங்கே - இப்போது எவ்வாறு நீங்கள் ஆசைப்பட முடியும்?

காலம் இல்லாவிட்டால் ஆசை சாத்தியமில்லை. ஆசை இல்லாவிட்டால் காலம் சாத்தியமில்லை. அவை இரண்டும் கலந்த ஓர் இயல்பாடு (*Phenomenon*). ஒரே நாணயத்தின் இரு அம்சங்கள். ஒருவர் ஆசையற்றவராக ஆனால் காலமற்றவராக ஆகிறார். வருங்காலம் நின்றுவிடுகிறது. இறந்தகாலம் நின்றுவிடுகிறது. நிகழ்காலம் மட்டுமே இருக்கிறது. ஆசை அற்றுவிட்டால் அது, கடிகாரம் தொடர்ந்து ஓடிக்கொண்டிருந்தும் அதன் முள்கள் எடுக்கப்பட்டுவிட்டதைப் போன்றது. ஒரு கடிகாரம் ஓடிக்கொண்டிருக்கிறது, ஆனால், அதில் முள்கள் இல்லை என்றால் எப்படி இருக்கும் என்பதை பாருங்கள். அதைப்பார்த்து நேரம் சொல்ல முடியாது,

ஆசை இல்லாத மனிதன் முட்கள் இல்லாமல் ஓடும் கடிகாரத்தைப் போன்றவன். அதுவே ஒரு புத்தரின் நிலை. உடலில் அவர் வாழ்கிறார். கடிகாரம் துடித்துக்கொண்டே இருக்கிறது. ஏனெனில் உடலுக்கு அதற்கே உரிய தொடர்ந்த உடலியல் நிகழ்முறை உள்ளது. அதற்கு பசி எடுக்கும். அது உணவு கேட்கும். அதற்கு தாகம் எடுக்கும். அது தண்ணீர் கேட்கும். அதற்கு உறக்கம் வரும். உடனே தூங்கச் செல்லும். உடலுக்கு தேவை. எனவே அது துடித்துக்கொண்டிருக்கிறது. ஆனால் உள்ளார்ந்த ஜீவனுக்கு காலம் என்பதில்லை: அந்த கடிகாரத்துக்கு முட்கள் இல்லை.

ஆனாலும் உடலின் காரணமாக நீங்கள் உலகில் - காலம் எனும் உலகில் நங்கூரம் இட்டு இருக்கிறீர்கள். உங்கள் உடலுக்கு ஓர் எடை இருக்கிறது. அந்த எடையின் காரணமாக இப்பவும் புவிஈர்ப்புவிசை உங்கள்மேல் செயல்படுகிறது. உடல் கைவிடப்பட்டதும், ஒரு புத்தர் உடலைவிட்டு நீங்குகிறபோதுதான், துடிப்பும் நிற்கிறது. அப்போது அவர் தூய உணர்வாக இருக்கிறார். உடல் இல்லை, எனவே பசி இல்லை, திகட்டல் இல்லை; உடலில்லை, எனவே தாகமில்லை; உடலில்லை, எனவே எந்தத் தேவையுமில்லை.

ஆசை - தேவை என்ற இந்த இரு சொற்களை நினைவில் கொள்ளுங்கள். ஆசை மனத்தினுடையது. தேவை உடலினுடையது. ஆசை, தேவை இரண்டும் இருந்தால் நீங்கள் முட்களுடன் கூடிய கடிகாரமாக இருக்கிறீர்கள். ஆசை இல்லாமல் தேவை மட்டும் இருந்தால் நீங்கள் முட்கள் இல்லாத கடிகாரமாக இருக்கிறீர்கள். தேவையும் விடப்படும்போது நீங்கள் காலம் கடந்தவராகி விடுகிறீர்கள். இதுவே அழிவற்ற தன்மை - காலம்

கடந்த நிலை. காலத்துக்கு அப்பால்பட்ட நிலையே நித்தியம் உதாரணமாக, நேரம் அறிய நாள் முழுதும் தொடர்ச்சியாக நான் கடிகாரத்தை பார்த்தாக வேண்டி உள்ளது. கடிகாரத்தை நான் பார்ப்பதில்லை என்றால் நேரம் என்ன என்பது எனக்குத் தெரியாது. ஐந்து நிமிடங்களுக்கு முன்புதான் அதை நான் பார்த்திருந்தாலும்கூட மறுபடியும் அதை நான் பார்க்க வேண்டி உள்ளது. ஏனென்றால் இப்போது சரியாக என்ன நேரமென்று எனக்கு தெரிவதில்லை. ஏனென்றால் உள்ளுக்குள் காலம் இல்லை. உடல் மட்டுமே துடித்துக்கொண்டுள்ளது.

உணர்வுக்கு காலம் / நேரம் என்பது இல்லை. உணர்வு ஒன்றை விரும்பும்போதுதான் காலம் உருவாக்கப்படுகிறது; உடனடியாக உருவாக்கப்படுகிறது. இருத்தலில் காலம் என்பது இல்லை. புவியில் மனிதர் இல்லை என்றால் உடனடியாக காலம் மறைந்துவிடும். தொடர்ந்தும் மரங்கள் துடிக்கும். பாறைகள் துடிக்கும், சூரியன் உதிக்கும், நிலவு மறையும், எல்லாமே அது இருக்கிறபடி தொடரும். ஆனால் காலம் இராது. ஏனெனில் நிகழ்வில் காலம் வருவதில்லை. கடந்ததன் நினைவுடனும், வருவதுகுறித்த கற்பனையுடனுமே காலம் வருகிறது.

புத்தருக்கு இறந்த காலம் இல்லை. அவர் அதை முடித்துவிட்டார். அதை அவர் சுமந்துகொண்டிருப்பதில்லை. புத்தருக்கு எதிர்காலம் கிடையாது. அதையும் அவர் முடித்துவிட்டார். ஏனெனில் அவருக்கு ஆசை இல்லை. ஆனால் தேவைகள் உள்ளன, ஏனெனில் உடல் இருக்கிறது. இன்னும் சில கருமங்கள் நிறைவேற்றப்படவேண்டும். இன்னும் சில நாள்கள் உடல் இயங்கிக்கொண்டிருக்கும். பழைய உந்துவிசையே தொடரும். கடிகாரத்துக்கு சாவிகொடுக்கிறீர்கள். சாவி கொடுப்பதை நீங்கள் நிறுத்திவிட்டாலும் சில மணிகளுக்கோ சில நாள்களுக்கோ அது இயங்குவது தொடரும். பழைய உந்துவிசையே தொடர்கிறது.

> **கால வரம்புகளைக் கடந்து இருப்பதால் அவர் குருமார்களின் குருவாக இருக்கிறார்.**

தேவை, ஆசை இரண்டுமே மறைந்ததும் காலம் மறைகிறது. ஆசைக்கும் தேவைக்கும் இடையில் பாகுபாடு செய்து கொள்ள மறக்கவேண்டாம். இல்லாவிட்டால் நீங்கள் மிக ஆழமான குழப்பத்தில் ஆழ்ந்துவிட முடியும். தேவைகளை துறக்க ஒருபோதும் முயலாதீர்கள். யாராலும் துறக்கவும் முடியாது - உடல் கைவிடப்படும் வரை. ஒன்றை இன்னொன்றாக கருதி குழப்பிக் கொள்ளாதீர்கள். எது தேவை, எது ஆசை என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

தேவை உடலில் இருந்து வருகிறது. ஆசை மனத்தில் இருந்து வருகிறது. தேவை விலங்குக்குரியது. ஆசை மனிதருக்குரியது. உங்களுக்கு

பசித்தால் உணவு தேவை என்பது உண்மையே. தேவை முடிந்ததும் நிறுத்திவிடுகிறீர்கள். உடனே உங்கள் வயிறு ''போதும்!'' என்கிறது. ஆனால் மனம், ''இன்னும் கொஞ்சம். சுவை அருமை'' என்கிறது. இதுவே ஆசை. ''தாகம்'' என்கிறது உங்கள் உடல். ஆனால் உடல் ஒருபோதும் கோகோ கோலா கேட்பதில்லை. ''தாகம்'' என்றே உடல் சொல்கிறது. நீங்கள் குடிக்கிறீர்கள். தேவைக்கு மேல் உங்களால் தண்ணீர் குடிக்க முடியாது. ஆனால் கோகோகோலா அளவுக்கும் அதிகமாக உங்களால் குடிக்க முடிகிறது. இது ஒரு மன நிகழ்வு.

இந்தக் காலகட்டத்தில் கோகாகோலா மட்டுமே ஒரே உலகு தழுவிய பொருளாக இருக்கிறது - சோவியத் ருசியா உட்பட. வேறு எதுவும் நுழைய வில்லை, ஆனால் கோகா கோலா நுழைந்துவிட்டது. இரும்புத் திரையால் கூட அதை தடுக்க முடியவில்லை. ஏனெனில் மனித மனம், மனித மனம்தான்.

தேவை எங்கு முடிகிறது, ஆசை எங்கு தொடங்குகிறது என்பதை எப்போதும் கவனியுங்கள். இதை ஒரு தொடர்ச்சியான விழிப்புணர்வாக ஆக்குங்கள். இந்த பாகுபாட்டை நீங்க்ள் செய்துவிட முடிந்தால் இருத்தலுக்கான திறவுகோல் குறிப்பு ஒன்றை நீங்கள் அடைந்திருக்கிறீர்கள். தேவை அழகானது. ஆசை அசிங்கமானது. ஆனால் தொடர்ந்து ஆசைப்பட்டுக்கொண்டே போகும் மக்கள் இருக்கிறார்கள். இவர்கள் தம் தேவைகளைச் சுருக்கிக்கொண்டே போவார்கள். இவர்கள் முட்டாள்கள், அறிவில்லாதவர்கள்! இவர்களைவிட பெரிய மூடர்களை உலகில் உங்களால் கண்டுபிடிக்க முடியாது. ஏனெனில் இவர்கள் நேர் தலைகீழாக செய்துகொண்டு இருக்கிறார்கள்.

நாள்கணக்கில் விரதம் இருந்து சொர்க்கத்துக்கு ஏங்கும் மக்கள் இருக்கிறார்கள். உண்ணாவிரதம் என்பது தேவையை வெட்டுதல் ஆகும். சொர்க்கத்துக்கு ஆசைப்படுவதோ ஆசையை மேலும் அதிகரிக்க உதவுதல் ஆகும். அவர்களின் காலஅளவு உங்களுடையதைவிட பெரியது. ஏனெனில் அவர்கள் சொர்க்கத்தைப் பற்றி எண்ண வேண்டி உள்ளது. சொர்க்கத்தையும் உள்ளடக்கும் பரந்துவிரிந்த காலத்தை அவர்கள் பெற்றிருக்கிறார்கள். உங்கள் காலம் சாவுடன் முடிகிறது. உங்களைப் பார்த்து அவர்கள் ''நீ ஓர் உலகாயத வாதி'' என்பார்கள். அவர்கள் ஆன்மிகவாதிகளாம். ஏனெனில் அவர்களின் காலம் நீண்டுகொண்டே போகிறது. அது சொர்க்கங்களையே - ஒன்றல்ல, ஏழு சொர்க்கங்களையும் உள்ளடக்குகிறது. இறுதி விடுதலையான மோட்சமும்கூட அவர்களின் கால வரம்புக்குள் வந்துவிடுகிறது? அவர்களின் காலம் பரந்துவிரிந்தது. உங்கள் காலமோ இறப்புடன் முடிந்துபோவதால் நீங்கள் எல்லாம் உலகாயதவாதிகள்!

தேவைகளைக் கைவிடுதல் எளிது, ஏனெனில் உடல் மவுனமானது, அதை உங்களால் வதைக்க முடியும் -இதை நினைவில் கொள்ளுங்கள். மேலும் உடல் எளிதாக (பின்பற்றக்) கூடியது. எனவே அதை நீங்கள் நீண்டகாலம் சித்திரவதை செய்தால் உங்கள் வாதனைக்கு அது ஒத்துப்போய்விடுகிறது. மேலும் அது ஓர் ஊமையும்கூட! எதையும் அது வாய்திறந்து கூறாது! இரண்டு மூன்று நாள்களுக்கு நீங்கள் விரதம் இருந்தால் ''பசி பசி'' என அது கூறும். ஆனால் உங்கள் மனம் சொர்க்கத்தைப்பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறது. பட்டினி கிடக்காமல் பிரவேசிக்க முடியாது. ''விரதமிரு'' என்றே மதநூல்களில் எழுதி உள்ளது. எனவே உடலில் நீங்கள் கவனம் செலுத்துவதில்லை. ''உடல் சொல்வதைக் கேட்காதே. உடல் உன் எதிரி'' என்றும் சாத்திரங்களில் எழுதப்பட்டுள்ளது.

உடல் ஒரு வாயில்லா ஜீவன். அதை நீங்கள் கொடுமைப்படுத்திக் கொண்டே போகமுடியும். சிலநாள்கள் வரை அது கேட்கும், நீங்கள் நீண்ட விரதம் தொடங்கிவிட்டால், அதிகபட்சமாக முதல் வாரத்தில் ... ஐந்தாவது, ஆறாவது நாளில் உடல் கேட்பதை நிறுத்திவிடுகிறது, ஏனெனில் கவனிப்பார் யாரும் இல்லை. எனவே தன் சொந்த சமாளிப்புகளை செய்துகொள்ள தொடங்குகிறது உடல். தொண்ணூறு நாள்கள் வரைக்கான சேமிப்பு அதனிடம் உள்ளது. ஒவ்வோர் ஆரோக்கியமான உடலும் தொண்ணூறு நாட்களுக்கான கொழுப்பைச் சேமித்து வைத்துள்ளது - இது ஓர் அவசர சூழ்நிலைக்காக; உண்ணாவிரதம் இருப்பதற்காக அல்ல.

சிலநேரங்களில் ஒரு காட்டில் நீங்கள் வழிதவறி விடுகிறீர்கள். உங்களுக்கு உணவு கிடைப்பதில்லை. சில நேரங்களில் பஞ்சம் ஏற்படலாம் அப்போது உங்களுக்கு உணவு கிடைக்க முடியாது. தொண்ணூறு நாள்களுக்கான சேமிப்பு உடலிடம் இருக்கிறது. அது தனக்கு தானே ஊட்டிக் கொள்ளும். தன்னைத் தானே தின்று கொள்ளும். அதனிடம் இரு திசை இயக்க அமைப்பு உள்ளது. சாதாரணமாக அது உணவு கேட்கிறது. நீங்கள் உணவளித்தால் சேமிப்பு பத்திரமாக இருக்கிறது. நீங்கள் உணவு வழங்காவிட்டால் இரண்டு, மூன்று நாள்களுக்கு அது கேட்டுக்கொண்டே இருக்கிறது. நீங்கள் அப்பவும் உணவுதராவிட்டால் அது தான் இயங்கும் திசையை மாற்றிக்கொண்டு விடுகிறது. இயங்கும்முறை மாற்றப்படுகிறது. இப்போது அது தன்னைத்தானே உண்ணத் தொடங்குகிறது.

எனவேதான் உண்ணாவிரதம் இருக்கையில் ஒவ்வொருநாளும் ஒருகிலோ எடையை நீங்கள் இழக்கிறீர்கள். இந்த எடை எங்கே போகிறது? இந்த எடை இழக்கப்பட்டுவிடுகிறது. ஏனெனில் நீங்கள் உங்கள் சொந்தக் கொழுப்பையே, உங்கள் சொந்த தசையையே தின்றுகொண்டிருக்கிறீர்கள். நீங்கள் மனித மாமிசம் தின்பவராக - நரமாமிசபட்சிணியாக -

ஆகிவிடுகிறீர்கள். உண்ணா நோன்பு என்பது மனிதமாமிசம் தின்னும் வேலையே ஆகும். தொண்ணூறு நாள்களில் நீங்கள் ஓர் எலும்புக்கூடாக ஆவீர்கள். சேமிப்பு முழுமையாக தீர்ந்துவிடுகிறது. அதன்பிறகு நீங்கள் சாக வேண்டியதே.

உடலிடம் முரட்டுத்தனமாக நடந்துகொள்ளுதல் எளிதுதான். அந்தளவு சாதுவானது அது. ஆனால் மனத்திடம் இப்படி நடத்தல் கடினம். ஏனெனில் அது தீவிரமாக எதிர்க்கும். சொல்வதைக் கேட்காது. ஆயின், மனத்தை கவனிக்கும்படி செய்து ஆசைகளை அறுத்தலே மெய்யான சாதனை; சொர்க்கத்தையும் பரலோகத்தையும் கேட்பதல்ல.

ஜப்பானில் தோன்றியுள்ள புதிய மதங்களைப்பற்றிய ஒரு நூலை இப்போதுதான் நான் வாசித்துக் கொண்டிருந்தேன். ஜப்பானியர்கள் தொழில் நுட்பத் தேர்ச்சியுள்ள மக்கள் என்பதை நீங்கள் அறிவீர்கள். ஜப்பானில் இரண்டு சொர்க்கங்களை அவர்கள் படைத்திருக்கிறார்கள். உண்மையில் வானத்தில் அது எப்படி இருக்கும் என்பதற்கான ஒரு மாதிரிக் காட்சியை உங்களுக்கு வழங்குவதற்காக ஒரு மலை சூழ்ந்த இடத்தில் அவர்கள் ஒரு குட்டி சொர்க்கத்தை உருவாக்கி உள்ளார்கள்... நீங்கள் அங்கு போனாலே உங்களுக்கு ஒரு மாதிரிக்காட்சி கிடைத்துவிடும். அந்த இடத்தை அழகுற செய்திருக்கிறார்கள். முற்றிலும் தூய்மையாக வைத்திருக்கிறார்கள். எங்கு நோக்கினும் பூக்கள், மரங்கள், நிழல்கள், அவற்றிடையே அழகான சிறு மாளிகைகள் என அமைத்திருக்கிறார்கள். சொர்க்கத்தின் ஒரு மாதிரிக்காட்சியை உங்களுக்கு அவர்கள் தருகிறார்கள் - நீ ஆசைப்பட தொடங்கலாம்.

சொர்க்கம் என்று எதுவும் இல்லை! சொர்க்கம் என்பது மனதின் உருவாக்கமே. அப்படியே நரகம் என்பதும் இல்லை! அதுவும் மனதின் ஒரு படைப்பே. சொர்க்கம் இல்லாத நிலையே நரகம் - வேறொன்றுமில்லை. முதலில் அதை உருவாக்குகிறீர்கள், பின் அது அங்கு இல்லாததால் அதை நீங்கள் இழந்து நிற்கிறீர்கள். சாமியார்களாகிய விஷமிகள் உங்களில் எப்போதும் ஆசையை விதைக்க முயல்கிறார்கள். முதலில் அவர்கள் ஆசையை உருவாக்குகிறார்கள். ஆசையை நரகம் பின்தொடர்கிறது. அதன்பின் உங்களைக் காப்பாற்ற அவர்கள் வருகிறார்கள்.

ஒருதடவை மிகவும் பழைமையான ஒரு சாலையின் வழியாக நான் சென்று கொண்டிருந்தேன். அது கோடைகாலம். திடீரென மிகவும் சேறு நிறைந்த ஒரு பாதையை எதிர்கொண்டேன். இந்தச் சாலை இந்த அளவுக்கு சேறு நிரம்பியதாக இருப்பதை என்னால் நம்பவே முடியவில்லை. மழை எதுவும் பெய்திருக்கவில்லை. ஆனால் ஏறக்குறைய அரைமைல் நீளத்துக்கு ஒரே சேறாக இருந்தது. ஆனால் அது அவ்வளவு ஆழமாக இருக்க முடியாது

என்று நினைத்தேன். எனவே காரை ஓட்டிக்கொண்டு அவ்வழியில் சென்றேன். ஓரிடத்தில் சிக்கிக்கொண்டேன். அப்பாதை சேறு நிரம்பியதாக மட்டுமில்லை, பல குழிகள் நிரம்பியதாகவும் இருந்தது. பின் யாராவது உதவ வருவார்களா, சரக்கு வண்டி (டிரக்) ஏதாவது வருமா என காத்திருந்தேன்.

ஒரு சரக்குவண்டியுடன் ஒரு விவசாயி வந்தார். எனக்கு உதவுமாறு அவரிடம் கேட்டேன். அதற்கு இருபது ரூபாய் அவருக்கு தரவேண்டும் என்றார். ''சரி. எடுத்துக்கொள்ளுங்கள். ஆனால் என்னை இதிலிருந்து எடுத்துவிடுங்கள்'' என்றேன். நான் விடுபட்டதும் விவசாயியிடம் ''இந்த கட்டணத்துக்கு நீர் இந்த வேலையை இரவுபகலாக செய்தாக வேண்டும் என்று சொன்னேன் அதற்கு அவர்,'' இல்லை, இரவில் செய்வதில்லை. ஏனெனில் ஆற்றிலிருந்து இந்த சாலைக்கு நான் நீர் கொண்டு வரவேண்டும். இங்கு இந்த சேற்றை உண்டாக்கியது யார் என நினைக்கிறீர்கள்? அதன்பின் நான் கொஞ்சம் தூங்கவும் வேண்டும். ஏனெனில் விடியற்காலையிலேயே என் வியாபாரம் தொடங்கிவிடுகிறது.''

இவர்கள்தான் சாமியார்கள். முதலில் சேற்றை உருவாக்குகிறார்கள். தொலைதூர ஆற்றிலிருந்து நீர் எடுத்து வருகிறார்கள். பின் நீங்கள் கெஞ்சுகிறீர்கள், பின் அவர்கள் உங்களுக்கு உதவுகிறார்கள். சொர்க்கமும் இல்லை, நரகமும் இல்லை. நீங்கள் சுரண்டப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். ஆசைப்படுவதை நீங்கள் நிறுத்தும்வரை நீங்கள் சுரண்டப்படவே செய்வீர்கள்.

ஆசைப்படாத மனிதரை மோசம்செய்ய முடியாது. அவரை எந்தப் பாதிரியும் வஞ்சிக்க முடியாது. எந்த திருச்சபையும் அவரை சுரண்டமுடியாது. நீங்கள் ஆசைப்படுவதால்தான் நீங்கள் சுரண்டப்படும் சாத்தியத்தை நீங்களே உருவாக்கிக் கொள்கிறீர்கள். உங்களால் இயன்றவரை ஆசையை அறுங்கள். ஏனெனில் அவை இயற்கையானவை அல்ல. உங்கள் தேவைகளை ஒருபோதும் வெட்டாதீர்கள். ஏனெனில் அவை இயற்கையானவை. உங்கள் தேவைகளை நிறைவு செய்யுங்கள்.

முழு விஷயத்தையும் முழுமையாகப் பாருங்கள். தேவைகள் மிகப் பல அல்ல. தேவைகள் அதிகமாய் இல்லவே இல்லை. அவை மிக எளியவை. உங்களுக்கு என்னதேவை? உணவு, நீர், இருப்பிடம், உங்களை நேசிக்க ஒருவர் / நீங்கள் நேசிக்க ஒருவர். வேறு என்ன தேவை? அன்பு, உணவு, இருப்பிடம் - எளிய தேவைகள். இந்த தேவைகள் அனைத்துக்கும் எதிராக நிற்கிறது மதம். காதலுக்கு எதிராக பிரம்மச்சாரியத்தைஅவர்கள் பயிற்சிசெய்யச் சொல்கிறார்கள். உணவுக்கு எதிராக உண்ணா விரதத்தை பழகச் சொல்கிறார்கள். இருப்பிடத்துக்கு எதிராக துறவிகள் ஆகுங்கள்

என்கிறார்கள். இடம் பெயருங்கள், அலைந்து திரியுங்கள், வீடற்ற நாடோடி ஆகுங்கள் என்கிறார்கள். தேவைகளை அவர்கள் எதிர்க்கிறார்கள். இவ்வாறு அவர்கள் நரகத்தை உருவாக்குகிறார்கள். நீங்கள் மிக அதிகத் துன்பத்தை அனுபவிக்கிறீர்கள். மிக அதிகமாக அவர்களின் கைகளில் சிக்குகிறீர்கள். பிறகு அவர்களிடம் உதவி கேட்கிறீர்கள். ஆக மொத்த நிலவரமும் உண்டாக்கப்பட்ட ஒன்றே.

ஒருபோதும் தேவைகளுக்கு எதிராகப் போகாதீர்கள். எப்போதும் ஆசைகளை அறுப்பதை நினைவில் கொள்ளுங்கள். ஆசைகள் பயனற்றவை. ஆசை என்றால் என்ன? ஒரு வீட்டை விரும்புதல் ஆசையல்ல. சிறந்த வீடே வேண்டும் என்றால் அது ஆசை. ஆசை என்பது எப்போதும் ஒப்பீடானது. தேவையோ எளியது. உங்களுக்கு தேவை வீடு. ஆசைக்கு தேவை அரண்மனை. தேவை என்பது மிகமிக எளியது. உங்களுக்கு தேவை நேசிக்க ஓர் ஆண் / ஒரு பெண். ஆசைக்கு? ஆசைக்கு தேவை ஒரு பேரழகி. எப்போதுமே அடையமுடியாததை விரும்புவதே ஆசை. சாத்தியமானதை விரும்புவது தேவை. சாத்தியமானது நிறைவேற்றப்பட்டால் நீங்கள் அமைதி ஆகிறீர்கள். ஒரு புத்தருக்கும்கூட அவைகள் தேவை.

ஆசைகள் முட்டாள்தனமானவை. ஆசைகளை அறுத்துவிடுங்கள் விழிப்புள்ளவராக ஆகுங்கள். அப்போது நீங்கள் காலத்தை கடந்து இருப்பீர்கள். ஆசைகளே காலத்தை உருவாக்குகின்றன. ஆசைகளை நீங்கள் அறுத்தால் நீங்கள் காலத்துக்கு அப்பால் இருப்பீர்கள். உடல் இருக்கும் வரை உடலின் தேவைகள் இருக்கும். ஆனால் ஆசைகள் மறைந்துவிட்டால் இதுவே உங்களின் கடைசிப்பிறவியாகும். அல்லது கடைசிக்கு முந்திய பிறவி ஆகும். விரைவில் நீங்களும் மறைந்துவிடுவீர்கள். ஆசையின் மையை அடைந்துவிட்ட ஒருவர், கூடியவிரைவில் தேவைகளுக்கும் அப்பால்பட்டவராக ஆகிறார். அப்போது உடலும் தேவைப்படுவதில்லை என்பதுதான் இதற்குக் காரணம். மனதின் வாகனமே உடல். மனமே இல்லாதபோது அதற்குமேல் உடலும் தேவைப்படுவதில்லை.

**ஓம் என அறியப்படுகிறார் அவர்.**

இந்த கடவுள் பூரண மலர்ச்சி, ஓம் என அறியப்படுகிறது. ஓம் என்பது பிரபஞ்ச ஒலியின் சின்னம். எண்ணங்களையும், வார்த்தைகளையும் உங்களுக்குள் நீங்கள் கேட்கிறீர்கள். ஆனால் உங்கள் ஜீவனின் ஒலியை ஒருபோதும் நீங்கள் கேட்பதில்லை. ஆசையில்லாத போது, தேவையில்லாத போது, உடல் கைவிடப்பட்ட பின், மனம் மறைந்துவிடுகிற நிலையில்; என்ன நிகழும்? அப்போது பிரபஞ்சத்தின் உண்மையான நாதமே கேட்கிறது. அதுவே ஓம்.

உலகம் முழுவதிலும் உள்ள மக்கள் இந்த ஓமை உணர்ந்துள்ளார்கள். முகமதியரும் கிறிஸ்துவரும் யூதர்களும் அதனை ஆமென் என அழைக்கிறார்கள். அது ஓம் தான்! ஜராதுஷ்டிரர்களும் பார்சிகளும் அதை **அஷுரா மஸாதா** என்கிறார்கள். அ-வும் ம்-மும் சேர்ந்ததே அது. அஷுராவில் இருந்து அ. மஸாதாவில் இருந்து ம் - அதுவே ஓம். அதை ஒரு தேவதையாக்கி உள்ளார்கள் அவர்கள்.

இந்த ஒலி உலகளாவியது. நீங்கள் நின்றதும் அது கேட்கிறது. இந்த நிமிஷத்தில் நீங்கள் நிறையவே பேசிக் கொண்டிருக்கிறீர்கள், உங்களுக்குள் உளறிக்கொண்டிருக்கிறீர்கள். எனவே அதை உங்களால் கேட்க முடிவதில்லை. அது ஒரு மவுன ஒலி. எந்த அளவுக்கு அது மவுனமானது. என்றால் நீங்கள் முற்றிலுமாக நிறுத்தாதவரை அதை உங்களால் கேட்க முடியாது. இந்துக்கள் தம் கடவுளரை ஓம் என்ற குறியீட்டால் அழைத்துள்ளார்கள். **ஓம் என அறியப்படுகிறார் அவர்** என்கிறார் பதஞ்சலி. நீங்கள் ஒரு குருவை, குருமார்களின் குருவை கண்டுகொள்ள விரும்பினால், ஓம் எனும் ஒலிக்கு அதிகமதிகம் இசைந்தவராக நீங்கள் ஆகவேண்டி இருக்கும்.

ஓமை - திரும்பத் திரும்பச் சொல்லி தியானம் செய்யுங்கள். பதஞ்சலி மிகவும் விஞ்ஞானப் பூர்வமான ஆதாரம் கொண்டுள்ளவர். ஒரே ஒரு வார்த்தையைகூட விட்டுவிடாதவராகவும், ஒரே ஓம் வார்த்தையைக் கூட அதிகமாக பயன்படுத்தாதவராகவும் இருப்பார். திரும்பத் திரும்பச் சொல்லி தியானம் செய்யுங்கள் ஓமை திரும்பத் திரும்பச் சொல் என்று அவர் கூறும் இடத்தெல்லாம் தவறாமல் தியானிக்கவும் என்பதையும் சேர்த்துக் கூறுகிறார். அதன் வேறுபாட்டை புரிந்துகொள்ள வேண்டும்.

**ஓம் என்பதை சொல்லித் தியானிக்கவும்.**

**ஓம் என்பதை சொல்வதாலும் தியானிப்பதாலும் எல்லாத் தடைகளும் மறைகின்றன. ஒரு புதிய உணர்வுநிலை விழிப்படைகிறது.**

ஓதி - அதாவது திரும்ப திரும்பச்சொல்லி ஆனால் தியானிக்காமல் விட்டுவிட்டால் அது மகரிஷி மகேஷ் யோகியின் டிரான்சென்டென்ட்டல் மெடிட்டேசன் *Transcendental Meditation* (டிஎம்) ஆகிவிடும். நீங்கள் ஓதி, ஆனால் தியானிக்காவிட்டால் அது ஒரு வசிய சாதனமாகவே ஆகிறது. அந்நிலையில் நீங்கள் தூக்கத்தில் வீழ முடியும். அது நல்லதே. ஏனெனில் தூக்கம் அழகானதே. ஆரோக்கியமானதே. அதிலிருந்து நீங்கள் வெளிவரும்போது அதிக அமைதியுடன் இருப்பீர்கள்; அதிக சவுக்கியத்தை, அதிக ஆற்றலை, அதிக ஊக்கத்தை உணர்வீர்கள். ஆனால் அது தியானம் அல்ல.

ஒரு சாந்தப்படுத்தும் மருந்தும் தெம்பூட்டும் மருந்தும் இணைந்ததைப் போன்றது அது. உங்களுக்கு நல்ல தூக்கத்தை தருகிறது அது. மறுநாள் காலையில் மிகவும் நலமாக உணர்கிறீர்கள். அதிக சக்தி கிடைக்கிறது. ஆனால் அது தியானம் அல்ல. மேலும் அதை நீண்ட காலம் நீங்கள் பயன்படுத்தினால் அது ஆபத்தாகவும் முடியும். அதற்கு நீங்கள் பழக்கப் பட்டு விடமுடியும். எந்த அளவுக்கு அதிகமாய் நீங்கள் அதை பயன்படுத்துகிறீர்களோ அந்த அளவுக்கு அதிகமாய் நீங்கள் (நிலைகுத்தி) சிக்கி நிற்கிற ஒரு கட்டம் வருகிறது. அந்நிலையில் அதை நீங்கள் செய்யாதிருந் தால் ஏதோ ஒன்றை இழந்துகொண்டிருப்பதை உணர்வீர்கள். செய்தாலோ எதுவும் நிகழ்வதும் இல்லை.

தியானத்தைப் பற்றி இந்த அர்த்தத்தை புரிந்துகொண்டாக வேண்டும்: அதாவது அதை நீங்கள் செய்யாவிடடால் நீங்கள் ஒன்றை இழந்தது போலவும், அதை நீங்கள் செய்தால் ஒன்றுமே நிகழாமலும் இருந்தால் நீங்கள் நிலைகுத்தி நிற்கிறீர்கள். அந்நிலையில் உடனடியாக செய்தாக வேண்டியது ஒன்றுண்டு. புகைபிடிப்பதுபோலவே அதுவும் ஒரு போதைப் பழக்கமாகி உள்ளது. புகை பிடிக்காவிட்டால் ஏதோ ஒன்றை இழந்ததைப் போல் உணர்கிறீர்கள். ஏதாவது செய்தாக வேண்டும் என தொடர்ச்சியாக உணர்கிறீர்கள். நீங்கள் அமைதியற்றவராக உணர்கிறீர்கள். நீங்கள் புகைபிடித்தாலோ அதனால் எந்த ஆதாயமுமம் ஏற்படுவது இல்லை. அதுதான் போதைப் பழக்கம் என்பதன் வரையறை. ஏதாவது கிடைத்தால் பரவாயில்லை. ஆனால் ஒன்றுமே கிடைப்பதில்லை - அது ஒரு பழக்கமாக ஆகிவிட்டது. அதைச் செய்யாவிட்டால் நீங்கள் அவலமாக உணர்வீர்கள். செய்தாலோ அதிலிருந்து எந்த ஆனந்தமும் வருவதில்லை.

ஓதி தியானியுங்கள்: ஓம் ஓம் ஓம் என திரும்பத்திரும்ப சொல்லுங்கள். அத்துடன் அந்த திரும்பச் சொல்லும் செய்கையில் இருந்து தனித்தும் நில்லுங்கள். ஓம், ஓம், ஓம் என்ற ஒலி உங்களின் எல்லாப் புறமும் இருக்கிறது. நீங்களோ விழிப்பாக, உன்னிப்பாக, கவனமாக, சாட்சியாக இருக்கிறீர்கள் - இதுதான் தியானித்தல். உங்களுக்குள் ஒலியை உண்டாக்கிக் கொண்டு, குன்றின் மேலிருந்து கவனிப்பவராக தனித்திருங்கள். பள்ளத்தாக்கில் ஓம் ஓம் ஓமெனும் நாதம் எதிரொலித்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் அதற்கு மேல் உயரே விழிப்புடன் கவனித்துக்கொண்டும் சாட்சியாகவும் நின்று கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் விழிப்பாக இல்லாவிட்டால் நீங்கள் தூக்கத்தில் வீழ்ந்துவிடுவீர்கள். அது ஒரு வசிய தூக்கமாக இருக்கும். மேற்கில் ஆழ்நிலை தியானம் (டிஎம்) மக்களுக்கு ஏற்புடையதாக உள்ளது ஏனென்றால் நன்றாக உறங்கும் திறனை அவர்கள் இழந்துவிட்டுள்ளார்கள் என்பதால்தான்.

இந்தியாவில் மகரிஷி மகேஷ் யோகியை யாரும் கண்டுகொள்வ தில்லை. ஏனென்றால் இங்கு ஏற்கனவே மக்கள் குறட்டை விட்டு தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு அது தேவையில்லை. ஆனால் ஒரு நாடு பணக்கார நாடாகிவிட்டால், மக்கள் உடல் உழைப்பில் ஈடுபட்டிராவிட்டால் தூக்கம் சரியாக வருவதில்லை. அப்போது நீங்கள் தூக்க மாத்திரை அல்லது டி.எம். எடுக்கவேண்டியிருக்கிறது. டிஎம்.மே மேல். ஏனெனில் அதில் வேதிப் பொருள் இல்லை. ஆனால் அப்போதும் அது மிகமிக ஆழமான வசிய மருந்தாகவே இருக்கிறது.

சில சிக்கல்களை தீர்க்க வசியத்தை பயன்படுத்த முடியும். ஆனால் அதை ஒரு பழக்கமாக்கிவிடக் கூடாது. ஏனெனில் முடிவாக அது உங்களை ஒரு தூங்கு மூஞ்சியாகவே ஆக்கும். வசியத்தில் நடப்பது போலவே நீங்கள் நடப்பீர்கள். உயிரில்லாதவரைப்போல் காணப்படுவீர்கள். விழிப்பாகவும் உன்னிப்பாகவும் இருக்க மாட்டீர்கள். ஓம் எனும் மந்திரம் அத்தகைய ஒரு தாலாட்டாக இருக்கிறது. ஏனெனில் அது பிரபஞ்ச நாதம் ஆகும். அதை திரும்ப திரும்ப சொல்லும்போது நீங்கள் முற்றிலும் மதுவுண்டவர்களைப் போல, போதையேறியவர்களாக ஆகிவிட முடியும். அப்போதுதான் அபாயமே வருகிறது. ஏனெனில் போதையேற்றுவதல்ல உண்மையான காரியம். மென்மேலும் அதிக விழிப்புள்ளவர்களாக ஆவதே உண்மையான தேவை. ஆகவே உங்கள் கவலைகளில் இருந்து விடுபட இரண்டு விதமான வாய்ப்புகள் உள்ளன.

உளவியல் பகுப்பாளர்கள் மனதை மூன்று அடுக்குகளாக பிரிக்கிறார்கள். முதலாவதை உணர்வுமனம் என்கிறார்கள். இரண்டாவதை அரைஉணர்வு மனம் என்கிறார்கள். மூன்றாவதை உணர்வற்ற மனம் என்கிறார்கள். நாலாவதை அவர்கள் இன்னும் அறியவில்லை - அதைப் பதஞ்சலி உயர்உணர்வு (மனம்) என்கிறார். அதிக விழிப்புள்ளவர்களாக நீங்கள் ஆனால் உணர்வுநிலையை கடந்து நீங்கள் உயர்உணர்வு நிலையை அடைகிறீர்கள். இந்த உயர் உணர்வுநிலையை, - உயர் விழிப்பு நிலையே - கடவுள் நிலை.

ஆனால் தியானம் செய்யாமல் ஒரு மந்திரத்தை ஓதுவதால் உணர்வுநிலையில் இருந்து அரைஉணர்வு நிலைக்கு நீங்கள் வீழ்ந்து விடுகிறீர்கள். அரைஉணர்வு நிலையில் விழுந்துவிட்டால் அது உங்களுக்கு நல்ல உறக்கத்தை கொடுக்கும். ஒரு நல உணர்வை, நல்லுணர்வை கொடுக்கும். ஆனால் அதையே தொடர்ந்து செய்தால் நீங்கள் உணர்வற்ற நிலைக்கு வீழ்வீர்கள். அப்போது நீங்கள் ஒரு உயிரில்லாதவரைப் போல் ஆகிவிடுவீர்கள். இதுவே மிகமிக மோசமானது. நல்லதல்ல.

மந்திரத்தை வசியத்துக்கு பயன்படுத்த முடியும். மருத்துவமனையில் அறுவைசிகிச்சையின்போது அதனை பயன்படுத்தினால் சரிதான். குளோரோபாம் (மயக்கமருந்து) எடுப்பதைவிட வசியத்துக்கு ஆட்படுவது நல்லதே. அதனால் ஏற்படும் தீமை குறைவானதே. உங்களுக்கு தூக்கம் வராவிட்டால் தூக்கமாத்திரை சாப்பிடுவதைவிட டிஎம் ('ஆழ்நிலை தியானம்') செய்வது நல்லதே. அதன் ஆபத்து, தீங்கு குறைவானதே. ஆனால் அது தியானத்தல் அல்ல.

எனவேதான் பதஞ்சலி தொடர்ச்சியாக வலியுறுத்துகிறார்,

**ஓம் என்பதை திரும்பத் திரும்பச் சொல்லி தியானிக்கவும்.**

திரும்பத்திரும்ப சொல்வதன்மூலம் உங்களைச் சூழ்ந்து ஓமெனும் ஒலியை உருவாக்குங்கள். ஆனால் அதில் உங்களை இழந்துவிடாதீர்கள். எந்தளவுக்கு இனிமையான ஒலி என்றால் அதில் நீங்கள் காணாமல் போய்விட முடியும். விழிப்பாக இருங்கள் - மிக அதிக கவனத்துடன் இருங்கள்! ஒலி எந்த அளவுக்கு அதிக ஆழமாகப் போகிறதோ அந்த அளவுக்கு நீங்கள் மிக அதிக விழிப்பாக ஆகவேண்டும். அப்போது அவ்வொலி உங்கள் நரம்பு மண்டலத்தை இளைப்பாற்றும். ஆனால் உங்களை ஒன்றும் செய்யாது. அந்த ஒலி உங்கள் உடலை இளைப்பாற்று கிறது. ஆனால் உங்களை ஒன்றும் செய்வதில்லை. அந்த ஒலி உங்கள் உடலையும் உடல் அமைப்பு முழுவதையும் தூங்க செய்கிறது. ஆனால் உங்களை ஒன்றும் செய்யாது.

இந்நிலையில் ஓர் இரட்டை நிகழ்முறை தொடங்கி இருக்கிறது. ஒலி உங்களை ஓர் இளைப்பாறுதலான நிலைக்கு இறக்குகிறது. விழிப்புணர்வோ உங்களை உயர்உணர்வுக்கு எழுப்புகிறது. உடலானது உணர்வற்ற நிலைக்கு, உயிருள்ள சவ நிலைக்கு, ஆழ்ந்த உறக்க நிலைக்கு போகிறது. நீங்களோ ஓர் உயர் உணர்வுள்ள இருத்தலாக (being) ஆகிறீர்கள். அந்நிலையில் உங்கள் உடல் பாதாளத்தை அடைகிறது. நீங்களோ சிகரத்தை எட்டுகிறீர்கள். உங்கள் உடல் பள்ளத்தாக்காக ஆகிறது. நீங்கள் சிகரமாக ஆகிறீர்கள். ஆனால் இதுவே அடையப்பெற வேண்டிய நிலை.

திரும்பத் திரும்பச் சொல்லி தியானியுங்கள்

**ஓம் என்பதை சொல்வதாலும் தியானிப்பதாலும் எல்லாத் தடைகளும் மறைகின்றன. ஒரு புதிய உணர்வுநிலை விழிப்படைகிறது.**

அந்த புதிய உணர்வு நான்காவது நிலையான உயர்உணர்வு நிலை. ஆனால் திரும்பத் திரும்பச் சொல்வது மட்டும் தனியாகப் பயன்படாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். திரும்பத் திரும்பச் சொல்வது

தியானம் செய்ய உதவுவதற்காக மட்டுமே. திரும்பத் திரும்பச் சொல்லுவது ஒரு பொருளை உருவாக்குகிறது. மிகவும் நுட்பமான பொருள் ஓமெனும் ஒலியே. மிகவும் நுட்பமானதைப் பற்றிய விழிப்புடன் நீங்கள் இருக்க முடியுமானால் உங்கள் உணர்வும் நுட்பமானதாக ஆகிறது.

நுட்பமற்ற ஒன்றை நீங்கள் கவனிக்கும்போது உங்கள் உணர்வும் நுட்பமற்றதாகிறது. காம உணர்வூட்டும் பொருளை நீங்கள் கவனித்தால் உங்கள் உணர்வும் காமத்தன்மையது ஆகிறது. ஒரு பொருளை பேராசையுடன் நீங்கள் பார்க்கும்போது உங்கள் உணர்வு பேராசையாக ஆகிறது. நீங்கள் எதை எப்படி கவனிக்கிறீர்களோ அப்படியே ஆகிறீர்கள்: பார்ப்பவர் பார்க்கப்படுவதாக ஆகிறார் - இதை நினைவில் கொள்ளுங்கள்.

பார்ப்பவர் பார்க்கப்படுவதாக ஆகிறார் என்று திரும்பத்திரும்ப வலியுறுத்துகிறார் கிருஷ்ணமூர்த்தி. நீங்கள் எதையெல்லாம் பார்க்கிறீர் களோ அதுவாகவே ஆகிறீர்கள். எனவே ஓம் எனும் ஒலியை நீங்கள் கவனித்தால் - அது மிக ஆழமான ஓர் ஒலி, மிக ஆழமான இசை, ஓசையற்ற ஒலி, உருவாக்கப்படாத ஒலி (அனாகதம்), இருத்தலின் இயல்பே அவ்ஒலிதான் - அதை நீங்கள் விழிப்புடன் கவனித்தால், அதுவாகவே ஆகிறீர்கள்; பிரபஞ்ச ஒலியாக ஆகிறீர்கள். அகம், புறம் இரண்டும் சந்தித்து கலந்து ஒன்றாகின்றன. அதுவே உயர்உணர்வு. அங்கு பொருள், உணர்வு இரண்டும் கரைந்துள்ளன. அறிபவரும் அறியப்படு வதும் என இரண்டு அங்கே இல்லை. ஒன்றுமட்டுமே எஞ்சுகிறது. புறத்துக்கும் அகத்துக்கும் இணைப்பு ஏற்படுகிறது. இந்த ஒருமையே யோகம்.

யுஜ் எனும் வேர்ச் சொல்லில் இருந்தே யோகம் என்ற சொல் வருகிறது. அதன்பொருள் கூடல், கலத்தல் என்பதே. அகத்தையும் புறத்தையும் இணைத்துப் பூட்டும்போதே (*Yoke*) யோகம் நிகழ்கிறது. யோக் எனும் ஆங்கில சொல்லும் யுஜ் - இல் இருந்து வருவதே. அதே வேர்ச் சொல்லில் இருந்தே யோகம் என்ற சொல்லும் வருகிறது. உள்ளும்புறமும் ஒன்று கலக்கப்படுகையில், சேர்த்துப் பிணைக்கப்படுகையில், அவை இனி தனித்தனியாக இல்லாமல் போகும்போது, அவற்றுக்கிடையில் இணைப்பு ஏற்படும்போது இடைவெளி மறைகிறது. நீங்கள் உயர்உணர்வு நிலையை அடைகிறீர்கள்.

இதையே பதஞ்சலி கூறுகிறார்,

ஓம் என்பதை ஓதுவதாலும் தியானிப்பதாலும் எல்லா தடைகளும் மறைகின்றன. ஒரு புதிய உணர்வுநிலை விழிப்படைகிறது.

□

## குருமார்களின் குருவாக விளங்கும் எவரிடமிருந்தாவது நீங்கள் உத்தரவுகளைப் பெறுகிறீர்களா?

எந்த ஒரு பழைமையான பாதையிலும் நான் இல்லை. எனவே சில விஷயங்களைப் புரிந்து கொண்டாக வேண்டும். தீர்த்தங்கரர்களின் நீண்ட வரிசையில் கடைசியாக வந்த மகாவீரரைப் போன்றவன் அல்லன் நான். இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களில் அவர் இருபத்து நான்காவதாக வந்தார் கடந்த காலத்தில் ஒரே பாதையில், அதே முறையில், ஒரே விதமான வாழ்க்கைப் பாணியில், ஒரே விதமான உத்தியில் இருபத்து மூன்று பேர் அவருக்கு குருமார்களின் குருவாக, கடவுளராக இருந்திருக்கிறார்கள்.

முதல் தீர்த்தங்கரர் ரிஷபர். கடைசி மகாவீரர். ரிஷபருக்கு, அவருக்கு முன் எதிர்பார்க்க கடந்த காலத்தில் எந்த மகாகுருவும் இல்லை. நானும் ரிஷபரைப் போன்றவனே. மகாவீரரைப் போன்றவன் அல்லன். ஒரு மரபின் தொடக்கம் நான்; முடிவு அல்ல. இதே பாதையில் இன்னும் பலபேர் வர இருக்கிறார்கள். எனவே யாரிடமிருந்தும் உத்தரவுகளை எதிர்நோக்க என்னால் முடியாது. அதற்கு வாய்ப்பில்லை. ஒரு மரபு பிறக்கிறது, பின் இறக்கிறது. மனிதர்கள் பிறந்து இறப்பதைப் போன்றதே இது. நான் தொடக்கம்தான் முடிவல்ல. வரிசையின் இடையிலோ கடைசியிலோ இருக்கிறவர் தான் குருமார்களின் குருவிடமிருந்து உத்தரவுகளைப் பெறுகிறார்.'

நான் எந்தப் பாதையை சேர்ந்தவனும் அல்லன் என்பதற்கு என்ன காரணம்? நான் பல குருமார்களுடன் வேலை செய்திருக்கிறேன். ஆனால் நான் ஒருபோதும் ஒரு சீடனாக இருந்ததில்லை. நான் ஒரு நாடோடியாக இருந்தேன். பல பிறவிகளின் வழியாக சுற்றித் திரிந்தேன். பல மரபுகளை எதிர்கொண்டேன். பல குழுக்களுடனும், பள்ளிகளுடனும், முறைகளுட னும் இருந்திருக்கிறேன். ஆனால் ஒருபோதும் எதையும் சேர்ந்தவனாக இருக்கவில்லை. என்னை அன்புடன் ஏற்றுக் கொண்டார்கள். ஆனால் அவர்களின் ஒருபகுதியாக ஒருபோதும் நான் இருந்ததில்லை. அதிகபட்சம் ஒரு விருந்தாளியாக, ஓரிரவு தங்கி செல்பவனாகவே இருந்திருக்கிறேன். எனவேதான் நான் இந்தளவுக்குக் கற்றுக் கொண்டேன். ஒரே பாதையில் போனால் நீங்கள் அதிகமாகக் கற்றுக் கொள்ள முடியாது. அது அசாத்தியம்.

ஒரே பாதையில் நீங்கள் இயங்கினால் அதைப் பற்றி நீங்கள் முற்றிலுமாக அறிகிறீர்கள்; ஆனால் வேறு எதைப்பற்றியும் எதுவும் உங்களுக்கு தெரிவதில்லை. உங்கள் முழு இருத்தலும் அதில் ஒன்றாகி விடுகிறது. எனது வழி அப்படி இருக்கவில்லை. மலருக்கு மலர் தாவி

பலவித மணங்களை சேகரித்துக் கொள்ளும் தேனீயாகவே நான் இருந்து வந்திருக்கிறேன். எனவேதான் ஸென்னுடன் என்னால் இயல்பாக இருக்க முடிகிறது. யேசுவுடன் என்னால் இயல்பாக இருக்க முடிகிறது. யூதர்களுடன் என்னால் இயல்பாக இருக்க முடிகிறது. முகமதியருடன் என்னால் இயல்பாக இருக்க முடிகிறது. பதஞ்சலியுடன் என்னால் இயல்பாக இருக்க முடிகிறது. பலவித வழிகள் சிலசமயம் ஒன்றுக்கொன்று நேர்எதிரான வழிகள் கூட.

ஆனால் என்னைப் பொறுத்தவரை, அவற்றிடையில் ஒரு மறைமுகமான. ஒற்றுமை நிலவுகிறது. எனவேதான் ஒரு பாதையை மட்டும் பின்பற்றுபவர்களால் என்னைப் புரிந்து கொள்ள முடிவதில்லை. அவர்கள் அப்படியே குழம்பிப்போகிறார்கள். திகைத்து தடுமாறிப் போகிறார்கள். அவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட தர்க்கம், ஒரு குறிப்பிட்ட பாணி தான் புரியும் (ஒரு) விஷயம் அவர்களின் பாணிக்குப் பொருந்தி வருகிறது என்றால். அது சரியானது. அது பொருந்தாவிட்டால், தவறானது! மிகவும் வரம்புக்குட் பட்ட ஓர் அளவுகோலையே அவர்கள் வைத்திருக்கிறார்கள். எனக்கோ, எவ்வித அளவுகோல்களும் இல்லை. பல வித பாணிகளுடன் நான் இருக்கிற படியால், எந்த இடத்திலும் என்னால் இயல்பாக புழங்க முடிகிறது. எவரும் எனக்கு அந்நியர் இல்லை. நானும் எவருக்கும் ஓர் அயலான் இல்லை. ஆனால் இது ஒரு சிக்கலை உருவாக்குகிறது. நான் யாருக்கும் ஒரு அந்நியனாக இல்லை. ஆனால் ஒவ்வொருவரும் எனக்கு அந்நியராகவே ஆகிறார் - அது அப்படித்தான் இருக்க முடியும்.

எந்த ஒரு குறிப்பிட்ட பிரிவையும் சேர்ந்தவராக நீங்கள் இல்லை என்றால், பின் உங்களை ஓர் எதிரியைப்போலவே ஒவ்வொருவரும் கருதுகிறார்கள். இந்துக்கள் எனக்கு எதிராக இருப்பார்கள். கிறிஸ்தவர்கள் எனக்கு எதிராக இருப்பார்கள். யூதர்கள் எனக்கு எதிராக இருப்பார்கள். சமணர்கள் எனக்கு எதிராக இருப்பார்கள். நானோ யாருக்கு எதிராகவும் இல்லை. அவர்களின் பாணியை என்னில் காண அவர்களால் முடியாத தால் அவர்கள் எனக்கு எதிராக இருப்பார்கள்.

நான் எந்தப் பாணியைக் குறித்தும் பேசிக் கொண்டிருக்கவில்லை. எல்லாப் பாணிகளையும் உள்ளடக்கிய ஓர் ஆழமான பாணியைப் பற்றியே பேசிக்கொண்டிருக்கிறேன். ஒருபாணி, இன்னொரு பாணி, இன்னொரு பாணி என கோடிக்கணக்கான பாணிகள் உள்ளன. இனி, எல்லா பாணிகளும், அவை எல்லாவற்றுக்கும் பொதுவாக அவற்றின் அடியில் மறைந்தள்ள பொதுப்பாணியால் - பாணிகளுக்கெல்லாம் பொது வான பாணியால் - இணைக்கப்பட்டுள்ளன. அதை அவர்களால் பார்க்க முடிவதில்லை. ஆனால் அவர்களை சொல்லியும் தப்பில்லை. ஒரு

குறிப்பிட்ட மரபில், ஒரு குறிப்பிட்ட தத்துவத்தில், ஒரு குறிப்பிட்ட கண்ணோட்டத்தில் நீங்கள் இருக்கும்போது அதனுடன் நீங்கள் ஒன்றி விடுகிறீர்கள்.

ஒருவிதத்தில், எவரோடும் ஒருபோதும் நான் ஒன்றியதில்லை - அவர்களின் ஒரு பகுதியாகவே ஆகிவிடுவதற்கு நான் இசைந்ததில்லை. ஒரு விதத்தில், அது ஒரு கெடுதல்தான். ஆனால் இன்னொரு விதத்தில், அது ஒரு நன்மையாகவே ஆயிற்று. என்னுடன் சேர்ந்து முயன்ற பலர் எனக்கு முன்பே விடுதலையை அடைந்தார்கள். அவ்வகையில் என் நிலை மோசமானதே. ஒருபோதும், எதனுடனும் முழுமையாக ஒன்றிச் செயல்படாததால், ஒன்றிலிருந்து மற்றதை நோக்கி இயங்கிக் கொண்டே இருந்ததால், நான் தொடர்ந்து பின்தங்கிப் போனேன்.

என்னுடன் தொடங்கிய பலர் சாதித்துவிட்டார்கள். எனக்குப் பிறகு தொடங்கிய சிலர்கூட எனக்கு முன்பே அடைந்துவிட்டார்கள். இது ஒரு பாதகமே. ஆனால் இன்னொரு விதத்தில் இது சாதகமாகவே இருந்துள்ளது. ஏனெனில் எல்லா வீடும் எனக்குத் தெரிந்துவிட்டது. நான் எந்த வீட்டையும் சேராதவனாக இருக்கலாம். ஆனால் எல்லார் வீட்டிலும் என்னால் இயல்பானவனாக இருக்கமுடிகிறது. எனவேதான் எந்த குருமார்களின் குருவும் எனக்கு கிட்டவில்லை - ஒருபோதும் நான் ஒரு சீடனாக இருந்ததில்லை. குருமார்களின் குருவால் இயக்கப்படுவதற்கு, ஒரு குறிப்பிட்ட குருவுக்கு சீடராக நீங்கள் இருக்க வேண்டி இருக்கிறது. அப்போதுதான் நீங்கள் இயக்கப்பட முடியும். அப்போது தான் அந்த மொழி உங்களுக்கு புரியும். ஆக எவரும் என்னை இயக்கியதில்லை. ஆனால் பலரும் எனக்கு உதவியுள்ளார்கள். இதன் வேறுபாட்டை புரிந்து கொள்ள வேண்டும்: என்னை யாரும் இயக்காததால், ''இதைசெய், அதை செய்யாதே'' என எனக்கு யாரும் உத்தரவுகள் அனுப்பியதில்லை. ஆனால் பலரும் எனக்கு உதவினார்கள்.

நான் தங்களைச் சேர்ந்தவன் என்று சமணர்கள் உணராமல் போகலாம். ஆனால் மகாவீரர் உணர்கிறார். ஏனெனில் அவராலாவது பாணிகளுக்குப் பொதுவான/ பின்னுள்ள பாணியை பார்க்க முடிகிறது. யேசுவைப் பின்பற்றுபவர்களால் என்னைப் புரிந்து கொள்ள முடியாமல் போகலாம். ஆனால் யேசுவால் முடியும். ஆக பலரும் எனக்கு உதவியுள்ளார்கள். எனவேதான் பின்னணிகளைச் சேர்ந்த மக்கள் பலரும் என்னிடம் வந்துக்கொண்டிருக்கிறார்கள். தற்சமயம் பூமியில் எங்கும் இத்தகைய ஒரு கூட்டத்தை உங்களால் காண முடியாது. இங்கு உலகம் முழுவதிலும் இருந்து வந்துள்ள யூதர்கள் இருக்கிறார்கள், கிறிஸ்தவர்கள் இருக்கிறார்கள், முகமதியர்கள் இருக்கிறார்கள்; இந்துக்கள், சமணர்கள், பவுத்தர்கள்

இருக்கிறார்கள். மற்றும் மென்மேலும் அதிகம்பேர் விரைவிலேயே இங்கு வந்து கொண்டிருப்பார்கள்.

அது பல குருமார்களிடமிருந்தும் வரும் உதவியேயாகும். அவர்களின் சீடர்களுக்கு என்னால் உதவமுடியும் என்று அவர்கள் அறிகிறார்கள். இன்னும் அதிகம் பேரை அவர்கள் அனுப்பிக் கொண்டிருப்பார்கள் - ஆனால் உத்தரவுகள் எதையும் அனுப்புவதில்லை. ஏனெனில் ஒரு சீடன் என்ற முறையில் எந்த குருவிடமிருந்தும் நான் ஒருபோதும் உத்தரவுகளை பெற்றதில்லை. இப்போது அதற்கு தேவையும் இல்லை. அவர்கள் உதவிக் கொண்டிருக்கிறார்கள். அதுவே மேல். நான் அதிக சுதந்தரமாக உணர்கிறேன். என் அளவுக்கு யாரும் சுதந்தரமாக இருக்க முடியாது.

ஏனெனில் மகாவீரரிடம் இருந்து நீங்கள் வழிகாட்டுதல்களைப் பெற்றால் நான் இருக்கும் அளவுக்கு சுதந்தரத்துடன் உங்களால் இருக்க முடியாது.ஒரு சமணன் சமணனாகவே இருந்தாக வேண்டி உள்ளது. அவன் புத்தமதத்துக்கு எதிராக, இந்து மதத்துக்கு எதிராக பேசிக் கொண்டே இருந்தாக வேண்டி இருக்கிறது. அவன் அப்படித்தான் இருந்தாக வேண்டும். ஏனென்றால் இது பல பாணிகள் மற்றும் மரபுகளுக்கிடையிலான சண்டையாக இருக்கிறது. மேலும் மரபுகள் தப்பி உயிர்வாழ விரும்பினால் அவை போராடவே வேண்டியுள்ளது. தம் சீடர்களின் பொருட்டு அவை வாதப் பிரதிவாதங்களை நடத்த வேண்டி உள்ளது. ''அது தவறு'' என்ற அவர்கள் கூற வேண்டி உள்ளது. ஏனென்றால் அப்போது மட்டுமே சீடன், ''இது சரி'' என உணர முடியும். தப்புக்கு எதிராகவே - தப்புடன் ஒப்பிட்டே ஒன்று சரி என்பதை சீடன் புரிந்துகொள்கிறான்.

என்னுடன் இருந்தால் நீங்கள் திணறிப் போவீர்கள். உங்கள் பழைய புத்தியுடனேயே இங்கு நீங்கள் இருந்தால் நீங்கள் குழம்பிப்போவீர்கள். உங்களுக்குப் பைத்தியமே பிடித்துவிடும். ஏனென்றால் இந்த நிமிஷம் நான் ஒன்றை சொல்கிறேன். மறுநிமிஷமே அதை நான் மறுக்கிறேன்: ஏனெனில் இந்த நிமிஷத்தில் நான் ஒரு மரபைப் பற்றி பேசிக் கொண்டிருக்கிறேன், இன்னொரு சமயத்திலோ இன்னொன்றை பற்றி நான் பேசிக் கொண்டிருக்கிறேன்.மேலும் சிலநேரங்களில் எந்த மரபைப் பற்றியும் நான் பேசிக் கொண்டிருப்பதில்லை. என்னைப் பற்றி நான் பேசிக் கொண்டிருக்கிறேன். அப்போது அதை எந்த ஏட்டிலும் எந்த இடத்திலும் உங்களால் கண்டுபிடிக்க முடியாது.

ஆனால் எனக்கு உதவி கிடைக்கிறது. அந்த உதவி அழகானது ஏனென்றால் அதை நான் பின்பற்றியாக வேண்டும் என்பதில்லை. அதை நான் பின்பற்றியாக வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. அது என்னைப்

பொறுத்தது. உதவி நிபந்தனையின்றித் தரப்படுகிறது. அதை செய்யத் தோன்றினால் செய்வேன். தோன்றாவிட்டால் செய்யமாட்டேன். யாருக்கும் கடமைப்பட்டவனாக நான் இல்லை.

ஆனால் ஒருநாள் நீங்கள் ஞானம் அடைந்தவராக ஆகும்போது நீங்களும் அதைப் பெற முடியும். நான் உடலில் இல்லாதிருந்தால், பின் என்னிடமிருந்து நீங்கள் உத்தரவுகளைப் பெற முடியும். ஒரு மரபு தொடங்கும்போது, முதல் ஆளுக்கு எப்போதும் இப்படியே நேர்கிறது. இது ஒரு தொடக்கம், ஒரு பிறப்பு; ஒரு பிறப்பு நிகழும் இடத்தில் நீங்கள் இருக்கிறீர்கள். மேலும் ஒன்று பிறக்கும் போது அது மிகுந்த அழகாகவே உள்ளது, ஏனெனில் அது மிகுந்த உயிரோட்டத்துடன் உள்ளது. பையப்பைய, குழந்தை வளரவளர, குழந்தை சாவுக்கு அருகே அருகே வந்து கொண்டிருக்கிறது. ஒரு மரபு பிறக்கும்போது அது புத்தம்புதியதாக இருக்கிறது; அதற்கே உரிய ஓர் அழகு - ஒப்பிடமுடியாத, தனிச்சிறப்பான ஓர் அழகு இருக்கிறது.

முதல் சமண தீர்த்தங்கரரான ரிஷபர் பேசுவதை கவனித்த மக்கள் ஒரு மாறுபட்ட தன்மையை கொண்டிருந்தார்கள். மகாவீரரை அவர்கள் கவனித்தபோது அது ஆயிரக்கணக்கான ஆண்டுப் பழசாகி விட்டிருந்தது. சாவின் விளிம்புக்கே வந்துவிட்டிருந்தது. மகாவீரருடன் அது மரணமடைந்தது.

ஒருமரபில் மேற்கொண்டு எந்த ஆசானும் உதிக்காத போது அது மரணமடைகிறது. அதன் பொருள், அந்த மரபு தொடர்ந்து வளர்ந்து கொண்டு இல்லை என்பதாகும். சமணர்கள் மூடிவிட்டார்கள். இருபத்து நான்காவது தீர்த்தங்கரருடன் "இனி ஆசான்கள் வருவதில்லை, இதற்குமேல் தீர்த்தங்கரர்கள் இல்லை" என்றார்கள் அவர்கள். நானக்குடன் (*GURU NANAK*)இருப்பது அழகானதாக இருந்தது. ஏனெனில் கருப்பத்திலிருந்து - பேரண்டம் என்னும் கருப்பத்திலிருந்து புதிதாக ஒன்று வெளிவந்து கொண்டிருந்தது. ஒரு குழந்தை பிறப்பதைப் போலவே (குழந்தை பிறப்பது ஒரு புதிராகவே இருக்கிறது) அறியப்படாத ஒன்று அறியப்பட்டதில் ஊடுருவுகிறது. உடலற்றது உடலுடையதாக ஆகிக் கொண்டிருக்கிறது. அது பனித் துளிகளைப் போல் பரிசுத்தமாக இருக்கிறது. விரைவில் எல்லாமே மாசுபடிந்து போகும். விரைவில், காலப் போக்கில், பொருள்கள் - விஷயங்கள் எல்லாமே பழசாகிப் போகும்.

சீக்கியர்களின் பத்தாவது குருவின் காலத்தில், பத்தாவது குரு தோன்றியகாலத்தில், விஷயங்கள் செத்தவையாக ஆகிவிட்டன. அப்போது

அவர்கள் அந்த வமிசாவளியை மூடிவிட்டார்கள். ''இனி ஆசான்கள் வருவதில்லை. இனிமுதல் சாத்திரமே ஆசானாக இருக்கும்'' என்று சொன்னார்கள் எனவேதான் தம் மதநூலை அவர்கள் ''குரு-கிரந்தம்'' அதாவது குரு சாத்திரம் என அழைத்தார்கள். இனி உயிருள்ள ஆட்கள் அங்கு இருக்க மாட்டார்கள். ஒரு செத்த சாத்திரம் மட்டுமே இனி அவர்களின் குருவாக - இருக்கும். ஆனால், ஒரு சாத்திரம் செத்ததாக இருந்தால் அது வீண். வீணானது மட்டுமல்ல, விஷமானதும் ஆகும். இறந்த பகுதி எதுவும் உங்கள் உடம்பில் தொடர்ந்திருக்க அனுமதிக்காதீர்கள். அது நஞ்சை உருவாக்கும். அது உங்கள் மொத்த உடலையும் நாசமாக்கிவிடும்.

இங்கோ, புதிய ஒன்று பிறக்கிறது. ஒரு தொடக்கம் நிகழ்கிறது. அது புத்தம் புதியது. ஆனால் அதனாலேயே அதைக் காண்பதும் மிகக் கடினமாக இருக்கிறது. ஏனென்றால் நீங்கள் கங்கோத்ரிக்கு போனால், கங்கையின் தோற்றுவாயின் பக்கம் சென்றால், அது பரிசுத்தமாக இருக்கிறது - ஆனால் மிகவும் சிறியதாகவே இருக்கிறது. அதன்பின் மறுபடியும் ஒருபோதும் அது அவ்வளவு தூய்மையாக இராது. ஏனெனில் அது பாயும் வழியில் பல விஷயங்களை அது சேர்த்துக் கொள்கிறது, சேகரித்துக் கொள்கிறது, மிக அதிக அசுத்தமாக ஆகிறது. காசியில்தான் அது மிகவும் அசுத்தமானதாக ஆகிறது. ஆனால் அதைத்தான் நீங்கள் ''புனித கங்கை'' என அழைக்கிறீர்கள். ஏனெனில் இப்போது அது மிகவும் பரந்து விரிந்ததாக இருக்கிறது. அது நிறையவே சேகரித்திருக்கிறது - எந்த அளவுக்கெனில் இப்போது ஒரு குருடரால்கூட அதைப் பார்க்க முடிகிறது. கங்கோத்ரியில் - தொடக்கத்தில் - பிறப்பிடத்தில் நீங்கள் மிகவும் கூர்ந்த கவனிப்பவராக இருப்பது தேவையாகிறது. அப்போது மட்டுமே உங்களால் காண்முடிகிறது. மற்றபடி வெறுமனே ஒரு சில துளிகளின் சொட்டுதலாகவே அது இருக்கிறது. இந்த ஒரு சில துளிகளின் சொட்டுதலே கங்கை நதியாகப் போகிறது என்பதை உங்களால் நம்பக்கூட முடிவதில்லை - அது நம்புதற்கரியதாக உள்ளது.

நிகழ்ந்துகொண்டிருப்பது என்ன என்பதை இக்கணமே காண்பது கடினமே. ஏனெனில் அது மிகமிக சிறிய ஓடையாகவே உள்ளது, ஒரு குழந்தை போலவே இருக்கிறது. முதல் சமண தீர்த்தங்கரரான ரிஷபரை மக்கள் தவறவிட்டுவிட்டார்கள். ஆனால் மகாவீரரை அவர்களால் கண்டு கொள்ள முடிந்தது, பார்த்தீர்களா? முதல்வரான ரிஷபரைப் பற்றி சமணர்கள் அதிகம் எண்ணிப் பார்ப்பதில்லை. உண்மையில் மகாவீரருக்கே தம் முழு வணக்கத்தையும் அவர்கள் செலுத்துகிறார்கள். உண்மையில் மேற்கத்திய மனம்,வு மகாவீரரையே சமணத்தின் ஸ்தாபகராகக் கருகிறது. ஏனெனில் இந்தியாவில் மகாவீரருக்கே மிக அதிகமான மரியாதை செலுத்தப்படுகிறது.

ஆகவே வேறு ஒருவர் தான் நிறுவியவர் என்பதை எப்படி மற்றவர்கள் உணர்ந்து கொள்ள முடியும்? ரிஷபர் பழங்கதை ஆகிவிட்டார், மறக்கப்பட்டு விட்டார். அவர் ஒருவர் இருந்திருக்கலாம், இல்லாதிருந் திருக்கலாம், அவர் ஒரு வரலாற்று மனிதராகத் தோன்றுவதில்லை. 'புராண பாத்திரமாகவே தோன்றுகிறார்'. உங்களுக்கு அதிகமாக ஒன்றும் தெரியாது. மகாவீரரோ வரலாற்று மனிதராக இருக்கிறார், வாரணாசி அல்லது காசிக்கருகில் உள்ள கங்கையாக - பரந்து விரிந்தவராக இருக்கிறார்.

தொடக்கம் சிறிதாகவே இருக்கிறது; ஆனால் தெய்விக ரகசியமானது தொடக்கத்தில் இருப்பது போல அவ்வளவு ஆழமானதாக மறுபடி ஒருபோதும் இருப்பதில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். தொடக்கம் வாழ்வு, முடிவோ சாவு. மகா வீரருடன் சமண மரபுக்குள் சாவு நுழைகிறது. ரிஷபருடன் வாழ்வு நுழைந்தது; உயரே உள்ள இமயங்களில் இருந்து பூமிக்கு இறங்கி வந்தது.'

எனக்கு பொறுப்பாளியாக நான் யாரையும் பெற்றிருக்கவில்லை. யாரிடமிருந்தும் நான் உத்தரவுகள் பெறுவதில்லை. ஆனாலும் மிகுந்த உதவி கிடைக்கிறது. அதை அதன் முழுமையில் நீங்கள் எடுத்து பார்த்ததால் எந்த ஒரு தனி குருவும் சொல்லித் தருவதற்கு அதிகமானதாகவே அது இருக்கிறது. பதஞ்சலியைப் பற்றி நான் பேசும்போது பதஞ்சலி உதவிகரமாக இருக்கிறார். அவரே இங்கு பேசிக் கொண்டிருந்தது போலவே என்னால் பேச முடிகிறது. உண்மையில்,பேசிக் கொண்டிருப்பது நானல்ல. இவை உரைவிளக்கங்களும் அல்ல. அவரேதான் என்னை ஒரு வாகனமாக பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். ஹெராக்ளிட்டசைப் பற்றி நான் பேசும்போது அவரே இங்கு இருக்கிறார் - ஆனால் ஓர் உதவியாக மட்டும். இதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டி இருக்கிறது; கூடுதலான பார்வைக் கூர்மை உள்ளவராக ஆக வேண்டி இருக்கிறது. அப்போதுதான் உங்களால் தொடக்கத்தைப் பார்க்க முடியும்.

ஒரு மரபு ஒரு மாபெரும் சக்தியாக ஆனபின் அதற்குள் நுழைவதற்கு மிகுந்த அறியும் திறனோ, கிரகித்துக் கொள்ளல் உணர்வோ தேவைப்படுவ தில்லை. தொடக்க நிலையில் இருக்கும்போதுதான் காலைப் பொழுது புலர்கின்றபோது அதற்குள் வருவதுதான் கடினமானது. பொழுது சாயும்போது பலரும் வருகிறார்கள். ஆனால் அப்போது அவ்விஷயம் மிகவும் அகன்று விரிந்ததாகவும் மிகுந்த ஆற்றலுடையதாகவும் ஆகியிருப் பதால் தான் அவர்கள் வருகிறார்கள். விடியலிலோ தேர்ந்தெடுக்கப்பட்ட சிலர் மட்டுமே வருகிறார்கள்; மகத்தான ஒன்று பிறந்து கொண்டிருக்கிறது என்பதை உணரும் திறன் படைத்தோர் மட்டுமே வருகிறார்கள். இந்தக் கணத்திலேயே அதை உங்களால் நிரூபித்து விட முடிவதில்லை. காலமே

அதை நிரூபிக்கும். பிறந்திருப்பது இன்னது என்பது உறுதியாக ஆயிரக்கணக்கான ஆண்டுகள் ஆகும். ஆனால் தொடக்கத்திலேயே அதை உணரும் நல்வாய்ப்புள்ளவர்களாக நீங்கள் இங்கு இருக்கிறீர்கள். இந்தச் சந்தர்ப்பத்தைத் தவறவிட்டு விடாதீர்கள். ஏனெனில் இதுதான் மிகவும் புத்தம் புதிதான நிலையாக, மிகவும் மறைபொருளானதாக இருக்கிறது.

அதை உங்களால் உணர முடிந்தால், அது உங்களுக்குள் ஆழ்ந்து செல்ல நீங்கள் அனுமதிக்க முடியுமானால், மிகவும் குறுகிய கால அளவிலேயே பல காரியங்களும் சாத்தியமாக ஆகும். என்கூட இருப்பது இன்னமும் மதிப்புக்கும் மரியாதைக்கும் உரியதாக ஆகவில்லை. அது ஒரு கவுரவமாக இல்லை. உண்மையில் மற்றவர்கள் சொல்வதுபற்றி கவலைப்படாத, அலட்டிக் கொள்ளாத சூதாடிகள் மட்டுமே என்னுடன் இருக்க முடியும். மதிப்பை விரும்புபவர்கள் இங்கு வர முடியாது. சில ஆண்டுகளுக்குப் பிறகு பையப்பைய இம்மரபு மடிந்து போகிறது. அப்போது அது மரியாதைக்குரியதாக ஆகிறது. அப்போது மக்கள் வருவார்கள், ஆனால் அவர்கள் செத்த மக்களாக இருப்பார்கள். ஒருகாரியம் மதிப்புக்குரியதாக ஆகிற போது மட்டுமே அவர்கள் வருவார்கள். அகங்காரத்தின் காரணமாகவே அவர்கள் வருவார்கள்.

நீங்கள் இங்கு இருப்பது அகங்காரத்தின் காரணமாக அல்ல. ஏனெனில் என்னுடன் இருப்பதால் அகங்காரம் ஆதாயம் பெறுவதற்கு குறைந்த பட்சம் கூட எதுவுமில்லை. நீங்கள் இழக்கவே செய் வீர்கள். உயிரோட்டமும் துணிவும் வீரமும் சாகசமுனைப்பும் கொண்ட மக்கள் மட்டுமே ரிஷபருடன் பழகினார்கள். மகாவீரருடன் என்றால் செத்துப்போன வணிகர்களே புழங்கினார்கள், சூதாடிகள் அல்ல. எனவேதான் சமணர்கள் ஒரு வணிக சமூகமாக ஆகி இருக்கிறார்கள். அவர்களின் முழு சமூகமும் ஒரு வணிக சமுகமாகவே இருக்கிறது. வியாபாரத்தைத் தவிர வேறெதையும் அவர்கள் செய்வதில்லை. உலகிலேயே மிகவும் துணிச்சல் குறைந்த தொழில், வணிகம்தான். எனவேதான் வியாபாரிகள் எல்லாம் பயந்தாங்கொள்ளிகளாக இருக்கிறார்கள். முதலில் அவர்கள் கோழைகள். எனவேதான் அவர்கள் வணிகர்களாக ஆனார்கள்.

ஒரு விவசாயி அதிக துணிவுள்ளவராக இருக்கிறார். ஏனெனில் அறியப்படாததுடன் அவர் வாழ்கிறார். என்ன நடக்கப்போகிறது என்பது அவருக்குத் தெரியாது. மழை பெய்யுமா பெய்யாதா எனத் தெரி யாது. யாருக்குமே தெரியாது. மேலும் மேகங்களை எவ்வாறு நீங்கள் நம்ப்முடியும்? பேங்க்கை (*Bank*) உங்களால் நம்பமுடியும். ஆனால்

மேகங்களை நம்ப முடியாது என்ன நிகழப் போகிறது என்பதை எவரும் அறியார். அறியப்பாடாததுடன் அந்த விவசாயி பிணைத்துக் கொண்டிருக்கிறார். ஆனால் அதிக துணிச்சலான - ஒரு போர்வீரனின் வாழ்க்கையையே அவர் வாழ்கிறார்.

மகாவீரரே ஒரு போர் வீரராகத்தான் இருந்தார். சமண தீர்த்தங்கரர்கள் இருபத்து நான்கு பேருமே வீரர்களாகவே விளங்கினார்கள். பின் என்ன தவறு நேர்ந்தது? சீடர்கள் கூண்டோடு வணிகர்களாக ஆகும் அளவுக்கு என்ன நடந்தது? மகாவீரரின் காலத்தில் அவர்கள் வியாபாரிகள் ஆனார் கள். ஏனென்றால் மகாவீரருடனேயே அவர்கள் வந்தார்கள்: மரபு புகழ்பெற்று விளங்கிய போதே, புராணப் பழைமை பெற்றுவிட்ட நிலையி லேயே, ஏற்கனவே ஒரு கற்பனையாக ஆகி, அதனுடன் சேர்ந்திருப்பது மரியாதைக்குரியதாக ஆகிவிட்டிருந்த நிலையிலேயே அவர்கள் வந்தார்கள்.

ஏதோ ஒன்று செத்ததாக ஆகிறபோது செத்தவர்கள் மட்டுமே வருகிறார்கள். ஒன்று உயிருடன் இருக்கிறபோதுமட்டுமே உயிர்த்துடிப் புள்ளவர்கள் வருகிறார்கள். இளையவர்கள் அதிகமாய் என்னிடத்தில் வந்து கொண்டிருப்பார்கள். வயதான ஒருவர் என்னிடத்தில் வந்தாலும்கூட உள்ளத்தால் அவர் இளையவராகவே இருப்பார். வயதானவர்கள் மதிப்பை மரியாதையை எதிர்பார்க்கிறார்கள். வெறுமையையும் ஒரு நீண்ட கடந்த காலத்தையும் தவிர ஏதுமற்ற உயிரற்ற கோயில்களுக்கும் சர்ச்சுகளுக்குமே அவர்கள் போவார்கள். கடந்தகாலம் என்பது என்ன? சூனியம்தான். உயிருள்ள எதுவும் இங்கேயே இப்போதே இருக்கிறது. உயிருள்ள எதற்கும் வருங்காலம் இருக்கிறது. ஏனெனில் அதிலிருந்தே வருங்காலம் வளர்கிறது. இறந்த காலத்தை நீங்கள் பார்க்கத் தொடங்கும் கணத்திலிருந்து எந்த வளர்ச்சியும் இருக்க முடியாது.

குருமார்களின் குரு எவரிடமிருந்தாவது உத்தரவுகள் ஏதும் நீங்கள் பெறுகிறீர்களா? இல்லை? ஆனால் அதி அழகான உதவியை நான் பெறுகிறேன். மேலும் நான் தனியாகவே, வீடற்ற நாடோடியாகவே இருந்து வந்திருக்கிறேன். இடம் மாறிக் கொண்டும், கற்றபடியும், இயங்கிக் கொண்டும், எங்கும் ஒருபோதும் தங்காமலுமே இருந்து வந்திருக்கிறேன். எனவே நான் எதிர்பார்க்க எனக்கு யாருமில்லை. எதையாவது நான் கண்டுபிடிக்க வேண்டுமானால் அதை நானேதான் கண்டுபிடிக்க வேண்டி உள்ளது. நிறைய உதவி கிடைக்கிறது. ஆனால் எல்லாவற்றையும் நானேதான் செய்து கொள்ள வேண்டி உள்ளது. ஆனால் ஒருவிதத்தில் அது பெரிய உதவியாகவே இருக்கப் போகிறது. ஏனெனில் அப்போதுதான் எந்த

நியதியையும் நான் சார்ந்திருப்பதில்லை. சீடரையே நான் கவனிக்கிறேன். நான் கவனிக்க எனக்கு குரு என்று எவரும் இல்லை. வழிகாட்டும் குறிப்பை கண்டுபிடிக்க சீடரையே நான் அதிக ஆழமாகப் பார்க்க வேண்டி உள்ளது. உங்களுக்கு எது உதவும் என அறிய உங்களுக்குள்ளேயே நான் பார்க்க வேண்டி இருக்கிறது.

எனவேதான் ஒவ்வொரு சீடருக்கும் என் போதனை, என் வழிமுறை மாறுபடுகிறது. எல்லோருக்கும் பொதுவான சூத்திரம் என்னிடத்தில் இல்லை. இருக்கமுடியாது. திட்டவட்டமான விதிகள் ஏதும் இல்லை. அவ்வப்போது என் உணர்வுகளை நான் வெளிப்படுத்தியாக வேண்டி உள்ளது. ஏற்கனவே தயாரான ஓர் ஒழுங்குமுறைமை என்னிடம் இல்லை. மாறாக ஒரு வளர்ந்து செல்லும் நிகழ்வே உள்ளது. ஒவ்வொரு சீடரும் அதில் கொஞ்சம் சேர்க்கிறார். ஒரு புதிய சீடருடன் நான் வேலை செய்யத் தொடங்கும்போது அவருக்குள் நான் பார்க்க வேண்டி இருக்கிறது. எது அவருக்கு உதவும், எவ்வாறு அவர் வளர முடியும் என்பதை தேடிக் காண வேண்டி உள்ளது. ஆகவே ஒவ்வொரு தடவையும் ஒவ்வொரு சீடருடனும் ஒரு புதிய விதிமுறைத் தொகுப்பு பிறக்கிறது.

நான் போனபின் நீங்கள் மெய்யாகவே ஒரு குழப்பத்திலேயே போய்க் கொண்டிருப்பீர்கள். ஏனெனில் ஒவ்வொரு சீடரிடம் இருந்தும் பலவிதமான கதைகள் வெளிவரும். அதிலிருந்து எந்த முடிவும் எடுக்க உங்களால் முடியாது போகும். தலையோ வாலோ எதுவும் புலப்படாது. ஏனெனில் ஒவ்வொரு தனிமனிதரிடமும் அவரை ஒரு தனிமனிதராகக் கொண்டே நான் பேசிக் கொண்டிருக்கிறேன். அவர் வழியாக அமைப்பு முறை வளர்ந்து கொண்டிருக்கிறது. மேலும் அது பலப்பல திசைகளிலும் வளர்ந்து கொண்டிருக்கிறது. அது ஒரு மிகப்பெரிய ஆலமரம் போல் பல கிளைகளுடனும் பக்கக் கிளைகளுடனும் எல்லாத் திசைகளிலும் போய்க் கொண்டிருக்கிறது.

குருமார்களிடமிருந்து இருந்து எந்த உத்தரவுகளையும் நான் பெறுவதில்லை. உங்களிடமிருந்தே நான் உத்தரவுகளைப் பெறுகிறேன். உங்களுக்குள் நான் பார்க்கும்போது, உங்கள் உணர்வற்ற அடிமனத்துக்குள் - உங்களின் ஆழத்துக்குள் நான் பார்க்கும்போது, அங்கிருந்தே நான் உத்தரவுகளைப் பெற்று உங்களுக்காக அவற்றைச் செயல்படுத்துகிறேன். இது எப்போதுமே புதியதான ஒரு பதிலாகவே இருக்கிறது.

**குருமார்களுக்கு ஏன் குருமார்களின் குருவிடமிருந்து வழிகாட்டுதல்கள் தேவைப்படுகின்றன? அவர்கள் ஞான நிலை அடைந்து விட்டபின் அவர்களே போதும் அல்லவா? அல்லது ஞானநிலையிலும் கூட படிநிலைகள் உள்ளனவா?**

இல்லை உண்மையில் அதற்கு படிநிலைகள் கிடையாது. ஆனால் ஓர் ஆசான் உடலைவிடுத்து உடலற்றவர் ஆனதும் ஒரு வேறுபாடு ஏற்படுகிறது - அதை படிநிலைகள் என்றே சொல்ல முடியாது. இது எப்படிப்பட்டது என்றால், சாலை ஓரத்தில் ஒரு மரத்தடியில் நீங்கள் நின்று கொண்டிருக் கிறீர்கள். சாலையின் குறிப்பிட்ட தூரம்வரை உங்களால் பார்க்கமுடிகிறது. அதற்கு அப்பால் உங்களால் பார்க்க முடிவதில்லை. பின் நீங்கள் மரத்தின்மேல் ஏறுகிறீர்கள். நீங்கள் மாறாமல் அப்படியே தான் இருக்கி றீர்கள். உங்களிடமோ உங்கள் உணர்வு நிலையிலோ எந்த மாறுதலும் ஏற்படுவதில்லை. ஆனால் நீங்கள் மரத்தின்மேல் ஏறியதும், மரத்திலிருந்து இப்போது உங்களால் இரு புறத்திலும் பல மைல் தூரத்துக்குப் பார்க்க முடிகிறது.

பின் நீங்கள் ஒரு விமானத்தில் பறக்கிறீர்கள். உங்களுக்கு ஒன்றும் நேர்ந்து விடவில்லை. உங்கள் உணர்வுநிலை அப்படியேதான் இருக்கிறது. ஆனால் இப்போது உங்களால் ஆயிரக்கணக்கான மைல் தூரத்துக்குப் பார்க்க முடிகிறது. உடலில் இருக்கையில் நீங்கள் சாலை மேல் - சாலை ஓரத் தில் இருக்கிறீர்கள். உடலுக்குள் அடைபட்டிருக்கிறீர்கள் (*in existence*) இருத்தலிலேயே உடல்தான் மிகவும் கீழான நிலையாக இருக்கிறது. ஏனெனில் இன்னமும் ஜடப் பொருளுக்கு கட்டுப்பட்ட நிலையையே அது குறிக்கிறது. இன்னமும் ஜடப் பொருளுடனேயே இருப்பதைக் குறிக்கிறது. பொருளே மிகவும் கீழான நிலை. கடவுளே மிகவும் உயர்ந்த நிலை.

ஒரு குரு தன் உடலில் இருக்கும்போதும் ஞானம் அடைகிறபோதும், உடல் தன் கருமங்களை, கடந்தகால மனப்பதிவுகளை (சம்ஸ்காரங்களை) கடந்த கால பழக்கவழக்கங்களை பூர்த்தி செய்யவே வேண்டி இருக்கிறது. ஒவ்வொரு கணக்கும் முடிக்கப்பட வேண்டி உள்ளது. அதன் பிறகு மட்டுமே உடலைக் கைவிட முடியும். இது எப்படியென்றால் உங்கள் விமானம் வந்துவிட்டது. ஆனால் நீங்கள் முடிக்க வேண்டிய அலுவல்கள் பல உள்ளன. கடன் கொடுத்தவர்கள் எல்லாரும் அங்கே நின்று கொண்டிருக் கிறார்கள். நீங்கள் புறப்படும்முன் கணக்கை முடித்து தீர்க்கும்படி அவர்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். இப்படி பல கடன்கள் உள்ளன. ஏனெனில் பல பிறவிகளாகவே நீங்கள் வாக்குறுதி தந்து வந்திருக்கிறீர்கள்; சில நேரங்களில் நல்லவராகவும் சில நேரங்களில் கெட்டவராகவும், சில நேரங்களில் ஒரு பாவியாகவும், சிலநேரங்களில் ஒரு புனிதராகவும் நடித்தும் நடந்தும் வந்திருக்கிறீர்கள். அளவுக்குமேல் நீங்கள் சேகரித்திருக்கிறீர்கள்! நீங்கள் கிளம்புமுன் ஒவ்வொன்றையும் முடித்து விடுமாறு முழு இருத்தலும் உங்களிடம் வலியுறுத்துகிறது.

நீங்கள் ஞானமடைந்தவராக ஆனதுமே இனி நீங்கள் உடம்பல்ல என்பது உங்களுக்குத் தெரிகிறது. ஆனால் உடலுக்கும் பொருள் உலகுக்கும் நீங்கள் பல காரியங்களில் கடமைப்பட்டிருக்கிறீர்கள். காலம் தேவை படுகிறது - தான் ஞானநிலைபேறு பெற்ற பின்பும் புத்தர் நாற்பது ஆண்டுகள் வாழ்ந்தார். மகாவீரரும் சுமார் நாற்பது ஆண்டுகள் வாழ்ந்தார் - தாம் கடன்பட்ட ஒவ்வொன்றையும் திருப்பிச் செலுத்திவிடவும் தாம் தொடங்கி விட்ட ஒவ்வொரு வட்டத்தையும் பூர்த்தி செய்யவுமே அவர்கள் வாழ்ந்தார்கள். புதிய கருமம் - செயல் - ஒன்றுமில்லை. ஆனால் பழைய, பாதியில் நிற்கும் காரியங்களை முற்றுப் பெறச் செய்தாக வேண்டி உள்ளது. பழைய பாக்கிகளை தீர்த்தாக வேண்டி உள்ளது. எல்லாக் கணக்குகளையும் முடித்ததும் உங்கள் விமானத்தில் நீங்கள் கிளம்ப முடியும்.

இதுவரை, ஜடப்பொருளுடன் நீங்கள் கிடைமட்டத்தில் - ஒரு மாட்டு வண்டியைப்போல - இயங்கிக் கொண்டிருந்தீர்கள். இனி நீங்கள் செங்குத்தாக முடிகிறது. இப்போது நீங்கள் மேல்நோக்கி போக முடிகிறது. இதற்குமுன் எப்போதும் நீங்கள் முன்னுக்கோ அல்லது பின்னுக்கோதான் போய்க்கொண்டிருந்திருக்கிறீர்கள். செங்குத்தான போக்கே இருந்ததில்லை. நீங்கள் உயரேஉயரே எழ எழ, மிகவும் உச்சத்து நிலையே கடவுள், குருமார்களின் குரு - அங்கிருந்து நோக்கும்போது உங்கள் பார்வை முழுமை பெறுகிறது. உங்கள் உணர்வுநிலை அதே நிலையிலேயே இருக்கிறது. எதுவும் மாறி இருக்கவில்லை. ஞானமடைந்த மனிதர், உணர்வின் உச்சநிலையான கடவுளுக்கிணையான அதே உணர்வு நிலையிலேயே இருக்கிறார். உணர்வு நிலையில் எந்த வேறுபாடும் இல்லை. ஆனால் காட்சி, பார்வைப்பரப்பு வேறுவிதமாக உள்ளது. இப்போது அவர் எல்லா இடங்களையும் பார்க்க முடியும்.

புத்தர் மற்றும் மகாவீரரின் காலத்தில் ஒரு மாபெரும் விவாதம் நடந்த்து. இந்த நேரத்தில் - இந்தக் கேள்விக்காக - அதைப் புரிந்துகொள்வது பயனுள்ளதாயிருக்கும். ஒரு விவாதம் நடந்தது: மகாவீரர் எல்லாம் வல்லவர், எல்லாம் உணர்பவர், எங்கும் இருப்பவர், சர்வக்ஞர் அதாவது எல்லாம் அறிபவர் என்று அவருடைய சீடர்கள் தொடர்ந்து கூறி வந்தார்கள். ஒருவிதத்தில் அவர்கள் கூறியது சரிதான். ஏனெனில் ஜடத்திலிருந்து, உடம்பிலிருந்து ஒருமுறை நீங்கள் விடுபட்டதுமே நீங்கள் கடவுளாகவே இருக்கிறீர்கள். ஆனால் இன்னொரு விதத்தில் அவர்கள் கூறியது தவறுதான். ஏனெனில் உடலில் இருந்து நீங்கள் விடுபட்டிருக்கலாம். ஆனால் அதை நீங்கள் இன்னும் விட்டுவிடவில்லை. அதனுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்வது உடைக்கப்பட்டுள்ளது. நீங்கள் உடல் அல்ல என்பதை நீங்கள் அறிகிறீர்கள். ஆனால் இன்னும் நீங்கள் அதில்தான் இருக்கிறீர்கள்.

இது, நீங்கள் ஒரு வீட்டில் வசிப்பதைப் போன்றது. பின் திடீரென இந்த வீடு உங்களுக்குச் சொந்தமல்ல, வேறு ஒருவரின் வீடு, அதில் நீங்கள் குடியிருந்து வருகிறீர்கள் என்பது தெரிய வருகிறது. ஆனால் அப்போதும்கூட, வீட்டைவிட்டுப்போக நீங்கள் வேண்டிய ஏற்பாடுகளை செய்யவேண்டி இருக்கும். பொருள்களை வெளியில் எடுக்க வேண்டி இருக்கிறது. அதற்கு காலம் தேவைப்படும். இந்த வீடு உங்களுடையது அல்ல என்பதை நீங்கள் அறிகிறீர்கள். உடனே உங்கள் கண்ணோட்டம் மாறியிருக்கிறது. இனி இந்த வீட்டைப்பற்றி, அதற்கு நேர்வதைப்பற்றி நீங்கள் கவலைப்பட மாட்டீர்கள். மறுநாளே அது இடிந்து விழுந்து குட்டிச்சுவரானாலும் அதனால் உங்களுக்கு ஒன்றுமில்லை. மறுநாள் நீங்கள் காலிசெய்தபின் அது தீப்பிடித்தாலும் அதனால் உங்களுக்கு ஒன்றுமில்லை. அது வேறு ஒருவருக்கு சொந்தமானது . ஒரு கணத்துக்கு முன்புதான் அந்த வீட்டுடன் உங்களை அடையாளப்படுத்தி இருந்தீர்கள்: அது உங்களின் வீடாக இருந்தது. அந்நிலையில் அதில் தீப்பிடித்திருந்தால், அது இடிந்து விழுந்தால் நீங்கள் மிகுந்த கவலைப்பட்டிருப்பீர்கள். இப்போதோ அந்த அடையாளம் உடைக்கப்பட்டிருக்கிறது.

ஓர் அர்த்தத்தில் மகாவீரரின் சீடர்களின் கூற்று சரிதான். ஏனெனில் உங்களை நீங்களே அறிய வந்திருக்கிற நிலையில் நீங்கள் அனைத்தையும் அறிகிறவராக ஆகி இருக்கிறீர்கள். ஆனால் இது சரியல்ல என்று புத்தரின் சீடர்கள் தொடர்ந்து கூறினார்கள். ஒரு புத்தர் ஒன்றை அறிய விரும்பினால் அதை அறிய அவரால் முடியும், ஆனால் அவர் அனைத்தும் அறிகிறவர் அல்லர் என்கிறார்கள் அவர்கள். புத்தர் விரும்பினால் அவர் தன் கவனத்தை எந்தத் திசையிலும் குவிக்க முடியும்; எங்கெங்கு அவர் தன் கவனத்தை குவிக்கிறாரோ அங்கெல்லாம் இருப்பதை அவர் அறிய முடியும். எல்லா இடத்திலும் இருப்பவற்றையும் அவர் அறிய முடியும். ஆனால் அவர் அனைத்தும் அறிபவர் அல்லர் என்றார்கள். இந்த வேறுபாடு நுட்பமானது, மெல்லியது, ஆனால் அருமையானது ஆகும். ஏனெனில் தொடர்ச்சியாக ஒவ்வொன்றையும் எல்லாவற்றையும் அவர் அறிகிறவராக இருந்தால் அவருக்குப் பைத்தியம் பிடித்துவிடும் என்றார்கள் அவர்கள். அந்த அதிகத்தை இந்த உடல் தாங்க முடியாது.

அவர்கள் கூறியதும் சரிதான். உடலுடன் இருக்கும் புத்தர், தான் எதையேனும் அறிய விரும்பினால் அதை அறிந்துகொள்ள முடியும். உடலின் காரணமாக அவரது உணர்வு ஒரு (டார்ச்) விளக்கைப் போன்று இருக்கிறது. நீங்கள் இருளில் ஒரு டார்ச்சுடன் போகிறீர்கள். நீங்கள் அதன் ஒளியைப் பாய்ச்சினால் எதையும் அறிய முடிகிறது. விளக்கு உங்களிடம் உள்ளது. ஆனால் பாயும் ஒளி பாயும் ஒளிதான். அது ஒளிப்பிழம்பாக

ஆகமுடியாது. ஒளிப்பிழம்பு எல்லாத் திசைகளுக்கும் வெளிச்சம் தரும். விளக்கின் பாயும் ஒளி (டார்ச்) நீங்கள் விரும்பும் எந்த ஒரு குறிப்பிட்ட திசையிலும் வெளிச்சத்தை குவிக்கவே உதவுகிறது. ஒளிபாய்ச்சும் விளக்குக்கு சுயமாகத் தேர்ந்துகொள்ள வழி இல்லை. நீங்கள் வடக்கே நோக்கினால் அது வடக்கை வெளிப்படுத்திக் காட்டும். நீங்கள் தெற்கே பார்த்தால், பின் அது தெற்கில் இருப்பதை வெளிப்படுத்தும். ஆனால் நான்கு திசைகளையும் ஒரேநேரத்தில் அது வெளிப்படுத்திக்காட்டுவதில்லை. விளக்கை தெற்கு நோக்கி நகர்த்தினால் வடக்கு மறைக்கப் பட்டுவிடுகிறது. அது ஒரு குறுகலான ஒளிப்பாய்ச்சல் மட்டுமே.

இதுவே புத்தருடைய சீடர்களின் நிலைப்பாடாக இருந்தது. மகாவீரருடைய சீடர்களோ அவர் ஒரு டார்ச் விளக்கைப் போன்றவரல்லர், அவர் ஒரு ஒளிவிளக்கைப் போன்றவர் எல்லாத் திசைகளும் வெளிப் பட்டுத் தெரிகின்றன. என்று கூறுவது வழக்கமாக இருந்தது. ஆனால் புத்தருடைய சீடர்களின் நிலைபாட்டையே நான் ஆதரிக்கிறேன். உடல் இருக்கும்வரை நீங்கள் குறுகியே இருக்கிறீர்கள். உடல் ஒரு குறுகலே. நீங்கள் ஒரு டார்ச் விளக்குபோலவே ஆகிறீர்கள் - ஏனெனில் உங்கள் கைகளில் இருந்து கைகளின் மூலம் உங்களால் பார்க்க முடியாது. உங்கள் கண்களால் மட்டுமே நீங்கள் பார்க்க முடியும். ஆனால் உங்கள் முதுகுப் பக்கம் உங்களுக்கு கண்கள் இல்லாததால் அந்தப் பக்கத்தில் உங்களால் பார்க்க முடிவதில்லை. உங்கள் தலையைத் திருப்பியே பார்க்க வேண்டி உள்ளது.

உடலில் இருக்கையில் எல்லாமே குவிக்கப்பட்டும் குறுக்கப்பட்டும் இருக்கிறது. எனினும் உணர்வுநிலை குவிந்திராமல் எல்லாத் திசைகளிலும் பாய்வதாகவே இருக்கிறது. ஆனால் (அதன்) வாகனமாகிய உடல் எல்லாத் திசைகளிலும் இன்றி எப்போதும் குறிப்பிட்ட திசையில் குவிவதாகவே உள்ளது. எனவே உங்கள் உணர்வும் அதற்கேற்ப குறுக்கப்பட்டதாகிறது. ஆனால் உடம்பு இல்லாவிட்டால், புத்தர் தன் உடலைவிட்டு நீங்கிவிட் டால், பின் எந்தப் பிரச்சினையும் இல்லை. ஒரே நேரத்தில் எல்லாத் திசைகளும் வெளிப்படுகின்றன.

இந்த அம்சத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். இதனால்தான் ஞானம் அடைந்த மனிதருக்குகூட வழிகாட்டுதல் பெற முடிகிறது. ஏனெனில் விழிப்புணர்வு பெற்ற மனிதரும் கூட இன்னும் தன் உடலிலேயே கட்டப்பட்டிருக்கிறார்; குறுகிய உடம்பிலேயே கட்டுண்டிருக்கிறார். கடவுளோ கட்டற்றவர் மிக உயர்ந்த வானத்தில் மிதந்து கொண்டிருக்கிறவர். அங்கிருந்து எல்லாத் திசைகளையும் (ஒரேநேரத்தில்) காண அவரால் முடிகிறது. அங்கிருந்து கடந்தகாலம், வருங்காலம், நிகழ்காலம்

அனைத்தையும் அவரால் பார்க்க முடிகிறது. அங்கிருந்து பார்க்கும்பொழுது அவரது காட்சி திரைகளற்று தெளிவாக இருக்கிறது. எனவேதான் அவரால் உதவமுடிகிறது.

உங்கள் பார்வையோ, உடம்புடன் நீங்கள் ஞானம் பெற்றவராக ஆகி இருந்தாலும்கூட, மங்கலாகவே இருக்கிறது. உங்களைச் சுற்றிலும் உடல் இருக்கிறது. உணர்வுநிலையின் தன்மை ஒன்றேதான். உணர்வு நிலையின் உள்ளார்ந்த உண்மைநிலை ஒன்றுதான். ஒளியின் தன்மையும் ஒன்றுதான். ஆனால் ஓர் ஒளி உடலுடன் கட்டப்பட்டு குறுகியதாக இருக்கிறது. இன்னோர் ஒளி எதனோடும் கட்டுண்டிராமல் ஒளிவெள்ளமாக இருக்கிறது. மிக உயர்ந்த வானங்களில் வழிகாட்டுதல் சாத்தியமாகிறது.

**குருமார்களுக்கு ஏன் குருமார்களின் குருவிடமிருந்து வழிகாட்டுதல்கள் தேவைப்படுகின்றன.**

என்றால், இதுதான் காரணம்.

**அவர்கள் ஞானநிலைபேறு அடைந்துவிட்டபின் அவர்களே போதும் அல்லவா? அல்லது ஞான நிலையிலும்கூட படிநிலையாள் உள்ளனவா?**

அவர்களே போதும்! சீடர்களுக்கு வழிகாட்ட அவர்கள் போதும். சீடர்களுக்கு உதவ அவர்கள் போதும். வேறெதுவும் தேவையில்லை. இருந்தாலும் அவர்கள் கட்டப்பட்டே இருக்கிறார்கள். ஆகவே கட்டப்பட்டு இல்லாத ஒருவர் எப்போதும் நன்கு உதவுபவராக இருக்கிறார். உங்களால் எல்லாத்திசைகளிலும் பார்க்க முடியாது. அவரால் முடியும்.

குருவாலும் இயங்கவும் பார்க்கவும் முடியும். ஆனால் அதை செய்தாக வேண்டி உள்ளது. இதைத்தான் நான் செய்து கொண்டிருக்கிறேன். மேலிருந்து எந்த எடுத்துச் சொல்பவர் இல்லாததால், எனக்கு வழிகாட்ட யாரும் இல்லாததால், தொடர்ச்சியாக நான் இயங்கியபடியே இருக்க வேண்டி இருக்கிறது. இந்தத் திசையிலிருந்தும் அந்த திசையில் இருந்தும் பார்த்தபடியே இருக்க வேண்டி இருக்கிறது. எல்லா திசைகளிலிருந்தும் கவனித்தபடியே இருக்க வேண்டி இருக்கிறது. உங்களின் முழுமையையும் பார்க்க முடியும்படியாக பலவிதமான நிலைபாடுகளின் வாயிலாகவும உங்களை நோக்கியபடியே இருக்க வேண்டி உள்ளது. என்னால் ஊடுருவிப் பார்க்க முடிகிறது. ஆனால் உங்களைச் சுற்றி நான் இயங்கிக் கொண்டே இருக்க வேண்டி உள்ளது. ஒரு நோட்டம் விடுவது பயன்படுவதில்லை, ஏனெனில் அந்தநோட்டம் உடலால் குறுக்கப்பட்டுவிடுகிறது. என்னிடம் ஒரு (டார்ச்) உள்ளது. அதை கையில் வைத்துக் கொண்டு உங்களைச் சுற்றிச்

கையில் வைத்துக் கொண்டு உங்களைச் சுற்றிச் சுற்றி இயங்குகிறேன். சாத்தியமான ஒவ்வொரு நிலைபாட்டிலிருந்தும் பார்த்தபடி இருக்கிறேன்.

ஒரு வகையில் இது கடினமாக உள்ளது. ஏனெனில் நான் அதிகமாக செயல்படவேண்டி உள்ளது. ஒரு வகையில் இது மிகவும் அற்புதமாக உள்ளது. ஏனெனில் நான் அதிகமாகச் செயல்பட வேண்டி உள்ளது. சாத்தியமான ஒவ்வொரு நிலைப்பாட்டிலிருந்தும் நான் பார்த்தாக வேண்டி உள்ளது. முன்பே தயார் செய்யப்பட்ட (*Ready made*) வழிகாட்டுதல்கள் தெரிவிக்க முடியாத பல விஷயங்கள் எனக்குத் தெரியவருகின்றன. மேலும் பதஞ்சலியின் கருத்தியலில் வரும் குருமார்களின் குரு - ஒரு கடவுள் - உத்தரவுகளை வழங்கும்போது அவர் எவ்வித விளக்கங்களையும் தருவதில்லை. வெறும் உத்தரவுகளை மட்டுமே அவர் தருகிறார்.'' இதை செய், அதை செய்யாதே'' என்று மட்டுமே கூறுகிறார்.

யார் - இந்த உத்தரவுகளைப் பின்பற்றுகிறார்களோ அவர்கள் ஏற்கனவே தயாரிக்கப்பட்ட பொருள்களைப் போலவே (*Ready made*) இருப்பார்கள். அது அப்படித்தான் இருக்க முடியும். ஏனென்றால் ''இதைச் செய்'' என்பார்கள் அவர்கள். அதற்கு எந்த காரணகாரிய விளக்கமும் அவர்களிடம் இருக்காது. மேலும் அவர்கள் கொடுக்கும் வழிகாட்டுதல்கள் மிகவும் பொருள் பொதிந்த சூத்திர வடிவில் உள்ளன. அவற்றுக்கு விளக்கங்கள் காண்பது - மிகவும் கடினமாக உள்ளது. அதற்குத் தேவையும் இல்லை. ஏனெனில் ஒரு மேலிடத்திலிருந்து அது வழங்கப்படும்போது அது சரியாகத்தான் இருக்கும். ஒருவர் கீழ்ப்படிதலுள்ளவர்களாக இருந்தாலே போதும்.

குருமார்களின் குருவுக்கு கீழ்ப்படிந்தவராக குரு இருக்கிறார். நீங்கள் குருவுக்குக் கீழ்ப்படிந்தவர்களாக இருக்க வேண்டிய இருக்கிறது. ஒரு கீழ்ப்படிதல் பின்தொடர்கிறது. ஒரு ராணுவ படிநிலை கட்டுப்பாடு போன்றதே இது; அதிக சுதந்தரம் கிடையாது. அதிகமாக எதுவுமே அனுமதிக்கப்படுவதில்லை! கட்டளை விதித்தால் விதித்ததுதான்!. விளக்கம் கோரினால் கிளர்ச்சி (*Rebellions*) செய்பவர் ஆகிறீர்கள். ஆகவே இதுவே பிரச்சினை - இன்று மனிதகுலம் எதிர்கொண்டாக வேண்டியிருக்கிற மாபெரும் பிரச்சினைகளில் ஒன்று இது: இன்று மனிதர் கடந்த காலத்தில் இருந்ததைப் போன்ற பணிவுடன் இருக்க முடியாது. ''இதை செய்யாதே'' என்று வெறுமனே நீங்கள் சொல்லி விட முடியாது. அதற்கு விளக்கம் தேவைப்படுகிறது. அதுவும் எவ்வித சாதாரண விளக்கமும் போதவில்லை. மிகவும் அழுத்தம்திருத்தமான உண்மையான விளக்கம் தேவை. ஏனெனில் மனித குலத்தின் மனம் இப்போதெல்லாம் கீழ்ப்படிதல் உள்ளதாக இல்லை. இப்போது (*rebelliousness*) கலகத் தன்மையே அதன்

இயல்பாக இருக்கிறது. இன்று குழந்தை பிறக்கும்போதே கிளர்ச்சித் தன்மையுடன் பிறக்கிறது.

புத்தர் மற்றும் மகாவீரரின் நாள்களில் இது முற்றிலும் வேறுவிதமாக இருந்தது. இன்று ஒவ்வொருவரும் ஒரு தனியாளாக இருக்கும்படியும் தன் காலில் நிற்கும்படியும் தன்னில் நம்பிக்கை வைக்கும்படியும் கற்பிக்கப் படுகிறார். விசுவாசம் வைப்பது கடினமானதாக ஆகி இருக்கிறது. கீழ்ப்படிதல் சாத்தியமில்லை. கேள்வியில்லாமல் யாராவது பின்பற்றினால் அவர் ஒரு குருட்டு / மூட நம்பிக்கையாளர் என நீங்கள் நினைக்கிறீர்கள். அவர் கண்டனம் செய்யப்படுகிறார். இனி எல்லா விளக்கங்களையும் - உங்களுக்கு தேவைப்படுவதைவிடவும் அதிகமான விளக்கங்களை வைத்திருக்கும் ஒரு குரு மட்டுமே உங்களுக்கு உதவ முடியும். அவரே உங்களை முற்றிலுமாகக் காலிசெய்ய முடியும். நீங்கள் கேட்டுக் கொண்டே போகிறீர்கள். அவர் உங்களுக்கு பதிலளித்துக் கொண்டே போக முடிகிறது. ஒரு கட்டம் வருகிறது. கேள்வி கேட்டு கேட்டு நீங்கள் ஓய்ந்து விடுகிறீர்கள்; சரி சரி, நீங்கள் சொன்னபடி செய்கிறேன்'' என்கிறீர்கள்.

இதற்குமுன் ஒருபோதும் இப்படி இருந்ததில்லை. அன்று எளிமையாக இருந்தது. ''இதைச் செய்'' என்று மகாவீரர் சொல்கிறார். அதை நீங்கள் செய்கிறீர்கள். ஆனால் இன்று இது சாத்தியமில்லை. இதற்குக் காரணம் மனிதர் மிகவும் மாறிவிட்டார் என்பது தான். நவீனமனம் கிளர்ச்சிகார மனம். அதை உங்களால் மாற்ற முடியாது. பரிணாம வளர்ச்சி அதை இந்தநிலையில் கொண்டு வந்து சேர்ந்திருக்கிறது. மேலும் அதனால் எந்தத் தப்பும் இல்லை. எனவேதான் பழைய குருமார்கள் இன்று தோற்றுக் கொண்டு வருகிறார்கள். அவர்கள் கூறுவதை யாரும் கேட்பதில்லை. அவர்களிடம் நீங்கள் போகிறீர்கள். அவர்களிடம் வழிகாட்டுதல்கள் - அழகான வழிகாட்டுதல்கள் உள்ளன. அதில் அவர்கள் அவற்றுக்கு எந்த விளக்கமும் வழங்குவதில்லை. ஆனால் இன்றைக்கு விளக்கமே முதல் தேவை. அதன் ஒரு தர்க்கமுடிவாக வழிகாட்டும் உத்தரவு பின்தொடர வேண்டும். முதலில் எல்லா விதமான விளக்கங்களும் தரப்படவேண்டும். அதன் பிறகே குரு, ''எனவே, இதைச் செய்'' என்று சொல்ல வேண்டும்.

இது ஒரு நீளமான நிகழ்முறையே. ஆனால் அது அப்படித்தான் இருக்கிறது. இதற்கு ஒன்றும் செய்வதற்கில்லை. மேலும் ஒரு விதத்தில் இது ஓர் அழகான வளர்ச்சிதான். ஏனென்றால் வெறுமனே நீங்கள் விசுவாசிக்கும் போது உங்களின் விசுவாசத்தில் எந்த ருசியும் இருப்பதில்லை. எந்த விரைப்பும் இருப்பதில்லை. உங்கள் விசுவாசத்தில் எந்த முனைப்பும் இருப்பதில்லை. அது ஓர் அவியல்போலவே இருக்கிறது. ஒரு வடிவ மில்லாமல், சுரத்து இல்லாமல், வண்ணமில்லாமல் அது இருக்கிறது.

களையிழந்து இருக்கிறது. ஆனால் உங்களால் சந்தேகிக்க முடியும்போது, உங்களால் வாதம் செய்ய முடிகிறது. உங்களால் சீர்தூக்கிப் பார்க்க முடிகிறது. மேலும் உங்கள் நியாயங்கள் வாதங்கள், ஐயங்கள் அனைத்துக்கும் ஒரு குருவால் தீர்வு வழங்க முடிகிறது. அப்போது ஒரு விசுவாசம் எழுகிறது. இதற்கு அதற்கே உரிய அழகு இருக்கிறது. ஏனெனில் சந்தேகம் எனும் பின்புலத்துக்கு எதிராக அது சாதிக்கப்பட்டிருக்கிறது.

எல்லாச் சந்தேகங்களுக்கும் எதிராக அது அடையப்பெற்றிருக்கிறது. எல்லாச் சவால்களுக்கும் எதிராக அது சாதிக்கப்பட்டிருக்கிறது.அது ஒரு போராட்டமாகவே இருந்திருக்கிறது. அது எளிதானதும் மலிவானதுமாக இருக்கவில்லை. மிகவும் மதிப்பு உயர்ந்ததாகவே இருந்திருக்கிறது. மேலும் ஒரு நீண்ட போராட்டத்துக்குப் பிறகு நீங்கள் ஒன்றை அடையும்போது அதற்கு அதற்கே உரிய ஓர் அர்த்தம் இருக்கிறது. அது தெருவிலிருந்து சும்மா உங்களுக்கு கிடைத்தால், அது கீழே கிடந்து அதை நீங்கள் வீட்டுக்கு எடுத்துச் சென்றால், அதில் எந்த அருமையும் இல்லை. பூமி முழுவதிலும் கோகினூர் வைரங்கள் கொட்டிக் கிடக்குமானால் அதை வீட்டுக்கு கொண்டு செல்ல யார் அக்கறைப்படுவார்? கோகினூர் என்பது எங்கு வேண்டுமானாலும் கிடைக்கும் சாதாரண கூழாங்கல் தான் என்றால் அதற்காக யார் அலட்டிக்கொள்வார்?

பழைய காலத்தில், விசுவாசம் என்பது பூமி முழுவதும் இறைந்துகிடக்கும் கூழாங்கற்கள் போல் இருந்தது. இன்றைக்கோ அது ஒரு கோகினூராக இருக்க வேண்டி உள்ளது. இன்று அது ஒரு விலைமதிப்பற்ற சாதனையாகவே இருந்தாக வேண்டி உள்ளது. வெறும் உத்தரவுகள் உதவாது. உங்களின் சந்தேகங்களை முற்றிலுமாக தீர்த்துவைக்கும் அளவுக்கு ஒரு குரு மிகவும் ஆழமான விளக்கங்களை அளிக்கவேண்டி இருக்கிறது. கேள்வி கேட்காதீர் என்று உங்களிடம் நான் ஒருபோதும் சொல்வதில்லை. உண்மையில் நேர் தலைகீழாகவே சொல்கிறேன். கேள்வி கேளுங்கள் என்கிறேன். உங்களுக்குத்தான் கேள்விகள் கிடைப்பதில்லை.

சாத்தியமான எல்லாக் கேள்விகளையும் உங்கள் உணர்வற்ற மனதில் இருந்து மேல்தளத்துக்கு நான் கொண்டு வருவேன். அவைகளைத் தீர்த்தும் வைப்பேன். நீங்கள் ஒரு குருட்டு விசுவாசி என எவரும் உங்களைச் சொல்லி விடமுடியாது. மேலும் உங்கள் பகுத்தறிவை முழுமையாக திருப்திப்படுத்தாமல் ஒரே ஒரு உத்தரவை /வழி காட்டுதலைக்கூட உங்களுக்கு நான் விதிக்கமாட்டேன். ஏனென்றால் அது எவ்விதத்திலும் உங்களுக்கு உதவப்போவதில்லை.

குருமார்களின் குருவிடமிருந்து உத்தரவுகள் கொடுக்கப்படுகின்றன. ஆனால் அவை வெறும் மேற்கோள் வாசகங்களாக, சூத்திரவடிவில் மட்டுமே உள்ளன: ''இதை செய், அதை செய்யாதே'' என்றுதான் உள்ளன. ஆயின் இந்த புது யுகத்தில் அவை பயன்படாது. இன்று மனிதர் எந்த அளவுக்கு பகுத்தறிவு உடையவராக இருக்கிறார் என்றால், பகுத்தறிவுக்குப் புறம்பானவற்றை நீங்கள் போதித்துக் கொண்டிருந்தாலும்கூட, அவற்றுக்கும் நீங்கள் பகுத்தறிவு ரீதியாக விளக்கம் அளிக்க வேண்டி உள்ளது. அதைத்தான் நான் செய்துகொண்டிருக்கிறேன். அபத்தத்தை, அறிவுக்கு அப்பாற்பட்டதை உங்களுக்கு நான் போதிக்கிறேன், மறைபெருளானதை உங்களுக்கு நான் போதிக்கிறேன் - ஆனால் அவற்றை பகுத்தறிவின் வாயிலாகவே கற்பித்துக் கொண்டிருக்கிறேன். உங்கள் பகுத்தறிவு அளவுக்கு மீறிப் பயன்படுத்தப்பட வேண்டி உள்ளது - அதனால் இது வீண் என்பதை நீங்களாகவே உணர்ந்து, அதைவீசி எறிகிறீர்கள். உங்கள் பகுத்தறிவுபற்றி அளவுக்கு அதிகமாக பேச வேண்டி இருக்கிறது - அதனால் அதனிடம் நீங்கள் முற்றிலும் சலித்து, நீங்களாகவே அதை கைவிடுகிறீர்கள்; உத்தரவின் பேரில் அல்ல.

ஏனெனில் உத்தரவு தரப்பட முடியும். நீங்களோ தொடர்ந்தும் தொற்றிக் கொண்டே இருப்பீர்கள் - அது பயன்படாது. ''என்னை விசுவாசித்தால் போதும்'' என நான் உங்களிடம் சொல்லப் போவதில்லை. வேறு வழி எதுவும் உங்களுக்கு அறவே இல்லாத ஒரு சூழ்நிலையையே நான் உருவாக்கிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் விசுவாசித்தே ஆகவேண்டி வரும். அதற்கு கொஞ்சம் காலம் பிடிக்கும். கொஞ்சம் அதிகம் - ஆனால் அப்போது மிகவும் சாதாரணமான கீழ்ப்படிதல் (*Simple obedience*) இருக்கும். ஆனாலும் அது தகும்.

**நாங்கள், எங்கள் விழிப்பற்ற தன்மையாலும் அகங்கார நிலையாலும், குருவுடன் எப்போதும் தொடர்பு கொண்டிருப்பதில்லை.ஆனால் குரு எப்போதும் எங்களுடன் தொடர்பு கொண்டிருக்கிறாரா?**

ஆம். ஏனெனில் உங்களின் மொத்தம் நான்கு அடுக்குகளுடனும் குரு தொடர்பு வைத்திருக்கிறார். உங்கள் உணர்வு அடுக்கு என்பது, அந்த நான்கு அடுக்குகளில் ஒன்று மட்டுமே. ஆனால் அவரை உங்கள் குருவாக ஏற்று நீங்கள் சரணடைந்திருக்கிற போது மட்டுமே அந்த தொடர்பு சாத்திய மாகிறது - அதற்கு முன்பாக அல்ல. நீங்கள் ஒரு மாணவராக மாத்திரம் இருந்தால், கற்றுக் கொண்டிருந்தால், அப்போது நீங்கள் தொடர்பு கொள்ளும் போதெல்லாம் குரு தொடர்பு கொண்டிருக்கிறார். நீங்கள் தொடர்பு கொண்டிராதபோது அவரும் தொடர்பு கொண்டிருப்பதில்லை.

இந்த நிகழ்வைப் புரிந்துகொண்டாக வேண்டும்... உங்களுக்கு நான்கு மனங்கள் இருக்கின்றன: உயர்மனம் - இது வருங்காலத்தில்தான் சாத்தியம். இதற்கான விதைகளை மட்டுமே நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். எதுவும் முளைத்திருக்கவில்லை - விதைகள் மட்டுமே, அவை முளைவிடுவதற்கான சாத்தியப்பாடு மட்டுமே உள்ளது. அடுத்து உணர்வு மனம் - *(Conscious mind)* இது மிகச்சிறிய ஒரு பாகம். இதைக் கொண்டுதான் நீங்கள் பகுத்தறியவும், சிந்திக்கவும் முடிவெடுக்கவும், வாதம் செய்யவும், சந்தேகிக்கவும், நம்பவும் செய்கிறீர்கள். குருவிடம் நீங்கள் சரணடையாத நிலையில் இந்த உணர்வுமனம் தான் அவருடன் தொடர்பு கொண்டுள்ளது. எனவே இது தொடர்பு கொள்ளும் போதெல்லாம் குருவும் தொடர்பு கொள்கிறார். உணர்வுமனம் தொடர்புகொள்ளாதபோது, குருவும் தொடர்பு கொள்வதில்லை. நீங்கள் ஒரு மாணவராக இருக்கிறீர்கள். இன்னும் குருவை ஒரு குருவாக நீங்கள் ஏற்றுக் கொண்டிருக்கவில்லை. இன்னும் அவரை ஒரு ஆசிரியராகவே நீங்கள் பார்க்கிறீர்கள்.

ஆசிரியரும் மாணவரும் உணர்வு மனமட்டத்தில் நிலவுகிறார்கள். இந்நிலையில் எதுவும் செய்ய முடியாது. ஏனெனில் நீங்கள் திறந்து இல்லை. மற்ற எல்லா உங்கள் மூன்று வாயில்களுமே அடைக்கப்பட்டுள்ளன. உயர்உணர்வோ வெறும் வித்தாகவே இருக்கிறது. அதன் கதவுகளை நீங்கள் திறக்கவே முடியாது.

உணர்வுமனத்தை அடுத்ததாக கீழே உள்ளது அடிமனம் / அரை உணர்வுமனம். *(Sub Conscious Mind)* அதன் திறப்பு, நீங்கள் நேசித்தால்தான் சாத்தியம். உங்கள் பகுத்தறிவின் காரணமாக மட்டுமே நீங்கள் இங்கே என்னுடன் இருந்தால் உங்கள் உணர்வு மனக் கதவு திறக்கிறது. நீங்கள் அதை திறக்கும் போதெல்லாம் நான் அங்கே இருக்கிறேன். நீங்கள் அதை திறக்காவிட்டால் நான் வெளியில் நிற்கிறேன். என்னால் உள்ளே வரமுடியாது. உணர்வு மனத்தை உடனடியாக அடுத்தே அரை உணர்வு மனம் உள்ளது. நீங்கள் என்னை நேசித்தால் - உங்கள் உறவு வெறும் ஓர் ஆசிரியர் - மாணவர் உறவாக இல்லாமல் மேலும் அந்நியோன்னியமான தாக இருந்தால், காதல் உறவு போல் இருந்தால் - அந்நிலையில் அடிமனக் கதவு திறக்கிறது. பல நேரங்களில் உணர்வுமனக் கதவை நீங்கள் சாத்திவிடுவீர்கள். எனக்கெதிராக நீங்கள் வாதம் புரிவீர்கள். சிலநேரங்களில் நீங்கள் எதிர்மறையாக இருப்பீர்கள். சில நேரங்களில் நீங்கள் எனக்கு எதிராக இருப்பீர்கள். ஆனால் அதனால் பரவாயில்லை. அன்பெனும் அடிமனக்கதவு திறந்து கொண்டால் என்னால் எப்போதும் உங்களுடன் தொடர்பு வைத்திருக்க முடியும்.

ஆனால் இதுவும்கூட செம்மையான கதவு அல்ல. ஏனெனில் சிலநேரங்களில் என்னை நீங்கள் வெறுக்கவும் முடியும். என்னை நீங்கள் வெறுத்தால் அந்தக் கதவையும் நீங்கள் அடைத்து விடுகிறீர்கள். அன்பு அங்கு இருக்கிறது. ஆனால் அதற்கு எதிரான வெறுப்பும் அங்கு இருக்கிறது. வெறுப்பும் எப்போதும் அன்புடன் சேர்ந்தே உள்ளது. முதல் கதவைவிட இரண்டாம் கதவு அதிகம் திறந்ததாக இருக்கும். ஏனென்றால் முதல் மனம் தன் நிலைகளை, நீங்களே அறியமுடியாத அளவுக்கு, வேகவேகமாக மாற்றிக் கொள்கிறது... எந்தக் கணத்திலும் அது மாறிக் கொண்டே போகிறது. ஒரு கணத்திற்கு முன்னால் இங்கே இருந்தது. மறுகணமே அது இங்கே இல்லை. அது ஒரு கணநேர நிகழ்வாக இருக்கிறது.

அன்பு கொஞ்சம் நீண்டகாலம் இருக்கிறது. அதுவும் தன் மனநிலைகளை மாற்றிக் கொள்கிறதுதான். ஆனால் அதன் மனநிலைகள் கூடுதல் கால அளவுக்கு நீடிக்கிறது. சில நேரங்களில் நீங்கள் என்னை வெறுப்பீர்கள். முப்பது நாள்களில் ஏறக்குறைய எட்டு நாள்கள் - அதாவது ஒருவாரம் நீங்கள் என்னை வெறுப்பீர்கள். ஆனால் மூன்று வாரங்கள் அது திறந்துள்ளது. பகுத்தறிவைப் பொறுத்தவரை, ஒருவார காலமே அதிகம். அதுவே அதற்கு முடிவில்லாத காலம் போல் தோன்றுகிறது. பகுத்தறிவு ஒரு கணம் ஆதரவாகவும் மறுகணம் எதிராகவும் இருக்கிறது. ஆதரவு, எதிர்ப்பு....இப்படியே போகிறது. இரண்டாவது கதவு திறந்து என்மீது நீங்கள் காதல் கொண்டால், பகுத்தறிவின் கதவு மூடப்பட்டிருந்தாலும் என்னால் தொடர்பு வைத்திருக்க முடியும்.

மூன்றாவது வாசல் அடிமனத்துக்கும் அடியில் உள்ளது. அதுவே உணர்வற்ற மனம் (*Unconscious Mind*) பகுத்தறிவு முதல் கதவை திறக்கிறது - அதாவது என்னுடன் நீங்கள் ஒத்துப் போவதாக உணர்ந்தால். அன்பு இரண்டாவது கதவை திறக்கிறது. இது முதல் கதவைவிட பெரியது. நீங்கள் என்மேல் காதல் கொண்டால் இந்த கதவு திறக்கிறது. கருத்தளவில் ஒத்துப்போகாவிட்டாலும், அன்பிருந்தால் - ஒரு நெருக்கத்தை, இணக் கத்தை, பாசத்தை உணர்ந்தால் இது திறக்கிறது.

சரணடைவதன் மூலம் மூன்றாவது கதவு திறக்கிறது. நீங்கள் என்னிடம் தீட்சை பெற்றுக் கொண்டால், சந்நியாசத்துக்குள் நீங்கள் குதித்து விட்டிருந்தால், நீங்கள் சந்நியாசத்திற்குள் குதித்து, "இனி - இனி நீங்களே என் மனமாக இருங்கள் இனி என் கடிவாளங்களை நீங்களே பிடித்துக் கொள்ளுங்கள், இனி நீங்களே என்னை வழிநடத்துங்கள் நான் பின்தொடர்கிறேன்." என்று என்னிடம் கூறியிருந்தால், மூன்றாவது கதவு திறக்கிறது. உங்களால் எப்போதுமே இப்படி செய்ய முடியும் என்பதல்ல,

ஆனால் நீங்கள் சரணடைந்துவிட்டீர்கள் என்பதற்கான அடையாளமே கூட மூன்றாவது கதவை திறந்து விடுகிறது.

மூன்றாவது கதவு திறந்தே இருக்கிறது. அறிவுரீதியாக நீங்கள் எனக்கு எதிராக இருக்கலாம். அதனால் பரவாயில்லை: நான் தொடர்பு வைத்திருக்கிறேன். நீங்கள் என்னை வெறுக்கலாம். அதனால் பரவாயில்லை: நான் தொடர்பு வைத்து இருக்கிறேன் - ஏனென்றால் மூன்றாவது கதவு எப்போதும் திறந்தபடியே இருக்கிறது. நீங்கள் சரணடைந்து விட்டீர்கள். இனி மூன்றாவது கதவை மூடுவது மிகக் கடினம் - மிகமிகக் கடினம்! அதை திறப்பதும் கடினம். அதை மூடுவதும் கடினம். அதை திறப்பது கடினமே, ஆனால் அந்த மூடுவதுதான் அதைவிடக் கடினம். ஆனால் அதையும் மூடிவிட முடியும். ஏனெனில் அதை திறந்தது நீங்கள்தானே! அதையும் மூடிவிட முடியும்! ஒருநாள் உங்கள் சரணாகதியை திரும்பப் பெறுவதென்று நீங்கள் தீர்மானித்துவிட முடியும்! அல்லது நீங்கள் போய் வேறு யாரிடமாவது சரண்புகுந்துவிட முடியும். ஆனால் அது ஒருபோதும் - பெரும்பாலும் ஒருபோதும் - நேர்வதில்லை. ஏனெனில் இந்த மூன்று கதவுகளின் வழியாகவும் குரு நான்காவது கதவைத் திறக்க செயல்பட்டுக் கொண்டு இருக்கிறார்.

எனவே உங்கள் சரணாகதியை நீங்கள் திரும்பப் பெறுவீர்கள் என்பதற்கு மிகவும்.... ஏறக்குறைய சாத்தியமே இல்லை. அதை நீங்கள் திரும்ப எடுக்குமுன், நான்காவது வாயிலை குரு திறக்க வேண்டும். இது உங்களுக்கு அப்பாற்பட்டது. அதை உங்களால் திறக்க முடியாது. அதை உங்களால் மூடவும் முடியாது. நீங்கள் திறக்கிற கதவுக்கு, அதை மூடும் அதிகாரியாகவும் நீங்களே இருக்கிறீர்கள். ஆனால் நான்காவது - உங்களுடன் எதுவும் செய்வதாக இல்லை. அதுதான் உயர்உணர்வு இல்லை. *(super conscious)* இந்த மூன்று கதவுகளையும் திறப்பது தேவை. அப்போதுதான் நான்காவது கதவுக்கு ஒரு சாவியை தயாரிக்க குருவால் முடியும். ஏனெனில் உங்களிடம் அதற்கான சாவி இல்லை. இருந்தால் நீங்களே அதை திறந்துவிட முடியுமே. குருவே அந்தச் சாவியைத் தயாரிக்கும் உலைக்கள மாக (ஃபோர்ஜ்) வேண்டி உள்ளது. அது ஒரு கள்ளச் சாவி தயாரிக்கும் வேலைதான் (ஃபோர்ஜரி). ஏனெனில் உடைமை யாளரிடம் சாவி இல்லை.

இந்த மூன்று வாயில்களின் வாயிலாகவும் நான்காகவதை அடைந்து அதைத் திறப்பதற்கான ஒரு சாவியை வார்ப்பதற்கு தேவையான கால நீட்டிப்பை உண்டாக்குவதே ஒரு குருவின் மொத்த முயற்சியுமாக இருக்கிறது. ஒருமுறை அதைத் திறந்துவிட்டால் அதற்குமேல் நீங்கள் இருப்பதில்லை. இனி உங்களால் ஒன்றும் செய்ய முடியாது. மற்ற மூன்று

கதவுகளையும் நீங்கள் சாத்திவிடலாம் - நான்காவதன் சாவி அவரிடம் இருக்கிறது. அதனால் எப்போதும் அவர் தொடர்பு வைத்திருக்கிறார். அதன்பின் நீங்கள் இறந்து போனாலும், அதனால் எந்த மாறுபாடும் இல்லை. பூமியின் கடைக்கோடிக்கு நீங்கள் போகலாம். நிலவுக்குப் போகலாம், அதனால் எந்த வேறுபாடும் ஏற்படுவதில்லை; நான்காவது வாயிலின் சாவி அவரிடம் இருக்கிறது இன்னும் சரியாகச் சொன்னால், ஓர் உண்மையான குரு சாவியை ஒருபோதும் தன் கையிலேயே ,வைத்திருப்பதில்லை. நான்காவதை திறந்ததுமே சாவியை நடுக்கடலில் வீசிவிடுகிறார். ஆகவே அதைத் திருடவோ வேறு ஏதாவது செய்யவோ வாய்ப்பில்லை - எதற்குமே வாய்ப்பில்லை.

உங்களில் பலருக்குமான நாலாவது கதவுக்கு சாவி தயாரித்து அதை வீசி எறிந்தும் விட்டேன். எனவே அநாவசியமாக உங்களை நீங்களே வருத்திக் கொள்ள வேண்டாம். அது வீண்வேலை. இனி ஒன்றும் செய்யமுடியாது. நான்காவது கதவைத் திறந்தபின் எந்தச் சிக்கலும் இல்லை. எல்லாப் பிரச்சினைகளும் அதற்கு முன்புதான் இருக்கின்றன. ஏனெனில் மிக கடைசி நேரத்தில், குரு சாவியை தயாராக்கிக் கொண்டிருந்தபோது, சாவி கடினமானது என்பதால்....

லட்சக்கணக்கான பிறவிகளாக அந்தக் கதவு பூட்டியே கிடந்தது. எல்லாவிதமான துருவும் அதில் சேர்ந்துள்ளது. அது ஒரு சுவர் போலவே காட்சி அளிக்கிறது, கதவு போலத் தெரிவதில்லை. பூட்டு எங்குள்ளது என்பதைக் கண்டு கொள்வதே சிரமமாக உள்ளது. இந்த லட்சணத்தில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான பூட்டு. எனவே எல்லோருடைய பூட்டையும் ஒரு சேரத் திறக்கும் தலைமைச் சாவிக்கு வழி இல்லை. ஒரே சாவி பயன்படாது. ஏனெனில் ஒவ்வொருவரின் பெருவிரல் ரேகையும் வேறுபடுவது போல் ஒவ்வொரு தனிநபரும் வேறுபடுகிறார். அதே ரேகை வேறு எங்கும் யாருக்கும் இல்லை. கடந்தகாலத்திலும் இல்லை, வருங்காலத்திலும் இல்லை. உங்கள் கட்டைவிரல் ரேகை உங்களுடையது மட்டுமே. ஒரே ஓர் உருவாக்கம்தான் திரும்பவும் அது உருவாவதில்லை.

உங்கள் உள்பூட்டும் உங்கள் பெருவிரல் ரேகை போன்றதே - முற்றிலும் தனித்துவமானது: உதவுவதற்கு தலைமைச் சாவி (மாஸ்ட்டர் கீ) எதுவும் கிடையாது. எனவேதான் அதற்கு ஒரு குரு தேவைப்படுகிறார். ஏனெனில் தலைமைச் சாவியை விலைக்கு வாங்க முடியாது. முடிந்தால், ஒருதடவை ஒரு சாவி உருவாக்கப்பட்டதுமே அதை வாங்கி ஒவ்வொருவரின் கதவையும் திறந்தவிட முடியும். ஆனால் அப்படி இல்லை. ஒவ்வொருவருக்கும் ஒரு தனிப்பட்ட விதமான கதவு, தனிப்பட்ட விதமான

பூட்டு - அவருக்கே உரிய பூட்டும் அமைப்பு உள்ளது. குரு அதனை கவனித்து கண்டுபிடித்து சாவியை - அதற்கேயான ஒரு சிறப்புச் சாவியை வார்க்க வேண்டி உள்ளது.

உங்கள் நான்காவது வாசல் திறந்ததுமே அதன்பின் குரு உங்களுடன் ஓயாத தொடர்பில் இருக்கிறார். அவரை நீங்கள் முற்றிலுமாக மறந்து விடலாம். அதனால் எந்த மாறுபாடும் இல்லை. அவரை நீங்கள் நினைவு கூராமல் இருக்கலாம். அதனால் எந்த மாறுபாடும் இல்லை. குரு தன் உடலை விட்டு நீங்குகிறார். அதனால் எந்த மாறுபாடும் இல்லை. அவர் எங்கெங்கு இருந்தாலும், நீங்கள் எங்கெங்கு இருந்தாலும், கதவு திறந்தே இருக்கிறது. மேலும் இந்தக் கதவு காலத்தையும் வெளியையும் கடந்து நிலவுகிறது. எனவேதான் அது உயர் மனமாக இருக்கிறது; உயர் உணர்வாக இருக்கிறது.

**நாங்கள், எங்கள் விழிப்பற்ற தன்மையாலும் அகங்கார நிலையாலும், குருவுடன் எப்போதும் தொடர்பு கொண்டிருப் பதில்லை. ஆனால் குரு எப்போதும் எங்களுடன் தொடர்பு கொண்டிருக்கிறார்?**

ஆம், ஆனால் நான்காம் கதவு திறக்கப்படும்போது மட்டுமே. இல்லாவிட்டால் மூன்றாம் கதவில் அவர் ஏறக்குறைய தொடர்பு கொள்கிறார். இரண்டாவது கதவில் பெரும்பாலும் பகுதி நேரம் தொடர்பு கொள்கிறார். முதல் கதவில் தற்காலிக தொடர்பு மட்டுமே கொள்கிறார்.

எனவே உங்களின் நான்காவது கதவைத் திறக்க என்னை அனுமதியுங்கள். குறிப்பிட்ட ஒரு கணத்தில்தான் நான்காம் கதவு திறக்கிறது. உங்கள் மூன்று கதவுகள் திறந்திருக்கிற போதுதான் அந்தக் கணம் வருகிறது. ஒரே ஒரு கதவு பூட்டியிருந்தால்கூட நான்காவது கதவை திறக்கமுடியாது. இது ஒரு கணிதப் புதிர் போன்றதே. இந்த முன்நிபந்தனை தேவைப்படுகிறது. உங்களின் முதலாவது உணர்வுக் கதவு திறக்கவேண்டும். உங்களின் இரண்டாவது அரை உணர்வுக் கதவு நீங்கள் நேசித்தால் திறக்கிறது. நீங்கள் சரணடைந்தால், தீட்சை பெற்றுவிட்டால் உங்களின் மூன்றாவதுஉணர்வற்ற கதவு திறக்கிறது.

இந்த மூன்று கதவுகளும் திறந்திருக்கிற போது ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் மூன்று கதவுகளும் திறந்திருக்கிற போது, நான்காவது கதவைத் திறக்க முடியும்.எனவேதான் நீங்கள் விழித்திருக்கிற போது நான்காவதை திறப்பது கடினமாகிறது. நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கும்போது மட்டுமே அது நடக்கும். எனவே என் நிஜமான வேலை பகலில் அல்ல. இரவில்,

நீங்கள் குறட்டை விட்டு தூங்கும் போதுதான். ஏனெனில் அப்போதுதான் நீங்கள் எந்தத் தடங்கலையும் உருவாக்க மாட்டீர்கள். நீங்கள் ஆழ்ந்து உறங்குகிறீர்கள். எதிர்த்து வாதாட மாட்டீர்கள். பகுத்தறிவைப் (*reasoning*) பயன்படுத்துவதை நீங்கள் மறந்துவிட்டிருக்கிறீர்கள்.

ஆழ்ந்த உறக்கத்தில் உங்கள் இதயம் நன்றாக இயங்குகிறது. விழித்திருக்கும் பொழுதைவிட அதிக அன்புள்ளவராக இருக்கிறீர்கள். ஏனென்றால் நீங்கள் விழித்திருக்கும்போது பலவித பயங்கள் உங்களைச் சூழ்ந்துள்ளன. பயத்தின் காரணமாக அன்பு சாத்தியமாவதில்லை. நீங்கள் ஆழந்து உறங்கும் போது, பயம் மறைகிறது, அன்பு மலர்கிறது. அன்பு ஓர் இரவுமலர். **அல்லிமலரை** நீங்கள் கவனித்திருப்பீர்கள். இது இரவில் மலரும் பூ அன்பு ஓர் அல்லிமலர் இரவிலேயே அது மலர்கிறது. காரணம் நீங்கள்தான். வேறு காரணம் எதுவும் இல்லை. பகலிலும் அது மலர முடியும். ஆனால் அப்போது உங்களை நீங்கள் மாற்றிக் கொள்ள வேண்டி இருக்கும். அன்பு பகலில் மலர முடிவதற்கு மாபெரும் மாற்றம் தேவைப்படுகிறது.

எனவேதான் மனிதர்களுக்கு போதையேறியதும் அவர்கள் அதிக அன்பானவர்களாக இருப்பதை நீங்கள் பார்க்கிறீர்கள். எந்த ஒரு மது விடுதிக்குள்ளும் போய் அளவுக்கதிகமாக குடித்திருப்பவர்களைப் பாருங்கள்: அவர்கள் பெரும்பாலும் எப்போதுமே அன்பானவர்களாக இருக்கிறார்கள். தெருவில் நடந்து போகும் இரு குடிகாரர்களைப் பாருங்கள். அவர்கள் ஒருவர் தோள்மேல் ஒருவர் தொங்கிக் கொண்டு, மிகுந்த அன்புடன், இருவரும் ஒருவரேபோல் போய்க்கொண்டிருப்பார்கள்! அவர்கள் தூக்கத்தில் இருக்கிறார்கள்.

நீங்கள் பயப்படாமல் இருக்கும்போது பூக்களை நேசியுங்கள். பயமே விஷம். ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கும்போது நீங்கள் ஏற்கனவே சரணடைந்து இருக்கிறீர்கள். ஏனெனில் தூக்கமே ஒரு சரணாகதிதான். அவ்வாறே, ஒரு குருவை நீங்கள் சரணடைந்தால் அவர் உங்கள் தூக்கத்தில் நுழைய முடியும். அவரது காலடி ஓசையைக்கூட உங்களால் கேட்க முடியாது.அவர் அமைதியாக நுழைந்து வேலை செய்ய முடியும். இது ஒரு கள்ளத்தனமான வேலைதான் (ஃபோர்ஜரி). இரவில் நீங்கள் தூங்கும்போது திருடர்கள் புகுவது போன்றதே இது. குரு ஒரு திருடர்தான். நீங்கள் ஆழ்ந்து தூங்கும்போது, என்ன நடந்து கொண்டிருக்கிறது. என்றே நீங்கள் அறியாதிருக்கிற போது, அவர் உங்களுக்குள் புகுந்து, நான்காவது கதவைத் திறக்கிறார்.

நான்காவது கதவு திறக்கப்பட்டு விட்டால் அதன்பின் எந்தப் பிரச்சினையும் இல்லை. நீங்கள் உண்டாக்கிக் கொள்ளும் ஒவ்வொரு

தடங்கலையும் ஒவ்வொரு தொல்லையையும், நான்காவது திறக்கப்படுவ தற்கு முன்பு மட்டுமே உங்களால் உண்டாக்க முடியும். நான்காவதை திறந்து விட்டால் திரும்பி விடுவது என்பது இல்லை. நான்காவது திறக்கப்பட்ட பின் குரு இருபத்து நான்கு மணி நேரமும் உங்களுடனேயே இருக்க முடியும் - அதில் எந்த பிரச்சினையும் இல்லை.

### ஆசைகளை அடக்காமல் அவற்றை எவ்வாறு ஒருவர் அறுக்க முடியும்?

ஆசைகளே கனவுகள். அவை யதார்த்தங்கள் அல்ல. அவற்றை உங்களால் நிறைவு செய்யவும் முடியாது. அவற்றை உங்களால் அடக்கி வைக்கவும் முடியாது. ஏனெனில் ஒரு விஷயத்தை நிறைவு செய்ய வேண்டுமானால் அது நிஜமானதாக இருப்பது தேவை. ஒரு விஷயத்தை அடக்கி வைக்க வேண்டுமானாலும் அது நிஜமானதாக இருப்பது தேவையாகிறது. தேவைகளை நிறைவு செய்ய முடியும். தேவைகளை அடக்கி வைக்கவும் முடியும். ஆசைகளை நிறைவு செய்யவும் முடியாது, அடக்கி வைக்கவும் முடியாது. இதைப் புரிந்து கொள்ள முயலுங்கள். ஏனெனில் இது மிகவும் சிக்கலான விஷயம்.

ஆசை ஒரு கனவு. இதை நீங்கள் புரிந்து கொண்டால் அது மறைந்து விடுகிறது. அதை அடக்கி வைக்கத் தேவையில்லை. ஆசையை அடக்க வேண்டிய தேவை என்ன? நீங்கள் மிகவும் பிரபலமாக ஆக விரும்பு கிறீர்கள். இது ஒரு கனவு. ஓர் ஆசை. ஏனெனில் பிரபலமாக ஆவது பற்றி உங்கள் உடல் கவலைப்படவில்லை. உண்மையில் நீங்கள் பிரபலமாக ஆகிறபோது உடல் அதிகம் துன்புறுகிறது . ஒருவர் பிரபலம் ஆகும்போது எப்படி துன்புறுகிறது என்பதை நீங்கள் அறிவதில்லை. அதன்பின் அமைதி என்பதே இருப்பதில்லை. பின் தொடர்ச்சியாக நீங்கள் கவலைப்படு கிறீர்கள். மற்றவர்களால் தொந்தரவு செய்யப்படுகிறீர்கள். ஏனெனில் நீங்கள் மிகவும் புகழ் பெற்றவராக இருக்கிறீர்கள்.

ஓரிடத்தில் வால்ட்டேர் இப்படி எழுதி இருக்கிறார்: ''நான் புகழ் பெற்றிராத போது ஒவ்வோர் இரவும் கடவுளிடம்'' என்னைப் பிரபலமாக ஆக்குங்கள், நான் ஊர்பேர் இல்லாதவனாக இருக்கிறேன், என்னை பெயர் பெற்றவனாக ஆக்குங்கள்' என்று ஜெபிப்பது வழக்கம். பின் நான் புகழ்பெற்றவனாக ஆனேன். அப்போது நான் 'போதும் சாமி, என்னை மறுபடியும் ஓர் அடையாளமில்லாதவனாக ஆக்கிவிடும்' என்று பிரார்த்திக்கத் தொடங்கினேன். ஏனெனில் முன்பெல்லாம் பாரீசின் வீதிகளில் நான் நடந்துபோவது வழக்கம். யாரும் அப்போது என்னை ஏறிட்டுப் பார்க்க மாட்டார்கள். நான் மிகுந்த சோகமடைவேன். யாருமே என்மேல் கவனம் செலுத்தமாட்டார்கள் - ஏதோ நான் இங்கு இல்லை

என்பதுபோல. உணவகங்களுக்குள் நான் போவேன், வெளியே வருவேன். யாரும். உணவக பணியாள்கள் கூட என்னைக் கண்டுகொள்ள மாட்டார்கள்.

அப்படியானால் அரசர்கள்? வால்ட்டேர் என்று ஒருவர் இருப்பதே அவர்களுக்கு தெரியாதிருந்தது. ''பின் நான் புகழ்பெற்றவன் ஆனேன்'' ''அப்போது வீதிகளில் நடமாடுவதே எனக்கு கடினமாக ஆயிற்று. ஏனெனில் மக்கள் சேர்ந்து விடுவார்கள். எங்கு போவது என்றாலும் சிரமமாகவே இருந்தது. ஓர் உணவகத்துக்கு சென்று நிம்மதியாக உணவு உண்ணமுடியாமல் போயிற்று. கூட்டம் கூடிவிடும்.'' என அவர் எழுதுகிறார்.

ஒரு கட்டம் வந்தது. அப்போது அவர் தன் வீட்டை விட்டு வெளியில் இறங்குவதே ஏறக்குறைய சாத்தியமில்லாமல் ஆயிற்று. ஏனெனில் அந்நாள்களில் பிரான்சில், பாரீசில் ஒரு மூடநம்பிக்கை நிலவியது: மிகவும் பிரபலமான ஒரு மனிதரிடமிருந்து ஒரு துண்டுத்துணியை உங்களால் பெற முடிந்தால், அதைக்கொண்டு ஒரு தாயத்து செய்து கொள்ள முடிந்தால் அது அதிருஷ்டம் தரும் என நம்பினார்கள். எனவே அவர் எங்கெங்கு போனாலும் ஆடையில்லாமலே திரும்பிவருவார். ஏனென்றால் மக்கள் அவருடைய உடைகளை கிழித்து விடுவார்கள். அவரது உடலுக்கும் ஊறு விளைத்தார்கள். ஒரு வெளியூரில் இருந்து பாரீசுக்கு அவர் திரும்பிவர நேர்ந்த போதெல்லாம், அல்லது வெளியூருக்கு போகும் போதெல்லாம், அவருக்கு போலீஸ்துணை தேவைப்பட்டது.

எனவே அவர் ''நான் தவறிழைத்து விட்டேன். என்னை பேசாமல் மறுபடியும் ஒன்றுமில்லாதவன் ஆக்கிவிடும். ஏனென்றால் நான் போய் ஆற்றைக் கவனிக்க முடியவில்லை. வெளியே போய் சூரியன் மறைவதை பார்க்க முடிவதில்லை. மலைகளுக்குச் செல்ல முடிவதில்லை. என்னால் நகரவே முடிவதில்லை. ஒரு கைதியாக ஆகிஇருக்கிறேன்.'' என்ற ஜெபிக்க ஆரம்பித்துவிட்டார்.

புகழ்பெற்ற பிரபலர்கள் எல்லாரும் எப்போதும் கைதிகளாகவே இருக்கிறார்கள். புகழ்பெறுவது உடம்புக்கு ஒரு தேவையாக இல்லை. உடல் எப்போதும் முற்றிலும் நிறைவாகவே உள்ளது. இப்படிப்பட்ட அபத்த காரியங்கள் எதுவும் அதற்குத் தேவைப்படுவதில்லை. எளிய விஷயங்களே அதற்கு தேவை: உண்ண உணவு. குடிக்க நீர். அதிக வெயிலடித்தால் ஒதுங்க ஒரு வசிப்பிடம். அதன் தேவைகள் மிக மிக எளியவை. உலகத்துக்குப் பித்துப் பிடித்திருப்பதற்கு காரணம்' ஆசைகள் தான், தேவைகள் அல்ல. மக்களுக்குப் பைத்தியம் தான் பிடித்து இருக்கிறது! தம் தேவைகளை அவர்கள் குறைத்துக் கொண்டே போகிறார்கள். தம் ஆசைகளை வளர்த்து

பெருக்கிக் கொண்டே போகிறார்கள். ஒரு நாளைக்கு ஒரு வேளை உணவைக்கூட விட்டுவிட விரும்பும் மனிதர்கள் இருக்கிறார்கள். ஆனால் செய்தித்தாளை அவர்களால் விட்டு விட முடிவதில்லை. திரைப் படத்துக்கு போவதை அவர்களால் விட்டுவிட முடிவதில்லை. புகைபிடிப்பதை அவர்களால் விட்டுவிட முடிவதில்லை. உணவை அவர்களால் விட்டுவிட முடிகிறது. அதைப் போன்ற தேவைகளை அவர்களால் விட்டுவிட முடிகிறது. ஆனால் ஆசைகளை விட முடிவதில்லை. மனம் ஒரு சர்வாதிகாரியாக ஆகி இருக்கிறது.

உடல் எப்போதுமே அழகானது. இதை நினைவில் கொள்ளுங்கள். நான் உங்களுக்கு கொடுக்கும் அடிப்படையான விதிகளில் ஒன்று இது. இவ்விதி எவ்வித மறுப்புக்கும் இடமற்ற உண்மை, கலப்படமற்ற உண்மை, ஆணித்தரமான உண்மை: அதாவது உடல் எப்போதும் அழகாகவே இருக்கிறது. மனமே அசிங்கமாக இருக்கிறது. எனவே மாற்ற வேண்டியது உடலை அல்ல. மாற்றுவதற்கு அதில் ஒன்றுமில்லை. மாறவேண்டியது மனம் தான்! மனம் என்றாலே ஆசை என்றே பொருள். உடலுக்குத் தேவைகள் உள்ளன. ஆனால் உடலின் தேவைகள் உண்மையான தேவைகள்.

நீங்கள் உயிர்வாழ வேண்டுமானால் உங்களுக்கு உணவு தேவை. உயிர்வாழ புகழ் தேவை இல்லை. உயிரோடிருக்க கவுரவம் தேவை இல்லை. நீங்கள் மிகப் பெரிய மனிதராக, மிகப் பெரிய ஓவியராக, பிரபலமானவராக, உலகம் முழுவதற்கும் தெரிந்தவராக இருக்கத் தேவை இல்லை. உயிர்வாழ நீங்கள் நோபல் பரிசை வென்றவராக இருக்கத் தேவை இல்லை. ஏனெனில் நோபல் பரிசானது உடலின் எந்தத் தேவையையும் நிறைவு செய்வதில்லை.

தேவைகளை நீங்கள் கைவிட விரும்பினால் அவற்றை நீங்கள் அடக்க வேண்டி இருக்கும் - ஏனெனில் அவை உண்மையானவையாக உள்ளன! நீங்கள் உண்ணாவிரதம் இருந்தால் பசியை நீங்கள் அடக்க வேண்டி இருக்கிறது. அப்போது அங்கு அடக்குமுறை இருக்கிறது. ஆனால் ஒவ்வோர் அடக்குமுறையும் தவறானதே. ஏனென்றால் அடக்குமுறை என்பது உள்ளுக்குள் நடத்தும் ஒரு போராட்டம் ஆகும். உடலைக் கொன்றுவிட நீங்கள் விரும்பிக் கொண்டு இருக்கிறீர்கள். ஆனால் உடலே உங்கள் நங்கூரமாக இருக்கிறது. உடலே உங்களை அக்கரையில் கொண்டுபோய் சேர்க்கும் கப்பலாக இருக்கிறது. உடலே உங்களுக்குள் ஒரு புதையலை, தெய்விகத்தின் விதைகளை பாதுகாப்பாக வைத்து காப்பாற்றி வருகிறது. அதைப் பாதுகாக்க உணவு தேவைப்படுகிறது, நீர் தேவைப் படுகிறது, இருப்பிடம் தேவைப்படுகிறது. உடலுக்குரிய வசதி தேவைப் படுகிறது. ஆனால் மனம் எந்த வசதியையும் விரும்புவதில்லை.

நவீனகால மேஜை, நாற்காலி முதலியவற்றைப் பாருங்கள். அவை வசதியாகவே இல்லை. ஆனால் மனம் சொல்கிறது, ''இதுவே நவீனமானது. பழைய காலத்து நாற்காலியில் உட்கார்ந்து என்ன செய்து கொண்டிருக்கிறாய்? உலகம் மாறிவிட்டது. நவீன பாணி சாமான்கள் வந்துவிட்டன.'' நவீனமான மேஜை, நாற்காலி முதலியவை உண்மையாகவே கிறுக்குத் தனமாக உள்ளது. அதில் உங்களுக்கு அசவுகரியமே ஏற்படுகிறது. அதில் உங்களால் நீண்ட நேரம் உட்கார்ந்திருக்க முடிவதில்லை. ஆனாலும் அது நவீனமானது! நவீனமானதுதான் வேண்டும் என்கிறது மனம். ஏனெனில் நீங்கள் எப்படி காலத்துக் கொவ்வாதவர்களாக இருக்க முடியும்? காலத்துக் கேற்றவர்களாக இருங்கள்!'

நவீன ஆடைகள் வசதிக்குறைவாகவே உள்ளன. ஆனால் அவை நவீனபாணியில் உள்ளன. நடப்பு பாணியுடன் (*fashion*)நீங்கள் ஒத்துப் போக வேண்டும் என்று மனம் கூறுகிறது. நடப்புபாணியைப் பின்பற்றுவதற்காக மனிதன் எத்தனையோ அசிங்கமான காரியங்களைச் செய்திருக்கிறான். உடலுக்கு இது எதுவும் தேவையில்லை. இவையெல்லாம் மனதின் தேவைகள். இவற்றை உங்களால் நிறைவு செய்ய முடியாது. ஒருபோதும் முடியாது. ஏனெனில் அவை நிஜமானவையே அல்ல! நிஜமற்றவற்றில் மட்டுமே நிறைவு காணமுடியாது. யதார்த்தத்தில் இல்லாத ஒரு போலி தேவையை எப்படி உங்களால் நிறைவுபடுத்த முடியும்? புகழுக்கு - பிரபலமடைவதற்கு என்ன தேவை? இதன்மீது அப்படியே தியானித்துப் பாருங்கள். உங்கள் கண்களை மூடி பாருங்கள். உடலில் எந்த இடத்தில் புகழுக்கான தேவை இருக்கிறது? நீங்கள் பிரபலமாக இருந்தால் அது எவ்விதத்தில் உதவும்? நீங்கள் புகழ்பெற்று விளங்கினால் நீங்கள் அதிக ஆரோக்கியமாக இருப்பீர்களா? நீங்கள் பிரபலமடைந்தால் நீங்கள் அதிக அமைதியாக, சமாதானமாக இருப்பீர் களா? அதிலிருந்து நீங்கள் பெறப்போகும் ஆதயாம் என்ன?

எப்போதும் உடலையே அளவுகோலாக ஆக்குங்கள். எப்போதும் மனம் ஒன்றைச் சொன்னாலும், உடலிடம் ''நீ என்ன சொல்கிறாய்?'' என்று கேளுங்கள். அது முட்டாள்தனம் என்று உடல் சொன்னால் அதைக் கைவிடுங்கள். இதில் எந்த அடக்குதலும் இல்லை. ஏனென்றால் அது ஒரு பொய்யான தேவை. பொய்யான ஒன்றை எப்படி உங்களால் அடக்கி வைக்க முடியும்? காலையில் நீங்கள் படுக்கையில் இருந்து எழுகிறீர்கள். ஒரு கனவு கண்டது உங்களுக்கு நினைவு வருகிறது. அதை நீங்கள் அடக்கியாக வேண்டுமா அல்லது நிறைவேற்றியாக வேண்டுமா? ஏனெனில் உலகம் முழுவதற்கும் நீங்களே மாமன்னர் ஆகியிருப்பதாக

நீங்கள் கனவு கண்டீர்கள். இப்போது என்ன செய்வது? அதற்கு நீங்கள் முயற்சி செய்ய வேண்டுமா? செய்யாவிட்டால் இந்தக் கேள்வி எழுகிறது: ''நாம் முயற்சி செய்யாவிட்டால் பின் அது அமுக்கி வைத்ததாக ஆகிவிடுமே.'' ஆனால் கனவு, வெறும் கனவுதான் ஒரு கனவை எப்படி அடக்கமுடியும்? கனவு ,தானே மறைந்து விடுகிறது. நீங்கள் விழிப்பாக இருப்பது மட்டுமே தேவை. அது ஒரு கனவுதான் என்பதை நீங்கள் அறிந்திருப்பது மட்டுமே தேவை. ஒரு கனவு கனவாக மட்டும் இருந்து அப்படியே அறியவும் படும்போது அது மறைந்து விடுகிறது.

எது ஆசை, எது தேவை என்பதைக் கண்டுகொள்ள முயற்சி செய்யுங்கள். தேவை என்பது உடல் சார்ந்தது. ஆசை என்பதற்கு உடல் சார்பு இல்லை. அதற்கு வேர்கள் இல்லை. மனத்தில் மிதந்துகொண்டிருக்கும் ஓர் எண்ணம் மட்டுமே அது. மேலும் ஏறக்குறைய எப்போதும் உங்கள் உடலின் தேவைகள் உங்களுடைய உடலில் இருந்தே வருகின்றன. உங்கள் மனதின் தேவைகளோ மற்றவர்களிடமிருந்து வருகின்றன. ஒருவர்ஓர் அழகான காரை விலைக்கு வாங்குகிறார். வேறு ஒருவர் ஓர் அழகான வெளிநாட்டுக் காரை வாங்கி இருக்கிறார். உடனே உங்களின் மனதின் தேவை எழுகிறது. இதை உங்களால் எப்படி சகித்துக் கொள்ள முடியும்?

முல்லா நசுருதீன் கார் ஓட்டிக் கொண்டிருந்தார். நான் அவருடன் உட்கார்ந்திருந்தேன். அருகிலுள்ள ஓர் இடத்தை அடைந்ததுமே உடனடியாக காரின் எல்லா சன்னல்களையும் அவர் அடைத்து விட்டார். அது கோடை காலத்தின் மிகவும் வெப்பமான ஒரு நாள். ''என்ன செய்கிறீர்கள் நீங்கள்? என்று கேட்டேன் நான். அவர் சொன்னார், ''நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்? என்னுடைய காரில் குளிர்சாதன வசதி இல்லை என்பதை என் சுற்றுப்புற மக்கள் தெரிந்து கொள்ளும்படி நான் விட்டுவிட வேண்டும் என்கிறீர்களா?'' என்றார்.

அவரோடு சேர்ந்து எனக்கும் வேர்த்துக் கொட்டியது. அது ஓர் அடுப்பு போல, சூடாக இருந்தது. ஆனால் உங்களிடம் உள்ளது குளிர்சாதன (AC)வசதியுள்ளள கார் இல்லை என்பதை உங்கள் அண்டை மக்கள் அறிந்து கொள்ள நீங்கள் எவ்வாறு அனுமதிக்க முடியும்?இது தான் மனதின் தேவை . ''விட்டுத் தொலை! உனக்கென்ன பைத்தியமா?'' என்று உடல் சொல்கிறது. அது வேர்த்துக் கொட்டிக் கொண்டு இருக்கிறது. ''வேண்டாம்!'' என்று சொல்லிக் கொண்டிருக்கிறது. உடல் சொல்வதைக் கவனியுங்கள். மனம் சொல்வதை கவனிக்காதீர்கள். மனத்தின் தேவைகளை, உங்களைச் சுற்றிலும் உள்ள மற்றவர்களே உருவாக்குகிறார்கள். அவை யெல்லாம் முட்டாள் தனமானவை, மடத்தனமானவை, பைத்தியக்காரத் தனமானவை.

உடலின் தேவைகள் அழகானவை, எளியவை. உடலின் தேவைகளை நிறைவேற்றுங்கள். அவற்றை அடக்கி வைக்காதீர்கள். அவற்றை நீங்கள் அடக்கி வைத்தால் நீங்கள் அதிகமதிகம் நோய்வாய்ப்பட்டவராக ஆவீர்கள். மனதின் தேவைகளைப் பற்றி கவலையே படாதீர்கள். இது ஒரு மனத்தேவை என்பது உங்களுக்கு தெரிந்ததுமே... இதை அறிந்து கொள்வது பெரிய கஷ்டமா என்ன? இதில் என்ன கஷ்டம் இருக்கிறது? ஒரு தேவை மனதின் தேவை என்று அறிந்து கொள்வது மிகவும் எளிமையானது. உடலிடமே கேட்டுவிடுங்கள், அவ்வளவுதான். உடலிடம் விசாரியுங்கள். வேரைத் தேடிச் செல்லுங்கள். அதற்கு ஏதாவது வேர் இருக்கிறதா?

நீங்கள் முட்டாள்போல் காட்சியளிப்பீர்கள். உங்கள் தலைவர்கள், பெருந்தலைவர்கள் எல்லாரும் முட்டாள்களாகவே இருக்கிறார்கள். அவர்கள் கோமாளிகளாக இருக்கிறார்கள். வெறுமனே பாருங்கள். ஆயிரக்கணக்கான பதக்கங்களை சட்டையில் குத்திக்கொண்டு கோமாளிகளாக காட்சியளிக்கிறார்கள்! அவர்கள் செய்து கொண்டிருப்பது என்ன? மேலும் இதற்காக அவர்கள் நீண்ட காலம் பாடுபட்டிருக்கிறார்கள். துன்பப்பட்டிருக்கிறார்கள். இதை அடைவதற்காக ஏராளமான துன்பங் களை அவர்கள் அனுபவித்திருக்கிறார்கள். இன்னமும் அவர்கள் துன்பப் பட்டுக் கொண்டுதான் இருக்கிறார்கள். அவர்கள் துன்பப்பட்டபடியே தான் இருக்க வேண்டி உள்ளது. மனமானது நரகத்துக்கு செல்லும் கதவாக உள்ளது. அந்தக் கதவு ஆசையே தவிர வேறல்ல. ஆசைகளைக் கொல்லுங்கள். அவற்றில் இருந்த கொஞ்சம்கூட இரத்தம் வருவதை காணமாட்டீர்கள். ஏனென்றால் அவற்றுக்குள் இரத்தமில்லை.

ஆனால் ஒரு தேவையை கொன்றால் அதிலிருந்து இரத்தப் பெருக்கு ஏற்படும். ஒரு தேவையை கொன்றால் அந்த அளவுக்கு நீங்கள் இறப்பீர்கள். ஓர் ஆசையை கொல்வதால் நீங்கள் சாகமாட்டீர்கள். மாறாக, அதற்குப் பதிலாக, நீங்கள் அதிக சுதந்தரமானவர்களாக ஆவீர்கள். ஆசைகளை கைவிடுவதால் கூடுதல் சுதந்தரம் வரும். தேவைகளை மட்டும் வைத்துக் கொண்டு ஆசைகள் இல்லாத மனிதராக உங்களால் ஆகமுடிந்தால் ஏற்கனவே நீங்கள் பாதையில் இருக்கிறீர்கள். இனி சொர்க்கம் உங்களுக்குத் தொலைவில் இல்லை.



## 7. தியானத்துக்கு ஏற்படும் இடையூறுகள்.

நோய், தளர்ச்சி, சந்தேகம், அசட்டை, சோம்பல், காமம், மயக்கம், வீரியமின்மை, நிலையான உறுதியின்மை ஆகியவை மனத்தை கலங்கச் செய்யும் இடையூறுகள் ஆகும்.

வேதனை, மனக்கசப்பு, நடுக்கங்கள், சீரற்ற சுவாசம் ஆகியவை கலங்கிய மனத்தின் அறிகுறிகள்

இவற்றை அகற்ற, ஓர் அடிப்படையைத் தியானிக்கவும்.

ஒலியே இருத்தலின் அடிப்படை மூலக்கூறு என்று பதஞ்சலி நம்புகிறார். நம்புவது மட்டுமல்ல, அதை அவர் அறிந்தும் இருக்கிறார். மின்சாரமே அடிப்படைக்கூறு என இயற்பியல்காரர்கள் கூறுவதைப் போலவே, ஒலியே அடிப்படை கூறு என யோகியர் கூறுகிறார்கள். அவர்கள் ஒரு நுட்பமான முறையில் ஒருவரை ஒருவர் ஏற்றுக் கொள்கிறார்கள்.

ஒலி என்பது மின்சாரத்தின் ஓர் உருமாற்றமே தவிர வேறில்லை என்கிறார்கள் இயற்பியலார். மின்சாரம் என்பது ஒலியின் ஓர் உருமாற்றமே என்கிறார்கள் யோகிகள். ஆனால் இரண்டும் உண்மைதான் . ஒலி, மின்சாரம் இரண்டும் ஒரே அடிப்படை நிகழ்வின் இரு வடிவங்களே. என்னை பொறுத்தவரை அந்த அடிப்படையான நிகழ்வு இதுவரை அறியப்பட வில்லை, இனியும் எக்காலத்திலும் அறியப்படப்போவதும் இல்லை. நாம் அறிவது எதுவாயினும் அதுவும் அதன் ஓர் உருமாற்றமாக மட்டுமே இருக்கும். அதை நீங்கள் மின்சாரம் எனலாம், அதை நீங்கள் ஒலி எனலாம். அதை நீங்கள் ஹெராக்ளிட்டசைப் போல் தீ என்று அழைக்கலாம், லாவோ சுவைப்போல் அதை நீங்கள் நீர் என்று அழைக்கலாம்: எல்லாம் உங்களைப் பொறுத்தது. ஆனால் இவை எல்லாம் உருமாற்றங்கள்தான் - வடிவ மற்றதின் பலவிதமான வடிவங்கள்தான். அந்த வடிவமற்றது எப்போதும் அறியப்படாததாகவே இருக்கும்.

வடிவமில்லாததை எப்படி உங்களால் அறியமுடியும். வடிவம் இருந்தால் மட்டுமே அறிதல் சாத்தியம். ஒன்று கண்ணுக்குத் தெரிவதாக ஆகிறபோது உங்களால் அதை அறிந்து கொள்ள முடியும். கண்ணுக்கு தெரியாததை எவ்வாறு நீங்கள் உங்கள் அறிவுக்கான பொருளாக (Object) - ஆக்க முடியும்? கண்ணுக்கு புலப்படாத அதன் தன்மையே, அதை பொருளாக்க முடியாது என்பதுதான். எனவே அது எங்கே உள்ளது, அது என்னவாக இருக்கிறது என்பதை உங்களால் நுட்பமாகக் குறித்துக் காட்ட முடியாது. கண்ணுக்குப் புலப்படுகிற ஒன்று மட்டுமே பொருளாக (object) ஆக முடியும்.

எனவே ஒரு பொருள் அறியப்படும் போதெல்லாம், அறியப்படாத தன் ஓர் உருமாற்றமாக மட்டுமே அது இருக்கும். அறியப்படாதது அறியப்படாததாகவே தொடர்ந்து உள்ளது. அது அறிந்துகொள்ள முடியாதது ஆக இருக்கிறது. எனவே அதை நீங்கள் எப்படி அழைக்கிறீர்கள் என்பது உங்களையே பொறுத்தது; அதை எதற்கு நீங்கள் பயன்படுத்தப்

போகிறீர்கள் என்பதையே பொறுத்தது. யோகிக்கு மின்சாரம் பொருத்தமில்லை. ஜீவனின் உள்சோதனைக்கூடத்தில் அவர் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார். அங்கே, ஒலிதான் அதிகப் பொருத்தமானது. ஏனென்றால் ஒலியின் மூலமாகவே உள்ளுக்குள் பல நிகழ்வுகளை அவரால் மாற்றிவிட முடியும். ஒலியின் மூலமாக உள் மின்சாரத்தையும் அவரால் மாற்ற முடியும். அதை யோகியர் பிராணன் என்கிறார்கள் - அதாவது உள் உயிர் ஆற்றல் அல்லது உயிர் மின்சாரம். ஒலியின் மூலம் அதை உடனடியாக மாற்ற முடியும்.

எனவேதான் சாஸ்திரிய (*classical*) இசையைக் கேட்கும்போது ஒருவித அமைதி உங்களை சூழ்வதை உணர்கிறீர்கள்: உங்கள் உள் உடல் ஆற்றல் மாற்றப்படுகிறது. ஒரு பைத்தியக்காரரைக் கவனித்து பாருங்கள், நீங்களும் பைத்தியமாகிக் கொண்டிருப்பதை உணர்வீர்கள்: ஏனெனில் பைத்தியத்தின் உடல் மின்சாரம் குழப்பத்தில் உள்ளது. அவரது பேச்சுகளும் சத்தங்களும் அந்த மின்சாரத்தை உங்களிடம் ஏந்தி வருகின்றன. ஞானமடைந்த ஒருவருடன் அமருங்கள், திடீரென உங்களுக்குள் இருக்கும் ஒவ்வொன்றும் ஒரு சீரான நிலையை அடைகிறது. திடீரென ஒரு வேறுபட்ட தன்மையுள்ள ஆற்றல் உங்களுக்குள் எழுவதை உணர்கிறீர்கள்.

எனவேதான் ஓம்-ஐ திரும்பத் திரும்பச் சொல்லுவதும் அதன் மேல் தியானிப்பதும் எல்லா விதமான இடையூறுகளையும் அழிக்கிறது என்று பதஞ்சலி கூறுகிறார். அந்த இடையூறுகள் யாவை. இப்போது ஒவ்வோர் இடையூறையும் அவர் விளக்குகிறார். ஒமெனும் ஒலியை திரும்பத் திரும்ப சொல்லி அதன்மேல் தியானிப்பதன் மூலம். அவற்றை அழிக்க முடிகிற விதத்தையும் விளக்குகிறார். அவற்றை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

> **நோய், தளர்ச்சி, சந்தேகம், அசட்டை, சோம்பல், காமம்,மயக்கம், வீரியமின்மை, நிலையான உறுதியின்மை ஆகியவை மனத்தை கலங்கச் செய்யும் இடையூறுகள் ஆகும்.**

ஒவ்வொன்றாக எடுத்துக் கொள்வோம்: முதலில் நோய் பதஞ் சலியைப் பொறுத்தவரை நோய் (*Disease*) என்பது மனக் கோளாறையே சீரழி வையே (*Dis - ease*) குறிக்கிறது. உங்கள் அக உடல் ஆற்றலின் சீர்கெட்ட நிலையே நோய். நீங்கள் அசவுகரியமாக உணர்கிறீர்கள். இந்த வசதிக்குறைவு,சீர்கேடு தொடர்ந்தால், கூடிய விரைவில் அது உங்கள் உடலைப் பாதிக்கும். அக்யூபங்க்சர் (*Acupuncture*) பதஞ்சலி முற்றிலுமாக ஏற்றுக்கொள்வார். அப்படியே சோவியத் ருசியாவில் இருக்கும் கிர்லியன் என்பவர் பதஞ்சலியை முற்றிலுமாக ஒத்துக்கொள்வார். அக்யூபங்க்சர்

ஞானம் பெறுவதில் கவனம் செலுத்துவதில்லை. ஆனால் உடல் எவ்வாறு நோய்வாய்ப்படுகிறது, நோய் எவ்வாறு ஏற்படுகிறது என்பதில் அக்யூபங்க்சர் கவனம் செலுத்துகிறது. மேலும் அக உடலாற்றல் புற உடலைத் தொடுகிற எழுநூறு புள்ளிகளை / இடங்களை அக்யூபங்க்சர் கண்டுபிடித்துள்ளது. உடல் முழுவதிலுமாக இத்தகைய எழுநூறு தொடு புள்ளிகளை அம்மருத்துவம் கண்டுபிடித்துள்ளது.

இந்த எழுநூறு புள்ளிகளிலும் மின்சாரம் ஒரு வட்டமாகப் பாய்ந்து கொண்டிருக்காத போது, அதில் சில இடைவெளிகள் ஏற்படுகின்றன. சில புள்ளிகள் செயல்பட்டுக் கொண்டிருப்பதில்லை. சில புள்ளிகளின் வழியாக மின்சாரம் பாய்ந்துக் கொண்டிருப்பதில்லை. தடைகள் உள்ளன. மின்சாரம் தடைபடுகிறது. ஒரு பூர்த்தியான வட்டமாக இல்லை - அந்நிலையில் நோய் ஏற்படுகிறது. எனவேதான் மருந்து எதுவும் இல்லாமலே, வேறெந்த சிகிச்சையும் இல்லாமலே, உடல் - ஆற்றலை ஒரு வட்டமாகப் பாயும்படி செய்தால், நோய் மறைந்து விடுகிறது என்று அக்யூபங்க்சர் மருத்துவம் நம்புகிறது. மேலும் ஐயாயிரம் ஆண்டுகளாக.... ஏறக்குறைய பதஞ்சலி உயிர் வாழ்ந்த காலத்திலேயே அக்யூபங்க்சர் மருத்துவம் பிறந்து விட்டது.

நான் உங்களுக்குக் கூறியது போல், இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்குப் பிறகு மனித உணர்வுநிலையில் (பிரக்ஞை) ஒரு சிகரம் எழுகிறது. அது புத்தரின் காலத்தில் நிகழ்ந்தது. சீனாவில் கன்ஃபூசியஸின் காலத்தில் லாவோசு, ச்சுவாங் சு, கன்ஃபூசியஸ். இந்தியாவில் புத்தர், மகாவீரர் முதலியோர், கிரீசில் ஹெராக்களிட்டஸ், ஈரானில் ஜராதுஷ்டிரர் ஆகியோரில் அந்த சிகர அனுபவம் நிகழ்ந்தது. இன்று உலகில் நீங்கள் காணும் மதங்கள் அனைத்தும் மனித உணர்வின் அந்த கணத்திலிருந்து எழுந்தவையே. அந்த சிகரத்தி லிருந்து, இமயத்திலிருந்துதான் அனைத்து மதங்களின் அனைத்து நதிகளும் இந்த இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளாகப் பாய்ந்து வந்திருக்கின்றன.

அதுபோலவே, புத்தருக்கு இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன்பும் ஒரு சிகர நிகழ்வு ஏற்பட்டது. பதஞ்சலி, சமணமத நிறுவனரான ரிஷபர், வேதங்கள், உபநிடதங்கள், சீனாவில் அக்யூபங்க்சர் இந்தியாவில் யோகா, தந்த்ரா - இவையெல்லாம் நிகழ்ந்தன. அவை ஒரு சிகரத்தை எட்டின. பின் ஒருபோதும் அந்தச் சிகரம் கடக்கப்படவில்லை. ஆயின் அந்த மிகப் பழைய காலத்திலிருந்தே, ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே, யோகா, தந்த்ரா, அக்யூபங்க்சர் ஆகியவை ஆறுகள்போல் பாய்ந்து வந்திருக்கின்றன.

மேலும் ''ஒரே நேரத்தில் தோன்றுதல்'' (*Synchronicity*) என்று யங் அழைக்கும் ஒருவித நிகழ்வும் இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட தத்துவம்

பிறக்கும்போது ஒரே ஓர் ஆள் மட்டும் அதை அறிய வருவதில்லை. பூமியில் உள்ள பலரும் அதை அறிகிறார்கள். முழு பூமியும் அதை ஏற்கத் தயாராக இருக்கிறது; ''சார்பியல் கொள்கையை (Relativity) நான் கண்டுபிடித்திருக்கவில்லை என்றால், பின் ஓர் ஆண்டுக்குள் வேறு யாராவது அதை கண்டுபிடித்திருப்பார்.'' என்று ஐன்ஸ்டீன் கூறியதாகச் சொல்லப்படுகிறது. ஏன் அப்படி? ஏனென்றால் உலகம் முழுவதிலும் பல இடங்களில் மனிதர்கள் அதே திசையில் இயங்கிக் கொண்டிருந்தார்கள்.

பரிணாமக் கொள்கையை டார்வின் கண்டுபிடித்தபோது, அதாவது குரங்குகளில் இருந்தே மனிதன் வளர்ச்சி பெற்றான், மிகவும் தகுதி பெற்றவை உயிர்தப்பி பிழைப்பதற்கான ஓயாத போராட்டம் நடக்கிறது என்பதை டார்வின் கண்டுபிடித்தபோது, வாலேஸ் ரசல் என்னும் இன்னொரு மனிதரும் அதைக் கண்டுபிடித்தார். அவர் பிலிப்பைன்சில் இருந்தார். இருவரும் நண்பர்கள். ஆனால் பல ஆண்டுகளாக அவர்கள் ஒருவருக்கொருவர் தொடர்பு இல்லாமல் இருந்தார்கள். டார்வின் தொடர்ந்து இருபது ஆண்டுகளாக ஆய்வு செய்து கொண்டிருந்தார். ஆனால் அவர் ஒரு சோம்பேறியாக இருந்தார். அவரிடம் துண்டு துண்டாக பல ஆதாரங்கள் இருந்தன. எல்லாமே தயாராக இருந்தது. ஆனால் அதைக் கொண்டு அவர் ஒரு புத்தகத்தை உருவாக்கவில்லை. அந்நாள் களில் இருந்த அறிவியல் சமுதாயத்தின்முன் அதை சமர்ப்பிக்கவில்லை.

நண்பர்கள் திரும்பத் திரும்ப அவரிடம் வேண்டிக் கொண்டார்கள். ''அதை முடியுங்கள். இல்லாவிட்டால் வேறு யாராவது அதைச் செய்துவிடுவார்கள்'' என்றனர். பின் ஒருநாள் பிலிப்பைன்சில் இருந்து ஒரு கடிதம் வந்தது. முழுக் கோட்பாட்டையும் அக்கடிதத்தில் ரசல் முன்வைத் திருந்தார். மேலும் அவர் ஒரு நண்பர். ஆனால் அவர்கள் இருவரும் தனித்தனியாகப் பணிபுரிந்து வந்தார்கள். ஒரே ஆய்வையே இருவரும் செய்து வந்தார்கள் என்பதை அவர்கள் ஒருபோதும் அறியவில்லை. இப்போது டார்வின் பயந்துவிட்டார். என்ன செய்வது? ஏனெனில் புதிய கொள்கையைக் கண்டுபிடித்த பெருமை ரசலுக்கு போய்விடும். ஆனால் இருபது ஆண்டுகளாக டார்வினுக்கு அக்கொள்கை தெரிந்தே இருந்தது. அவர் விரைந்து இயங்கினார். எப்படியோ ஓர் அறிக்கையை எழுதி முடித்தார். அறிவியல் கழகத்திடம் அதைச் சமர்ப்பித்தார்.

மூன்று மாதங்கள் சென்றன. இப்போது ரசலும் அதைக் கண்டு பிடித்திருப்பது எல்லோருக்கும் தெரிய வந்தது. ரசல் உண்மையாகவே ஓர் அருமையான மனிதர். கண்டுபிடிப்பின் பெருமை டார்வினையேச் சாரும் என அவர் அறிவித்தார் - ஏனெனில் அவர் அதைச் சமர்ப்பித்திருந்தாலும்,

இல்லாவிட்டாலும் இருபது ஆண்டுகளாக... ஆனால் அவர் கண்டு பிடித்தவராக இருக்கிறார்.

பல நேரங்களிலும் இது நிகழ்ந்திருக்கிறது. திடீரென ஓர் எண்ணம் மிகவும் முதன்மையானதாக ஆகிறது. எங்காவது ஓரிடத்தில் ஒரு கர்ப்பத்தில் அந்த எண்ணம் உருவாக முயல்வதுபோல் அது இருக்கிறது. மேலும் இயற்கைதன் வழிமுறையில் தேவையற்ற துணிகரச் செயல்களில் ஒருபோதும் ஈடுபடுவதில்லை. ஒரு மனிதர் மட்டும் எனில் தவறிவிடலாம். அப்படியானால் பல மனிதர்கள் முயற்சி செய்ய வேண்டி உள்ளது. இயற்கை ஒருபோதும் துணிகர செயல்களை மேற்கொள்வதில்லை! ஒரு மரம் லட்சக்கணக்கான விதைகளை கொட்டும். ஒரே ஒரு விதை எனில் தவறிவிடலாம். சரியான மண்ணில் விழாமல் போகலாம். அழிக்கப்பட்டு விடலாம். ஆனால் லட்சக்கணக்கான விதைகள் என்னும்போது - எல்லா விதைகளுமே அழிக்கப்பட்டு விடுவதற்கு வாய்ப்பு இல்லை.

உடலுறவில் நீங்கள் ஈடுபடும்போது ஒரு தடவையில் கோடிக்கணக்கான விதைகளை ஆண் வெளியே எறிகிறான். அவற்றில் ஒன்றுதான் பெண்ணிடமுள்ள முட்டையை அடையும். ஆனால் வெளி யிடுவதோ கோடிகளில். பெரும்பாலும் ஒரு வெளியேற்றித்திலேயே ஓர் ஆண், தற்போது பூமியில் இருக்கும் மனிதர்களின் மொத்த எண் ணிக்கைக்குச் சமமான விதைகளை வெளியிடுகிறான். ஒரு மனிதன் ஓர் வெளியேற்றித்திலேயே முழு பூமியையும் நிரப்பிவிடமுடியும். பூமியில் உள்ள மொத்த மக்கள் தொகையையும் பெற்றெடுக்க முடியும். இயற்கை ஒருபோதும் அபாய முயற்சிகளை மேற்கொள்வதில்லை. பல வழிகளிலும் அது முயல்கிறது. ஒன்று தவறலாம், இரண்டு தவறலாம், ஒரு கோடி கூடத் தவறலாம், ஆனால் பல கோடிக்கணக்கில் என்னும்போது குறைந்தது ஒன்றாவது போய் சேர்ந்து, உயிருள்ளதாக ஆகும்.

யங் ஒரு கோட்பாட்டைக் கண்டுபிடித்தார். அதை அவர் ''ஒரே நேரத்தில் தோன்றுதல்'' *(Synchronicity)* என அழைக்கிறார். இது ஓர் அபூர்வமான விஷயம். காரண விளைவு என்ற ஒரு கோட்பாட்டை நாம் அறிவோம்: அதன்படி ஒரு காரணம் ஒரு விளைவை உருவாக்குகிறது. ஆனால் ஏதாவது ஒன்று உருவாகும் போதெல்லாம் அதை ஒத்த பல விஷயங்கள் அதே நேரத்தில் உருவாகின்றன என்று சொல்கிறது. ''ஒரே நேரத்தில் தோன்றுதல்'' என்னும் கோட்பாடு. அது ஏன் அப்படி நடக்கிறது. என்பது இன்னும் நமக்குத் தெரியாது. ஏனெனில் இது ஒரு காரண - விளைவு நிகழ்ச்சி அல்ல. காரணத்தையும் - விளைவையும் போல அவை ஒன்றுடன் ஒன்று உறவுடையதாய் இல்லை.

புத்தரையும் ஹெராக்ளிட்ட்சையும் எப்படி உங்களால் உறவுபடுத்த முடியும்? ஆனால் கோட்பாடு ஒன்றுதான். புத்தர் ஹெராக்ளிட்டசைப் பற்றி கேள்விப்பட்டதே கிடையாது. ஹெராக்ளிட்டஸ் எப்போதாவது புத்தரைப் பற்றி அறிந்திருந்தார் என நம்மால் கற்பனைகூட செய்ய முடியாது. அவர்கள் தனித்தனியான உலகங்களில் வாழ்ந்தார்கள். அவர்களுக் கிடையில் எந்த தகவல் தொடர்பும் இருக்கவில்லை. ஆனால் பாய்தல் தத்துவத்தைத் தான், ஆற்றோட்டம் போன்ற இருத்தலைப்பற்றிய, தோன்றி மறைகிற இருத்தலைப் (*Principle of flow of river like existence of momentary existence*) பற்றிய ஒரு கோட்பாட்டைத்தான் இருவரும் உலகுக்கு அளித்தார்கள். அவர்கள் ஒருவர் மற்றவருக்கு காரணகர்த்தாவாக இல்லை. அவர்கள் இணை நிகழ்வுகளாக இருக்கிறார்கள். மொத்த பிரபஞ்சமும் குறிப்பிட்ட ஒரு கோட்பாட்டை அந்த கணத்தில் உருவாக்க விரும்பியது போலவும், அதை வெளிப்படையாக்க விரும்பியது போலவும் ஆன ஒரு ''ஒரே நேரத்தில் தோன்றும்'' நிலை நிலவுகிறது. அவ்வாறே அது வெளிப்பட்டது. மேலும் அது புத்தரை மட்டுமோ அல்லது ஹெராக்ளிட்டசை மட்டுமோ சார்ந்து இருக்கவில்லை. பலரிடமும் அது முயன்றிருக்கக்கூடும் வெளிஉலகுக்குத் தெரியாமல் போன வேறு பலரும் இருந்தார்கள். அவர்கள் அவ்வளவு எடுப்பாக வெளிப்படவில்லை. புத்தரும் ஹெராக்ளிட்டசுமே மிகவும் சிறப்புப் பெற்றவர்களாக ஆனார்கள். அவர்களே மிகவும் ஆற்றல் மிக்க குருமார்களாக இருந்தார்கள்.

பதஞ்சலியின் நாள்களில் ஒரு கோட்பாடு பிறந்தது. அதை நீங்கள் பிராணத் தத்துவம் அதாவது உயிராற்றல் தத்துவம் என அழைக்க முடியும். சீனாவில் அது அக்யூபங்க்சர் மருத்துவமாக உருவெடுத்தது. இந்தியாவில் அது முழுமையான யோக முறையாக உருக்கொண்டது. உயிர் ஆற்றலானது (*Body energy*) சரியானபடி ஓடாதபோது(*flowing*) நீங்கள் அசவுகரியமாக உணர்வது எப்படி நேர்கிறது? எப்படி எனில் உங்களுக்குள் ஓர் இடைவெளி விழுகிறது, ஒரு வெற்றிடம் ஏற்படுகிறது. ஏதோ ஒன்று இல்லாமல் போவது உங்களுக்குத் தோன்றுகிறது. இது தொடக்கத்தில் அமைதிஇன்மையாக இருக்கிறது. முதலில் இதை மனத்தில் உணர்வீர்கள். நான் உங்களுக்கு சொன்னதுபோல், முதலில் இது உணர்வற்ற மனத்தில் அறியப்படும்.

அதைப்பற்றி நீங்கள் அறியாதிருக்கலாம். முதலில் அது உங்கள் கனவுகளில் வரும் நோய்வாய்ப்பட்ட நிலையை, சுகவீனத்தை, யாராவது இறந்து கொண்டிருப்பதை, ஏதாவது கோளாறாகி போவதை உங்கள் கனவுகளில் நீங்கள் பார்ப்பீர்கள். உங்கள் உணர்வற்ற மனதில் ஏதாவது தீயகனவு நிகழும். ஏனெனில் உணர்வற்ற மனமே உடலுக்கு மிக அருகில் உள்ளது, இயற்கைக்கும் மிக அருகில் உள்ளது. உணர்வற்ற மனதில் இருந்து

அரைஉணர்வு மனத்துக்கு அது எழுந்து வரும். இந்நிலையில் நீங்கள் எரிச்சலாக உணர்வீர்கள். உங்கள் நேரம் சரியில்லை எனத் தோன்றும். நீங்கள் எதைச் செய்தாலும் அது தவறாகியே விடுகிறது. ஒருவரை நீங்கள் நேசிக்க விரும்புவீர்கள். அவரை நேசிக்க முயல்கிறீர்கள். ஆனால் உங்களால் நேசிக்க முடிவதில்லை. ஒருவருக்கு நீங்கள் உதவ விரும்புவீர்கள். ஆனால் நீங்கள் இடையூராக இருந்து விடுவீர்கள். எல்லாமே தலைகீழாகப் போகிறது.

ஏதோ ஒரு கெட்ட சக்தி, வானத்தில் இருக்கும் ஏதோ ஒரு கிரகம் உங்களுக்கு கெடுதல் செய்வதாக எண்ணுகிறீர்கள். ஆனால் இல்லை. இது ஏதோ அரை உணர்வு தளத்தில் உள்ளதாகும். ஏதோ அசவுகரியம் உள்ளது. எனவே தான் நீங்கள் எரிச்சலடைகிறீர்கள், கோபப்படுகிறீர்கள். அதற்கான காரணம் உணர்வற்ற அடுக்கில் எங்கோ உள்ளது. காரணத்தை வேறெங்கோ நீங்கள் கண்டு பிடித்துக் கொண்டிருக்கிறீர்கள். பின் காரணம் உணர்வு மட்டத்துக்கு எழுகிறது. இப்போதுதான் உங்களுக்கு நலமில்லாமல் இருப்பதாக உணர ஆரம்பிக்கிறீர்கள். பின் அது உடலுக்கு நகர்கிறது. எப்போதுமே அது உடலை நோக்கியே நகர்ந்து வந்திருக்கிறது. உடனே நீங்கள் நோயை உணர்கிறீர்கள்.

சோவியத் ருசியாவில் கிர்லியன் என்று ஒரு புகைப்படக்காரர், ஓர் அபூர்வமான விஞ்ஞானி இருக்கிறார். ஒருவர் நோயாளி ஆவதற்கு முன்பே, ஆறுமாதங்கள் முன்னதாகவே அந்த நோயைப் புகைப்படம் பிடிக்க முடியும் என அவர் கண்டுபிடித்திருக்கிறார். ஆயின் இருபதாம் நூற்றாண்டு உலகின் மாபெரும் கண்டுபிடிப்புகளில் ஒன்றாக இது விளங்கப் போகிறது. மனிதர், நோய், மருந்து எல்லாவற்றைப்பற்றிய மொத்த கருத்தையும் இது அடியோடு மாற்றிவிடும். இது ஒரு புரட்சிகரமான கருத்து ஆகும். முப்பது ஆண்டுகளாக ஆராய்ச்சி செய்து வந்திருக்கிறார். உடலுக்கு ஒரு நோய் வரும்போது முதலில் அது உடலை சூழ்ந்துள்ள மின்புலத்துக்கே வருகிறது - என்பது பற்றிய எல்லா உண்மைகளையும் அறிவியல் ரீதியாக ஏறக்குறைய அவர் நிரூபித்தே இருக்கிறார்... ஓர் இடைவெளி விழுகிறது.

ஆறுமாதங்களுக்குப் பிறகு உங்கள் வயிற்றில் ஒரு கட்டி உண்டாகலாம். தற்சமயம் அதற்கான எந்த அடிப்படையும் காணப்படுவதில்லை. எந்த விஞ்ஞானியாலும் உங்கள் வயிற்றில் எந்தக் கோளாறையும் கண்டுபிடிக்க முடிவதில்லை. எல்லாமே சரியாகவே இருக்கிறது. எந்தப் பிரச்சினையும் இல்லை. முழுமையாக உங்கள் உடலைப் பரிசோதித்து பார்த்தாலும் நீங்கள் முழு நலமாகவே காணப்படுகிறீர்கள். ஆனால் கிர்லியன் மிகவும் உணர்வுநுட்பமுள்ள ஒரு தகட்டில் உடலைப் படம் பிடிக்கிறார். மிகவும் உணர்வு நுட்பமுள்ள தகடுகளை அவர் உருவாக்கி

இருக்கிறார். அந்த தகட்டில் படமாக விழுவது உங்கள் உடல் மட்டுமல்ல. உங்கள் உடலைச் சுற்றிலும் எப்போதும் சூழ்ந்திருக்கும். ஓர் ஒலிப்புலமும் (*Aura*) பதிவாகிறது. அந்த ஒளிப்புலத்தில் (ஆரா) வயிற்றுக்கருகில் ஓர் ஓட்டை காணப்படுகிறது. பூத உடலில் அல்ல, அதை சூழ்ந்த ஒளி உடம்பில் (ஆரா) ஏதோ சீர்கேடு ஏற்பட்டிருக்கிறது.

இன்னும் ஆறு மாதங்களுக்குள் ஒரு கட்டி உண்டாகும் என தன்னால் முன்கூட்டியே சொல்ல முடியும் என்று இப்போது அவர் கூறுகிறார். அப்படியே ஆறுமாதங்கள் கழித்து உடலில் கட்டி வந்ததும், ஆறுமாதங்களுக்கு முன் அவர் எடுத்திருந்த அதே படத்தையே (எக்ஸ்-ரே) படங்கள் காட்டுகின்றன எனவே நோய்வாய்ப்படுவதற்கு முன்பே சுகவீனத்தை முன்னறிந்து கூற முடியும் என்று கிர்லியன் கூறுகிறார். உடம்புக்கு அது வருவதற்கு முன்பே அதை குணப்படுத்தி விட முடியும், உடலின் (*aura*)மின்புலம் அதிக சுற்றோட்டம்(*circulating*)ஆகும்போது இது முடியும். முன் அறிந்து கூறும் அவருக்கு அதைக் குணப்படுத்துவது. எப்படி என்று தெரியவில்லை. அக்யூபங்க்சர் மருத்துவத்துக்கு தெரியும். அதை எப்படி குணப்படுத்த முடியும் என்பதை பதஞ்சலி அறிவார்.

பதஞ்சலியைப் பொறுத்தவரை நோய் என்பது உடல் மின்புலத்தில், பிராணனில், உயிராற்றலில், உங்கள் உடம்பிலுள்ள மின்சாரத்தில் ஏற்படும் ஒரு கோளாறு ஆகும்: எனவேதான் ஓமின் மூலம் அதைக் குணப்படுத்த முடியும். சில வேளைகளில் ஒரு கோயிலில் நீங்கள் தனியாக உட்காருங்கள். யாருமே போகாத ஒரு பழைய கோயிலுக்குள் போய் வட்டமான மாடத்தின்கீழ் அமருங்கள் - ஒலியை பிரதிபலிப்பதற்கே இது. அங்கு அமர்ந்து ஓம் என சத்தமாக உச்சரித்தபடியும் அதன்மீது தியானித்தபடியும் இருங்கள். அந்த ஒலி பிரதிபலித்து திரும்பி உங்கள்மீதே மழை போல் விழட்டும். இந்நிலையில் ஒருசில நிமிடங்களுக்கு பிறகு திடீரென உங்கள் உடல் முழுவதும் அமைதியாக, சமாதானமாக, மவுனமாக ஆகிக் கொண்டிருப்பதை உணர்வீர்கள்: உடல் ஆற்றல் படிமானம் (*settle*)ஆகிக் கொண்டிருக்கிறது.

முதல் இடையூறு, நோய். உங்கள் **பிராண சக்தியில்** நீங்கள் நோய் வாய்ப்பட்டிருந்தால் உங்களால் அதிக தூரம் போக முடியாது. உங்களைச் சூழவும் நோய் ஒரு புகைப்படலம் போல் படர்ந்து கொண்டிருக்கும் நிலையில் உங்களால் எவ்வளவு தூரம் முன்னேற முடியும்? மென்மேலும் ஆழமான பிரதேசங்களுக்குள் உங்களால் நுழைய முடியாது. ஒருவித ஆரோக்கியம் தேவைப்படுகிறது. உடல் நலத்துக்கான இந்தியச் சொல் மிகவும் அர்த்தமுடையது: அச்சொல் '**ஸ்வஸ்த்ய**' என்பது. அந்தச்

சொல்லின் பொருளே (*tobe oneself*) 'தானாய் இருத்தல்' என்பதே ஆகும். உடல்நலத்தைக் குறிக்கும் அந்த சமஸ்கிருதச் சொல்லுக்கு தானாயிருத்தல், மையங் கொண்டிருத்தல் என்பதே பொருள். உடல்நலத்துக்கான ஆங்கிலச் சொல்லும் அழகானதுதான். புனிதம்(*Holy*), முழுமை (*Whole*) ஆகியவை வந்த அதே வேர்ச் சொல்லில் இருந்தே (*Health*) உடல்நலம் என்பதும் வருகிறது. நீங்கள் முழுமையாக இருக்கும்போது நீங்கள் நலமாக இருக் கிறீர்கள். நீங்கள் முழுமையாக இருக்கும்போது நீங்கள் புனிதமானவர் களாகவும் இருக்கிறீர்கள்.

சொற்களின் வேர்களுக்கு போய்ப் பார்ப்பது எப்போதுமே நல்லது. ஏனெனில் மனிதகுலத்தின் நீண்ட அனுபவத்திலிருந்தே அவை எழுந்தன. வார்த்தைகள் தற்செயலாக வந்திருக்கவில்லை. ஒருவர் முழுமையாக உணரும்போது அவரது உடல்ஆற்றல் ஒரு வட்டமாக ஓடிக்கொண்டிருக் கிறது. வட்டம்தான் உலகிலேயே மிகவும் செம்மையான வடிவம். சரியான முழுவட்டம் என்பது இறைவனின் அடையாளம் ஆகும். அதில் ஆற்றல் வீணடிக்கப்படுவதில்லை. மறுபடியும் மறுபடியும் அது சுற்றிவருகிறது. ஒரு சக்கரம் போல் அது இயங்கிக் கொண்டே இருக்கிறது. தன்னைத்தானே இடையறாமல் அது இயக்கிக் கொள்கிறது.

முழுமையாக இருக்கும்போது நீங்கள் நலமாக இருக்கிறீர்கள். நலமாக இருக்கும்போது நீங்கள் பரிசுத்தமாகவும் இருக்கிறீர்கள். ஏனெனில் முழுமை (ஹோல்) என்ற சொல்லில் இருந்தே பரிசுத்தம்(ஹோலி) என்ற சொல்லும் வருகிறது. முற்றிலும் நலமான மனிதர் புனிதராகவே இருக்கிறார். அப்போது எந்தப் பிரச்சினைகளும் இருப்பதில்லை. மடங்களுக்கு நீங்கள் போனால் அங்கு எல்லா விதமான நோய்ப் பிடித்த மனிதர்களையும் நீங்கள் காண்பீர்கள். உண்மையில் நோய்ப்பிடித்தவர்கள் மட்டுமே அங்கு போகிறார்கள். ஒரு நலமான மனிதர் ஒரு மடலாயத்தில் அவருக்கு என்ன வேலை என்று கேட்பார். நோயாளிகள் அங்கு போகிறார்கள். இயல்பு கெட்டவர்கள் அங்கு போகிறார்கள். அவர்களிடம் அடிப்படையாகவே ஏதோ கோளாறு உள்ளது. எனவேதான் அவர்கள் உலகிலிருந்து தப்பித்து அங்கே போகிறார்கள்.

நீங்கள் நலமாக இருக்க வேண்டும் என்பதை முதல் விதியாக ஆக்குகிறார் பதஞ்சலி. ஏனெனில் நீங்கள் நலமாக இல்லாவிட்டால் உங்களால் அதிக தூரம் போக முடியாது. உங்கள் நோய் நிலை, உங்கள் அசவுகரியம், உங்கள் உள் ஆற்றல் வட்டம் உடைபட்ட நிலை என்பது உங்கள் கழுத்தில் கட்டிவிட்ட பாறாங்கல்லாக இருக்கும். நீங்கள் தியானிக்கும்போது இயல்பான அமைதியை நீங்கள் உணரமாட்டீர்கள்.

நீங்கள் பிரார்த்தனை செய்ய விரும்பினாலும் உங்களால் பிரார்த்திக்க முடியாது. நீங்கள் ஓய்வெடுக்கவே விரும்புவீர்கள். ஆற்றல் மட்டம் தாழ்வாகவே இருக்கும். ஆயின் குறைந்த ஆற்றலை வைத்துக் கொண்டு நீங்கள் எப்படி அதிக தூரம் முன்னேற முடியும்? கடவுளை எப்படி அடைய முடியும்? பதஞ்சலியைப் பொறுத்தவரையிலோ, கடவுளே மிகவும் தூரத்து இலக்கு: இதற்கு மிகுந்த ஆற்றல் தேவைப்படுகிறது. நலமான உடல், நலமான மனம், நலமான ஆன்மா (being)தேவைப்படுகிறது. நோய் என்றால் சீர்கேடு. உடல் ஆற்றலில் சீர்கேடு. இங்கு ஓம் உதவும். மற்றவைகளும்கூட உதவும். மற்றுமுள்ள விஷயங்களையும் நாம் விவாதிப் போம். ஆனால் இங்கு, ஓம் என்பதே, அந்த ஒலியே, உள்ளுக்குள் நீங்கள் ஒரு முழுமையாக ஆக எப்படி உதவுகிறது என்பதைப்பற்றி பேசிக் கொண்டி ருக்கிறார் பதஞ்சலி.

பதஞ்சலியைப் பொறுத்த வரையிலும் சரி, மனித ஆற்றல் களத்துக்குள் ஆழமாகத் தேடி இருக்கிற மற்றவர்களுக்கும் சரி, ஒரு விவரம் மிகவும் நிச்சயமானதென தெரிந்துள்ளது. நீங்களும் அதை அறிந்த கொள்ள வேண்டும். அது: எந்த அளவுக்கு நீங்கள் அதிக நோய்வாய்ப்பட்டிருக் கிறீர்களோ அந்த அளவுக்கு அதிகமாய் நீங்கள் சிற்றின்ப நாட்டம் மிகுந்தவர்களாய் இருப்பீர்கள். நீங்கள் முற்றிலும் நலமாய் இருக்கும்போது நீங்கள் சிற்றின்ப நாட்டம் மிகுந்தவர்களாய் இருக்கமாட்டீர்கள். சாதாரணமாக இதற்கு நேர்மாறாகவே நாம் நினைக்கிறோம். நலமான மனிதர்தான் புலனின்ப நாட்டம், காமநாட்டம் மிகுந்தவராக இருப்பார் என்றும் அவரே உலகையும் உடலையும் அனுபவிக்க முந்துவார் என்றும் இன்ன பலவாறும் எண்ணுகிறோம். அது உண்மை அல்ல. நீங்கள் நோயாளியாக இருக்கும்போதுதான் அதிக புலனின்ப உணர்வும் அதிக காம உணர்வும் உங்களைப் பீடிக்கிறது. நீங்கள் முற்றிலும் ஆரோக்கியமாக இருக்கையில், காம எண்ணமும் புலனின்ப நாட்டமும் மறைந்து விடுகின்றன.

ஏன் இது நிகழ்கிறது? ஏனென்றால் நீங்கள் முற்றிலும் நலமாக இருக்கும்போது உங்களுடனேயே நீங்கள் மிகவும் மிகழ்ச்சியாக இருக்கிறீர்கள். எனவே உங்களுக்கு அடுத்தவர் தேவைப்படுவதில்லை. நீங்கள் நோய்வாய்ப்பட்டு இருக்கும்போது உங்களிடமே உங்களுக்கு மகிழ்ச்சியில்லாமல் இருக்கிறது, எனவே உங்களுக்கு வேறொருவர் தேவைப்படுகிறார். ஆகவே இதுதான் விசித்திரம். நீங்கள் நோயாய் இருக்கும்போது உங்களுக்கு அடுத்தவர் தேவையாகிறது. அடுத்தவர் நோயாய் இருக்கும்போது அவருக்கும் (அவளுக்கும்) நீங்கள் தேவைப் படுகிறீர்கள். இவ்வாறு இரண்டு நோய்க்கூறான மனிதர்கள் சந்திக்கும்போது

நோய் கூட்டப்படுவதில்லை, பெருக்கப்படுகிறது (இருமடங்காவதில்லை, பலமடங்காகிறது).

திருமணத்தில் நடப்பது இதுதான்: இரண்டு நோயாளிகள் கூடி தம் நோய்களை பெருக்கிக் கொள்கிறார்கள். பின் மொத்த காரியமும் அசிங்கமாக ஆகிறது, நரகமாக ஆகிறது. நோய்ப் பிடித்தவர்களுக்கே அடுத்தவர்கள் தேவை. அப்படியே, தாம் உறவுகொள்ளும்போது பிரச்சினைகளை உருவாக்குபவர்களும் இவர்களேதாம். ஆரோக்கியமான ஆளுக்கு அது தேவையில்லை. ஆனால் ஓர் ஆரோக்கியமான ஆள் அன்பு செய்தால் அது ஒரு தேவை அல்ல. அது ஒரு பகிர்தல். மொத்த நிகழ்வுமே மாறுகிறது. அவருக்கு வேறுயாரும் தேவைப்படும் நிலையில் அவர் இல்லை. அவரிடம் அதிகமாக இருப்பதால் அதை அவரால் அடுத்தவரிடம் பகிர்ந்து கொள்ள முடிகிறது.

நோய்ப்பிடித்த ஆளுக்கு காமம் தேவை. நலமான மனிதர் காதலிக்கவே செய்கிறார். காதல் என்பது முற்றிலும் வேறுவிதமான ஒரு விஷயம் இரு ஆரோக்கியமான மனிதர்கள் சந்திக்கும்போது ஆரோக்கியம் பெருக்கப் படுகிறது, பன்மடங்காகிறது. அதன்பின் அவர்கள் அறுதி நிலைக்காக ஒருவருக்கொருவர் உதவிபுரிபவர்களாக ஆகமுடிகிறது. அறுதி நிலைக்கு அவர்கள் ஒன்றாகச் சேர்ந்தே, ஒருவருக்கொருவர் உதவி செய்தபடியே செல்ல முடிகிறது. ஆனால் தேவை மறைந்து விடுகிறது. இனி அது ஒரு தேவையாக இருப்பதில்லை. இனி அது ஒரு சார்பு நிலையாக இருப்பதில்லை.

உங்களுக்கு உங்களிடமே ஓர் அசவுகரியமான உணர்ச்சி ஏற்படும் போதெல்லாம் அதை காமத்திலும் புலனின்பத்திலும் அமுக்கி மறைத்து விட முயலாதீர்கள். அதற்குப்பதிலாக அதிக ஆரோக்கியமாக ஆக முயலுங்கள். யோகாசனங்கள் உதவும். அவற்றைப் பற்றி பிறகு பதஞ்சலி பேசும்போது நாமும் விவாதிப்போம். இப்போதைக்கு, நீங்கள் ஓம் என்பதை ஓயாமல் ஓதி அதன்மேல் தியானிக்கும் போது நோய் மறையும் என்கிறார் அவர். மேலும் அவர் கூறுவது சரிதான்! மறைவது இருக்கிற நோய் மட்டுமல்ல, வருங்காலத்தில் வர இருக்கிற நோயும் மறைந்துவிடும்!

ஒருவர் ஒரு முழுமையான ஓதுதலாக மாற முடிந்தால், ஓதுபவராக உள்ளநிலை முழுமையாக மறைந்தால், ஒரு தூய உணர்வுநிலையாக மட்டுமே - சுற்றிலும் பரவும். ஒரு சுடர் ஒளியாக மட்டுமே - ஓதிக் கொண்டிருப்பாரானால், ஆற்றலானது ஒரு வட்டமாக அமைகிறது, வட்டமாக ஆகிறது. அதன்பின் வாழ்வின் மிகவும் மனநிறைவான தருணங்களில் ஒன்று உங்களுடையது ஆகும். ஆற்றல் ஒரு வட்டமாக உருவாகிறபோது ஓர் இணக்கமான இசைவாக ஆகிறது. எவ்வித முரண்பாடும் மோதலும் இருப்பதில்லை. நீங்கள் ஒருமை ஆகி

இருக்கிறீர்கள். ஆனால் சாதாரணமாகக் கூட, நோய் ஒரு தடங்கல்தான். நீங்கள் நோயுற்றிருந்தால் உங்களுக்கு சிகிச்சை தேவை.

பதஞ்சலியின் யோகமுறையும் இந்து மருத்துவ முறையான ஆயுர்வேதமும் ஒரே காலத்தில், ஒன்றாகச் சேர்ந்து வளர்ந்தது. ஆயுர் வேதம் என்பது ஆங்கில மருத்துவத்தில் (Allopathy) இருந்து முற்றிலும் மாறுபட்டது. ஆங்கில மருத்துவம் நோயை உள்ளுக்குள் அமுக்குகிறது. கிறிஸ்தவ மதத்துடன் கைகோத்தபடியே ஆங்கில மருத்துவம் வளர்ச்சி பெற்றுள்ளது. அது ஒரு துணை விளைவு. கிறிஸ்துவமதம் அடக்கி வைக்கும்படி போதிப்பதைப் போலவே ஆங்கில மருத்துவமும் அமுக்கி வைப்பதாக இருக்கிறது. உங்களுக்கு நோய் கண்டால் உடனடியாக அதை ஆங்கிலமருத்துவம் அமுக்கிவிடுகிறது. உடனே நோய் வேறொரு பலவீனமான திறப்பின் வழியாக மேலே வர முயல்கிறது. உடனே அந்த இடத்திலும் அதை நீங்கள் அமுக்கி விடுகிறீர்கள். பின் இன்னும் ஓர் இடத்திலிருந்து அது வெடித்து வெளிப்படுகிறது. ஆகவே ஆங்கில மருத்துவத்தில் ஒரு நோயில் இருந்து இன்னொரு நோய்க்கும், அதிலிருந்து இன்னொரு நோய்க்குமே நீங்கள் ஆளாகிறீர்கள். ஒருபோதும் தீராத ஒரு நடைமுறையாக அது இருக்கிறது.

ஆயுர்வேதத்தின் கருத்தாக்கம் முற்றிலும் வேறுபட்டது. நோயை உள்ளமுக்க கூடாது. அது வெளியேற்றப்பட வேண்டும். சுத்திகரித்தலே தேவை. நோய்ப்பட்ட ஆளுக்கு ஆயுர்வேத மருந்தைத் தந்தால் நோய் மேலே வருகிறது. வெளியே எறியப்பட்டு உடல் சுத்திகரிக்கப்படுகிறது. எனவே ஆயுர்வேத மருந்தை உட்கொள்ளும்போது தொடக்கத்தில் அது உங்கள் நோயை அதிகரிக்கலாம். குணமாக அதிக காலம் பிடிக்கலாம். ஏனெனில் அது அமுக்கி வைத்தல் அல்ல. இந்த நிமிஷமே அது நிவாரணம் தந்து விடாது. அது ஒரு நீண்ட நிகழ்முறை. நோயானது வெளியில் தூக்கி எறியப்பட வேண்டும். உங்கள் உள் ஆற்றல் ஓர் இசைவாக ஆகவேண்டும். அதன்மேல் ஆரோக்கியம் உள்ளிருந்து வரவேண்டும். மருந்தானது நோயை வெளியே விரட்டும். குணமாக்கும் ஆற்றல் உங்களை குணமாக்கி அதை உங்களிலிருந்தே அப்புறப்படுத்தும்.

அவர்கள் ஆயுர்வேதத்தையும் யோகத்தையும் ஒன்றாகவே வளர்த்தார்கள். நீங்கள் யோகாசனங்களை செய்துவந்தால், பதஞ்சலியை நீங்கள் பின்பற்றி வந்தால், பின் ஒருபோதும் ஆங்கில மருத்துவரிடம் போகாதீர்கள். பதஞ்சலியை நீங்கள் கடைப்பிடிக்க வில்லை என்றால் அப்போது எந்தத் தடையும் இல்லை. ஆனால் யோக முறையை நீங்கள் கடைப்பிடித்து வந்தால், உங்கள் உடல் ஆற்றலில் பல காரியங்களை நீங்கள் செய்துகொண்டு வந்தால், பின் ஒருபோதும் ஆங்கில

மருத்துவத்துக்கு போகாதீர்கள். ஏனெனில் அவை ஒன்றுக்கொன்று முரணானவை. அந்நிலையில் ஓர் ஆயுர்வேத மருத்துவரையோ (ஓமியோ) மருத்துவரையோ இயற்கை மருத்துவரையோ போய்ப்பாருங்கள் - உங்களை சுத்திகரிக்க உதவும் ஒரு மருத்துவமுறையை நாடுங்கள்.

ஆனால், உங்களுக்கு நோய் இருந்தால் முதலில் அதை சமாளியுங்கள். நோயுடனேயே அலைந்து கொண்டிருக்காதீர்கள். என் முறைகளை பின்பற்றினால் நோயிலிருந்து விடுபடுவது மிகவும் எளிது. ஏனெனில் பதஞ்சலியின் முறையான ஓமை ஓதுவதும் தியானிப்பதும் மிகவும் மிதமான ஒன்றாகும். ஆனால் அந்நாள்களில் அதுவே போதிய ஆற்றல் வாய்ந்த முறையாக இருந்தது. ஏனென்றால் மக்கள் எளிமையாக இருந்தார்கள். இயற்கையுடன் ஒட்டி வாழ்ந்தார்கள். நோய்வாய்ப்படுவது அரிதாகவே நிகழ்ந்தது. ஆரோக்கியம் பொதுவாக இருந்தது. இன்றோ நிலைமை நேர் தலைகீழாகி இருக்கிறது. ஆரோக்கியம் அரிதாக உள்ளது. நோயே சர்வசாதாரணமாக இருக்கிறது. மக்கள் மிகவும் சிக்கல் ஆகி உள்ளார்கள். இயற்கையை ஒட்டி - ஒத்து அவர்கள் வாழ்வதில்லை.

லண்டனில் ஒரு புள்ளிவிவர ஆய்வு எடுக்கப்பட்டது. பத்து லட்சம் பையன்களும் பெண்களும் பசுமாட்டையே பார்த்ததில்லையாம். பசுவின் படத்தை மட்டுமே அவர்கள் பார்த்திருக்கிறார்கள். பையப்பைய நாம் மனிதரால் உருவாக்கப்பட்ட ஓர் உலகத்துக்குள் அடைக்கப்பட்டுள்ளோம். அங்கு காணும் யாவும் - காங்கிரீட்டு கட்டடங்கள், தொழில்நுட்பம், தார் சாலைகள், பெரிய பெரிய யந்திரங்கள், கார்கள் யாவும் - மனிதர்கள் உருவாக்கியவைதான். இயற்கை ஏதோ ஓர் இருட்டு மூலைக்குள் வீசி எறியப்பட்டுள்ளது. ஆனால் இயற்கையே குணமாக்கும் சக்தி. மேலும் மனிதன் அதிகமதிக சிக்கல்மயம் ஆகிவருகிறான். தன் இயற்கையை - இயல்பு நிலையை அவன் கவனிப்பதில்லை. நாகரிகத்தின் நிர்ப்பந்தங் களுக்கே அவன் செவிகொடுக்கிறான். தன் சொந்த அக இருத்தலுடனான தொடர்பை முற்றிலுமாக அவன் இழந்திருக்கிறான்.

அப்படியானால் பதஞ்சலியின் மிதமான முறைகள் பெரிதாக உதவாது. எனவேதான் என் இயங்காற்றல் மிக்க *(Dynamic) (Chatic)* தாறுமாறான முறைகள். ஏனென்றால் ஏறக்குறைய நீங்கள் பைத்தியமாகவே இருக்கிறீர்கள். எனவே உங்களுக்கு பைத்தியக்கார முறைகளே தேவை. அவையே உங்களுக்குள் அமுக்கப்பட்டிருப்பதை எல்லாம் வெளியில் எடுத்தெறிய உதவ முடியும். ஆனால் ஆரோக்கியம் ஓர் அத்தியாவசியம் ஆகும். நீண்ட நெடும் பயணத்துக்கு கிளம்புகிறவரை நலமாக இருக்கும் படி பார்த்துக் கொள்ள வேண்டும். நோயாளியாய், படுக்கையில் கிடந்தால் முன்னேறுதல் கடினம்.

இரண்டாவது இடையூறு தளர்ச்சி:. தளர்ச்சி என்றால் தேடுவதற்கான ஆற்றல் ஒருவரிடம் மிகவும் குறைந்து காணப்படுவதாகும். அவர் தேடவும் தேடித் திரியவும் விரும்புகிறார். ஆனால் அவரிடம் ஆற்றல் மிகவும் தாழ்ந்த மட்டத்திலேயே உள்ளது. அரைகுறையாகவே உள்ளது. அவர் கரைந்து காணாமல் போய்விட விரும்புகிறார். ஆனால் அது சாத்தியப்படுவதில்லை. இப்படிப்பட்ட மனிதர் எப்போதும் கடவுள், மோட்சம், யோகம், அது, இதுபற்றியெல்லாம் பேசுகிறார். ஆனால் பேசமட்டுமே செய்கிறார். குறைவான ஆற்றலுடன் இருந்தால் உங்களால் பேசமட்டும்தான் முடியும். நீங்கள் செய்ய முடிவதெல்லாம் அவ்வளவுதான். ஒன்றை நீங்கள் செயலில்காட்ட விரும்பினால் அதற்கு ஒரு உயர்ந்த ஆற்றல் தேவை.

ஒருதடவை இப்படி நடந்தது: முல்லா தன் குதிரை வண்டியில் ஓர் ஊருக்குப் போனார். அது ஒரு வெப்பமான கோடைகால நாள். முல்லாவுக்கு வேர்த்துக் கொண்டிருந்தது. திடீரென சாலைவழியில் குதிரை நின்று விட்டது. அது முல்லாவை திரும்பிப் பார்த்து, ''கடவுளே, என்ன இவ்வளவு வெப்பமாக இருக்கிறது!'' என்றது. முல்லாவால் நம்ப முடியவில்லை. வெப்பம் காரணமாக தனக்கு தான் மூளை கலங்கி விட்டதோ என நினைத்தார். ஏனெனில் குதிரையால் எப்படி இதை சொல்ல முடியும்? குதிரை எப்படி பேசும்?

எனவே இதை காதில் கேட்டவர்கள் வேறு யாராவது இருக்கிறார்களா என்று சுற்றிலும் பார்த்தார். யாருமில்லை. வண்டியில் அவருடன் அவருடைய நாய் மட்டும்தான் இருந்தது. யாரையும் காண முடியாமல், ஆனால் அந்த எண்ணத்தை விட்டுத் தொலைக்க வேண்டும் என்பதற்காக, நாயிடம் அவர்'' அது சொன்னதை கேட்டாயா?'' என்றார். உடனே நாய் பேசியது, ''எல்லாரையும் போலத்தான் அதுவும். எப்போது பார்த்தாலும் வெப்ப நிலையைப் பற்றி பேசுமே தவிர செய்வது ஒன்றுமில்லை.''

இப்படிப்பட்டவர் தான் தளர்ச்சியுடைய மனிதர்: எப்போதும் கடவுளைப் பற்றி பேசிக் கொண்டிருப்பார், ஆனால் காரியத்தில் ஒன்றும் செய்யமாட்டார். எப்போதும் இவர் மாபெரும் விஷயங்களைப் பற்றியே பேசுகிறார். இந்த பேச்சு ஓர் உள் காயத்தை மறைத்துக் கொள்வதற்காக மட்டுமே. அதுபற்றி தான் எதையும் செய்வதில்லை என்பதை மறக்க முடிவதற்காகவே அவர் பேசுகிறார். பேச்சின் திரைமறைவில் அவர் தப்பிக் கொள்கிறார். திரும்பதிரும்ப அதைப் பற்றி பேசுவதன் மூலமே, தான் ஏதோ செய்து கொண்டிருப்பதாக அவர் நினைத்துக் கொள்கிறார். ஆனால் பேச்சு ஒரு செயல் அல்ல. காலநிலையைப் பற்றி நீங்கள் பேசிக்கொண்டே போக

முடியும். கடவுளைப் பற்றி நீங்கள் பேசிக்கொண்டே போகமுடியும். செயலில் நீங்கள் எதையும் செய்யாவிட்டால், உங்கள் ஆற்றலை வெறுமனே வீணடித்துக் கொண்டே தான் இருக்கிறீர்கள்.

இப்படிப்பட்ட மனிதர் ஒரு தருமகர்த்தா, ஒரு பூசாரி பண்டிதன் ஆகலாம் இவர்கள் எல்லாரும் ஆற்றல் குறைவான மனிதர்கள். ஆனால் பேசுவதில் இவர்கள் பெரிய திறமைசாலிகளாக விளங்க முடியும். அதில் எந்த அளவுக்கு இவர்கள் சரளமானவர்கள் - திறமையானவர்கள் என்றால் பேசியே அவர்களால் ஏமாற்ற முடிகிறது. ஏனென்றால் எப்போதும் அவர்கள் அருமையான விஷயங்களை, பெரியபெரிய விஷயங்களைப் பற்றியே பேசுகிறார்கள். அவர்கள் சொல்வதைக் கேட்டு மற்றவர்கள் ஏமாற்றப்படுகிறர்ர்கள். தத்துவவாதிகள் எல்லாரும் தளர்ச்சியுடைய மனிதர்களாகவே இருக்கிறார்கள். பதஞ்சலி ஒரு தத்துவவாதி அல்லர். அவரே ஓர் அறிவியலார்தான். மற்றவர்களும் அறிவியலார்களாக இருக்கவேண்டும் என்றே அவர் விரும்புகிறார். இதற்கு மிகுந்த முயற்சி தேவைப்படுகிறது.

ஓமென ஓயாமல் ஓதி அதன்மேல் தியானிப்பதன் மூலமாக உங்கள் தாழ்வான ஆற்றல் மட்டம் உயரும். இது எவ்வாறு நிகழ்கிறது? நீங்கள் ஏன் எப்போதும் ஆற்றல் குறைந்த அளவிலேயே இருக்கிறீர்கள்? ஏன் எப்போதும் களைப்பாக, ஓய்ந்து போனவர்களாக உணர்கிறீர்கள்? காலையில் நீங்கள் எழும்போதுகூட நீங்கள் களைப்பாகவே இருக்கிறீர்கள். உங்களுக்கு என்ன ஆகிக் கொண்டிருக்கிறது? உங்கள் கட்டுமானத்தில் எங்கோ கசிவு இருக்கிறது. ஆற்றலை நீங்கள் ஒழுக விடுகிறீர்கள். இதுபற்றிய விழிப்புணர்வு உங்களிடம் இல்லை. ஆனால் ஓட்டைகள் உள்ள வாளியைப் போல நீங்கள் இருக்கிறீர்கள். ஒவ்வொரு நாளும் உங்கள் வாளியை நிறைக்கிறீர்கள். ஆனால் எப்போதும் அது காலியாக இருப்பதையே, வெறுமையாகிக் கொண்டிருப்பதையே காண்கிறீர்கள். இந்த ஓட்டை ஒழுக்கை நிறுத்தியாக வேண்டும்.

ஆற்றல் எப்படி உடலில் இருந்து கசிகிறது? உயிராற்றல் இயலின் மிகவும் ஆழமான பிரச்சினை இது. கைவிரல்கள், பாதங்கள், கண்கள் ஆகியவற்றிலிருந்தே உடலின் ஆற்றல் கசிகிறது. தலையிலிருந்து ஆற்றல் கசிய முடியாது. அது உருண்டையாக இருக்கிறது. உருண்டையாக வட்டமாக இருக்கும் எதுவும் உடலின் ஆற்றலைப் பத்திரப்படுத்தவே உதவுகிறது. எனவேதான் சித்தாசனம், பத்மாசனம் போன்ற யோக ஆசனங்கள் உடலையும் உருண்டையாக இருத்துகின்றன.

சித்தாசனத்தில் அமர்ந்திருக்கும் ஒருவர் தன் இரு கைகளையும் சேர்த்து வைக்கிறார். இது ஏனென்றால் உடல் ஆற்றல் விரல்கள் வழியாக கசிகிறது. இரு கைகளையும் ஒன்றின் மீது ஒன்றாக சேர்த்து வைக்கும் போது, ஒரு கையிலிருந்து வெளிப்படும் ஆற்றல் மற்ற கைக்குள் போய் விடுகிறது. அது ஒரு வட்டமாக ஆகிறது. பாதங்களும் கால்களும் கூட ஒன்றின்மேல் ஒன்று வைக்கப்படுகிறது. இதனால் ஆற்றல் உங்கள் உடம்புக்குள்ளேயே சுற்றுகிறது, ஒழுகுவதில்லை.

கண்கள் மூடி இருக்கின்றன. ஏனெனில் உங்கள் உயிர் - ஆற்றலில் ஏறக்குறைய எண்பது சதவிகிதத்தை கண்களே வெளிவிடுகின்றன. எனவே தான், தொடர்ச்சியாக நீங்கள் பயணம் செய்து கொண்டும், ரயிலில் அல்லது காரில் இருந்து கொண்டும் தொடர்ந்து வெளியே பார்த்துக் கொண்டும் இருந்தால், நீங்கள் மிகவும் சோர்வாக உணர்கிறீர்கள். கண்களை மூடிக்கொண்டு பயணம் செய்தால் நீங்கள் அவ்வளவு சோர்வாக உணர்வதில்லை. மேலும் அனாவசியமான விஷயங்களையே நீங்கள் பார்த்துக் கொண்டு போகிறீர்கள். சுவர்களில் இருக்கும் விளம்பரங்களைக் கூட ஒன்று விடாமல் படித்துக் கொண்டு போகிறீர்கள். உங்கள் கண்களை அளவுக்கு அதிகமாக நீங்கள் பயன்படுத்துகிறீர்கள். ஆயின் கண்கள் களைத்துவிட்டால் முழு உடலும் களைத்து விடுகிறது. இனிபோதும் என்ற எச்சரிக்கைக் குறிப்பை கண்களே தருகின்றன.

கூடுமான வரை மூடிய கண்களுடனேயே தொடர்ந்து இருக்க முயல்கிறார் யோகி. கைகால்களை ஒன்றுக்கொன்று குறுக்காக வைத்துக் கொள்கிறார். அப்போதுதான் ஆற்றல் ஒன்றிலிருந்து மற்றதற்குள் இயங்குகிறது. முதுகை நிமிர்த்தி நேரான நிலையில் அவர் அமர்கிறார். நீங்கள் உட்கார்ந்திருக்கும்போது தண்டுவடம் நேர்நிலையில் இருந்தால் வேறு எந்த நிலையிலும் பாதுகாப்பதைவிட அதிக ஆற்றலைப் பாதுகாக்கிறீர்கள். ஏனெனில் முதுகுத்தண்டு நேராக இருக்கும்போது பூமியின் ஈர்ப்புவிசை உங்களில் இருந்து அதிக ஆற்றலை கவர முடியாது. ஏனெனில் முதுகுத்தண்டின் ஒரே ஓர் இடத்தையே அது தொடுகிறது. எனவேதான் நீங்கள் சாய்ந்து, சரிந்து உட்கார்ந்திருக்கும்போது நீங்கள் ஓய்வெடுத்துக் கொண்டிருப்பதாக எண்ணுகிறீர்கள், ஆனால் நீங்கள் ஆற்றலை வடியவிட்டுக் கொண்டு இருக்கிறீர்கள் என்கிறார் பதஞ்சலி. ஏனெனில் அந்நிலையில் உங்கள் உடலின் அதிக பரப்பு புவிஈர்ப்பின் தாக்கத்தின்கீழ் வருகிறது.

இது பயன்படாது. நேரான நிமிர்ந்த முதுகுத்தண்டுடன் இணைந்த கைகளுடனும் கால்களுடனும், மூடிய கண்களுடனும் இருக்கும்போது

நீங்கள் ஒரு வட்டமாக ஆகி இருக்கிறீர்கள். அந்த வட்டத்தின் குறியீடாகவே சிவலிங்கம் உள்ளது. சிவலிங்கத்தை நீங்கள் பார்த்திருக்கக்கூடும். அதை ஆண்குறிச் சின்னம் என்றே மேற்கு அறிந்துள்ளது. உண்மையில் அது அக உயிராற்றல் வட்டமே, அதைக் குறிக்கும் முட்டை வடிவமே.

உங்கள் உடல் ஆற்றல் சரியாக பாயும்போது அது ஒரு முட்டைபோல் ஆகிறது: அதன் வடிவம் முட்டை வடிவில் இருக்கிறது. சரியாக ஒரு முட்டையின் வடிவிலேயே இருக்கிறது. அதைத்தான் சிவலிங்கம் குறியீடாக்க காட்டுகிறது. நீங்கள் ஒரு சிவமாக ஆகிறீர்கள். ஆற்றல் திரும்பத் திரும்ப உங்களுக்குள்ளேயே பாயும்போது, வெளியேறாமல் இருக்கும் போது, தளர்ச்சி மறைகிறது. பேசிக் கொண்டிருப்பதன் மூலம் அது மறைவதில்லை. சாத்திரங்களை வாசிப்பதன்மூலம் அது மறையாது. தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடுவதால் அது மறையாது. உங்கள் ஆற்றல் ஒழுகாதிருக்கும்போது மட்டுமே அது மறையும்.

அதைப் பத்திரப்படுத்த முயலுங்கள். எவ்வளவு அதிகமாய் பாதுகாப்பீர்களோ அவ்வளவுக்கு நல்லது. ஆனால் மேற்கில் இதற்கு நேர் எதிரான ஒன்றே கற்பிக்கப்படுகிறது. காமத்தின் மூலமும் இன்ன பலவற்றின் மூலமும் ஆற்றலை வெளிவிடுவதே நல்லது என சொல்லித் தரப்படுகிறது. வேறு எந்த வழியிலும் அதை நீங்கள் பயன்படுத்தாதிருந்தால் நல்லது. இல்லாவிட்டால் உங்களுக்கு பைத்தியம் பிடித்து விடலாம் என்கிறார்கள். அளவுக்கு அதிகப்படியான ஆற்றல் சேரும்போதெல்லாம் காமத்தின் மூலமாக அதை வெளியிட்டு விடுவதே சிறந்தது. அதை வெளிவிடுவதற்கான மிக எளிய முறை உடலுறவுதான் என்கிறார்கள்.

ஆனால் அதைப் பயன்படுத்த முடியும். ஆக்க பூர்வமானதாக ஆக்க முடியும்! அது உங்களுக்கு ஒரு புதுப்பிறப்பை, புத்துயிர்ப்பை தர முடியும். அதன் வாயிலாக கோடிக்கணக்கான பரவச கட்டங்களை உங்களால் அறிய முடியும். அதன் வழியாக உயரே உயரே உங்களால் உயர முடியும். அது கடவுளை அடையும் ஏணி. ஒவ்வொரு நாளும் அதை நீங்கள் கசியவிட்டுக் கொண்டே போனால், இறைமையை நோக்கி முதல் அடி எடுத்து வைக்கப் போதுமான ஆற்றல்கூட ஒருபோதும் உங்களிடம் சேகரமாக இருக்காது. எனவே பத்திரப்படுத்துங்கள்!

காமத்துக்கு எதிரானவர் பதஞ்சலி. இதுதான் பதஞ்சலிக்கும் தந்த்ராவுக்கும் உள்ள வேறுபாடு. தந்த்ரா காமத்தை ஒரு வழி முறையாகப் பயன்படுத்துகிறது. பதஞ்சலி அதை நீங்கள் தொடாமல் தாண்டிச் செல்ல வேண்டுமென விரும்புகிறார். தந்த்ராவோ தமக்கு பொருத்தமாக இருக்கக்கூடிய மனிதர்கள் ஏறக்குறைய ஐம்பது சதவிகிதம்பேர்

இருக்கிறார்கள். இன்னும் ஐம்பது சதவிகித பேருக்கு யோகமே பொருந்தும். தனக்கு எது பொருந்தும் என்பதை ஒவ்வொருவரும் கண்டுபிடித்துக் கொள்ள வேண்டும். இரண்டையும் பயன்படுத்த முடியும். இரண்டின் வழியாகவும் மக்கள் சென்று அடைகிறார்கள். இரண்டில் எந்த ஒன்றும் தவறுமல்ல, சரியுமல்ல. உங்களையே பொறுத்தது அது. ஒன்று உங்களுக்கு சரியாக இருக்கும், மற்றது தவறாக இருக்கும்; ஆனால் அது உங்களுக்குத் தான் என்பதை நினைவில் கொள்ளுங்கள். எ ல்லாருக்கும் பொதுவான ஒரு தீர்ப்பாக அது இல்லை.

ஒன்று உங்களுக்குச் சரியாக இருக்கலாம். அதுவே வேறு ஒருவருக்கு தவறாக இருக்கலாம். ஆனால் தந்த்ரா யோகம் ஆகிய இரண்டு முறைகளும் சேர்ந்தே பிறந்தன. அவை இரட்டைப் பிறவிகள். சரியாக ஒரே சமயத்தில் பிறந்தன. இதுதான் சமகால நிகழ்வுத்தன்மை (சின்க்ரோனிசிட்டி) என்பது. ஆணும் பெண்ணும் ஒருவருக்கு மற்றவர் தேவைப்படுவது போலவே, தந்த்ராவும் யோகமும் ஒன்றுக்கு மற்றது தேவைப்படுகிறது. அவை இரண்டும் சேர்ந்தே ஒரு முழுமையாக ஆகின்றன. யோகம் மட்டுமே இருந்தால் பின் ஐம்பது சதம்பேர் மட்டுமே அடையமுடியும். ஐம்பது சதம் பேர் அல்லல்படுவார்கள். தந்த்ரா மட்டுமே இருந்தாலும் ஐம்பது சதம் பேரே அடைய முயும். மற்ற ஐம்பது சதம்பேர் அல்லல் படுவார்கள். இப்படி நடந்தும் உள்ளது.

மேலும் சிலநேரங்களில், நீங்கள் எங்கே போய்க் கொண்டிருக்கி றீர்கள், என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்பதையே அறியாமல்; நீங்கள் எப்படிப்பட்டவராக இருக்கிறீர்கள், எது உங்களுக்குப் பொருந்தும் என்பதையே தெரியாமல், ஒரு குருவுமின்றி நீங்கள் போய்க் கொண்டிருந் தால்.... நீங்கள் துன்பத்திற்குள்ளாவீர்கள். நீங்கள் ஒரு பெண்ணாக இருக்கலாம் ஆனால் ஓர் ஆணைப் போலவே உடை உடுத்திக் கொண்டு ஆணாகவே உங்களை கருதிக் கொண்டால் பின் நீங்கள் துன்பப்படவே செய்வீர்கள். நீங்கள் ஓர் ஆணாக இருக்கலாம். ஆனால் பெண்போல உடுத்திக் கொண்டு உங்களை ஒரு பெண் என்றே நினைத்துக் கொண்டால் நீங்கள் சிரமப்படுவீர்கள்.

நீங்கள் யார் என்பதை நீங்கள் புரிந்து கொள்ளாத போதெல்லாம் சிக்கல்தான் உண்டாகிறது. இதுதான் உனக்கு எனதெள்ளத் தெளிவான ஒரு வழிகாட்டுதலை உங்களுக்கு வழங்க ஒரு குரு தேவைப்படுகிறார். எனவே இதை நினைவில் கொள்ளுங்கள்: இது உங்களுக்கு என நான் ஒன்றைக் கூறும் போதெல்லாம் அதை மற்றவர்களுக்கும் பரப்பிக் கொண்டு போகாதீர்கள். ஏனென்றால் அது குறிப்பாக உங்களுக்காகவே கூறப் பட்டிருக்கிறது. தேவை இல்லாவிட்டாலும் தெரிந்து கொள்வது என்பதில்

மக்கள் அதிக ஆர்வம் உள்ளவர்களாக இருக்கிறார்கள். நீங்கள் அவர் களிடம் ஒன்றைச் சொன்னால் முயன்று பார்த்து விடுவார்கள். அது அவர்களுக்கானதாக இல்லாதிருக்கலாம். அவர்களுக்கு அது கெடுத லானதாகக்கூட இருக்கலாம். மேலும் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள், ஒன்று உதவிசெய்வதாக இல்லாமலிருக்கும் ஆனால் அது கெடுதல் செய்வதாகவே இருக்கப் போகிறது. இரண்டுக்கும் இடைப்பட்ட நிலை என்று ஒன்று இல்லை. ஒன்று உங்களுக்கு உதவியாக இருக்கிறது அல்லது கெடுதலாக இருக்கிறது - அவ்வளவுதான்.

மிகப்பெரிய இடையூறுகளில் ஒன்று இந்த தளர்ச்சி என்பது. ஆனால் ஓமை ஓதிவந்தால் அது மறைகிறது. உங்களுக்குள் ஒரு சிவலிங்கத்தை, முட்டை வடிவ ஆற்றல் வட்டத்தை ஓம் உருவாக்குகிறது. காட்சி பெற்றவராக நீங்கள் ஆனதும் உங்களால் அதை பார்க்கக்கூட முடியும். கண்களை மூடிக்கொண்டு சில மாதங்களுக்கு நீங்கள் ஓமை உச்சரித்து தியானித்து வந்தால் உங்களுக்குள் அதை உங்களால் பார்க்கமுடியும். உங்கள் உடல் மறைந்திருக்கிறது. ஓர் உயிர் - ஆற்றல் மட்டுமே, ஒரு மின் நிகழ்வு மட்டுமே இருக்கும். அதன் வடிவமோ சிவலிங்க வடிவாகவே இருக்கும்.

இது உங்களுக்கு ஏற்பட்டதுமே தளர்ச்சி மறைந்துவிடுகிறது. இனி நீங்கள் ஓர் உயர் (*high energy*) ஆற்றலாக இருக்கிறீர்கள். இப்போது உங்களால் மலைகளையும் அசைக்க முடியும் பேசுவது போதாது என்பதை இப்போது உங்களால் உணர முடியும், ஏதாவது செய்தாக வேண்டும் என்று உணர்வீர்கள். மேலும் ஆற்றலின் அளவும் அதிகமாக இருப்பதால் இப்போது உங்களால் ஏதாவது செய்யவும் முடியும். மக்கள் என்னிடம் வந்து என்ன செய்வது என்று கேட்கிறார்கள். அவர்களை நான் பார்க்கும்போது ஆற்றலை அவர்கள் வீணடித்துக் கொண்டு இருப்பதைக் காணுகிறேன். அவர்களால் எதையும் செய்ய முடியாது. ஆற்றல் ஒழுகு வதை நிறுத்துவதே முதலில் செய்ய வேண்டியது. உங்களிடம் ஆற்றல் இருக்கும்போது மட்டுமே என்ன செய்ய முடியும் என்று கேளுங்கள்.

''சந்தேகம்'' - சமஸ்கிருதத்தில் சந்தேகத்தைக் குறிக்கும் சொற்கள் பல உள்ளன. ஆங்கிலத்தில் ஒரே ஒரு சொல்தான் உள்ளது (*Doubt*) எனவே புரிந்து கொள்ள முயலுங்கள். நான் உங்களுக்கு விளக்குவேன். நம்பிக்கைக்கு எதிரான ஒரு சந்தேகம் உள்ளது. சமஸ்கிருதத்தில் அது **ஷங்க** எனப்படுகிறது. இது நம்பிக்கைக்கு எதிரானச் சந்தேகம் இந்த இரண்டும் ஒரு ஜோடி அப்புறம் **சந்சய** என்றொரு சந்தேகம் இருக்கிறது. இங்கே பதஞ்சலி **சந்சயத்தைப்** பற்றியே பேசிக் கொண்டிருக்கிறார். இது நிச்சயத்தன்மைக்கு

எதிரான சந்தேகம். தீர்மானத் தன்மைக்கு எதிரான சந்தேகம். நிச்சய மின்மையில் இருக்கும் மனிதர் ஒரு தீர்மானத்துக்கு வரமுடியாத மனிதர், சந்சயமத்தில் இருக்கிறார் - சந்தேகத்தில் இருக்கிறார். இது நம்பிக்கைக்கு எதிரானது அல்ல. ஏனென்றால் நம்புவது என்பது, வேறு ஒருவரை நம்புவ தாகும். இது வேறு ஒரு விஷயம்.

ஆக எதை நீங்கள் செய்தாலும், அதை நீங்கள் செய்ய விரும்புகிறீர்களா, அல்லது அதைச் செய்ய விரும்பவில்லையா என்பதில் உங்களுக்கு ஒரு நிச்சயத்தன்மை இருப்பதில்லை. ஒரு தீர்மானிக்க முடியாமை இருக்கிறது. தீர்மானமற்ற மனத்துடன் பாதையில் நீங்கள் நுழையவே முடியாது - பதஞ்சலியின் பாதையில் நுழையவே முடியாது. நீங்கள் தீர்மானமாக இருக்கவேண்டி இருக்கிறது! நீங்கள் ஒரு தீர்மானம் எடுத்தாக வேண்டி இருக்கிறது! இது கடினம்தான். ஏனென்றால் உங்களில் ஒருபகுதி எப்போதும் முடியாது என்று சொல்லிக் கொண்டே போகிறது. பின் எப்படி முடிவெடுக்க முடியும்? இதைப்பற்றி எவ்வளவு முடியுமோ அவ்வளவு யோசியுங்கள். அதற்கு எவ்வளவு அவகாசம் கொடுக்க முடியமோ அவ்வளவு அவகாசம் கொடுங்கள். எல்லாவிதமான சாத்தியப்பாடுகளையும், எல்லா மாற்று வழிகளையும் எண்ணிப் பாருங்கள். பின் முடிவு செய்யுங்கள். ஆனால் ஒருமுறை நீங்கள் முடிவெடுத்துவிட்டால் பின் சந்தேகிப்பதை முற்றிலும் கைவிடுங்கள்.

அதுவரை அதை பயன்படுத்துங்கள்: சந்தேகிப்பதன் மூலம் உங்களால் என்னவெல்லாம் செய்யமுடியுமோ அதையெல்லாம் செய்யுங்கள். எல்லா சாத்தியப்பாடுகளையும் எண்ணிப்பார்த்து பின் தேர்ந்தெடுங்கள். அது ஒரு முழுமையான தீர்மானமாக இருக்கப் போவதில்லைதான் - தொடக்கத்தில் அதற்கு வாய்ப்பில்லை. ஆனால் அது ஒரு முக்கியமான முடிவாகவே இருக்கும் - உங்கள் மனதின் பெரும்பகுதி சரி என்றே கூறும். ஒருதடவை நீங்கள் தீர்மானித்தபின் ஒருபோதும் சந்தேகிக்காதீர்கள். சந்தேகம் தலை தூக்கவே செய்யும். நீங்கள் பேசாமல் இப்படிச் சொல்லிவிடுங்கள்: ''நான் முடிவு செய்துவிட்டேன் - முடிந்தது! இது ஒரு முழுமையான முடிவு அல்லதான். எல்லா ஐயங்களும் இன்னும் கைவிடப்படவில்லைதான். ஆனால் என்னால் என்னென்ன செய்யக் கூடுமோ அவற்றையெல்லாம் நான் செய்துவிட்டேன் முடிந்த அளவு முழுமையாக இதைப் பற்றி சிந்தித்தே நான் தேர்ந்தெடுத்திருக்கிறேன்.''

ஒருமுறை தேர்ந்து எடுத்துக் கொண்டபின் ஒருபோதும் சந்தேகத்துக்கு மறுபடியும் எவ்வித ஒத்துழைப்பும் கொடுக்காதீர்கள். ஏனெனில்

சந்தேகத்துக்கு இடம் கொடுத்தால்தான் அது உங்களுக்குள் இருக்கிறது. நீங்கள் அதற்கு சக்தியை தந்துகொண்டே இருக்கிறீர்கள் - மறுபடியும் மறுபடியும் அதைப்பற்றி யோசிக்கத் தொடங்குவதன்மூலம். அந்நிலையில் ஒரு நிச்சயமற்றநிலை உருவாக்கப்படுகிறது. தீர்மானமில்லாத தன்மை என்பது மிகவும் மோசமான ஒரு நிலவரம் - நீங்கள் மிகவும் மோசமான கோலத்தில் இருக்கிறீர்கள். எதைப்பற்றியுமே உங்களால் தீர்மானிக்க - முடிவெடுக்க முடியாவிட்டால் நீங்கள் என்னதான் செய்ய முடியும்? எப்படி செய்ய முடியும்?

ஓம் என்பது - அதன் உச்சரிப்பும் தியானிப்பும் - எவ்வாறு உதவும்? அது உதவுகிறது, ஏனென்றால் நீங்கள் அமைதியானவராக, சமாதானம் நிரம்பியவராக ஆனதுமே, தீர்மானம் செய்வது அதிக எளிதாகிறது. அதன் பின் மேற்கொண்டும் நீங்கள் ஒரு கும்பலாக இருப்பதில்லை. ஒரு குழப்பமாக இருப்பதில்லை. பலவிதமான குரல்கள் ஏககாலத்தில் உங்களுக்குள் பேசிக்கொண்டிருந்தன. அவற்றில் எந்தக் குரல் உங்களுடையது என்பது உங்களுக்கே தெரியவில்லை. ஓம் என்பதை ஓதி, அதன்மேல் தியானிக்கும்போது குரல்கள் அடங்குகின்றன. அந்தப் பலகுரல்களும் உங்களுடையவை அல்ல என்பதை இப்போது உங்களால் பார்க்க முடிகிறது. உங்கள் அம்மா பேசிக் கொண்டிருக்கிறார், உங்கள் அப்பா பேசிக் கொண்டிருக்கிறார், உங்கள் உடன்பிறப்புகள், உங்கள் ஆசிரியர்கள்... இவர்களின் பேச்சுகள், கருத்துகள் உங்களுடையவை அல்ல. அவற்றையெல்லாம் எளிதாக உங்களால் ஒதுக்கி விட முடியும். ஏனெனில் அவற்றின்மேல் எந்தக் கவனமும் செலுத்த தேவையில்லை.

ஓம் என்பதை ஓதுவதால் நீங்கள் அமைதியாக ஆகிறபோது, நீங்கள் பாதுகாப்புடன் (*sheltered*) சாந்தமாக, மௌனமாக, ஒன்றாக இருக்கிறீர்கள். அந்தத் தெளிந்த நிலையில், உங்களிடமிருந்து வரும் உண்மையான குரல் எது, நம்பகமான குரல் எது என்பதை உங்களால் பார்க்க முடிகிறது. இது, ஒரு சந்தையின் நடுவில் நீங்கள் நின்று கொண்டிருப்பதைப் போன்றது. பலபேர் பேசிக் கொண்டிருக்கிறார்கள். பல காரியங்கள் நடைபெற்று கொண்டிருக்கின்றன. என்ன நடந்து கொண்டிருக்கிறது என்றே பிரித்து அறிய உங்களால் முடிவதில்லை. ஒரு சேர் மார்க்கட்டில் மனிதர்கள் கூச்சலிட்டுக் கொண்டிருக்கிறார்கள் - அவர்கள் மொழி அவர்களுக்கே தெரியும். அங்கு நடந்து கொண்டிருப்பது என்ன அவர்களுக்கு பைத்தியம் ஏதாவது பிடித்து விட்டதா உங்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை.

பின் இமயமலையில் ஒரு தனியிடத்துக்கு நீங்கள் போகிறீர்கள். ஒரு குகைக்குள் உட்கார்ந்து, மந்திரம் ஜெபிக்கிறீர்கள். உங்களையே

சாந்தப்படுத்திக் கொள்கிறீர்கள். எல்லா மனக்கிளர்ச்சிகளும் மறைகிறது. நீங்கள் ஒருமுகமான, தெளிந்தவராக ஆகிறீர்கள். அந்த நேரத்திலேயே நிச்சயத்தன்மை சாத்தியம். அதன்பின் தீர்மானியுங்கள். பின் திரும்பிப் பார்க்காதீர்கள. அதையெல்லாம் மறந்துவிடுங்கள் - முடிவு செய்தது செய்ததுதான். திரும்பிப் போவது என்பது இனி இல்லை. இனி தயக்கமின்றி முன் செல்லுங்கள்.

சில நேரங்களில் சந்தேகம் பின் தொடரும். உங்களைப் பார்த்து ஒரு நாயைப் போலவே குரைக்கும். ஆனால் நீங்கள் அதற்குக் காது கொடுக்காவிட்டால், அதன்மேல் கவனம் செலுத்தாதிருந்தால், மெது மெதுவாக அது நின்றுவிடுகிறது. இதற்கு ஒரு சந்தர்ப்பம் கொடுங்கள்: சாத்தியமானது. எல்லாவற்றையும் சிந்தித்துப் பாருங்கள். ஒரு தடவை முடிவு செய்ததும் சந்தேகிப்பதை விட்டு விடுங்கள். நீங்கள் ஒரு தீர்மான நிலைக்கு வருவதற்கு ஓம்காரம் உங்களுக்கு உதவும். இந்த இடத்தில் சந்தேகம் என்றால் தீர்மானமின்மை, கவனமின்மை என்று பொருள்படும். சமஸ்கிருதத்தில் (பிரமாத்) **Pramad. Pramad** என்ற சொல்லுக்கு தூக்கத்தில் நடப்பது போன்ற நிலை என்று பொருள். கவனமின்மை என்பதும் அதில் அடங்கும். சரியான மொழிபெயர்ப்பு இப்படி இருக்கும். ''நடைபிணம் போல் இராதே: வசியத்தில் நடப்பது போல் நடக்காதே.''

ஆனால் நீங்கள் வசிய நிலையில்தான் வாழ்கிறீர்கள்; நீங்கள் அப்படி இருப்பதை பற்றி தெரிந்து கொள்ளாமலேயே இருக்கிறீர்கள். குறிப்பிட்ட காரியங்களுக்காக சமுதாயம் முழுவதும் உங்களை வசியத்துக்கு ஆட்படுத்த முயன்று கொண்டிருக்கிறது. அதுவே ''பிரமாத்'' - ஐ (*pramad*) உருவாக்குகிறது: அதுவே உங்களில் ஒரு தூக்கக்கலகத்தை உருவாக்கு கிறது. என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதைப் பற்றிய விழிப்புடன் நீங்கள் இல்லை. இருந்திருந்தால் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதைத் தெரிந்து நீங்கள் அதிர்ச்சி அடைந்திருப்பீர்கள். அது மிகவும் பழகிப் போனதாக ஆகி இருக்கிறது. எனவேதான் அதைப் பற்றியே விழிப்புள்ளவராக ஆக உங்களால் முடிவதில்லை. பல காரியவாதிக ளாலும் நீங்கள் இழுபட்டுக் கொண்டிருக்கிறீர்கள். அவர்கள் கையாளும் சூழ்ச்சியான முறை உங்களில் ஒரு வ.ிய தூக்க நிலையை உருவாக்கிக் கொண்டிருக்கிறது.

எடுத்துக்காட்டாக, ஒவ்வொரு வானொலியிலும், ஒவ்வொரு தொலைக்காட்சியிலும், ஒவ்வொரு சினிமாவிலும், ஒவ்வொரு செய்தித்தாளிலும், பத்திரிகையிலும் ஒரு பொருளை விளம்பரப்படுத்திக் கொண்டே இருக்கிறார்கள் ''

உதாரணத்திற்காக லக்ஸ் டாய்லட் சோப்பு''. இதனால் நாம் பாதிக்கப்படுவதில்லை என்று நீங்கள் நினைக்கிறீர்கள். ஆனால் ஒவ்வொரு நாளும் ''லக்ஸ் டாய்லட் சோப்பு, லக்ஸ் டாய்லட் சோப்பு, லக்ஸ் டாய்லட் சோப்பு'' என்பதை நீங்கள் கேட்கிறீர்கள். ஒரு மந்திரம் சொல்வது போல் அது இருக்கிறது. இரவில், வீதிகளில், நியான் விளக்குகள் ''லக்ஸ் டாய்லட் சோப்பு'' என்கின்றன. இப்போது அந்த விளக்குகளை அணைந்து அணைந்து எரிய விட்டால் அதிகப் பலன் இருக்கும் என கண்டு பிடித்துள்ளார்கள். அது விட்டுவிட்டு பளிச்சிடும்போது அது இன்னும் அதிகமாய் பாதிக்கிறது. ஏனென்றால் (அணைந்து எரியும்) ஒவ்வொரு தடவையும் ''லக்ஸ் டாய்லட் சோப்பு'' என்று நீங்கள் படிக்க வேண்டி இருக்கிறது. மறுபடியும் விளக்கு அணைகிறது. பின் எரிகிறது. மறுபடியும் நீங்கள் ''லக்ஸ் டாய்லட் சோப்பு'' என்று வாசிக்க வேண்டி வருகிறது.

நீங்கள் ஓம் என்று ஓதிக் கொண்டிருக்கிறீர்கள்! அது உங்கள் அடிமனத்தில் மேலும் மேலும் ஆழமாக போய்க் கொண்டிருக்கிறது. அதைப் பற்றி எனக்கு கவலையில்லை என நினைக்கிறீர்கள். இந்த மனிதர்களிடம் நான் ஏமாந்துவிடமாட்டேன் என நினைக்கிறீர்கள் - இந்த அழகான நிர்வாண மங்கைகள் அனைவரும் லக்ஸ் குளியல் சோப்புடன் நின்றுகொண்டு, ''நான் ஏன் அழகாயிருக்கிறேன்? என் முகம் ஏன் இவ்வளவு அழகாக உள்ளது? லக்ஸ் குளியல் சோப்புதான் காரணம்.'' என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் நீங்கள் உங்களை அழகாக இல்லை என்று உணருகிறீர்கள் - ஆகவே நீங்கள் பாதிக்கப்படுகிறீர்கள். திடீரென ஒருநாள் கடைவீதிக்குப் போகிறீர்கள் கடைக்கு போகிறீர்கள். லக்ஸ் குளியல் சோப்பை கேட்டு வாங்குகிறீர்கள். ''என்ன சோப்பு வேண்டும்?'' என்று கேட்கிறார் கடைக்காரர் உடனே திடீரென அது பொங்கி மேலே வருகிறது. ''லக்ஸ்.''

வியாபாரிகள், அரசியல் தலைவர்கள், ஆசிரியர்கள், சாமியார்கள் எல்லோரும் உங்களை வசியம் செய்து மயக்குகிறார்கள். ஏனெனில் உங்களை வசியநிலைக்கு உள்ளாக்குவதில் அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு முதலீடு உள்ளது. அதன்பின் உங்களை பயன்படுத்திக்கொள்ள முடியும். ''இது உன் தாய்நாடு, தாய்நாட்டுக்கு ஒரு இக்கட்டு நேர்ந்தால் போரிடச் செல் உயிரைக் கொடு தியாகியாகு'' என்று அரசியல்வாதிகள் சொல்லிக் கொண்டே போகிறார்கள்.

என்ன அபத்தம் இது! முழு பூமியுமே உங்கள் தாய்தான். இந்தியா, பாகிஸ்தான், ஜெர்மனி, இங்கிலாந்து என பூமி பிரிக்கப்பட்டுள்ளதா அல்லது அது ஒன்றா? ஆனால் பூமியின் இந்த பகுதிமட்டுமே உன் தாய்,

மிகவும் நல்லதுதான். என்று அரசியல்வாதிகள் தொடர்ச்சியாக உன்மனதில் ஆழமாக பதியவைத்துக் கொண்டிருக்கிறார்கள். இதற்கு மேலும், தேசபக்தி, தேசியம், தாய் நாட்டுப்பற்று போன்ற எல்லா அபத்தமான சொற்களையும் சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள். அதை அவர்கள் தொடர்ச்சியாக அடித்து இறக்கும்போது நீங்கள் வசியப்படுத்தப்பட்டவர் ஆகிறீர்கள். இனி உங்களை நீங்கள் பலிதர முடியும்.

முழக்கங்களின் காரணமாக ஏற்பட்ட வசியநிலையில் நீங்கள் இருப்பதால், உங்கள் வாழ்வை நீங்கள் தியாகம் செய்து கொண்டு இருக்கிறீர்கள். வசியம்மூலம் சாதாரண ஒரு துண்டுத்துணி, கொடி என்ற பெயரில் மிகவும் முக்கியமாகி விடுகிறது. இதுவே ''நமது தேசியக் கொடி'' என்றதும் அதற்காக லட்சக்கணக்கான மக்கள் உயிர்விட முடிகிறது. மற்ற கோள்களிலும் உரியினங்கள் இருந்து அவர்கள் எப்போதாவது நமது பூமியை பார்த்தால் ''இந்த மக்கள் சுத்த முட்டாள்கள்'' என்றே அவர்கள் கருதுவார்கள். ஒரு துணிக்காக - ஒரு துண்டுத் துணிக்காக உயிர் விடமுடிகிறது ஏனென்றால் - ''நமது கொடியை'' அவமதித்துவிட்டார்கள், இதை நம்மால் சகித்துக் கொள்ள முடியாது...

அடுத்து மதங்கள் போதித்துக் கொண்டே இருக்கின்றன: நீ ஒரு கிறிஸ்தவன், இந்து, முகமதியன், அது, இது என்று. நீங்கள் உங்களை ஒரு கிறிஸ்தவரே என்று நினைக்கும்படி அவை செய்து விடுகின்றன. இப்போது நீங்கள் சிலுவைப் போருக்கு - புனிதப் போருக்கு தயாராகி விட்டீர்கள்: ''கிறிஸ்தவர்கள் அல்லாதவர்களைக் கொல்! அது உன் புனித கடமை!'' இப்பேர்ப்பட்ட அபத்தமான விஷயங்களை எல்லாம் அவர்கள் உங்களுக்குப் போதிக்கிறார்கள். ஆனால் அவர்கள் அவற்றை தொடர்ந்து சொல்லிக் கொண்டே இருப்பதால் அதை இன்னும் நீங்கள் நம்புகிறீர்கள். அடோல்ஃப் இட்லர் ''மைன் காம்ப்'' எனப்படும் தன் சுயசரிதத்தில் கூறுகிறான், ஒரு பொய்யை தொடர்ச்சியாக விடாமல் திரும்பத் திரும்பச் சொல்லி வந்தால் அது மெய்யாக மாறுகிறது என்று இதை அவனே அறிவான். அவன் அறிந்த அளவுக்கு வேறு யாரும் அதை அறிய முடியாது. ஏனெனில் அவனே அப்படிச் செய்திருக்கிறான்.

பிரமாத் **Pramad** என்றால் வசிய்பபடுத்தப்பட்ட நிலை, செல்வாக்கு உட்பட்ட நிலை, தூக்கக்கலக்கமாகவே செயல்படும் நிலை என்பது பொருள். அந்நிலையில் கவனமின்மை என்பது வந்தே தீரும். ஏனெனில் நீங்கள் நீங்களாக இருப்பதில்லை. அதன்பின் எதையும் நீங்கள் கவனம் இல்லாமல் செய்கிறீர்கள். அப்படியே நடமாடி தடுக்கி விழுகிறீர்கள். பொருள்களுடன், மனிதர்களுடன் கொள்ளும் உறவில் தொடர்ச்சியாக நீங்கள் தடுமாறிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் எங்கும் சென்று

சேர்வதில்லை. ஒரு குடிகாரன் போலவே நீங்கள் இருக்கிறீர்கள். மற்ற எல்லோரும் கூட உங்களைப் போலவே இருக்கிறார்கள். எனவே நீங்கள் போதையேறிக் கிடப்பதை அறிந்து கொள்ள உங்களுக்கு வாய்ப்புக் கிடைப்பதில்லை.

கவனமாயிருங்கள். நீங்கள் கவனமாக இருக்க ஓம் உங்களுக்கு உதவும். வசிய தூக்க நிலையை அது கைவிடச் செய்யும். உண்மையில், தியானிக்காதபடி ஓமை நீங்கள் ஓதினால் அதுவும் ஒரு வசியம் போலவே ஆகும். ஒரு மந்திரத்தை சாதாரணமாக ஓதுவதற்கும் பதஞ்சலியின் வழிக்கும் உள்ள வேறுபாடு இதுதான். அதை ஓதும்போது விழிப்புடன் இருங்கள்.

ஓமை ஓதி விழிப்புடன் இருந்தால் இந்த ஓமும், அதை ஓதுவதும், வசியத்திலிருந்து உங்களை விடுவிக்கும் ஒரு சக்தியாக மாறும். உங்களை சூழ்ந்துள்ள வசியத்துக்குதுட்பட்ட நிலை அனைத்தையும் அது அழிக்கும். சமுதாயத்தாலும் ஆதிக்கக்காரர்களாலும் அரசியல்வாதிகளாலும் உங்களுக்குள் உண்டாக்கப்பட்டிருக்கிற வசியநிலையை அது அழிக்கும். வசிய மயக்கத்திலிருந்து அது உங்களை விடுவிக்கும்.

ஒருதடவை அமெரிக்காவில் ஒருவர் விவேகானந்தரிடம் கேட்டார், ''சாதாரண வசியத்துக்கும் உங்கள் ஓமை உச்சரிப்பதற்கும் என்ன வேறுபாடு?'' என்று, அதற்கு விவேகானந்தர் ஓமை ஓதுதல் ஒரு எதிர்வசியம் ஆகும். அது எதிர்திசையில் இயங்கிக் கொண்டிருக்கிறது'' என்றார். நிகழ்முறை ஒரே மாதிரியாகத்தான் தெரிகிறது. ஆனால் இயங்கும் திசை நேரெதிரானது ஆனால் அது எப்படி எதிர்த்திசையில் இயங்குவதாகிறது? நீங்கள் தியானித்தபடியும் இருந்தால் பின் பையப்பைய நீங்கள் மிகுந்த அமைதியும் மிகுந்த விழிப்பும் மிகுந்த கவனமும் உள்ளவர்களாக ஆகிறீர்கள். எனவே எவராலும் உங்களை வசியத்துக்கு உட்படுத்த முடியாது. இப்போது மதவாதிகள், அரசியல்வாதிகள் ஆகிய சிறைக் காவலர்களின் பிடிக்கு சிக்காதவர்களாக நீங்கள் கடந்து போய் இருக்கிறீர்கள். இப்போதுதான் முதல் தடவையாக நீங்கள் ஒரு தனிஆள் ஆக இருக்கிறீர்கள். இனி நீங்கள் கவனமிக்கவராக ஆகிறீர்கள். இனி நீங்கள் எச்சரிக்கையாக இயங்குகிறீர்கள். ஒவ்வோர் அடியையும் ஜாக்கிரதையாக எடுத்து வைக்கிறீர்கள். ஏனென்றால் உங்களைச் சுற்றிலும் கோடிக்கணக்கான படுகுழிகள் உள்ளன.

*''சோம்பல்'' அலஸ்ய:* உங்களுக்குள் மிகுந்த சோம்பல் சேர்ந்துள்ளது. சில காரணங்களாலேயே அது வருகிறது - எதைச் செய்வதிலும் எந்தப் பொருளையும் - பயனையும் உங்களால் காண முடிவதில்லை என்பதே

காரணம். அப்படியே அதை நீங்கள் செய்தாலும் ஒன்றும் கிடைப்பதுமில்லை - சாதிக்கப்படுவதும் இல்லை. செய்யாவிட்டால் எதுவும் நட்டமாவதும் - இழக்கப்படுவதும் இல்லை. இதன்பின் ஒரு சோம்பேறித்தனம் இதயத்தில் படிகிறது. சோம்பல் என்றாலே வாழ்வதற்கான ஆர்வத்தை நீங்கள் இழந்திருக்கிறீர்கள் என்றே பொருள்.

குழந்தைகள் சோம்பல் உள்ளவர்களாக இல்லை. அவர்கள் ஆற்றல்மிகுதியால் பொங்கி வழிந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களை தூங்கப் போகுமாறு நீங்கள் கட்டாயப்படுத்த வேண்டி இருக்கிறது. பேசாமல் இருக்குமாறு அவர்களை நீங்கள் மிரட்ட வேண்டி உள்ளது. சிலநிமிடங்கள் உட்கார்ந்து ஓய்வு எடுக்குமாறு அவர்களை நீங்கள் வற்புறுத்த வேண்டி உள்ளது. ஓய்வெடுக்க அவர்கள் ஒன்றும் இறுக்கமாக - பரபரப்பாக இல்லை: அது உங்கள் கருத்து. அவர்கள் ஆற்றல் நிரம்பியவர்களாக இருக்கிறார்கள் - அவ்வளவு சிறிய உருவங்களில் எவ்வளவு அதிக ஆற்றல் துள்ளுகிறது. எங்கிருந்து இந்த ஆற்றல் வருகிறது? அவர்கள் இன்னும் நிராசை அடையவில்லை. இந்த வாழ்வில் எதைச் செய்தாலும் எதுவுமே கிடைப்பதில்லை என்பது அவர்களுக்குத் தெரியாது. எதையும் அவர்கள் அறியாமல் இருக்கிறார்கள் - ஆனந்தமான அறியாமையில் இருக்கிறார்கள் எனவேதான் அவ்வளவு அதிக ஆற்றல் பொங்குகிறது.

நீங்களும் பல காரியங்களைச் செய்து வந்திருக்கிறீர்கள். ஆனால் அடைந்தது ஒன்றுமில்லை. - எனவே சோம்பல் படிகிறது. இது தூசுபடிவதைப் போன்றதுதான். எல்லாத் தோல்விகளும் நிராசைகளும் உங்களுக்குள் வந்து படிகின்றன. ஒவ்வொரு கனவும் கசந்து போய்விட்டது. அது படிகிறது! அப்போது நீங்கள் சோம்பேறியாக ஆகிறீர்கள். ''எதற்கு மறுபடியும் எழுந்திருப்பது? எதற்காக?'' என்று காலையில் நீங்கள் எண்ணுகிறீர்கள். இதற்கு எந்தப் பதிலும் இல்லை இருந்தாலும் நீங்கள் எழுந்திருக்க வேண்டி இருக்கிறது. ஏனென்றால் எப்படியும் உணவுக்காக சம்பாதிக்க வேண்டி உள்ளது. மனைவி இருக்கிறாள், குழந்தைகள் இருக்கிறார்கள், நீங்கள் ஒரு பொறியில் மாட்டிஇருக்கிறீர்கள். எப்படியோ வேலைக்குப் போகிறீர்கள். எப்படியோ திரும்பிவருகிறீர்கள். எந்த உற்சாகமும் இல்லை! இழுத்துக் கொண்டு கிடக்கிறீர்கள். எதைச் செய்வதிலும் உங்களுக்கு மகிழ்ச்சி என்பதே இல்லை.

ஓமை ஓதுவதும் அதன்மீது தியானிப்பதும் இதில் எப்படி உதவும்? அது உதவுகிறது! நிச்சயமாக உதவுகிறது. ஏனெனில் முதல்முதலாக நீங்கள் ஓமென ஓதி அதை கவனித்து தியானிக்கும்போது உங்கள் வாழ்விலேயே

ஒரு நிறைவைக் கொண்டு வருவதற்கு - எடுத்த முதல் முயற்சியாக - தோன்றுகிறது. அதை ஓதுவதில் நீங்கள் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறீர்கள். அதை ஓதும்போது மிகுந்த ஆனந்தமாக உணர்கிறீர்கள். அதாவது முதல் முயற்சி வெற்றிபெற்று விட்டது.

இப்போது ஒரு புதிய உற்சாகம் எழுகிறது. தூசி தட்டப்பட்டுக் கொண்டு இருக்கிறது. புதிய துணிவு, புதிய தன்னம்பிக்கை அடையப்பெறுகிறது. இனி உங்களாலும் ஒன்றை சாதிக்க முடியும் என நீங்கள் நினைக்கிறீர்கள். உங்களாலும் ஒன்றை அடைய முடியுமென எண்ணுகிறீர்கள். எல்லாமே ஒரு தோல்வியாகி விடவில்லை. வெளி நோக்கிய பயணம் வேண்டுமானால் தோல்வியாக இருக்கலாம். ஆனால் உள்நோக்கிய பயணம் தோற்றுவிடவில்லை. முதல் அடிவைப்பே கூட மிகுந்த மலர்களை கொண்டு வருகிறது. இப்போது நம்பிக்கை எழுகிறது. மறுபடியும் தன்னம்பிக்கை குடிபுகுகிறது. மறுபடியும் நீங்கள் ஒரு குழந்தையாக - அகவுலகின் குழந்தையாக ஆகிறீர்கள்... இது ஒரு புது பிறப்பு. மீண்டும் உங்களால் சிரிக்க, ஓட, ஆட முடிகிறது. மறுபடியும் நீங்கள் பிறந்திருக்கிறீர்கள்.

இதைத்தான் இந்துக்கள் இரு பிறப்பு என்கிறார்கள். இதுவே மறுபிறவி, இரண்டாவது பிறப்பு. முதல் பிறப்பு புற உலகில் நடந்தது. அது ஒரு தோல்வியாக முடிந்திருக்கிறது. எனவேதான் நீங்கள் இந்த அளவுக்கு மந்தம்பிடித்தவராக உணர்கிறீர்கள். மேலும் ஒருவருக்கு நாற்பது வயது ஆகும் போது ஒருவர் சாவைப்பற்றி சிந்திக்க தொடங்கிவிடுகிறார் - எவ்வாறு செத்துப் போவது, எவ்வாறு ஒழிந்து போவது....

மக்கள் தற்கொலை செய்து கொள்வதில்லை என்றால், அதற்கு அர்த்தம் அவர்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள் என்பதல்ல. அதற்கான எளிய காரணம், சாவில்கூட அவர்களால் எந்த நம்பிக்கையையும் காண முடியவில்லை என்பதுதான். மரணம்கூட அவர்களுக்கு நம்பிக்கை அளிப்பதாக தெரிவதில்லை. அவர்கள் தற்கொலை செய்து கொள்ளாமல் இருப்பதற்கு காரணம் வாழ்வதை அவர்கள் நேசிக்கிறார்கள் என்பதல்ல. அல்லவே அல்ல! எந்தளவுக்கு அவர்கள் வெறுத்துப் போய் நம்பிக்கை இழந்துபோய் இருக்கிறார்கள் என்றால், சாவுகூட தங்களுக்கு எதையும் தரப்போவதில்லை என்பதை அவர்கள் அறிந்திருக்கிறார்கள். பிறகு ஏன் அனாவசியமாக உயிரை விட வேண்டும்? அந்த தொல்லையைக்கூட ஏன் மேற்கொள்ள வேண்டும்? எனவே இருக்கிற நிலையிலேயே இருந்து விட்டுப் போவோம்.

''காமம்'': ஏன் நீங்கள் மிகுந்த காமத்தை உணர்கிறீர்கள்? ஆற்றலை, பயன்படுத்தப்படாத ஆற்றலை நீங்கள் குவித்துக் கொள்கிறீர்கள். அதை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்பது உங்களுக்கு தெரிவதில்லை. எனவேதான் சிற்றின்ப உணர்வு அதிகமாகிறது. அதிகப்படியான சக்தி இயல்பாகவே, முதல் மையமாகிய காம மையத்தில் குவிகிறது. மேலும் வேறு எந்த மையங்களையும் நீங்கள் அறிந்ததில்லை; அது எவ்வாறு மேல்நோக்கிப் பாய முடியும் என்பதும் உங்களுக்கு தெரிவதில்லை.

இது எப்படி என்றால், உங்களிடம் ஒரு விமானம் இருக்கிறது. ஆனால் அது இன்னதென்று உங்களுக்கு தெரியவில்லை. எனவே அதை ஆராய்கிறீர்கள். பின், ''இதற்கு சக்கரங்கள் உள்ளன, எனவே இது ஏதோ ஒருவகை வண்டியாகத்தான் இருக்க வேண்டும்'' என்று நினைக்கிறீர்கள். எனவே அதில் மாடுகளை பூட்டி மாட்டுவண்டியாகப் பயன்படுத்துகிறீர்கள். அப்படியும் அதைப் பயன்படுத்த முடியும்! பின் ஒருநாள் அதற்கு மாடுகள் தேவையில்லை என்பதைத் தற்செயலாகக் கண்டுபிடிக்கிறீர்கள். அதில் ஓர் எந்திரம் உள்ளது. எனவே அதை மோட்டார் வாகனம்போல் பயன் படுத்துகிறீர்கள். பின் மேலும் மேலும் ஆழமாக ஆராய்கிறீர்கள். பிறகுதான் இதற்கு ஏன் இறக்கைகள் உள்ளன என யோசிக்கிறீர்கள். பின் ஒருநாள் அதை எப்படிப் பயன்படுத்த வேண்டுமோ அப்படியே - ஒரு விமானமாகவே - அதை நீங்கள் பயன்படுத்துகிறீர்கள்.

உங்களுக்குள் நீங்கள் இயங்கும்போது பல விஷயங்களை நீங்கள் கண்டுபிடிக்கிறீர்கள். ஆனால் உங்களுக்குள் நீங்கள் செல்லாவிட்டால் பின் காம உணர்வு மட்டுமே இருக்கும். சக்தியை நீங்கள் சேகரிக்கிறீர்கள். பின் அதை வைத்துக் கொண்டு என்ன செய்வது? மேல்நோக்கிப் பறக்க உங்களால் முடியும் என்பதைப் பற்றி உங்களுக்கு எதுவும் தெரிவதில்லை. நீங்கள் ஒரு மாட்டுவண்டியாக ஆகிறீர்கள். காமம் மாட்டுவண்டியைப் போல செயல்படுகிறது. ஆற்றல் உங்களிடம் சேர்கிறது. நீங்கள் உணவு உண்ணுகிறீர்கள், தண்ணீர் அருந்துகிறீர்கள். ஆற்றல் உருவாக்கப்படுகிறது. ஆற்றல் அங்கே இருக்கிறது. அதை நீங்கள் பயன்படுத்தாவிட்டால் உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும். பின் அந்த ஆற்றல் உங்களுக்குள் வட்டமிட்டுக்கொண்டே போகிறது. அது உங்களை பைத்தியமாக ஆக்குகிறது. நீங்கள் ஏதாவது செய்தாக வேண்டி இருக்கிறது. நீங்கள் எதுவும் செய்யாவிட்டால் உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும். நீங்கள் வெடித்துவிடுவீர்கள். காமமே மிகவும் எளிதான பாதுகாப்பு வால்வு - *(Safety valve)* ஆற்றல் மீண்டும் இயற்கையிடமே திரும்பிச் செல்கிறது.

இது மடத்தனம். ஏனெனில் ஆற்றலே இயற்கையிடமிருந்துதான் வருகிறது. நீங்கள் உணவை உண்கிறீர்கள்: இயற்கையையே உண்ணுவ

தாகும் இது. நீங்கள் நீர் பருகுகிறீர்கள். இயற்கையையே பருகுவதாகும் இது. நீங்கள் வெயில் காய்கிறீர்கள். சூரியனையே உண்ணுதலாகும் இது. தொடர்ச்சியாக நீங்கள் இயற்கையை உட்கொண்டு வருகிறீர்கள். பின் அதை இயற்கையிடமே திரும்ப எறிகிறீர்கள். மொத்தக் காரியமும் அடிப்படையற்றதும், பயனற்றதும், அர்த்தமற்றதுமாகத் தோன்றுகிறது. அதனால் என்ன பயன். பின் நீங்கள் மந்தமானவராக ஆகிறீர்கள்.

ஆற்றலானது மேலே மேலே உயர்ந்து செல்லவேண்டும். நீங்கள் ஒரு நிலைமாற்றியாக (*Transformer*) ஆக வேண்டும்: உங்கள் மூலம் இயற்கையானது உன்னத இயற்கையாக ஆகவேண்டும். அப்போது மட்டுமே அர்த்தம் உண்டு, முக்கியத்துவம் உண்டு. உங்கள் வழியாக ஜடப்பொருளானது மனமாக ஆக வேண்டும். மனம் உன்னத மனமாக ஆக வேண்டும். உங்கள் வாயிலாகவே இயற்கை உன்னத இயற்கை நிலையை அடைந்தாக வேண்டும்: மிகவும் கீழானது மிகவும் மேலானதாக மாறியாக வேண்டும். அப்போது மட்டுமே ஒரு முக்கியத்துவம் இருக்கும். நீங்களும் அந்த முக்கியத்துவத்தை உணர்வீர்கள்.

அதன்பின் உங்கள் வாழ்க்கை மிகவும் ஆழமானதொரு தனிச்சிறப்பைக் கொண்டதாக இருக்கிறது. இனி நீங்கள் தகுதியற்றவராக இல்லை. நீங்கள் மதிப்பற்ற தூசியாக இல்லை. நீங்கள் ஒரு கடவுளாக இருக்கிறீர்கள்! உங்கள் வழியாக இயற்கையிலிருந்து உன்னத இயற்கைக்கு நீங்கள் இயங்கும்போது நீங்கள் ஒரு கடவுள் ஆகி இருக்கிறீர்கள். பதஞ்சலி ஒரு கடவுள். நீங்கள் குருமார்களின் குருவாக ஆகிறீர்கள்.

ஆனால் சாதாரணமாக காமம் - புலனின்பம் என்றால் ஆற்றல் சேகரமாகிறது, அதை நீங்கள் வெளியே வீசியாக வேண்டும் என்பதுதான். அதை வைத்துக்கொண்டு என்னசெய்வது என்று உங்களுக்கு தெரிவதில்லை. முதலில் அதை நீங்கள் சேகரிக்கிறீர்கள்: முதலில் அதை நீங்கள் தேடுகிறீர்கள் - உணவைத் தேடி அலைகிறீர்கள், உணவைச் சம்பாதிக்க மிகுந்த முயற்சி மேற்கொள்கிறீர்கள். பின் அந்த உணவை உட்கிரகித்து ஆற்றலை உருவாக்குகிறீர்கள். ஏனெனில் காம ஆற்றலே உங்கள் உடம்பின் மிகவும் பண்படுத்தப்பட்ட ஆற்றலாக இருக்கிறது. மிகவும் பக்குவப்படுத்தப்பட்ட ஆற்றல் அது! அதன்பின் அதை நீங்கள் வெளியே எறிகிறீர்கள்: திரும்பவும் அதையையே செய்கிறீர்கள்.

இது ஒரு நச்சுச்சுழல். அதை நீங்கள் வெளியில் வீசி எறிந்ததும் உடலுக்கு ஆற்றல் தேவைப்படுகிறது. நீங்கள் உண்ணுகிறீர்கள், சேர்க் கிறீர்கள், எறிந்து விடுகிறீர்கள்: உங்களுக்கு ஏதாவது அர்த்தம் இருக்கிறது என எப்படி உங்களால் உணர முடியும்? எங்கேயும் இட்டுச் செல்லாத ஒரு

செக்கு மாட்டு பாதையிலேயே நீங்கள் இருப்பதாக தோன்றுகிறது. இதில் ஓம் எப்படி உதவும்? அதன் மீதான தியானம் எப்படி உதவும்? என்றால், ஓமின்மீது நீங்கள் தியானிக்கத் தொடங்கியதுமே, மற்ற மையங்கள் செயல்படத் தொடங்குகின்றன.

ஆற்றல் உள்ளே பாயும்போது நீங்கள் ஒரு வட்டமாக ஆகிறீர்கள். அந்நிலையில் காம மையம் மட்டுமே செயல்படும் ஒரே மையமாக இருப்பதில்லை. உங்கள் உடல் முழுவதுமே ஒரு வட்டமாக ஆகிறது.காம மையத்தில் இருந்து ஆற்றல் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது மையங்களுக்கு எழுகிறது. பின் மறு படியும் ஆறாவது, ஐந்தாவது, நான்காவது, மூன்றாவது, இரண்டாவது, முதலாவது மையங்களுக்கு வருகிறது. இவ்வாறு அது ஓர் உள்வட்டமாக ஆகிறது மற்ற மையங்கள் வழியாகவும் கடந்து செல்கிறது.

ஆற்றலைச் சேகரித்திருப்பதனாலேயே அது உயரே எழுகிறது: ஆற்றல் மட்டம் உயரே போகிறது - அணைக்கட்டில் நீர்மட்டம் ஏறுவதைப் போலவே. ஆற்றில் இருந்து நீர் வந்தபடியே இருக்கிறது. அணையோ அதை வெளிவிடுவதில்லை . நீர் மட்டம் உயர்கிறது. உங்கள் உடலின் பிற மையங்கள், பிற சக்கரங்கள் திறக்கத் தொடங்குகின்றன. ஏனென்றால் ஆற்றல் பாயும் போது அதை இயக்க ஆற்றல்களாக இயக்க ஆற்றல் பொறிகளாக (*Dynamo*) ஆகின்றன. அவை செயல்படத் தொடங்கு கின்றன.

இது ஓர் அருவியும் ஒரு மின்உற்பத்திக் கருவியும் (டைனமோ) செயல்படத் தொடங்குவதைப் போன்றதே. அருவி வறண்டு இருக்கையில் கருவி செயல்பட முடியாது. ஆற்றல் மேல்நோக்கி பாயும்போது உங்கள் உயர் சக்கரங்கள் வேலை செய்ய, செயல்படத் தொடங்குகின்றன. இப்படித்தான் ஓம் உதவுகிறது. அது உங்களை அமைதியானவராக, தெளிவானவராக, ஒருங்கிணைந்தவராக ஆக்குகிறது. ஆற்றல் உயரே எழுகிறது, காமம் மறைகிறது. காமம் அர்த்தமற்றதாகிறது. குழந்தைத்தன மாகத் தெரிகிறது. இன்னும் அது போகவில்லை. ஆனால் அது குழந்தைத்தனமானதாக ஆகிறது. உங்களுக்கு காம உணர்வு தோன்றுவ தில்லை. அதற்கான உந்துதல் உங்களுக்கு ஏற்படுவதில்லை.

ஆனால் இன்னும் அது இருக்கிறது. நீங்கள் கவனமாக இல்லா விட்டால் அது உங்களை மறுபடியும் பற்றிக் கொள்ளும். நீங்கள் வீழ்ந்தவிட முடியும். ஏனென்றால் இது அறுதியான நிகழ்வு அல்ல. நீங்கள் இன்னும் திடப்படவில்லை. ஆற்றலானது உங்களுக்கு உள்ளே பரவச நிலைகளை தரமுடியும் என்பதற்கான ஒரு கணநேர காட்சியே கிட்டியுள்ளது. காமம்

என்பது மிகக் கீழ்நிலைப் பரவசம். அதைவிட உயர்ந்த பரவச நிலைகள் சாத்தியம். உயர்நிலைகள் சாத்தியமாகிற போது கீழ்நிலை தானாகவே மறைகிறது. அதை நீங்கள் துறக்கத் தேவை இல்லை. அதை நீங்கள் துறந்தால் பின் உங்கள் ஆற்றல் மேல் நோக்கி இயங்குவதில்லை. ஆற்றல் மேல் நோக்கி இயங்கும்போது, துறப்பதற்கு தேவை இல்லை. அதுதானே பயனற்றதாகிப் போகிறது. அது தானே விட்டு விடுகிறது. அது செயல் படாததாக ஆகிறது. அது ஒரு தவறான கருத்தாகிறது.

நீங்கள் இப்போது இருக்கிற நிலையில், கனவு காண்பதை நீங்கள் நிறுத்திவிட்டால் உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும். என்கிறார்கள் உளவியல் பகுப்பாளர்கள். உங்கள் மனநிலைக்கு கற்பனைகள் (Delnsion)தேவைப்படுவதால் கனவுகள் தேவைப்படுகின்றன. இப்போது நீங்கள் தூக்கத்தில் இருக்கிறீர்கள். எனவே கற்பனைகள், ஏய்ப்புகள், பிரமைகள், கனவுகள் தேவைப்படுகின்றன. தூக்க நிலையில் கனவுகள் ஓர் அத்தியாவசியமாக இருக்கிறது.

அமெரிக்காவில் ஒரு பரிசோதனை செய்து பார்த்திருக்கிறார்கள்: ஏழு நாள்களுக்கு தொடர்ச்சியாக நீங்கள் கனவு காண அனுமதிக்கப்படா விட்டால், உடனடியாக ஒரு கற்பனை உலகில் நுழைகிறீர்கள். அதாவது திறந்த கண்களுடனேயே, வெளியில் இல்லாத பொருள்களையெல்லாம் இருப்பதாகப் பார்க்கத் தொடங்கு கிறீர்கள். எதிரில் இல்லாத ஆட்களுடன் பேசத் தொடங்கி விடுகிறீர்கள். இல்லாத காட்சிகளை காணத் தொடங்குகிறீர்கள். உங்களுக்கு மதிமயக்கம் ஏற்படுகிறது. வெறும் ஏழு நாள்கள் கனவு காணாதிருந்தாலே நீங்கள் மாயத் தோற்றங்களுக்கு உள்ளாகிறீர்கள். காட்சிமயக்கங்கள் தோன்றத் தொடங்குகின்றன. உங்கள் கனவுகள் ஒரு சுத்தி கரித்தலாக - உடலிலேயே அமைந்துள்ள சுத்திகரிப்பாக உள்ளன. எனவேதான் ஒவ்வோர் இரவும் உங்களை நீங்களே ஏய்த்துக் கொள்கிறீர்கள். காலையில் நீங்கள் சிறிது தணிந்த நிலையில் இருக்கிறீர்கள். ஆனால் மாலையாகும்போது மறுபடியும் உங்களிடம் மிகுந்த ஆற்றல் சேர்ந்து விடுகிறது. இரவில் அதை நீங்கள் கனவு கண்டு வெளியேற்ற வேண்டி உள்ளது.

காரோட்டிகளுக்கு இது நிகழ்கிறது. பல விபத்துகள் நேர்வதே இதனால்தான். இரவில் விபத்துகள் பெரும்பாலும் காலை சுமார் நான்கு மணி அளவிலேயே நடக்கின்றன. ஏனென்றால் இரவு முழுவதும் ஓட்டுநர் வண்டியை ஓட்டிக் கொண்டு வந்திருக்கிறார். எனவே அவர் கனவுகாண முடியவில்லை. இப்போது அந்த கனவு ஆற்றல் சேர்ந்துவிட்டது. எனவே கண்கள் திறந்திருக்க, வண்டியை ஓட்டிக்கொண்டே அவர் பொய்த் தோற்றங்களை காணத் தொடங்குகிறார். ''சாலை நேராக உள்ளது''

என்கிறார். ''யாரும் வரவில்லை, எந்த வண்டியையும் காணோம்'' என்கிறார். திறந்த கண்களுடன் ஒரு டிரக் வண்டிமேல் போய் மோதுகிறார். அல்லது ஒரு டிரக் வண்டி வருவதாக அவர் பார்வைக்கு தோன்றுகிறது. ஆனால் அங்கு எந்த வண்டியும் வரவில்லை. அவருக்கு தெரிகிற டிரக்கை தவிர்க்க வேண்டி திருப்பி ஒரு மரத்தில் போய் மோதுகிறார்.

நான்குமணி சுமாருக்கே ஏராளமான விபத்துகள் நடப்பது ஏன் என்பதுபற்றி மிகுந்த ஆராய்ச்சிகள் செய்யப்பட்டுள்ளன. உண்மையில் நான்குமணிக்கு பக்கமாகத்தான் நீங்கள் நிறையவே கனவுகாண்கிறீர்கள். நான்கிலிருந்து ஐந்து, ஆறுவரை தான். மிகுதியான கனவுகள் வருகின்றன. அதுதான் கனவு நேரம். நீங்கள் நன்றாகத் தூங்கிவிட்டீர்கள். இனி தூங்கத் தேவை இல்லை. உங்களால் கனவு காணமுடியும். காலையிலேயே நீங்கள் கனவு காண்கிறீர்கள். ஆனால் அந்த நேரத்தில் நீங்கள் கனவு காணா விட்டால், கனவுகாண உங்களை விடாவிட்டால், நீங்கள் பொய்த் தோற்றங்களை உருவாக்குவீர்கள். திறந்த கண்களுடனேயே கனவு காண்பீர்கள்.

கற்பனை (Delnsion) என்றால் திறந்த கண்களுடன் கனவு காணுதல் ஆகும். ஆனால் எல்லாருமே அப்படித்தான் கனவு கண்டு கொண்டிருக் கிறார்கள். நீங்கள் ஒரு பெண்ணைப் பார்க்கிறீர்கள். அவள் ஒரு பேரழகி என்று நினைக்கிறீர்கள். நிஜத்தில் அப்படி இல்லாமல் இருக்கலாம். அவள்மேல் ஒரு மயக்கத்தை நீங்கள் ஏற்றிப் பார்த்துக் கொண்டிருக்கலாம். பாலியல் ரீதியாக நீங்கள் பட்டினியாய் இருக்கலாம். அப்போது ஆற்றல் அங்கு இருக்கிறது, அது உங்களை ஏமாற்றுகிறது. இரண்டு நாள்கள், மூன்று நாள்கள் கழித்து அந்த பெண் உங்களுக்கு சராசரியாகத் தெரிகிறாள். நீங்கள் ஏமாற்றப்பட்டு விட்டதாக நினைக்கிறீர்கள். யாரும் உங்களை ஏமாற்ற வில்லை. நீங்களே தான் உங்களை... ஆனால் நீங்கள் ஏமாற்றப்பட்டுள் ளீர்கள். காதலர்கள் ஒருவரை ஒருவர் ஏமாற்றிக் கொள்கிறார்கள். திறந்த கண்களுடன் அவர்கள் கனவு காண்கிறார்கள். பின் அவர்கள் மனம் உடைந்து போகிறார்கள். தப்பு யார் மேலும் இல்லை. உங்கள் நிலைமை அப்படி, அவ்வளவே.

முழுமனத்துடன் ஓமை உச்சரித்தால் கற்பனை மறையும் என்கிறார் பதஞ்சலி. அது எப்படி நடக்கும்? எப்படி என்றால், கற்பனைநிலை என்பது ஒரு கனவு காணும் நிலை நீங்கள் மூழ்கிப் போகிற நேரம் அப்போது நீங்கள் அங்கு இருப்பதே இல்லை: கனவு மட்டுமே இருக்கிறது. ஓமின் மீது நீங்கள் தியானித்தால், ஓமெனும் ஒலியை நீங்கள் உருவாக்கி அதற்கு சாட்சியாக இருக்கிறீர்கள். அப்போது நீங்கள் அங்கு இருக்கிறீர்கள்! அங்கு நீங்கள் இருப்பது எந்த கனவும் நிகழ்வதை அனுமதிக்க முடியாது! நீங்கள்

இருக்கும் போதெல்லாம் கனவு இருப்பதில்லை. கனவு இருக்கும் போதெல்லாம் நீங்கள் இருப்பதில்லை. நீங்கள் இருவரும் ஒன்றாக இருக்க முடியாது. நீங்கள் இருந்தால் கனவு மறைந்துவிடும். கனவு இருந்தால் நீங்கள் மறையவேண்டி இருக்கும். இருவரும் ஒருசேர இருக்க முடியாது. கனவும் விழிப்புநிலையும் ஒருபோதும் சந்திப்பதில்லை. எனவேதான் ஓமெனும் ஒலிக்கு சாட்சியாய் இருந்து கவனிக்கையில் கற்பனை மறைகிறது.

''வீரியமின்மை'': வீரியமின்மையும் இருக்கிறது, தொடர்ச்சியாக இது உணரப்படுகிறது. உங்களை நீங்களே கையாலாகாதவராக உணர்கிறீர்கள்: இதுதான் வீரியமின்மை. உங்களால் எதையும் செய்ய முடியாதெனக் கருதுகிறீர்கள. நீங்கள் மதிப்பில்லாதவர், பயனற்றவர் என நினைக்கிறீர்கள். நீங்கள் உங்களை ஓர் ஆளாக காட்டிக்கொள்ளலாம். ஆனால் உங்கள் வெளிவேடமே, உள்ளுக்குள் உங்களை நீங்கள் ஓர் ஆளாக உணரவில்லை என்பதையும் காட்டுகிறது. நீங்கள் மிகுந்த ஆற்றலுடையவர் என நடிக்கலாம். ஆனால் உங்கள் நாடகம் உண்மையை மூடிமறைத்தலன்றி வேறல்ல.

ஓர் உணவுவிடுதிக்குள் நுழைந்தார் முல்லா நசுருதீன். அவர் கையில் ஒரு தாள் இருந்தது. ''என்னால் அடித்து வீழ்த்த முடிகிற ஆட்களின் பெயர்பட்டியல் இது'' என்றார். அதில் நூறு பெயர்கள் இருந்தன. ஓர் ஆள் எழுந்து நின்றான். அவன் ஒரு சின்னஞ்சிறு மனிதன். முல்லாவால் அவனை அடித்துவீழ்த்திவிட முடியும். ஆனால் அவனது இடுப்புவாரில் இரண்டு கைத்துப்பாக்கிகள் இருந்தன. கையிலும் துப்பாக்கியுடன் அவன் முல்லாவின் அருகில் வந்து, ''என் பெயரும் இதில் இருக்கிறதா?'' என்றான்.

முல்லா அவனைப் பார்த்தார். ''ஆம்'' என்றார். ''உம்மால் என்னை வீழ்த்த முடியாது'' என்றான் அம்மனிதன். ''உறுதியாகவா?'' என்றார் முல்லா. ''முற்றிலும் உறுதியாக. இதோ பார்!'' என்றான் அம்மனிதன். கைத்துப்பாக்கியைக் காட்டினான். முல்லா சென்னார், ''அப்படியானால் சரி. பட்டியலில் இருந்து உன் பெயரை நீக்கிவிடுகிறேன்.''

நீங்கள் பெரிய பலசாலி என்று வெளிக்கு நீங்கள் நடிக்க முடியும். ஆனால் ஒரு மோதலை நீங்கள் எதிர்கொள்ள நேரும்போதெல்லாம் நீங்கள் இயலாமையையும் பலவீனத்தையும் உணரத் தொடங்குகிறீர்கள். மனிதன் வீரியமற்றவன்தான். முழுமை மட்டுமே வீரியமுள்ளதாக இருக்க முடியும். மனிதனால் முடியாது. பகுதி வீரியமுள்ளதாக இருக்கமுடியாது. கடவுள் மட்டுமே வீரியமுள்ளவர். மனிதன் வீரியமற்றவனே.

ஓம்காரத்தை, ஓம் எனும் ஒலியை முதன்முதலாக நீங்கள் ஓதும்போது, இனியும் நீங்கள் ஒரு தீவாக இல்லை என்பதை உணர்கிறீர்கள். முழு

பிரபஞ்ச ஒலியின் ஒரு பகுதியாக நீங்கள் ஆகிறீர்கள். முதல் தடவையாக உங்களை நீங்கள் வீரியமுள்ளவராக உணர்கிறீர்கள். ஆனால் இப்போது அந்த வீரியம் வன்முறையானதாக இருக்கத் தேவையில்லை, அத்துமீறலாக இருக்கத் தேவையில்லை. உண்மையில் ஓர் பலமுள்ள மனிதர் ஒருபோதும் ஆதிக்கத் தன்மையுடன் இருப்பதில்லை. வீரியமற்ற மனிதர்களே தம்மை பலசாலிகள் என காட்டிக்கொள்வதற்காக ஆதிக்கம் செய்வோராய் ஆகின்றனர்.

**...நிலையான உறுதியின்மை ஆகியவை மனத்தை கலங்கச் செய்யும் இடையூறுகள் ஆகும்:** ஒரு காரியத்தை தொடங்குகிறீர்கள், பின் நிறுத்திவிடுகிறீர்கள். தொடங்குகிறீர்கள், நிறுத்துகிறீர்கள். மறுபடியும் தொடங்குகிறீர்கள், பின் நிறுத்தி விடுகிறீர்கள். இப்படிப்பட்ட உறுதி யின்மையை வைத்துக்கொண்டு எதுவுமே சாத்தியமில்லை. ஒருவர் விடாமுயற்சியுடன் செயல்பட்டாக வேண்டும். ஒரே இடத்தில் விடாமல் குழியை தோண்டிக்கொண்டே போகவேண்டும். உங்கள் முயற்சியை இடையில் விட்டு விட்டால்... உங்கள் மனம் எப்படிப் பட்டதென்றால், சிலநாள்கள் கழித்து மறுபடியும் நீங்கள் தொடக்கத்தி லிருந்தே தொடங்க வேண்டி இருக்கும். மனம் தானே பின்னோக்கி சுற்றிக் கொள்கிறது. தானே முறுக்கவிழ்ந்து கொள்கிறது. ஒரு வேலையை சில நாள்களுக்கு நீங்கள் செய்த பின் அதை விட்டுவிடுகிறீர்கள். அப்போது உங்கள் வேலையின் முதல் நாள் நிலவரத்துக்கு நீங்கள் தூக்கி எறியப்படுவீர்கள். மறுபடியும் தொடக்கத்திலிருந்து... இந்நிலையில் நீங்கள் செய்வது மிகுதியாக இருக்கும், சாதிப்பது எதுவும் இருக்காது. ஓம் உங்களுக்கு ஒரு புதுச்சுவையை வழங்கும்.

ஏன் நீங்கள் ஆரம்பித்து, ஆரம்பித்து விட்டுவிடுகிறீர்கள்? மக்கள் என்னிடம் வந்து தான் ஓராண்டாக தியானித்து வந்ததாகவும் பின நிறுத்திவிட்டதாகவும் கூறுகிறார்கள். ''உங்களுக்கு எப்படி இருந்தது?'' என்று அவர்களைக் கேட்கிறேன்.'' மிகமிக நன்றாக இருந்தது'' என்கிறார்கள். அப்படியானால் ஏன் அதை நிறுத்தினீர்கள்? ஒன்று மிகமிக நன்றாக இருந்தால் அதை எவரும் நிறுத்திவிடுவதில்லை. ஆனால் இவர்கள் ''நாங்கள் மிகவும் மிகழ்ச்சியாக இருந்தோம், ஆனால் நிறுத்திவிட்டோம்'' என்கிறார்கள் - இது சாத்தியமற்றது. நீங்கள் மகிழ்ச்சி அடைந்தால், அதை எப்படி நீங்கள் நிறுத்த முடியும் என்று நான் சொன்னால் உடனே அவர்கள்'' முழு மகிழ்ச்சி என்று கூற முடியாது'' என்கிறார்கள்.

ஆனால் அவர்கள் துன்பத்திலேயே இருக்கிறார்கள். தாங்கள் மகிழ்ச்சியாக இருப்பதாகக் கூட அவர்கள் நடிக்கத்தான் செய்கிறார்கள்.

ஒன்றில் உங்களுக்கு மகிழ்ச்சி என்றால் அதைத் தொடர்கிறீர்கள். அது ஒரு சலிப்பான விஷயம், அலுப்பான காரியம், அதில் மகிழ்ச்சியில்லை என்றால் மட்டுமே அதை நிறுத்துகிறீர்கள். பிரபஞ்சத்தில் கலந்து கரைவதன் முதல் சுவையை ஓமில் நீங்கள் ருசிபார்ப்பீர்கள் என்கிறார் பதஞ்சலி. அந்த சுவை உங்களின் மகிழ்ச்சியாக மாறும். நிலையான உறுதியின்மை / பிடிப்பின்மை போகும். எனவேதான் ஓமை ஓதி அதற்கு சாட்சியாயிருந்தால் அனைத்து இடையூறுகளும் விலகும் என்கிறார் அவர்

**வேதனை, மனக்கசப்பு, நடுக்கங்கள், சீரற்ற சுவாசம் ஆகியவை கலங்கிய மனத்தின் அறிகுறிகள்.**

இவையே அடையாளங்கள்: வேதனை: எப்போதும் கவலைமிகுந்து, எப்போதும் இருமனதாக பிளவுபட்டு, எப்போதும் ஏக்கத்தோடு கூடிய மனத்துடன், எப்போதும் சோகமாக, இருத்தல், மனக்கசப்பு, உடல் ஆற்றலில் நுட்பமான நடுக்கங்கள்: ஏனென்றால் உடல் ஆற்றல் வட்டமாக ஓடிக்கொண்டிராதபோது உங்களில் நுட்பமான நடுக்கங்கள் ஏற்படும், உதறல், பயம் ஏற்படும் சீரற்ற சுவாசம்; இந்நிலையில் உங்கள் மூச்சு சீராக இருக்க முடியாது. அது ஒரு பாடலாக இருக்க முடியாது. அதில் ஓர் இசை, இணக்கம் இருக்கமுடியாது. இது ஒரு சீரற்ற சுவாசம்...

கலங்கிய ஒரு மனத்தின் அடையாளங்கள் இவை. இந்த அறிகுறிகளுக்கு எதிரான அறிகுறிகளைக் கொண்ட மனம் ஒருமுகப்பட்ட மனம். ஓமை ஓதுவது உங்களை ஒருமுகப்படுத்தும். உங்கள் சுவாசம் லயமுள்ளதாக ஆகும். உங்கள் உடல் நடுக்கங்கள் மறையும். நீங்கள் பதற சிதற மாட்டீர்கள். சோகத்துக்குப் பதிலாக மகிழ்ச்சியான, களிப்பான உணர்வு ஏற்படும். ஒரு நுட்பமான ஆனந்தம் - காரணமில்லாமல் ஏற்படும். பரவசம் - உங்கள் முகத்தில் தவழும். நீங்களே மகிழ்ச்சியாக ஆகிறீர்கள்: இங்கு இருப்பதிலேயே நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள். சுவாசித்துக் கொண்டு இருப்பதிலேயே நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள். பெரிதாக எதையும் நீங்கள் வேண்டுவதில்லை. அந்நிலையில் ஏக்கத்திற்குப் பதிலாக பேரின்பம் இருக்கும்.

இவற்றை அகற்ற, ஒரே தத்துவத்தை தியானிக்கவும். கலங்கிய மனத்தின் இந்த அறிகுறிகளை அகற்றிவிட முடியும் - ஒரே தத்துவத்தை தியானிப்பதன் மூலம். பிரணவம் அதாவது ஓம் எனும் பிரபஞ்ச ஒலிதான் அந்த ஒரே தத்துவம்.

□

**பாதை அமைதியையும் விழிப்புணர்வையும் நோக்கிய தாகவே தோன்றுகிறது. பின் ஏன் உங்களைச் சூழ்ந்துள்ள ஒவ்வொருவரும், ஒவ்வொன்றும் இப்பேர்ப்பட்ட பெருங்குழப்பத்தில் இருக்கிறது?**

ஏனென்றால் நான் ஒரு பெருங்குழப்பம்! ஆனால் பெருங்குழப்பத் தில் இருந்துதான் பேரண்டம் பிறக்கிறது. வேறு வழியே இல்லை. நீங்கள் எல்லாரும் மிகமிகப் பழைய, பழங்கால கட்டங்களைப் போலவே இருக்கிறீர்கள். உங்களைப் புதுப்பிக்க முடியாது. கோடிக்கணக் கான பிறவிகளாக இங்கே நீங்கள் இருந்து வருகிறீர்கள். முதலில் உங்களை முற்றிலுமாக தகர்த்து நொறுக்கியாக வேண்டி உள்ளது. அதன்பிறகு மட்டுமே நீங்கள் மீண்டும் உருவாக்கப்பட முடியும்.

புதுப்பித்தல் சாத்தியமே. ஆனால் அது நீண்ட நாள் உதவாது. அது வெறும் மேலோட்டமான அலங்காரமாகவே இருக்கும். உங்கள் அடித் தளங்களின் ஆழத்தில் தொடர்ந்தும் நீங்கள் பழசாகவே இருப்பீர்கள். மொத்த கட்டமைப்பும் எப்போதும் ஆட்டங்கண்டபடிதான் இருக்கும். என்றைக்கு வேண்டுமானாலும் அது விழுந்துவிட முடியும். புதிய அடித்தளங்கள் தேவை - எல்லாமே முற்றிலும் புதியதாக வேண்டும். நீங்கள் முழுமையாக மறுபடியும் பிறந்தாக வேண்டும். இல்லாவிட்டால் அது ஒரு புதுப்பித்தலாகத்தான் இருக்கும். உங்கள் வெளிப்பக்கத்துக்கு வண்ணம்பூச முடியும். ஆனால் உள்பக்கத்துக்கு வண்ணம்பூச வழியேதும் இல்லை. உள்பக்கம் அப்படியேதான் தொடர்ந்து இருக்கும் - அதே பழைய அழுகி நாறிய அமைப்பாகத்தான் இருக்கும்.

ஒரு இடைவெட்டு தேவைப்படுகிறது.இப்படியே தொடர உங்களை அனுமதிக்க கூடாது. ஓர் இடைவெளி... பழையது அப்படியே சாகிறது. அதிலிருந்து - அதன் சாவிலிருந்து - புதியது வெளிவருகிறது. பழைய தற்கும் புதியதற்கும் இடையில் ஓர் இடைவெளி இருக்கிறது. அது இல்லாவிட்டால் பழசு தொடர்ந்து கொண்டே இருக்க முடியும். எல்லா திருத்தல் வேலைகளும் உண்மையில் பழசை காப்பாற்றுவதற்கேதான். ஆனால் நான் ஒரு திருத்துபவன் அல்லன். நீங்கள் முரண்டு பிடித்தால் உங்களின் பெருங்குழப்பம் தொடரும். அந்நிலையில் அதிக காலம் பிடிக்கும்.

அது நிகழ நீங்கள் அனுமதித்தாலோ ஒரே ஒரு கணத்திலேயே அது நிகழ்ந்து விடவும் முடியும். அது நிகழ நீங்கள் இடம் கொடுத்தால், பழையது

மறைகிறது, புதிய ஜீவன் இருத்தலுக்கு வருகிறது. அந்தப் புதியது தெய்விகமாகும். ஏனெனில் அது இறந்த காலத்திலிருந்து வரவில்லை. காலத்திலிருந்து அது வராது. காலமற்றதாக - காலத்துக்கு அப்பாற்பட்டதாக அது இருக்கும். உங்களில் இருந்து அது வராது. அதன் தாயாகவும் தந்தையாகவும் நீங்கள் இருக்க மாட்டீர்கள். திடீரென அத்துவானத்தில் இருந்து அது வரும்.

எனவேதான் எப்போதும் அது சூனியத்தில் இருந்தே ஒன்றுமற்றதில் இருந்தே வருகிறது என்று வலியுறுத்துகிறார் புத்தர். ஏதோ ஒன்றாக நீங்கள் இருக்கிறீர்கள். அதுதான் துயரமே. உண்மையில் நீங்கள் என்னவாக இருக்கிறீர்கள்? வெறும் இறந்தகாலமாக மட்டுமே இருக்கிறீர்கள். இறந்தகாலத்தை சேகரித்துக் கொண்டே போகிறீர்கள் நீங்கள். எனவேதான் நீங்கள் பாழடைந்த இடிபாடுகள் போல் ஆகி இருக்கிறீர்கள் - மிகவும் பழைய காலத்து இடிபாடுகளாக இருக்கிறீர்கள். இந்த உண்மை நிலவரத்தை உள்ளபடியே பாருங்கள். பழைய நிலையிலேயே தொடர முயலாதீர்கள். அதை விட்டுவிடுங்கள்.

எனவேதான் என்னைச் சுற்றிலும் எப்போதும் பெருங்குழப்பமாகவே இருக்கப் போகிறது. ஏனென்றால் தொடர்ந்து நான் இடித்து தகர்த்துக் கொண்டே இருக்கிறேன். நான் ஓர் அழிவு சக்தியாகவே இருக்கிறேன். ஏனென்றால் அதுவே ஆக்கத்துக்கு ஒரே வழி. நான் இறப்புபோலவே இருக்கிறேன். ஏனெனில் அப்போது மட்டுமே என் வழியாக நீங்கள் பிறக்க முடியும். நீங்கள் சொல்வது சரிதான்: இங்கு பெருங்குழப்பமாகவே இருக்கிறது. இனியும் இந்நிலையே தொடரும். ஏனென்றால் புதுப்புது மனிதர்கள் வந்து கொண்டிருப்பார்கள். என்னைச் சுற்றிலும் ஒரு நிலையான நிறுவனத்தை ஒருபோதும் நீங்கள் காணமாட்டீர்கள்.புதிய மக்கள் வந்து கொண்டிருப்பார்கள், அவர்களை நான் தகர்த்து தரைமட்டம் ஆக்கிக் கொண்டிருப்பேன்.

தனிப்பட்ட முறையில் உங்களுக்கு அது நின்றுவிட முடியும். உங்களை முற்றிலுமாக நான் அழிக்க என்னை நீங்கள் அனுமதித்தால் உங்களைப் பொறுத்தவரை பெருங்குழப்பம் முடிவுபெறும். நீங்கள் ஒரு பேரண்டமாக, மறைந்திருக்கும் இணக்கமாக, ஆழமான ஒழுங்கமைப்பாக ஆவீர்கள். உங்களைப் பொறுத்தவரை பெருங்குழப்பம் மறையும். ஆனால் என்னைச் சுற்றிலும் அது தொடரும். ஏனென்றால் புதியவர்கள் வந்து கொண்டிருப்பார்கள். இது அப்படித்தான் இருக்கவேண்டி உள்ளது. எப்போதுமே இப்படித்தான் இருந்து வந்துள்ளது.

இதை நீங்கள் என்னிடம் கேட்பது இது முதல் முறை அல்ல. இதே கேள்வி புத்தரிடம் கேட்கப்பட்டது. இதேகேள்விலாவோ சுவிடம்

கேட்கப்பட்டது. இதே கேள்வி இனியும் மறுபடி மறுபடி கேட்கப்படும். ஏனெனில் ஒரு குரு இருக்கிற போதெல்லாம், அவர் இருக்கிறார் என்றாலே, மரணத்தை உயிர்த்தெழுதலுக்கான ஒரு வழிமுறையாக அவர் பயன்படுத்துகிறார் என்றே பொருள். நீங்கள் இறந்தாக வேண்டும். அப்போது மட்டுமே உங்களால் மறுபடி பிறக்க முடியும்.

பெருங்குழப்பம் என்பது அழகானது. ஏனெனில் அதுவே கருவறையாக உள்ளது. ஒழுங்கமைப்பு என்று நீங்கள் அழைக்கும் அமைப்போ அசிங்கமானது. ஏனெனில் அது இறந்ததை மட்டுமே பாதுகாக்கிறது. சாவது இனியது; செத்தது - சவம் இனியது அல்ல - இந்த வேறுபாட்டை நினைவில் கொள்ளுங்கள். சாவு அழகானது என்று திரும்பவும் சொல்லுகிறேன், ஏனென்றால் சாவு ஓர் உயிருள்ள ஆற்றல். இறந்தது அழகானது அல்ல. ஏனென்றால் இறந்ததில் இருந்து உயிர் ஆற்றல் ஏற்கனவே போய்விட்டது. அது ஒரு பாழ் மட்டுமே. இறந்த ஒன்றாக இராதீர்கள். இறந்த காலத்தை - கடந்து போனதை சுமந்து திரியாதீர்கள். அதைக் கைவிடுங்கள் - சாவின் ஊடாக பிரவேசியுங்கள். சாவதைக் குறித்து நீங்கள் பயப்படுகிறீர்கள், ஆனால் உங்கள் சவநிலை குறித்து நீங்கள் கவலைப்படுவதில்லை.

இரண்டு மீனவர்களிடம் யேசு தன்னை பின் தொடருமாறு அழைத்தார். நகரத்தை விட்டு அவர்கள் வெளியேறிக் கொண்டிருந்தபோது ஒரு மனிதன் ஓடிவந்தான். மீனவர்களிடம் அவன், ''எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள் நீங்கள்? உங்கள் அப்பா இறந்துவிட்டார். திரும்பிவாருங்கள்.'' என்றான். அவர்கள் யேசுவிடம், ''நாங்கள் போய் செய்யவேண்டிய சடங்குகளை செய்துவிட்டு வர எங்களுக்கு சிலநாள்கள் அனுமதி தாரும். எங்கள் தகப்பனார் இறந்துவிட்டார். இறுதிச் சடங்குகள் செய்ய வேண்டி உள்ளது.'' என்று கேட்டனர். அதற்கு யேசு '' இறந்தவரை இறந்தவர்கள் புதைத்துக் கொள்ளட்டும். நீங்கள் கவலைப்படவேண்டாம். என்னை பின்தொடருங்கள்.'' என்று கூறினார். யேசு கூறுவதென்ன? அந்த நகர் முழுவதும் இறந்துவிட்டது. அவர்களே பார்த்துக் கொள்வார்கள் என்கிறார். ''செத்தவர்கள் செத்தவரைப் புதைத்துக்கொள்வார்கள். நீங்கள் என்னைப் பின்பற்றுங்கள்''

இறந்த காலத்திலேயே நீங்கள் இருந்து கொண்டிருந்தால் நீங்கள் ஓர் இறந்த பொருளே நீங்கள் ஓர் உயிருள்ள சக்தி அல்ல, மேலும் உயிருள்ளவராக ஆவதற்கு ஒரு வழி மட்டுமே உள்ளது. அதுதான் இறந்தகாலத்துக்கு இறப்பதாகும், செத்ததுக்குச் சாவதாகும். இது ஒரே தடவையில் ஏககாலத்துக்குமாக நடந்துவிடப் போவதில்லை. ஒருமுறை இதன் ரகசியத்தை நீங்கள் தெரிந்து கொண்டபின், ஒவ்வொரு கணமும் கடந்த காலத்துக்கு நீங்கள் இறந்தாக முடியும் அப்போதுதான் உங்கள் மேல்

எந்த மாசும் படியாது. அதன்பிறகு தான் சாவு என்பது ஓயாத ஒரு புத்தொழுங்காக, இடையறாத ஒரு மறுபிறப்பாக ஆகிறது.

இறந்தகாலத்துக்கு இறங்கள்! (*Die to the past*) எப்போதும் இதை நினைவில் கொள்ளுங்கள். கடந்துபோனது எதுவாயினும் அது கடந்து போனதே. இப்போது அது இல்லை. எங்கேயும் இல்லை. நினைவில் மட்டுமே அது ஒட்டிக் கொண்டுள்ளது. உங்கள் மனத்தில் மட்டுமே அது இருக்கிறது. செத்தவை அனைத்தின் சேமிப்புக்கிடங்குதான் மனம் என்பது. எனவேதான் உயிர்வாழ்க்கை பாய்ந்தோடுவதற்கான ஒரே தடையாக மனம் உள்ளது. நீரோட்டத்தைச் சுற்றிலும் செத்த உடல்கள் சேர்ந்து விடுகின்றன. அவை ஒரு தடுப்பாக ஆகின்றன.

நான் இங்கே செய்து கொண்டிருப்பது எல்லாமே, சாவது எப்படி என்பதைக் கற்க உங்களுக்கு உதவிக் கொண்டிருப்பதுதான். ஏனெனில் புதிதாய்ப் பிறப்பது எப்படி என்பதற்கான முதல் பாடமே அதுதான். சாவு அழகானது. ஏனெனில் அதிலிருந்தே வாழ்வு புத்தம் புதிய பனித்துளிகள் போல் வருகிறது. எனவேதான் பெருங்குழப்பம் பயன்படுத்தப்பட்டுக் கொண்டு இருக்கிறது. அதைத்தான் என்னைச் சுற்றிலும் நீங்கள் உணர்கிறீர்கள். இது எப்போதுமே இப்படித்தான் இருக்கும். ஏனெனில் ஏதாவது ஓர் இடத்தில் யாராவது ஒருவரை எப்போதும் நான் அடித்து நொறுக்கிக் கொண்டே இருக்கிறேன். உங்களுக்குத் தெரிந்த, தெரியாத ஆயிரக்கணக்கான வழிகளில் உங்களை நான் தகர்த்து அழித்துக் கொண்டு இருக்கிறேன். உங்கள் சவ நிலையில் இருந்து உங்களை உலுக்கி எடுத்துக் கொண்டிருக்கிறேன். உங்களை இறந்த காலத்தில் இருந்து உங்களை அசைத்து வெளியேற்றிக் கொண்டிருக்கிறேன். அதிக விழிப்புணர்வும் அதிக உயிரோட்டமும் உள்ளவர்களாக உங்களை ஆக்குவதற்கு நான் முயன்று கொண்டிருக்கிறேன்.

பழைய புராதன இந்து சாத்திரங்களில் குரு என்பவர் சாவுக்கு சமானம் என கூறப்பட்டுள்ளது. குரு ஒரு சாவாகவே இருக்க வேண்டும் என்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள். ஏனென்றால் சாவில் இருந்துதான் - புரட்சி, புதுஉயிர் தோற்றம், அடிப்படைப்பண்பு மாற்றம், மீட்பு ஆகியவை வருகின்றன. சாவு ஒரு ரசவாதம். மிகவும் நுட்பமான ரசவாதம் அதுவே. இதை இயற்கையே செய்கிறது. ஒருவர் மிகவும் பழசாகி 'பாழும் கிழடாகிப்' போகும்போது இயற்கையே அவரைக் கொன்றுவிடுகிறது.

கடந்துபோனதை தொற்றிக் கொண்டிருப்பதாலேயே நீங்கள் சாக பயப்படுகிறீர்கள். இல்லாவிட்டால் நீங்கள் மகிழவேச் செய்வீர்கள், அதனை வரவேற்பீர்கள். இயற்கையிடம் நன்றியுள்ளவர்களாக இருப்பீர்கள். ஏனென்றால் எப்போதுமே வயதானதை, கிழடுதட்டியதை, பழசை,

கடந்துபோனதை, செத்துப்போனதைத் தான் இயற்கை அழிக்கிறது. இதனால் உங்கள் உயிர் ஒரு புதிய உடலுக்கு நகர்கிறது.

ஒரு முதியவர், கடந்தகாலம், அறவே இல்லாத ஒரு புதிய குழந்தையாக ஆகிறார். எனவேதான் கடந்தகாலம் நினைவு வராதிருக்க இயற்கை உங்களுக்கு உதவுகிறது. கடந்த காலத்தை நீங்கள் நினைவு கூராதிருக்க இயற்கை பலவழிகளைக் கையாள்கிறது. இல்லாவிட்டால் நீங்கள் பிறக்கும் அப்போதே நீங்கள் ஒரு முதியவராக இருப்பீர்கள். ஏனெனில் முதியவர் இறந்து ஒரு புதிய குழந்தையாக பிறக்கிறார். எனவே கடந்தகாலத்தை அவர் நினைவு வைத்திருப்பாரேயானால் அவர் பிறக்கும்போதே கிழவராக இருப்பார். மொத்த நோக்கமும் நாசமாகிப் போகும்.

உங்களின் கடந்தகாலத்தை இயற்கை பூட்டி விடுகிறது. எனவேதான் ஒவ்வொரு பிறப்பும் ஒரு புதிய பிறப்பாகத் தோன்றுகிறது. ஆனால் மறுபடியும் நீங்கள் குவித்துக் கொள்ள தொடங்குகிறீர்கள். அது மிகவும் அதிகமாகும்போது இயற்கை மறுபடியும் உங்களைக் கொல்லும். கடந்தகாலத்துக்கு இறக்கும்போது மட்டுமே, ஒருவர் தன் கடந்த பிறவிகளை அறிந்துகொள்ள முடியக்கூடியவராக ஆகிறார். அப்போது கதவை இயற்கை திறந்துவிடுகிறது. இப்போது இயற்கை அறிந்து கொள்கிறது: இப்போது இயற்கை உங்களிடமிருந்து மறைக்க எந்தத் தேவையும் இல்லை. வாழ்வில் எப்போதும் புதுமையுடன் இளமையுடன் இருக்கும் தன்மையை நீங்கள் அடைந்திருக்கிறீர்கள். சாவது எப்படி என்பது இப்போது உங்களுக்கே தெரியும். எனவே இயற்கை உங்களைக் கொல்லத் தேவை இல்லை.

நீங்கள் கடந்த காலமும் இல்லை, வரும்காலமும் இல்லை, மாறாக பொருள்களின் 'நிகழ்தன்மையே' நீங்கள்தான் என்பதை ஒருமுறை நீங்கள் அறிந்ததுமே, முழு இயற்கையும் தன் கதவுகளையும் மர்மங்களையும் திறந்து காட்டுகிறது. உங்கள் முழு கடந்த காலத்தையும் - விதவிதமான வழிகளில் வாழ்ந்த கோடிக்கணக்கான பிறவிகளையும் - அது வெளிப் படுத்துகிறது. இப்போது அது வெளிப்படுத்தப்பட முடியும். ஏனென்றால் அதனால் இனி நீங்கள் சுமையாக மாட்டீர்கள். கடந்துபோனது எதுவும் இனி உங்களுக்கு பாரமாக முடியாது. மேலும் தொடர்ச்சியாய் புதிதாகிக் கொள்வதுஎப்படி என்றும் ரசவாதத்தை நீங்கள் அறிய வந்திருந்தால், இதுவே உங்களின் கடைசிப் பிறவியாக இருக்கும். ஏனெனில் உங்களை கொல்லவும் அதன்மூலம் மீண்டும் நீங்கள் பிறக்கும்படி செய்யவும் வேண்டிய தேவை இயற்கைக்கு இல்லை அதற்கு அவசியமே இராது! ஏனெனில் ஒவ்வொரு கணமும் தான் நீங்களே அதை செய்து கொண்டிருக்கிறீர்களே.

ஒரு புத்தர் மறைந்தபின் ஒருபோதும் திரும்பிவருவதில்லை என்பது ஏன், ஞானநிலைபேறு பெற்ற மனிதர் மறுபடியும் பிறப்பதில்லை என்பது ஏன்? என்பதன் விளக்கம் இதுவே: அதன் ரகசியம் என்னவென்றால், இப்போது அவர் சாவை அறிந்து கொண்டதால், அதை அவர் தொடர்ச்சியாகப் பயன்படுத்துகிறார். ஒவ்வொரு கணமும் நடந்து முடிவது எதுவாயினும் அது கடந்துவிட்டது, இறந்துவிட்டது. அதிலிருந்து அவர் விடுபட்டிருக்கிறார். ஒவ்வொரு கணமும், கடந்ததற்கு அவர் இறக்கிறார், மீண்டும் புதிததாய் பிறக்கிறார். அது ஒரு ஓட்டமாய் இருக்கிறது. ஆற்றின் ஓட்டம்போல், ஒவ்வொரு கணமும் புதுவாழ்வு பெறுவதாக அது இருக்கிறது. சுமார் எழுபது ஆண்டுகள் தொடர்ந்து அபத்தத்தை, குப்பையை, கழிவை சேகரிக்கவும், பின் அந்த பாழடைந்து போன மனிதனை கொல்லவும் மறுபடியும் அவன் குப்பையைச் சேர்த்து விடுவதால் பின் மறுபடியும் அவன் பிறக்க உதவி செய்யவும், மறுபடியும் அவன் குப்பையைச் சேர்த்து விடுவதால் இதே சூழற்சியிலேயே அவனை இருத்தவும் வேண்டிய தேவை அதன்பின் இயற்கைக்கு இருப்பதில்லை.

இது ஒரு விஷச் சுழற்சி. இதையே இந்துக்கள் **சன்சார்** என்று அழைத்துள்ளார்கள். **சன்சார்** என்றால் சக்கரம் என்று பொருள். சக்கரமானது ஒரே தடத்திலேயே திரும்பத் திரும்ப சுழன்றுகொண்டிருக்கிறது. இந்த சக்கர சுழற்சியிலிருந்து விடுபட்டவரே ஞானமடைந்த மனிதர் ஆகிறார். ''இதற்குமேல் வேண்டாம்! இனி இயற்கை என்னைக் கொல்லத் தேவையில்லை. ஏனெனில் இப்போது ஒவ்வொரு கணமும் என்னை நானே கொன்றுகொள்வேன்'' என்கிறார் அவர்.

நீங்கள் புத்தம்புதிதாகவே இருந்தால் உங்களுக்காக இறப்பை பயன்படுத்த தேவையே இயற்கைக்கு இராது. ஆனால் அப்போது பிறப்புக்கும் தேவை இராது. ஏனெனில் நீங்கள்தான் பிறப்பை தொடர்ச்சியாக பயன்படுத்திக் கொண்டிருக்கிறீர்களே. ஒவ்வொரு கணமும் கடந்ததற்கு நீங்கள் இறந்து, நிகழ்வதற்கு நீங்கள் பிறக்கிறீர்கள். எனவேதான் ஒரு புத்தரை சூழ்ந்திருக்கும் ஒரு நுட்பமான புத்துணர்ச்சியை - ஏதோ இப்போதுதான் அவர் குளித்துவிட்டு வந்திருப்பது போன்ற புதுமலர்ச்சியை - நீங்கள் உணர்கிறீர்கள். அவர் அருகில் நீங்கள் வந்ததுமே ஒரு நறுமணத்தை/ புத்துணர்வின் சுவாசத்தை நீங்கள் உணர்கிறீர்கள். ஒருகணம் இருந்த புத்தரை மறுபடியும் நீங்கள் ஒருபோதும் சந்திக்க முடியாது. ஏனெனில் ஒவ்வொரு கணமும் அவர் புதிதாய் இருக்கிறார்.

இந்துக்கள் மிகுந்த ஞானவான்களாய் இருக்கிறார்கள். ஏனென்றால் புத்தர்களையும், வாழ்க்கையை வென்றவர்கள் எனப்படும் ஜினர்களையும் ஞானமடைந்த, விழிப்பு பெற்ற மனிதர்களையும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அவர்கள் எதிர்கொண்டு வருவதால், பல உண்மைகளை

அவர்கள் புரிந்துள்ளார்கள். அந்த உண்மையில் ஒன்றை உங்களைச் சுற்றி எல்லா இடத்திலும் நீங்கள் பார்ப்பீர்கள்:. எந்த புத்தரும் வயதானவராகச் சித்திரிக்கப்படுவதில்லை. எந்த மகாவீரரும் வயதானவராக தீட்டப் படுவதில்லை. அப்படிப்பட்ட ஒரு சிலை கூட - ஒரு சித்திரம் கூட இல்லை: கிருஷ்ணர், ராமர், புத்தர், மகாவீரர் எவருமே வயது முதிர்ந்தவர்களாக காட்டப்படுவதில்லை.

அவர்களுக்கு வயதாகவில்லை என்பதல்ல: அவர்களும் முதுமை அடைந்தார்கள். தன் எண்பது வயதில் புத்தர் கிழவராகவே இருந்தார். வேறு எவரும் எண்பது வயதானால் எப்படி ஆவாரோ அப்படியேதான் அவரும் முதியவரானார். ஆனாலும் அவர் முதியவராகத் தீட்டப்படவதில்லை. இதற்கான காரணம் அகம் தொடர்பானது.ஏனெனில் அவர் அருகில் எப்போது நீங்கள் வந்தாலும் அவரை இளமையானவராகவும் புதுமையானவராகவுமே நீங்கள் காண்பீர்கள். மேலும் உங்களை நான் இடித்துதள்ள வேண்டி இருப்பது ஏனென்றால் உங்கள் உடல் இளமை யாக இருக்கலாம், ஆனால் உங்கள் உள்ளம் மிகமிக பழையதாக, ஆதிகாலத்ததாக, பெர்செபோலிசிலும் பிற இடங்களிலும் உள்ள கிரேக்க இடிபாடு களைப் போலவே பாழடைந்ததாக இருக்கிறது: இது பயன்படாது.

உங்களுக்குள் ஒரு உடைந்து போன உள்ளம் உள்ளது. அதனை இடித்துத் தள்ளத்தான் வேண்டும். நான் உங்களுக்கு ஒரு சூலையாக - ஒரு தீயாக - ஒரு - இறப்பாக இருந்தாக வேண்டும். நான் உங்களுக்கு உதவும் - ஒரு ஒழுங்கை ஒரு பேரண்டத்தை (*a cosmos*) உங்களுக்குள் கொண்டு வருவதற்கும் அதுதான் ஒரே வழியாகும். நான் எந்த ஒரு ஒழுங்கையும் உங்களின் மேல் புகுத்துவதற்கான வேலை செய்து கொண்டிருக்கவில்லை. ஏனெனில் அது உதாவது. வெளியிலிருந்து புகுத்தப்பட்ட எந்த ஒழுக்கமும் (உள்ளே உள்ள) பழமையான இடிபாடுகளுக்கு ஒரு முட்டுக் கட்டையாகவே இருக்குமே தவிர அது உதவாது.

நான் ஓர் உள் ஒழுங்கை நம்புகிறேன். அது உங்கள் சொந்த விழிப்புணர்வுடனும் மறுபிறப்புடனுமே நிகழ்கிறது. அது உள்ளிருந்து கிளம்பி வெளிநோக்கிப் பரவுகிறது. ஒரு மலரைப் போலவே அது இதழ்விரிக்கிறது. அதன் இதழ்கள் மையத்திலிருந்து விளிம்பை நோக்கி வெளிப்புறமாக திறக்கின்றன. உங்களுக்குள் மலர்ந்து உங்களைச் சுற்றி வெளியில் எங்கும் பரவும் அந்த ஒழுங்கமைப்பு மட்டுமே நிஜமானது, அழகானது. வெளியிலிருந்து ஒழுங்கு திணிக்கப்பட்டால், ''இதைச் செய், அதை செய்யாதே''என கட்டளைகள் உங்களுக்கு விதிக்கப்பட்டால், ஒரு கைதியாக இருக்குமாறு நீங்கள் நிர்ப்பந்தப் படுத்தப்பட்டால், அது உதவாது; ஏனெனில் அது உங்களை மாற்றாது.

எதுவுமே வெளியிலிருந்து மாற முடியாது. ஒரே ஒரு புரட்சிதான் உள்ளது - அந்த ஒன்று உள்ளிருந்து வருவதாகும். ஆனால் அந்தப் புரட்சி நடப்பதற்குமுன் நீங்கள் அடியோடு அழிக்கப்படவேண்டும். உங்கள் கல்லறையின்மேல் மட்டுமே புதியது பிறக்கும். எனவேதான் என்னைச் சுற்றிலும் பெருங்குழப்பம் நிலவுகிறது. ஏனெனில் நான் ஒரு பெருங் குழப்பம்! குழப்பத்தை ஒரு வழிமுறையாக நான் பயன் படுத்திக் கொண்டிருக்கிறேன்.

**ஓம்-இன் மீது சாதனை செய்யும்போது அதை ஒரு மந்திரம்போல் திரும்பத் திரும்ப சொல்வது அதிக நல்லதா அல்லது அதை உள் ஒலியாகக் கேட்க முயல்வது அதிக நல்லதா?**

ஓம் எனும் மந்திரத்தை மூன்று கட்டங்களாகச் செய்ய வேண்டும். முதலில் நீங்கள் அதை மிகவும் உரக்க திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டும். இதன் பொருள், அது உங்கள் உடலில் இருந்து வரவேண்டும் என்பதே. முதலில் உடலில் இருந்து வரவேண்டும். ஏனெனில் உடலே பிரதானக் கதவு. எனவே முதலில் உடல் அதனால் நிரம்பி வழியுமாறு செய்யவேண்டும்.

எனவே அதை உரத்து ஓதுங்கள். ஒரு கோயிலுக்கு அல்லது உங்கள் அறைக்கு அல்லது எங்கே உங்கள் விருப்பம்போல் அதை நீங்கள் உரத்து ஓத முடியுமோ அங்கு போங்கள். அதை ஓதுவதில் முழு உடலையும் ஈடுபடுத்துங்கள். ஆயிரக்கணக்கான பேர் கேட்டுக் கொண்டிருக்க, ஒலிபெருக்கி இல்லாமல் அவர்களிடம் நீங்கள் பேசுவது போல் மிக உரத்து கத்துங்கள் - அதனால் உங்கள் உடல் முழுதும் அதிர்கிறது; அதனுடன் சேர்ந்து உதறுகிறது. சிலமாதங்களுக்கு, அநேகமாக மூன்று மாதங்களுக்கு வேறெதைப் பற்றியும் நீங்கள் கவலைப்படக்கூடாது. முதல் கட்டமே மிகவும் முக்கியம். ஏனென்றால் அதுவே அடித்தளமாக (அஸ்திவாரமாக) அமைகிறது. உரக்க, உங்கள் உடம்பின் ஒவ்வோர் அணுவும் அதை உச்சரிக்கும் அளவுக்கு, கதறி ஓலமிடும் அளவுக்கு உரக்க திரும்பத் திரும்பச் சொல்லுங்கள்.

மூன்று மாதங்கள் கழித்து உங்கள் உடம்பு நீக்கமற நிரம்பிவிட்டது என நீங்கள் உணரும்போது அது உடலின் உயிரணுக்களுக்குள் ஆழமாக புகுந்துவிட்டிருக்கிறது. அந்நிலையில் நீங்கள் வாய்விட்டு உரத்து ஓதும்போது, ஓதுவது வாய் மட்டுமல்ல, தலைமுதல் கால் விரல் நுனிவரை முழு உடம்புமே அதை ஓதிக்கொண்டிருக்கிறது. அது வருகிறது! மூன்று மாதங்களாக தினம் குறைந்தது ஒருமணி நேரம் தொடர்ச்சியாக நீங்கள் உச்சரித்து வந்தால், மூன்று மாதங்களுக்குள், ஓதுவது வாய்மட்டுமல்ல -

உடல் முழுவதும் தான் என்பதை நீங்கள் உணர்வீர்கள். இது நிகழ்கிறது - பல தடவை இப்படி நிகழ்ந்துள்ளது!

மெய்யாகவே நீங்கள் நேர்மையாக, நம்பகமாகச் செய்து வந்தால், உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்ளாதிருந்தால், உங்கள் முயற்சி அரைகுறையாய் இல்லாமல், நூறு சதமும் இருந்தால், பின் மற்றவர்கள்கூட அதைக் கேட்க முடியும். உங்கள் பாதங்களில் அவர்கள்தம் காதுகளை வைக்கிறார்கள். நீங்கள் சத்தமாக சொல்லும்போது உங்கள் எலும்புகள் வழியாக அது வருவதை அவர்கள் கேட்பார்கள். ஏனெனில் ஒலியை உடல் முழுவதும் உள்வாங்க - கடத்த முடியும், உடல் முழுவதாலும் ஒலியை உருவாக்க முடியும். இதில் எந்தப் பிரச்சினையும் இல்லை. உங்கள் வாய் என்பது உடலின் ஒரு பாகம்தான், ஒரு சிறப்புப்பகுதி - அவ்வளவுதான். நீங்கள் முயற்சிசெய்தால் உங்கள் உடலின் எல்லாபாகத்தாலும் ஓத முடியும்.

இது நடந்தது: சுவாமி ராம் என்ற இந்து சந்நியாசி ஒருவர் பல ஆண்டுகளாக அதைச் செய்தார், சத்தமாக 'ராமா' என ஓதிவந்தார். ஒருமுறை அவர் இமயமலையில் உள்ள ஒரு சிற்றூரில் ஒரு நண்பருடன் தங்கி இருந்தார். நண்பர் மிகவும் பிரபலமான சீக்கிய எழுத்தாளர் சர்தார் பூர்ணசிங் ஆவார். நள்ளிரவில் திடீரென 'ராம், ராம், ராம்' என்ற உச்சரிப்பை பூர்ணசிங் கேட்டார். வீட்டில் வேறு யாரும் இல்லை; சுவாமி ராமும் அவருமே இருந்தார்கள். இருவருமே தத்தம் கட்டில்களில் படுத்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். ஊரோ மிகவும் தள்ளி - சுமார் இரண்டு, மூன்று மைல் தள்ளியே இருந்தது. எனவே வேறு யாரும் இல்லை.

பூரணசிங் எழுந்தார்.குடிசையைச் சுற்றிப் பார்த்தார். யாரும் இல்லை. ராமிடமிருந்து அவர் அதிகமாய் விலகிச் செல்ல செல்ல ஒலியும் குறைந்தபடியே வந்தது. அவர் திரும்பி வரும்போது சத்தம் மறுபடியும் அதிகரித்து கேட்டது. பின் அவர் ராமை நெருங்கி வந்தார். ராம் நன்கு தூங்கிக் கொண்டிருந்தார். ராமின் மிக அருகில் அவர் வந்ததுமே சத்தம் இன்னும் உரத்துக் கேட்டது. பின் அவர் தன் காதை ராமின் உடல்மேல் வைத்தார். முழு உடலும் 'ராமா' என்ற ஒலியை எதிரொலித்துக் கொண்டிருந்தது.

இது நிகழ்கிறது. உங்கள் உடல் முழுதும் ஊறிப் போனதாக செறிவடைந்ததாக ஆக முடியும். இது முதல் அடிவைப்பு. மூன்று மாதங்கள், ஆறு மாதங்கள், ஆகலாம் - ஆனால் நீங்கள் செறிவேறியவராக உணர முடியவேண்டும். இந்த செறிந்த - நிரம்பிய நிலை என்பது, உங்களுக்குப் பசிக்கும்போது நீங்கள் உணவு உட்கொண்ட பின் உங்கள் வயிறு நிறைவடைந்துவிடுவதை நீங்கள் உணர்வது போலவே உணரப்படுகிறது. முதலில் உடல் நிறைவடைய வேண்டும். நீங்கள் தொடர்ந்து செய்தால்

மூன்று அல்லது ஆறுமாதங்களில் அது நிகழலாம். மூன்று மாதங்கள் என்பதே சராசரி வரம்பு. ஒரு சிலருக்கு அதற்கும் முன்பே நிகழ்கிறது. ஒரு சிலருக்கு இன்னும் கொஞ்சம் கூடுதல் காலம் எடுக்கிறது.

முழு உடலையும் அது நிரப்பினால் காமம் முழுமையாக மறைந்து விடும். உடல் முழுவதும் மிகுந்த ஆறுதல் பெறுகிறது, எதிரொலிக்கும் சத்தத்தினால் மிகுந்த சாந்தமாக ஆகிறது. எனவே ஆற்றலை வெளியில் எடுத்தெறியத் தேவையில்லை. வெளியேற்றத் தேவையில்லை. நீங்கள் மிகமிக ஆற்றல் உள்ளவராக உணர்கிறீர்கள். ஆனால் இந்த ஆற்றலைப் பயன்படுத்தாதீர்கள். ஏனெனில் உங்களால் பயன்படுத்த முடியும், ஆனால் எல்லா பயன்பாடும் தவறான உபயோகமேயாகும், ஏனெனில் இது முதல் கட்டம் மட்டுமே.

இரண்டாவது அடியை எடுத்து வைக்க முடிவதற்கான ஆற்றலை நீங்கள் திரட்டிக் கொள்ள வேண்டி உள்ளது. அதை நீங்கள் செலவழித்து விட்டால்... உங்களால் செலவிட முடியும். ஏனெனில் ஆற்றலின் அளவு அதிகமாக இருப்பதால் உங்களால் பல காரியங்களைச் செய்ய முடியும். நீங்கள் ஒன்றைச் சொன்னாலே போதும், அது அப்படியே பலிக்கும். இந்தக் கட்டத்தில் இது தடுக்கப்பட்டிருக்கிறது. நீங்கள் செயலூக்கமாக இருக்கக்கூடாது. நீங்கள் எதையும் சொல்லக் கூடாது. கோபத்தில் எவரையும் ''செத்துப்போ'' என நீங்கள் சொல்லிவிடக் கூடாது. ஏனெனில் இது நடந்துவிட முடியும். உங்கள் முழு உடலாற்றலும் செறிவடைந்த நிலையில் உங்கள் உச்சரிப்பு மிகவும் ஆற்றலுடையதாக ஆகிறது. எனவே இந்தக் கட்டத்தில் எந்த எதிர்மறையான பேச்சையும் - தெரியாமல் கூட சொல்லிவிடக் கூடாது என்று சொல்லப்படுகிறது. எதிர்மறையான விஷயம் எதுவும் கூறப்படக் கூடாது.

நீங்கள் திகைப்பு அடையலாம், இருந்தாலும் உங்களுக்கு நான் சொல்வதே நல்லது: இந்த வீட்டின் பின்புறம் நாம் ஒரு கூரை போட்டுக் கொண்டிருந்தோம். அது விழுந்துவிட்டது. உங்களில் பலபேரின் காரணமாகத்தான் அது விழுந்து விட்டது. நீங்கள் மிகுந்த பிரயத்தனம் எடுத்து தியானம் செய்து கொண்டிருக்கிறீர்கள். அதில் குறைந்தது இருபது பேர், அது விழுந்துவிடும் என்று நினைத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் உதவினார்கள். அது விழ அவர்கள் உதவினார்கள். குறைந்தது இருபது பேர் தொடர்ந்து அதை நினைத்துக் கொண்டிருந்தார்கள்... அவர்கள் அங்கு இருந்தபோது, அதை அவர்கள் பார்ப்பார்கள், அது விழுந்துவிடும் என நினைப்பார்கள். ஏனெனில் அதன் அமைப்பைப் பார்த்தபோது அது அப்படியே நிற்கப் போகிறது என்று அவர்களின் மனங்களில் தோன்றவில்லை.

அது விழுந்தேவிட்டது! மேலும் அது விழுந்ததும், ''வேறு வழி? நாம் நினைத்தது சரிதான்'' என்று அவர்கள் நினைத்தார்கள். இது ஒரு நச்சுச்சுழல் போல். நீங்களே காரணமாகிறீர்கள், பின் நீங்களே சரிதான் என்கிறீர்கள். ஆனால் நீங்கள் எல்லாருமே தியானத்தில் மிகுந்த முயற்சி செய்து கொண்டிருக்கிறீர்கள். இந்நிலையில் நீங்கள் என்ன நினைத்தாலும் அது நிகழ முடியும். நீங்கள் தியானித்துக் கொண்டிருக்கும் போது ஒருபோதும் எதிர்மறையான எண்ணத்தை எண்ணாதீர்கள். அது நடப்பது சாத்தியமே. ஏனெனில் கொஞ்சம் ஆற்றலை நீங்கள் சேர்த்து இருக்கிறீர்கள். ஆனால் கூரை விழுந்தவிட்டதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. இந்த வீழ்ச்சியின் காரணமாக உங்களில் பலர் குறிப்பிட்ட அளவு ஆற்றலை இழந்து விட்டிருக்கிறீர்கள்- அதுதான் என் அக்கறையாய் இருக்கிறது. ஏனெனில் உங்கள் ஆற்றலை பயன்படுத்தாமல் எதுவும் நிகழ்வதில்லை.

அது விழுந்துவிடும் என்று சொல்லிக் கொண்டிருந்தவர்கள்... கூரை விழுந்தது. மேலும் அவர்கள் தம்மையே கவனித்துப் பார்க்க முடியும். சில நாள்களுக்கு அவர்கள் மிகவும் வீரியமில்லாமல், சோகமாகி, சோர்ந்து போய் இருந்தார்கள். தம் ஆற்றலை அவர்கள் இழந்துவிட்டார்கள். கூரைவிழுந்துவிட்டதால் தான் தாம் சோகமாக இருப்பதாக அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கலாம் - கிடையாது! குறிப்பிட்ட அளவு ஆற்றலை அவர்கள் இழந்துவிட்டிருக்கிறார்கள் என்பதாலேயே அவர்கள் சோகமாக இருந்தார்கள். வாழ்க்கை என்பதே ஓர் ஆற்றல் நிகழ்வாகவே (*Energy phenomenon*)இருக்கிறது.

நீங்கள் தியானிக்கவில்லை என்றால் பெரிதாக எந்தச் சிக்கலும் இல்லை. நீங்கள் விரும்பும் எதை வேண்டுமானாலும் நீங்கள் சொல்ல முடியும். ஏனெனில் உங்களிடம் வீரியம் இருக்காது. ஆனால் நீங்கள் தியானிக்கும்போது நீங்கள் சொல்லும் ஒவ்வொரு சொல்லைக் குறித்தும் நீங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஏனென்றால் உங்களின் ஒவ்வொரு சொல்லும் உங்களை சுற்றி எதையாவது தோற்றுவித்து விட முடியும்.

முழு உடலையும் முற்றிலும் நிரப்புவதே முதல் கட்டம். இதனால் உடல் முழுதுமே ஓர் உச்சரிப்பு சக்தியாக ஆகிறது. நீங்கள் நிறைந்து விட்டதாக உணர்ந்ததுமே இரண்டாவது அடியை எடுத்து வையுங்கள். இந்த ஆற்றலை ஒருபோதும் பயன்படுத்தாதீர்கள். ஏனெனில் இந்த ஆற்றல் சேகரிக்கப்பட்டு இரண்டாவது அடிவைப்புக்கு பயன் படுத்தபடவேண்டி இருக்கிறது.

இரண்டாவது கட்டத்தில் உங்கள் வாயை மூடிக் கொண்டு ஓம் என்ற சொல்லை மனத்துக்குள் திரும்பத் திரும்ப உச்சரியுங்கள். முதலில் உடல்

ரீதியாக. இரண்டாவது மனரீதியாக. இப்போது உடலைப் பயன்படுத்தவே கூடாது. தொண்டை, நாக்கு, உதடுகள் எல்லாமே அமைதியாக இருக்க வேண்டும. உடலும் பூட்டப்பட்டு, மனம் மட்டுமே ஓதியபடி இருக்க வேண்டும் - ஆனால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு சத்தமாக மனதால் ஓதவேண்டும். உடலைப் பயன்படுத்தி எவ்வளவு சத்தம் எழுப்பினீர்களோ அதே சத்தம் எழும்ப வேண்டும். இப்போது மனம் அதனால் நிரம்பி வழிய விடுங்கள். இப்படி மூன்று மாதங்கள் மனத்தை அதனால் செறிவேற்றுங்கள்.

உடல் எடுத்துக் கொண்டிருந்த அதே கால அளவையே மனமும் எடுத்துக் கொள்ளும். உடலில் நீங்கள் ஒரு மாதத்தில் நிறைவை அடைய முடிந்தால் மனதிலும் ஒரே மாதத்தில் நீங்கள் அடைந்து விடுவீர்கள். உடலில் நீங்கள் செறிவேற்ற ஏழு மாதங்கள் எடுத்தால் மனமும் ஏழு மாதங்கள் எடுக்கும். ஏனெனில் உடலும் மனமும் முற்றிலும் இரண்டாக இல்லை. மாறாக அவை உடல் - மனமாகவே, ஒரே நிகழ்வாகவே உள்ளன. அந்த ஒரே பொருளின் ஒருபகுதி உடல், மறுபகுதி மனம்: உடல் என்பது கண்ணுக்கு தெரிகிற மனம். மனம் என்பது கண்ணுக்குத் தெரியாத உடல்.

எனவே மற்ற பகுதியும், உங்கள் ஆளுமையின் நுண் பகுதியும் நிறையட்டும். உள்ளூர சத்தமாக ஓதுங்கள். மனம் நிரம்பியதும் உங்களுக்குள் இன்னும் அதிக ஆற்றல் சுரக்கிறது. முதல் நிறைவுடன் காமம் மறையும். இரண்டாவது நிறைவுடன் காதல் / அன்பு மறையும் - அதாவது நீங்கள் அறிந்திருக்கிற அன்பு ஒரு புத்தர் அறிந்துள்ள அன்பல்ல. உங்களின் அன்பே மறையும்.

ஏனெனில் காமம் என்பது உடல் பகுதியின் அன்பு. அன்பு என்பது மன பகுதியின் காமம். அன்பு மறைகிறபோது, ஆபத்து இன்னும் அதிகமாக உள்ளது. நீங்கள் பிறருக்கு மிக மிக ஆபத்தானவர்களாக இருப்பீர்கள். நீங்கள் ஒன்றைச் சொன்னால் அது உடனடியாகப் பலிக்கும். எனவேதான் இரண்டாவது நிலையில், முழுமௌனம் முன்மொழியப்படுகிறது. எனவே இரண்டாவது கட்டத்தில் நீங்கள் இருக்கும்போது, முற்றிலும் மௌனமாக இருங்கள்.

ஆனால் இந்த ஆற்றலை பயன்படுத்துவதற்கான ஓர் உந்துதல் இருக்கும். ஏனெனில் அதைப் பற்றிய மிகுந்த ஆர்வம், குழந்தைத்தனமான ஆர்வம் உள்ளவர்களாக நீங்கள் இருப்பீர்கள். நீங்கள் மிகுதியான ஆற்றலைப் பெற்றிருப்பீர்கள். என்ன நடந்துவிட முடியும் என்பதைக் காண நீங்கள் ஆவலாயிருப்பீர்கள் - ஆனாலும் அதை பயன்படுத்தாதீர்கள். சிறுபிள்ளைத்தனமாக இராதீர்கள். ஏனெனில் இன்னும் மூன்றாவது அடி எடுத்துவைக்க வேண்டி உள்ளது, அதற்கு ஆற்றல் தேவைப்படுகிறது. எனவேதான் காமம் மறைந்துவிட்டது. ஏனெனில் ஆற்றலைத் திரட்டிக்

கொள்ள வேண்டி உள்ளது. காதல் மறைந்துவிட்டது. ஏனெனில் நுண் ஆற்றலைத் திரட்டிக் கொள்ள வேண்டி உள்ளது.

மனம் நிரம்பிவழிவதாக உணரும்போது மூன்றாவது அடி எடுத்து வைக்கப்படுகிறது. இது நிகழும்போது நீங்கள் அதை அறிய வருவீர்கள். அதை ஒருவர் எவ்வாறு உணருவார் என கேள்வி கேட்கத் தேவை இல்லை. இது உணவு உண்பதைப் போன்றதே. வயிறு நிறைந்ததும் ''போதும்!'' என உணர்கிறீர்கள். மனம் நிறைந்ததும் அது போதும் என உணரும். பின் நீங்கள் மூன்றாவது கட்டத்தை தொடங்குகிறீர்கள். மூன்றாவது நிலையில் உடலையும் பயன்படுத்தக் கூடாது. மனத்தையும் பயன்படுத்தக் கூடாது. உடலை நீங்கள் பூட்டியது போலவே இப்போது மனத்தையும் நீங்கள் பூட்டுகிறீர்கள்.

மேலும் இது எளிதுதான். மூன்று, நான்கு மாதங்களாக நீங்கள் மந்திரம் ஜெபித்துக் கொண்டு வந்திருப்பதால் அது மிகவும் எளிதுதான்: எளிதாக உடலைப் பூட்டுகிறீர்கள். எளிதாக மனதைப் பூட்டுகிறீர்கள். நிதானமாக கவனியுங்கள், உங்கள் இதயத்தில் அடி ஆழத்திலிருந்து ஓர் ஒலி வந்துகொண்டிருப்பதை நீங்கள் கேட்பீர்கள். வேறு யாரோ அதை ஓதிக் கொண்டிருப்பதைப் போன்று ஓம் அங்கு இருக்கும். அதைக் கவனிப்பவராக மட்டுமே நீங்கள் இருக்கிறீர்கள். இதுதான் மூன்றாவது நிலை. இந்த மூன்றாவது நிலை உங்கள் மொத்த ஜீவனையும் மாற்றும். எல்லாத் தடைகளும் விழும். எல்லா இடையூறுகளும் மறையும். ஆக இதில் உங்கள் முழு ஆற்றலையும் ஈடுபடுத்தினால் இதற்கு ஏறக்குறைய, சராசரியாக ஒன்பது மாதங்கள் ஆகும்.

**ஓம்-ன்மீது சாதனை செய்யும்போது அதை ஒரு மந்திரம்போல் திரும்பத் திரும்ப சொல்வது அதிக நல்லதா அல்லது அதை ஓர் உள் ஒலியாக கேட்க முயல்வது அதிக நல்லதா?**

தற்சமயம் அதை ஒரு உள் ஒலியாக உங்களால் கேட்க முடியாது. உள் ஒலி அங்கே இருக்கிறது. ஆனால் அது மிகவும் மவுனமாக, மிகவும் நுட்பமாக உள்ளது. அதை கேட்பதற்குரிய காது உங்களிடம் இல்லை. அந்தக் காதுகளை வளர்த்தெடுக்க வேண்டி உள்ளது. உடல் நிரம்பி வழிகிறது, மனம் நிரம்பி வழிகிறது. அதன் பிறகு மட்டுமே அந்த காதை நீங்கள் பெற்றிருப்பீர்கள். வேண்டுமானால் அதை மூன்றாவது காது என்றுகூடச் சொல்லலாம். அதைக் கொண்டு எப்போதும் இருந்து வருகிற அந்த ஒலியை உங்களால் கேட்க முடியும்.

அது ஒரு பேரண்ட ஒலி: உள்ளும் புறமும் அது உள்ளது. உங்கள் காதை ஒரு மரத்தில் வைத்துக் கேட்டால் அங்கே அது இருக்கிறது. உங்கள் காதை ஒரு பாறைமேல் வைத்துக் கேட்டால் அங்கும் அது இருக்கிறது.

ஆனால் முதலில் உங்கள் உடல் - மனம் கடக்கப்பட வேண்டும். நீங்கள் அதிகமதிக ஆற்றலை அடைந்து கொண்டாக வேண்டும். நுட்பமானதைக் கேட்க பேராற்றால் தேவைப்படும்.

முதலாவதுடன் காமம் மறைகிறது. இரண்டாவதுடன் காதல் மறைகிறது. மூன்றாவதில் நீங்கள் அறிந்திருக்கிற அனைத்தும் அடியோடு மறைகிறது. நீங்களே இல்லாமல் போனதுபோல், இறந்துவிட்டது போல், மறைந்துவிட்டது போல், கரைந்துவிட்டது போல், கலந்துவிட்டதுபோல் இருக்கிறது. அது ஒரு சாவு தான். இது ஏற்படுகிறது. அதிலிருந்து நீங்கள் தப்பிக்காதிருந்தால், பீதி அடையாதிருந்தால்.'' ஏனெனில் தப்பித்துக் கொள்வதற்கான ஒவ்வோர் உந்துதலும் உங்களில் எழும். ஏனெனில் இது ஒரு பாதாளம் போல் தோன்றுகிறது. அதில் நீங்கள் விழுந்தபடியே இருக்கிறீர்கள். அந்த பாதாளமோ அடியற்றதாக உள்ளது ... அதற்கு முடிவே இல்லாததுபோல் தோன்றுகிறது. அடியற்ற பாதாளம் ஒன்றில் விழுந்து கொண்டிருக்கும் ஓர் இறகுபோல் நீங்கள் ஆகிறீர்கள் - விழுந்து கொண்டே, விழுந்துகொண்டே, விழுந்துகொண்டே போகிறீர்கள் - அதற்கு எந்த ஒரு முடிவும் இல்லைபோல் தோன்றுகிறது.

இதனால் நீங்கள் பயப்படுவீர்கள். அதிலிருந்து தப்பி ஓடிவிட விரும்புவீர்கள். அதிலிருந்து நீங்கள் ஓடிவிட்டால், மொத்த முயற்சியும் முற்றிலும் வீணாகிப் போகிறது. அந்த தப்பி ஓடும் ஓட்டம் என்றால், ஓம் மந்திரத்தை நீங்கள் ஓதத் தொடங்கி இருப்பீர்கள். நீங்கள் ஓட்டம் பிடிக்கத் தொடங்கினால், நீங்கள் செய்யும் முதல் காரியம் அதுவாகத்தான் இருக்கும். ஏனென்றால் நீங்கள் ஓதத் தொடங்கினால் மறுபடியும் நீங்கள் மனத்துக்குள் இருக்கிறீர்கள். நீங்கள் உரத்து ஓதினால் திரும்பவும் உடலுக்கு வந்து விடுகிறீர்கள்.

எனவே நீங்கள் (மந்திரத்தை) கவனிக்கத் தொடங்கும்போது (அதை) ஓதக்கூடாது. ஏனெனில் அந்த ஓதல் ஒரு தப்பித்தலாகவே இருக்கும். ஒரு மந்திரத்தை முதலில் ஓதி, இறுதியில் விட்டுவிட வேண்டும். ஒரு மந்திரத்தை நீங்கள் விட்டுவிட முடிகிற போது மட்டுமே அது நிறைவு பெறுகிறது. அதை நீங்கள் ஜெபித்துக் கொண்டே போனால், அதை ஒரு புகலிடம் போல் தொடர்ந்து தொற்றிக் கொள்வீர்கள். நீங்கள் பயப்படும் போதெல்லாம் திரும்பி வந்து அதை ஓதுவீர்கள்.

எனவேதான் உடலில் நிரம்பி வழியுமளவு மிக ஆழமாக அதை ஓதுங்கள் என்கிறேன் நான். அதற்குமேல் உடலில் அதை ஓத தேவை இல்லை. மனம் நிறைந்தபின், அதில் அதை ஓத தேவை இல்லை. நிரம்பி வழியும்போது அதற்கு மேலும் அதனுள் மந்திரத்தை ஓதி நிரப்ப இடம் இருப்பதில்லை. எனவே உங்களால் தப்பிக்க முடியாது. அதன் பிறகு

மட்டுமே ஓசையில்லாத ஓசையை (*Soundless sound*)கேட்பது சாத்தியமாக ஆகிறது.

**இன்னொரு நண்பர் கேட்டுள்ளார்,**

**முன்பு, ஹூ (Hoo) மந்திரத்தைப் பற்றியே எப்போதும் நீங்கள் பேசுவீர்கள். பின் ஏன் இப்போது ஓம் மந்திரத்தை வலியுறுத்திக் கொண்டிருக்கிறீர்கள்?**

நான் ஒன்றும் வலியுறுத்திக் கொண்டில்லை. நான் பதஞ்சலியை உங்களுக்கு விளக்கிக் கொண்டிருக்கிறேன், அவ்வளவுதான். இப்பவும் நான் வலியுறுத்துவது ஹூ வைத்தான். மேலும் ஓமைப் பற்றி நான் சொல்லிக் கொண்டிருக்கும் யாவும் அப்படியே ஹூவுக்கும் பொருந்தும். ஆனால் நான் எப்போதும் ஹூவுக்கே முக்கியத்துவம் தருகிறேன்.

நான் உங்களுக்குச் சொன்னதுபோல், ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்தவர் பதஞ்சலி. அன்று மக்கள் எளிமையாக இருந்தார்கள். மிகவும் எளிமையானவர்களாக, களங்கமற்றவர்களாக இருந்தார்கள். அவர்களால் எளிதாக விசுவாசிக்க முடிந்தது. அவர்களிடம் பெருமளவுக்கு மனம் இல்லை. அவர்கள் தலையைச் சார்ந்தவர்களாக இல்லை: அவர்கள் இதயம் சார்ந்தவர்களாகவே இருந்தார்கள். ஓம் என்பது ஒரு மெல்லிய ஒலி - இதமானது, மென்மையானது, வலிந்து தாக்காதது. ஓமை நீங்கள் ஓதினால் அது தொண்டையிலிருந்து இதயம்வரை செல்கிறது, அதற்கு கீழ் ஒருபோதும் செல்வதில்லை. அவர்கள் இதயமுள்ள மக்களாக இருந்தார்கள் - ஓமே அவர்களுக்குப் போதுமானதாக இருந்தது: ஒரு மிதமான மருந்தே, ஓமியோ மருந்தே அவர்களுக்குப் போதுமானதாக இருந்தது.

உங்களுக்கோ அது பெரிதாக உதவாது. உங்களுக்கு ஹூதான் அதிக பயனுள்ளதாக இருக்கும். ஹூ என்பது ஒரு சூஃபி மந்திரம். ஓம் என்பது இந்து மந்திரமாக இருப்பது போல் ஹூ என்பது முகமதிய மந்திரமாக, சூஃபி மந்திரமாக இருக்கிறது. மிகவும் ஆக்கிரமிப்பான, வன்முறையான, தந்திரமான, புத்திசாலிகளான போராளிகளான ஒரு நாட்டுக்காகவும் இனத்துக்காகவுமே ஹூ மந்திரத்தை சூஃபிகள் உருவாக்கினார்கள்; எளிய, அப்பாவி மக்களுக்காக அல்ல. அவர்களுக்காகவே ஹூ மந்திரம் கண்டுபிடிக்கப்பட்டது.

ஹூ என்பது அல்லாவின் கடைசிப் பகுதியாகும். அல்லாஹ் - அல்லாஹ் அல்லாஹ் - அல்லாஹ் என்று விடாமல் நீங்கள் உச்சரித்தால், மெல்ல மெல்ல அது அல்லாஹூ - அல்லாஹூ - அல்லாஹூ என்ற வடிவம் எடுக்கிறது. பின் மெல்ல மெல்ல முதல் பகுதி கைவிடப்படுகிறது; லாஹூ - லாஹூ - லாஹூ என்றாகிறது. பின் ''லா'' வும் விடப்படுகிறது.

ஹூ - ஹூ - ஹூ என ஆகிறது. இது மிகவும் ஆற்றலுள்ளது. உங்கள் காம *(sex center)* மையத்தை நேரிடையாகத் தாக்குகிறது. உங்கள் இதயத்தை அது தொடுவதில்லை. உங்கள் காம மையத்தையே தாக்குகிறது.

ஹூ என்பதே உங்களுக்குப் பயனுள்ளதாக இருக்கும். ஏனெனில் இப்போதெல்லாம் உங்கள் இதயம் ஏறக்குறைய செயல்படுவதே இல்லை. அன்பு மறைந்துவிட்டது. காமம் மட்டுமே எஞ்சியுள்ளது. உங்கள் காம மையமே செயல்பட்டு கொண்டிருக்கிறது; உங்கள் அன்பு மையம் அல்ல.. எனவே ஓம் அதிக உதவிகரமாக இருக்காது. ஹூ ஆழமாக உதவும் ஏனென்றால் இப்போது உங்கள் ஆற்றல் இதயத்தின் அருகில் இல்லை. உங்கள் ஆற்றல் காம மையத்தின் அருகிலேயே உள்ளது. எனவே காம மையத்தையே நேரடியாக தாக்க வேண்டியுள்ளது. அப்போதுதான் ஆற்றல் மேல்நோக்கி எழுகிறது.

குறிப்பிட்ட காலத்திற்கு ஹூவை பயன்படுத்திய பிறகு இனி அவ்வளவு கடுமையான மருந்து உங்களுக்குத் தேவையில்லையென நீங்கள் கருதலாம். அப்போது நீங்கள் ஓம்மிக்கு மாறிகொள்ள முடியும். இப்போது நீங்கள் இதயத்ததுக்கு அருகில் இருக்கிறீர்கள். காம மையத்தின் அருகில் அல்ல என நீங்கள் உணர தொடங்கும்போது மட்டுமே நீங்கள் ஓம்மை பயன்படுத்த முடியும்; அதற்கு முன்பாக அல்ல. ஆனால் அதற்கு தேவையும் இல்லை. கடைசி வரைக்கும் ஹூ உதவும்.

ஆனால் உங்களுக்கு மாற்றிக்கொள்ள தோன்றினால் நீங்கள் மாற்றி கொள்ள முடியும். இப்போது தேவையில்லை என நீங்கள் கருதினால், காமத்தை உங்களில் நீங்கள் உணராவிட்டால்; காமம் உங்களுக்கு ஒரு தொந்தரவாகயில்லை, அதை குறித்து நீங்கள் நினைப்பதில்லை, அது ஒரு மூளை சார்ந்த கற்பனையில்லை, அதனால் கவரப்படுவதில்லை என்றால்; அழகிய பெண் ஒருத்தி கடந்துசென்றால் ''ஆம், ஒரு பெண் கடந்துபோனாள்'' என்று மட்டுமே அதைப் பற்றி நீங்கள் குறிப்பிடுகிறீர்கள், வேறு எந்த உணர்ச்சியும் உங்களில் எழவில்லை, உங்கள் காம மையம் அதனால் தாக்கப்படவில்லை, ஆற்றல் எதுவும் உங்களுக்குள் அலைபாய்வதில்லை என்றால் - அப்போது நீங்கள் ஓமைத் தொடங்க முடியும்.

ஆனால் தேவையில்லை; ஹூவுடனேயே நீங்கள் தொடர முடியும் ஹூ ஒரு கடுமையான அளவுதான். நீங்கள் ஹூ பயன்படுத்தினால், உடனடியாக அது உங்கள் வயிற்றுக்கு போவதை - ஹரா மையத்துக்கும், பின் காம மையத்துக்கும் போவதை - உங்களால் உணர முடியும். காம ஆற்றலை அது உடனடியாக மேல்நோக்கி உந்துகிறது. காம மையத்தை அது தாக்குகிறது.

நீங்களோ பெருமளவுக்கு தலையில் மையங்கொண்டவராகவே இருக்கிறீர்கள். இது எப்போதுமே நிகழ்வதுதான்; தலையை மையமாக கொண்ட மக்கள், நாடுகள், நாகரிகங்கள் எல்லாமே காமத்தன்மை மிக்கவையாகவே ஆகின்றன. அவர்கள் அதிகமும் இதயம்சார்ந்த மக்களாய் இருப்பதைவிட, காமம் மிகுந்த மக்களாகவே இருக்கிறார்கள். இதயம் சார்புடைய மக்கள் அன்பானவர்கள். அன்பின் ஒரு நிழலாக மட்டுமே காமம் வருகிறது. தன்னளவில் அது முக்கியமானது அல்ல. இதயத்தை மையமாகக் கொண்ட மக்கள் அதிகமாகச் சிந்திப்பதில்லை. ஏனெனில் உண்மையிலேயே, நீங்கள் கவனித்துப் பார்த்தால், இருபத்து நான்கு மணிநேரத்தில் இருபத்து மூன்று மணிநேரம் நீங்கள் காமத்தைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்பது தெரியும்.

இதயத்தை மையமாகக் கொண்ட மக்கள் காமத்தைப் பற்றி அறவே சிந்திப்பதில்லை. அது நிகழும்போது நிகழ்கிறது. அது வெறும் ஓர் உடல் தேவைதான். மேலும் அன்பின் ஒரு நிழலாக மட்டுமே அது தொடர்கிறது. அதுவே நேரடியாக ஒருபோதும் நடைபெறுவதில்லை. அவர்கள் நடுவழியில் வாழ்கிறார்கள்: தலை மையத்துக்கும் காம மையத்துக்கும் இடையில் இதய மையம் உள்ளது. நீங்களோ தலையிலும் காமத்திலும் வாழ்கிறீர்கள். இந்த இரு கோடுகளுக்கும் நீங்கள் போகிறீர்கள். ஒரு போதும் நீங்கள் நடுவில் இருப்பதில்லை. காமம் நிறைவுபெற்றதும் நீங்கள் இதயத்திற்குப் போகிறீர்கள். காம ஆசை எழும்போது நீங்கள் காம மையத்துக்கு போகிறீர்கள். ஆனால் ஒருபோதும் நீங்கள் நடுமையத்தில் தங்குவதில்லை. ஊசல் வலமாகவும் இடமாகவும் இயங்கிய படியே உள்ளது - ஒருபோதும் நடுவில் அது நிற்பதில்லை.

மிகவும் எளிய மக்களுக்காகவே - இயற்கையுடன் இணைந்து வாழ்ந்த கபடமற்ற கிராமத்தவருக்காகவே இந்த ஓம் ஓதும் முறையை பதஞ்சலி வகுத்தார். உங்களுக்கோ...நீங்கள் முயன்றுபாருங்கள். அது உதவினால், நல்லதுதான். ஆனால் உங்களைப்பற்றிய என் புரிதல் இதுதான், அதாவது உங்களில் ஒரு சதவிகிதம் பேருக்கும் மேல் அது உதவாது. தொண்ணூற்று ஒன்பது சதம் மக்கள் ஹூ மந்திரத்தால் தான் பயன் பெறுவர். அதுவே உங்களுக்கு அருகில் உள்ளது.

மேலும் ஒன்றை நிலையில் கொள்ளுங்கள், ஹூ மந்திரம் பலித்ததும், கவனிப்பு நிலையை நீங்கள் எட்டியதும், நீங்கள் கவனிப்பது ஓங்காரத்தைத் தான், ஹூவை அல்ல. ஓமையே நீங்கள் கேட்பீர்கள்! இறுதி நிகழ்வு ஒரேமாதிரிதான் இருக்கும். ஹூ, நீங்கள் வழியில் இருக்கும் போதுமட்டும் தேவையாய் உள்ளது - ஏனென்றால் நீங்கள் வேறுவிதமான மக்களாக இருக்கிறீர்கள். எனவேதான் கடுமையான மருந்தளவுகள் தேவைப்படுகின்றன,

வேறொன்றுமில்லை. ஆனால் இறுதிக் கட்டத்தில் நீங்கள் ஒரே நிகழ்வையே அனுபவிப்பீர்கள்.

நான் தொடர்ந்தும் ஹூவையே வலியுறுத்துவேன். ஏனெனில் நான் தரும் முக்கியத்துவம் உங்களை, உங்கள் தேவை என்ன என்பதைப் பொறுத்தே என் வலியுறுத்தல் அமைகிறது. நான் ஓர் இந்துவும் அல்ல முஸ்லிமும் அல்ல. நான் யாராகவும் இல்லை. எனவே நான் சுதந்தரனாய் இருக்கி றேன். எங்கிருந்தும் எதையும் எடுத்து என்னால் பயன்படுத்த முடியும். அல்லாவைப் பயன்படுத்தினால் ஓர் இந்து குற்ற உணர்வு கொள்வான். ஓமை பயன்படுத்துவதில் முகமதியனுக்கு குற்ற உணர்வு உண்டாகும். ஆனால் இப்படிப்பட்ட விஷயங்களைக் குறித்து நான் அலட்டிக் கொள்வ தில்லை. அல்லா உதவினால் அது நல்லதே. ஓம்காரம் உதவினால் அதுவும் அழகானதே. உங்கள் தேவைக்கு ஏற்ப எல்லாவிதமான முறைகளையும் உங்களிடம் நான் கொண்டு வருகிறேன்.

என்னைப் பொறுத்தவரை சமயங்கள் எல்லாம் ஒரே இடத்துக்கே இட்டுச் செல்கின்றன. இலக்கு ஒன்றே. ஒரே சிகரத்துக்கு இட்டுச் செல்லும் பல பாதைகளை போன்றே எல்லா மதங்களும் உள்ளன. உச்சியில் எல்லாமே ஒன்றாக ஆகிறது. இப்போது எல்லாம் உங்களையே பொறுத்துள்ளது - எங்கே நீங்கள் இருக்கிறீர்கள், எந்தப் பாதை உங்களுக்கு அருகில் உள்ளது என்பதையே பொறுத்துள்ளது. ஓம் உங்களுக்கு மிகவும் தொலைவில் உள்ளது. ஹூவே மிகவும் அருகில் உள்ளது. அதுவே உங்கள் தேவை. உங்கள் தேவையைப் பொறுத்தே என் வலியுறுத்த லும் அமைகிறது. என் வலியுறுத்தல் கொள்கைரீதியானது அல்ல. அது கட்சி சார்பானது அல்ல. என் வலியுறுத்தல் முற்றிலும் தனிநபர் சார்ந்தது. உங்களைப் பார்த்தே நான் முடிவு செய்கிறேன்.

**தேவைகள் உடம்புடன் தொடர்புடையன, ஆசைகள் மனதுடன் தொடர்புடையன என்று சொன்னீர்கள். இந்த இரண்டில் எது எங்களை உங்களிடம் கொண்டு வந்தது?**

இதற்கு நான் பதில் தரும் முன்பு, மேலும் ஒரு விஷயத்தைப் புரிந்துகொண்டாக வேண்டும். அப்போதுதான் இந்த கேள்விக்கான பதிலை நீங்கள் புரிந்துகொள்ள முடியும். நீங்கள் உடலும் மனமும் மட்டும் அல்ல. மேலும் ஒன்றும் சேர்ந்ததே நீங்கள். அதுதான் ஆன்மா, சுயம். உடலுக்குத் தேவைகள் உண்டு. ஆன்மாவுக்கும் தேவைகள் உள்ளன. இவை இரண்டுக்கும் இடையில்தான் மனம் உள்ளது. மனம் ஆசைகளைக் கொண்டுள்ளது. உடலுக்கு உள்ளவை தேவைகள் - பசியை, தாகத்தை நிறைவு செய்ய வேண்டும். குடி இருப்பு தேவை. உணவு தேவை. நீர் தேவை. உடலுக்கு தேவைகள் உள்ளன. மனதுக்கு உள்ளவை ஆசைகள். அதற்கு

எதுவும் தேவையில்லை, ஆனால் மனம் பொய்யான தேவைகளை உருவாக்குகிறது.

ஆசை என்பது போலி தேவை. அதை நீங்கள் கவனிக்காவிட்டால் *(don't attend)* நீங்கள் நிராசையாக, தோல்வியாக உணர்கிறீர்கள். அதை நீங்கள் *(attend)*கவனித்தாலும் உங்களுக்கு எதுவும் கிடைப்பதில்லை. ஏனென்றால் முதலாவதாக, அது ஒரு தேவையே அல்ல. ஒரு தேவை என்ற முறையில் அது எப்போதும் இருந்ததில்லை.

தேவையை உங்களால் நிறைவு செய்ய முடியும். ஆசையை உங்களால் நிறைவுசெய்ய முடியாது. ஆசை ஒரு கனவை. ஒரு கனவே நிறைவு செய்ய முடியாது. அதற்கு வேர்களே இல்லை. பூமியிலும் இல்லை. வானத்திலும் இல்லை. அதற்கு வேர்களே கிடையாது! மனம் ஒரு கனவுகாணும் பொருள். பெயர், புகழ், அந்தஸ்து இவற்றை நீங்கள் கேட்கிறீர்கள். இவற்றை நீங்கள் அடைந்தாலும் எதையும் நீங்கள் அடைவதில்லை. ஏனென்றால் புகழானது - பிரபலமானது - எந்த தேவையையும் பூர்த்தி செய்வதில்லை. அது ஒரு தேவை அல்ல. நீங்கள் புகழ்பெற்றவராக ஆகலாம். உலகம் முழுவதுமே உங்களைப்பற்றி அறிந்தாலும் அதனால் என்ன? அதன்பிறகு என்ன? அதனால் உங்களுக்கு என்ன நேரும்? அதை வைத்துக்கொண்டு உங்களால் என்ன செய்ய முடியும்? அது உணவோ பானமோ அல்லவே. முழு உலகமும் உங்களை தெரிந்து கொண்டதும் நீங்கள் நிராசையே அடை கிறீர்கள். அதை வைத்து என்ன செய்வது? அது பயனற்றது.

ஆன்மாவுக்கும் தேவைகள் உள்ளன். உடலுக்கு உணவு தேவைப் படுவது போலவே, ஆன்மாவுக்கும் உணவு தேவைப்படுகிறது. அந்த உணவு கடவுள்தான். யேசு தன் சீடர்களிடம் பலமுறை சொன்னதை நினைத்துப் பார்க்க வேண்டும். ''என்னை உண்ணுங்கள். நானே உங்கள் உணவு. நானே உங்கள் பானம்.'' அவர் கூறுவதன் பொருள் என்ன? - ஒரு வித்தியாசமான தேவையை அவர் குறிப்பிடுகிறார். அது நிறைவுப்படுத்தப் படாதவரை, கடவுளை உங்களால் உண்ண முடியாதவரை, அவரை உண்டு செரிப்பதன் மூலம் நீங்களே கடவுளாக ஆகாதவரை, இரத்தம்போல் அவர் உங்கள் ஆன்மாவில் ஓடாதவரை, உங்கள் உணர்வாக அவர் ஆகாதவரை நீங்கள் நிறைவடையாதவராகவே இருப்பீர்கள்.

ஆன்மாவுக்குத் தேவைகள் உள்ளன: அத்தேவைகளை ஆன்மிகம் நிறைவேற்றுகிறது. உடலுக்கு தேவைகள் உள்ளன. அத்தேவைகளை அறிவியல் நிறைவேற்றுகிறது. மனத்துக்கு ஆசைகள் உள்ளன. அவற்றை அது நிறைவேற்ற முயல்கிறது, ஆனால் முடிவதில்லை. உடலும் ஆன்மாவும் சந்திக்கும் எல்லைப்புற நிலமே மனம். உடலும் ஆன்மாவும் பிரியும்போது

அப்படியே மனம் மறைந்துவிடுகிறது. சொந்தமான இருப்பு அதற்கு கிடையாது.

இப்போது இந்தக் கேள்வியை எடுத்துக் கொள்ளுங்கள்:

**தேவைகள் உடம்புடன் தொடர்புடையன, ஆசைகள் மனதுடன் தொடர்புடையன என்று சொன்னீர்கள். இந்த இரண்டில் எது எங்களை உங்களிடம் கொண்டு வந்தது?**

இங்கு என்னைச் சுற்றி மூன்று விதமான மனிதர்கள் இருக்கிறார்கள். முதல் பிரிவினர் தம் உடல் தேவைகளுக்காக வந்திருக்கிறவர்கள். இவர்கள் காமத்தில் ஏமாற்றம் அடைந்தவர்கள், காதலில் ஏமாற்றம் அடைந்தவர்கள், உடல் ரீதியான அவலத்தில் இருப்பவர்கள். இவர்கள் வந்திருக்கிறார்கள். இவர்களுக்கு உதவ முடியும். இவர்களின் பிரச்சினை நேர்மையானது. இவர்களின் உடல் தேவைகள் மறைந்ததும், ஆன்மிக தேவைகள் மேல் எழும்.

அடுத்து இரண்டாவது ஒரு பிரிவு உள்ளது. இவர்கள் ஆன்ம தேவைகளுக்காக வந்திருக்கிறார்கள். இவர்களுக்கும் உதவ முடியும். ஏனெனில் இவர்களின் தேவைகளும் உண்மையானவை. இவர்கள் தம் காமப் பிரச்சினைகளுக்காக, காதல் பிரச்சினைகளுக்காக, அல்லது உடல் பிரச்சினைகளுக்காக, நோய்கள் காரணமாக வரவில்லை. அதற்காக அவர்கள் வரவில்லை. இவர்கள் உண்மையைத் தேட வந்திருக்கிறார்கள். வாழ்வின் மர்மத்தில் நுழைந்து பார்க்க வந்திருக்கிறார்கள். இந்த இருத்தல் *(Existence)*என்பது என்ன என்று அறிந்துகொள்ள வந்திருக்கிறார்கள்.

அடுத்தது மூன்றாவது பிரிவு. இந்த மூன்றாவது பிரிவினரே மேற்சொன்ன இரண்டு பிரிவினரையும் விட பெரிய பிரிவினர். இந்த மக்கள் தம் மனதின் ஆசைகளுக்காக வந்திருக்கிறார்கள். இவர்களுக்கு உதவ முடியாது. இவர்கள் கொஞ்ச காலத்துக்கு என்னுடன் சுத்திக் கொண்டிருப்பார்கள். பின் மறைந்துவிடுவார்கள். அல்லது, அதை விட அதிக காலத்துக்கு என்னுடன் அவர்கள் சுத்திக் கொண்டிருந்தால், பின் அவர்களை உடல்தேவை அளவில் அல்லது ஆன்ம தேவை அளவில் நான் குறைத்து விடலாம். ஆனால் அவர்களின் மன தேவைகளை நிறைவேற்ற முடியாது. ஏன் என்றால் முதலில் அவை தேவைகளே அல்ல.

அகங்காரத்தின் நோக்கங்களுக்காக சில பேர் இங்கு இருக்கிறார்கள். சந்நியாசம் என்பது அவர்களைப் பொறுத்தவரை அவர்களுடைய அகங்காரத்தின் ஒரு பொழுதுபோக்காக இருக்கிறது. அவர்கள் சிறப்பானவர்களாக, அசாதாரணமானவர்களாக ஆகிறார்கள். வாழ்வில் அவர்கள் தோற்றுவிட்டிருக்கிறார்கள். அரசியல் அதிகாரத்தை அவர்களால்

அடையமுடிவில்லை. உலகியல் பிரபலத்தை அவர்கள் பெற முடிய வில்லை. பெருஞ்செல்வத்தை பொருள் உடைமைகளை அவர்களால் குவித்துக் கொள்ள முடியவில்லை. அவர்கள் தம்மை வெற்று ஆள்களாக உணர்கிறார்கள். இப்போது நான் அவர்களுக்கு சந்நியாசம் கொடுக்கிறேன். இதனால் தம்பங்குக்கு எதையும் செய்யாமலேயே அவர்கள் ஒரு முக்கியத்தை, சிறப்பை பெற்றவர்களாக ஆகிறார்கள். காவி உடைக்கு வெறுமனே மாறிக்கொள்வதாலேயே, இப்போது தாங்கள் சாதாரண மனிதர்கள் அல்லர். தேர்ந்தெடுக்கப்பட்ட சிலரே தாங்கள் மற்ற எல்லாரில் இருந்தும் வேறுபட்டவர்கள் தாங்கள் என்று அவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள், இனி அவர்கள் உலகத்திடம் சென்று ஒவ்வொருவரையும் கண்டனம் செய்வார்கள்; ''நீங்கள் எல்லாம் சாதாரண லௌகீகப் பிறவிகள்! முற்றிலும் தவறானவர்கள் நீங்கள். நாங்கள்தான் ரட்சிக்கப்பட்டவர்கள், தேர்ந்து கொள்ளப்பட்ட சிலர்'' என்பார்கள்.

இவைதான் மனத்தின் ஆசைகள் மனத்தின் ஆசைக்காக இங்கு இருக்க வேண்டாம் என்பதை நினைவில் கொள்ளுங்கள். மற்றபடி நீங்கள் வெறுமனே உங்கள் நேரத்தை வீணாக்கிக் கொண்டே இருக்கிறீர்கள். ஏனெனில் அவற்றை நிறைவேற்ற முடியாது. உங்கள் கனவுகளில் இருந்து உங்களை வெளியில் கொண்டு வரவே நான் இங்கு இருக்கிறேன். உங்கள் கனவுகளை நிறைவேற்றித் தருவதற்காக நான் இங்கு இல்லை. இப்படிப்பட்ட மனிதர்களே எல்லா விதமான அரசியலையும் இங்கு கொண்டு வருவார்கள். ஏனென்றால் அவர்களின் நோக்கம் அகங்காரத்தின் போக்குக்காக இருக்கிறது. எல்லாவிதமான சிக்கல்களையும் அவர்கள் இங்கு கொண்டு வருவார்கள். சிறு குழுக்களை உருவாக்குவார்கள். ஒரு சின்னஞ்சிறு தனி உலகத்தையே இங்கு அவர்கள் படைப்பார்கள். ''உன்னைவிட நான் பெரியவன், உத்தமன்'' என்று சொல்லும் ஓர் ஆதிக்கப் படி வரிசையை அவர்கள் ஏற்படுத்துவார்கள். மற்றவரை விட தனக்கு சாதகம் என்னும் விளையாட்டை அவர்கள் ஆடுவார்கள்.

ஆனால் இவர்கள் மூடர்கள். முதலில் அவர்கள் இங்கு இருப்பதே கூடாது. தம் அகங்காரத்தின் ஒரு தவறான இடத்தை அவர்கள் தேர்ந்தெடுத்துள்ளார்கள். ஏனென்றால் அவர்களின் அகங்காரங்களை முற்றிலுமாக அழிக்கவே, உடைக்கவே நான் இங்கு இருக்கிறேன். எனவேதான் என்னைச் சுற்றிலும் பெருங்குழப்பம் நிலவுவதாக நீங்கள் உணருகிறீர்கள். தவறான காரணங்களுக்காக ஒரு சரியான இடத்தில் நீங்கள் இருக்க முடியும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அப்படியானால் நீங்கள் தவற விடுகிறீர்கள். ஏனென்றால் கேள்வி, இடத்தைப் பற்றியதல்ல. கேள்வி, ஏன் நீங்கள் இங்கு இருக்கிறீர்கள் என்பதே. உங்கள் உடல் தேவைகளுக்காக நீங்கள் இங்கு இருந்தால், ஏதாவது செய்ய முடியும்.

உங்கள் உடல் தேவைகள் தீர்க்கப்பட்டதும், உங்கள் ஆன்மாவின் தேவைகள் எழும்.

மனத் தேவைகளுக்காக இங்கு நீங்கள் இருந்தால், அந்தத் தேவைகளைக் கைவிடுங்கள். அவை தேவைகள் அல்ல. அவை கனவுகள். முடிந்த அளவு முழுமையாக அவற்றை விட்டுவிடுங்கள். அவற்றை எப்படி விடுவது என்று கேட்காதீர்கள். ஏனெனில் அவற்றை விட்டுவிட, செய்வதற்கு எதுவுமில்லை. அவையெல்லாம் மனதின் ஆசைகளே என்ற வெறும் புரிதலே போதுமானது; அவை தாமாகவே விட்டுவிலகி விடும்.

**யோகாவுக்கும், தந்த்ராவுக்கும் இடையில் ஒரு ஒருங்கிணைப்பை காண்பது சாத்தியமா? ஒன்று மற்றதற்கு இட்டுச் செல்கிறதா?**

இல்லை, சாத்தியமில்லை. ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் ஓர் ஒருங்கிணைப்பு காண நீங்கள் முயன்றால் அது எப்படி சாத்தியப்படாதோ அதுபோலவே இதுவும். அந்த ஒருங்கிணைப்பு என்னவாக இருக்கும்? மூன்றாவது 'பாலாக' ஒரு வீரியமற்ற மனிதரே, அந்த ஒருங்கிணைப்பாக இருப்பார். அவர் ஆணாகவும் இருக்கமாட்டார், பெண்ணாகவும் இருக்க மாட்டார். அடிப்படையற்ற அந்த மனிதர் எங்குமே இருக்கமாட்டார்....

யோகாவுக்கு முற்றிலும் எதிரானது, நேர் எதிரானது தந்த்ரா. இவற்றில் ஒருங்கிணைப்பு எதையும் உங்களால் உண்டாக்க முடியாது. மேலும் இத்தகைய முயற்சிகளில் ஒருபோதும் ஈடுபடாதீர்கள். ஏனெனில் நீங்கள் மேலும் அதிகக் குழப்பமே அடைவீர்கள். உங்களை குழப்பிவிட ஒன்றே போதும். இரண்டு என்பது மிக அதிகம். மேலும் அவை வெவ்வேறு திசைகளில் இட்டுச் செல்கின்றன. ஆயினும் ஒரு சிகரத்தையே அவை அடைகின்றன. அவை ஒரே உச்சத்தையே அடைகின்றன. உச்சியில், முடியும் இடத்தில் ஒருங்கிணைப்பு உள்ளது. ஆனால் அடிவாரத்தில், பயணம் தொடங்கும் இடத்தில், அவை முற்றிலும் வெவ்வேறானவைதான். ஒன்று கிழக்கே போகிறது. மற்றது மேற்கே போகிறது. அவை ஒன்றுக் கொன்று பிரியாவிடை கூறுகின்றன. ஒன்றுக்கொன்று புறமுதுகு காட்டு கின்றன. அவை ஆணும் பெண்ணும் போல் - வெவ்வேறு உளவியல்களை கொண்டவை, தம் வேற்றுமையில் அழகாக இருக்கிறவை.

அவற்றை நீங்கள் ஒருங்கிணைத்தால், அது அசிங்கமாக மாறுகிறது. ஒரு பெண் பெண்ணாகவே இருந்தாக வேண்டும். ஓர் ஆணின் எதிர் துருவமாக ஆகும் அளவுக்கு மிகுந்த அளவு பெண்ணாக இருக்க வேண்டும். தம் துருவ நிலைகளிலேயே அவர்கள் அழகானவர்களாக இருக்கிறார்கள். ஏனெனில் தம் துருவ நிலையிலேயே அவர்கள் ஒருவரை நோக்கி ஒருவர் ஈர்க்கப்படுகிறார்கள். தம் துருவ நிலையிலேயே அவர்கள் ஒருவரை ஒருவர்

நிறைவு செய்கிறவர்களாய் இருக்கிறார்கள். ஆனால் அவர்களை ஒருங்கிணைக்க முடியாது. ஒருங்கிணைத்தல் என்பது பரிதாபகரமான தாகவே இருக்கும். ஒருங்கிணைப்பு என்பது முற்றிலும் வீரியமற்றதே. அதில் எந்தவித விரைப்பும் இருக்காது.

உச்சியில் அவை சந்திக்கின்றன. அந்தக் கூடல் தான் உச்ச இன்பம். அங்கு ஆணும் பெண்ணும் சந்திக்கிறார்கள். அவர்களின் உடல்கள் கரைகின்றன, அவர்கள் அப்போது இரு பொருள்களாக இருப்பதில்லை. 'யின்னும்' ''யாங்கும்'' அப்போது ஒன்றாகின்றன, ஒரே ஆற்றல் வட்டமாக ஆகின்றன. ஒரு கணதிற்கு, உயிர் ஆற்றலின் கொடுமுடியில் அவை சந்தித்து, பின் மறுபடியும் அவை விழுகின்றன.

தந்த்ரா மற்றும் யோகாவின் கதையும் இதேதான். தந்த்ரா பெண்மையானது. யோகம் ஆண்மையானது. தந்த்ரா சரணடைவது. யோகம் பற்றுறுதியுடையது. தந்த்ரா முயற்சியற்றது. யோகம் முயற்சி - மாபெரும் முயற்சி. தந்த்ரா செயலற்றது. யோகம் செயலூக்கமுள்ளது. தந்த்ரா பூமி போன்றது. யோகம் வானம் போன்றது. அவை சந்திக்கின்றன. ஆனால் ஒருங்கிணைப்பு ஏற்படுவது இல்லை. உச்சியில் அவை சந்திக்கின்றன. ஆனால் அடிவாரத்தில், பயணம் தொடங்குமிடத்தில், நீங்கள் எல்லாம் நின்று கொண்டிருக்கும் இடத்தில், இரண்டில் ஒரு பாதையையே நீங்கள் தேர்ந்தெடுக்க வேண்டி உள்ளது.

பாதைகளை ஒருங்கிணைக்க முடியாது. அதற்கு முயற்சி செய்யும். மனிதர்கள், மனிதகுலத்தை குழப்புகிறார்கள். மிகவும் ஆழமாகக் குழப்புகிறார்கள். அவர்கள் செய்வது உதவி அல்ல. அவர்கள் மிகப் பெரிய தீமையே செய்கிறார்கள். பாதைகளை ஒருங்கிணைக்க முடியாது, பயணமுடிவு மட்டுமே ஒன்று. ஒருபாதை இன்னொரு பாதையிலிருந்து பிரிந்தே இருக்க வேண்டி இருக்கிறது. முற்றிலும் பிரிக்கப்பட்டு, அதன் தொனியிலேயே, சாரத்திலேயே வேறுபட்டு இருக்கவேண்டி உள்ளது. தந்த்ராவை நீங்கள் கடைப்பிடிக்கும்போது காமத்தின் வழியாக நீங்கள் இயங்குகிறீர்கள். அதுதான் தந்த்ராவின் பாதை. இயற்கையிடம் முழுமை யான சரணாகதி அடைகிறீர்கள். அது ஒரு விட்டுவிடல். (*let -go*)நீங்கள் எதிர்த்துப் போராடுவதில்லை. அது ஒரு போர்வீரனின் பாதை அல்ல. நீங்கள போராடுவதில்லை. இயற்கை கூட்டிச் செல்லும் வழியில் சரணடைந்து விடுகிறீர்கள். இயற்கை உங்களை காமத்துக்குள் இட்டுச் சென்றால். காமத்திடம் நீங்கள் சரணடைகிறீர்கள். எந்தக் குற்ற உணர்வும் இன்றி பாவ எண்ணமும் இன்றி அதனுள் முழுமையாக செல்கிறீர்கள்.

பாவம், குற்றம் என்ற கருத்து தந்த்ராவில் இல்லை. காமத்துக்குள் செல்லுங்கள். உன்னிப்பாக மாத்திரம் இருங்கள். என்ன நடந்து

கொண்டிருக்கிறது என்பதைக் கவனித்துக் கொண்டிருங்கள். ஆனால் எதையும் கட்டுப்படுத்த முயலாதீர்கள். உங்களை அடக்கிக் கொள்ள முயலாதீர்கள். பாய்வை (*Allow the flow*)அனுமதியுங்கள். பெண்ணுக் குள்ளே இயங்குங்கள். உங்களுக்குள் பெண்ணை இயங்க விடுங்கள். அவர்கள் இருவரும் சேர்ந்து ஒரு வட்டம் ஆகட்டும். நீங்களோ ஒரு பார்வையாளராகவே தனித்திருங்கள். இந்த கவனிப்பின் மூலமும் விட்டுவிடல் மூலமும் ஒரு கடந்த நிலையை சாதிக்கிறது தந்த்ரா. காமம் மறைகிறது. இயற்கையைக் கடந்து அப்பால் செல்ல இது ஒன்றே வழி. ஏனென்றால் காமத்தை கடந்து போவதே இயற்கையை கடந்து போவதுமாகும்.

இயற்கை முழுவதும் காமத்தன்மை உள்ளதாகவே இருக்கிறது பூக்கள் இருப்பது காமத்தினாலேதான் ஏதோ ஒரு காம நிக்ழ்வுக்காகவேதான் எல்லா அழகும் நிலவுகிறது. ஒரு தொடர்ந்த விளையாட்டு நடந்து கொண்டிருக் கிறது. மரங்கள் ஒன்றை ஒன்று வசீகரித்துக் கொண்டு உள்ளன. பறவைகள் பிற பறவைகளை கூவி அழைத்துக் கொண்டுள்ளன. எல்லா இடத்திலும் ஒரு காம விளயைாட்டு நடந்து கொண்டிருக்கிறது. இயற்கை காம மயம் ஆனது. பேரின்பத்தை (*SUPER SEX*) அடைய சிற்றின்பத்தை (*SEX*) கடந்து அப்பால் செல்ல வேண்டி உள்ளது. ஆனால் காமத்தை ஒரு படிக்கட்டாகப் பயன்படுத்துங்கள் என்கிறது. தந்த்ரா. அதனுடன் சண்டை பிடிக்காதீர்கள்: அதைப் பயன்படுத்திக் கடந்து அப்பால் செல்லுங்கள். அதன் வழியாக இயங்குங்கள், அதன் வழி கடந்து செல்லுங்கள். அனுபவத்தின் மூலம் கடந்த நிலையை அடையுங்கள். விழிப்போடு கூடிய அனுபவமே கடந்த நிலை ஆகிறது.

யோகமோ ஆற்றலை வீணாக்காதீர் என்கிறது: காமத்தை முற்றிலுமாக தொடாமல் செல்லுங்கள். அதற்குள் நுழைந்து வரத் தேவையில்லை. அதை அப்படியே விட்டுவிட்டு நீங்கள் தாண்டிக் போக முடியும். ஆற்றலைச் சேமியுங்கள். இயற்கையிடம் மோசம் போய் விடாதீர்க்ள. இயற்கையை எதிர்த்து நில்லுங்கள்.(*Become a will power*). எதை நோக்கியும் அலைபாயாத கட்டுப்பாடுள்ள ஜீவனாக ஆகுங்கள். நீங்கள் இயற்கைக்குள் அடித்துச் செல்லத் தேவையில்லாதவாறு, இயற்கை தன் வழியே உங்கள் மேல் செலுத்த அனுமதிக்க தேவையில்லாதவாறு திறனுள்ளவர்களாக உங்களை ஆக்குவது எவ்வாறு என்பதே யோக முறைகள் முழுவதன் நோக்கமும் ஆகும். நீங்கள் ஓர் எஜமானர் ஆகிறீர்கள். இயற்கைக்கு எதிரான, இயற்கையுடன் போராடியபடி சுயமாக இயங்குகிறீர்கள். இது ஒரு போர்வீரன் வழி - இடையறாமல் போராடும், போராட்டத்தின் வழி யாகவே வெற்றி கொள்ளும் அப்பழுக்கற்ற போர் வீரனின் வழி.

இவை முற்றிலும் வெவ்வேறான வழிமுறைகள். இரண்டும் ஒரே இலக்குக்கே இட்டுச்செல்கின்றன: இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுங்கள். இரண்டையும் ஒன்றிணைக்க முயலாதீர்கள். எப்படி நீங்கள் ஒருங்கிணைக்க முடியும்? காமத்தின் வழியாக நீங்கள் சென்றால் யோகம் கைவிடப் படுகிறது. எப்படி உங்களால் ஒன்றிணைக்க முடியும்? காமத்தை நீங்கள் கைவிட்டால், தந்த்ரா கைவிடப்படுகிறது. எப்படி நீங்கள் ஒன்றிணைக்க முடியும்? ஆனால் ஒன்று, இரண்டுமே ஒரே இலக்குக்கே கூட்டிச் செல்கின்றன என்பதை நினைவில் கொள்ளுங்கள்: கடந்து செல்லுதலே *(transcendence)*அந்த இலக்கு. அது உங்களைப் பொறுத்தது. உங்கள் தன்மையை பொறுத்தது. நீங்கள் போர்வீரனின் தன்மை உள்ளவரா? எப்போதுமே போராடும் இயல்புடையவரா நீங்கள்? அப்படியானால் யோகமே உங்கள் பாதை. நீங்கள் ஒரு போர்வீரன் வகையறா அல்ல என்றால், நீங்கள் சாதுவானவர் என்றால், நுட்பமான முறையில் பெண்மைத் தன்மை உள்ளவர் என்றால், யாருடனும் நீங்கள் சண்டை பிடிக்க விரும்ப மாட்டீர்கள் என்றால், நிஜமாகவே அகிம்சையானவர் என்றால், பின் தந்த்ராவே உங்கள் பாதை. ஆயின் இரண்டும் ஒரே குறிக்கோளுக்கே இட்டுச் செல்கின்றன. அவற்றை ஒருங்கிணைக்கத் தேவையில்லை.

என்னைப் பொறுத்தவரை, ஒருங்கிணைப்பவர்கள் - சமரசவாதிகள் என்பவர்கள் எப்போதுமே தவறானவர்களாகத்தான் இருக்கிறார்கள். எல்லா காந்திகளும் தவறானவர்களே. சமரசம் காணும் எவனும் தவறானவனே. ஏனெனில் இது ஆங்கில மருத்துவத்தை ஆயுர்வேதத்துடன் ஒன்றிணைப்பது போன்றதாகும் ஓமியோ மருத்துவத்தை எதிர் (அலோபதி) மருத்துவத்துடன் ஒன்றிணைப்பது போன்றதாகும். இது ஒரு இந்துவையும் முகமதியரையும் ஒன்றிணைப்பதாகும்.புத்தரையும் பதஞ்சலியையும் ஒன்றிணைப்பதாகும் அது. நீங்கள் ஒன்றிணைக்கத் தேவையில்லை. தன்னளவில் ஒவ்வொரு பாதையும் செம்மையாகவே உள்ளது! ஒவ்வொரு பாதையும் தன்னிலேயே மிகவும் முழுமை பெற்றதாகவே உள்ளது. எனவே அதனுடன் எதையும் சேர்க்கத் தேவையில்லை. அப்படி எதையும் சேர்ப்பது ஆபத்தாக முடியும். ஏனெனில் ஒரு குறிப்பிட்ட யந்திரத்தில் ஓர் உறுப்பு இயங்கிக் கொண்டிருக்கலாம்... அதுவே இன்னோர் இயந்திரத்தில் தடையாக ஆகலாம்.

ஓர் இம்பாலா காரில் இருந்து ஒரு பாகத்தை நீங்கள் பிரித்து எடுக்கிறீர்கள். அது அதில் நன்றாக வேலை செய்து கொண்டிருக்கிறது. அதைக் கொண்டு போய் ஒரு ஃபோர்டு காரில் நீங்கள் பொருத்த முடியும். ஆனால் அது சிக்கல்களை உருவாக்கலாம். ஒரு பாகம் ஒரு பாணியில் இயங்குகிறது. பகுதி, முழுமையைப் பொறுத்துள்ளது. ஒரு பாகத்தை எந்த

இடத்தில் வேண்டுமானாலும் பொருத்திப் பயன்படுத்திவிட முடியாது. ஆனால் இந்த ஒருங்கிணைப்பாளர்கள் - சமரசக்காரர்கள் செய்வதென்ன? ஒரு அமைப்பிலிருந்து ஒரு பாகத்தை எடுக்கிறார்கள். இன்னோர் அமைப்பிலிருந்து ஒரு பாகத்தை எடுக்கிறார்கள். இன்னோர் அமைப்பிலிருந்து இன்னொரு பாகத்தை எடுக்கிறார்கள். அவற்றைக் கொண்டு ஓர் அவியல் பண்ணுகிறார்கள். இந்த நபர்களை நீங்கள் பின்பற்றினால் நீங்களும் ஓர் அவியலாகவே ஆவீர்கள். ஒன்றிணைக்கத் தேவையில்லை. உங்கள் மாதிரி எது என்பதை கண்டு கொள்ள மட்டும் முயலுங்கள். உங்கள் இயல்பை உணர மட்டும் முயலுங்கள். எந்த அவசரமும் இல்லை. நீங்கள் எந்த மாதிரி என்பதை கவனித்து உணருங்கள்.

உங்களால் சரணடைய முடியுமா? இயற்கையிடம் சரணடைய முடியுமா? அப்படியானால் சரணடையுங்கள். அது முடியாது என்று நீங்கள் உணர்ந்தால் ''என்னால் சரணடைய முடிவதில்லை'' என்று உணர்ந்தால் அதற்காக சோர்ந்து போகாதீர்கள். ஏனென்றால் வேறொரு பாதை உள்ளது. அதில் இவ்விதம் சரணடைய தேவையில்லை. அது உங்களுக்கு' போராட எல்லா வாய்ப்பும் அளிக்கிறது. ஆனால் இரண்டும் முடிவில் ஒரே சிகரத்துக்கே இட்டுச் செல்கின்றன. நீங்கள் கவுரிசங்கரை (எவரெஸ்ட) அடைகிற போது இது விளங்கும். மெதுமெதுவே, சிகரத்தை நீங்கள் நெருங்க நெருங்க, வேறுவேறு பாதைகளில் பயணப்பட்டவர்களும் அதையே அடைந்து கொண்டிருப்பதை நீங்கள் காண்கிறீர்கள்.

மனிதகுல வரலாறு முழுவதிலும் நடத்தப்பட்டுள்ள மாபெரும் ஆராய்ச்சிகளில் ஒன்றை ராமகிருஷ்ணர் மேற்கொண்டார். அவர் ஞானமடைந்த பின், அவருடைய ஞானத்திற்குப் பின் பல பாதைகளையும் அவர் முயன்று பார்த்தார். இதை எவரும் ஒருபோதும் செய்ததில்லை. ஏனென்றால் அதற்குத் தேவை இல்லை. சிகரத்தை நீங்கள் அடைந்து விட்டீர்கள். இனி மற்ற பாதைகளும் அதற்கு இட்டுச் செல்கிறதா இல்லையா என்பதைப் பற்றி நீங்கள் ஏன் கவலைப்பட வேண்டும்? ஆனால் மனித இனத்துக்கு ராமகிருஷ்ணர் ஒரு பெரிய சேவை செய்தார். மறுபடியும் அடிவாரத்துக்கு இறங்கிவந்து இன்னொரு பாதையில் முயன்றார். அதுவும் உச்சிக்கு இட்டுச் செல்கிறதா இல்லையா என்பதைத் தெரிந்துகொள்ள முயன்றார். பல பாதைகளிலும் அவர் முயன்றார். ஒவ்வொரு தடவையும் அதே உச்சியையே அடைந்தார்.

இது அவருடைய உவமானம் - அதாவது மலை அடிவாரத்தில் பாதைகள் பல; அவை வெவ்வேறு திசைகளில் செல்கின்றன. ஒன்று மற்றதற்கு எதிராக, முரணாகக் கூடத் தோன்றுகின்றன. ஆனால் மலை உச்சியில் அவை சந்திக்கின்றன. உச்சியிலேயே உள்ளது ஒருங்கிணைவு.

தொடக்கத்தில் வேறுபாடுகளே, பலவிதப்பாடுகளே உள்ளன. முடிவிலோ ஒருமை, ஐக்கியம் உள்ளது.

ஒன்றிணைத்தலைப் பற்றி கவலைப்படாதீர்கள். ஒரு பாதையை தேர்ந்தெடுத்து அதிலிருந்து மாறாமல் இருங்கள், போதும். தமது பாதையே கொண்டுபோய் சேர்க்கும் என்று கூறி தம் பாதைக்கு வருமாறு உங்களை கூவி அழைப்பவர்களிடம் மயங்கிவிடாதீர்கள். இந்துக்கள் அடைந் திருக்கிறார்கள், முகமதியர்கள் அடைந்திருக்கிறார்கள், யூதர்கள் அடைந்திருக்கிறார்கள், கிறிஸ்தவர்கள் அடைந்திருக்கிறார்கள்; நீங்கள் இந்துவாக இருந்தால் மட்டுமே அடைவீர்கள் என்ற நிபந்தனை எதுவும் சத்தியத்துக்கு கிடையாது.

உங்கள் கரிசனத்துக்குரிய ஒரே விஷயம் நீங்கள் எந்த மாதிரியை சேர்ந்தவர் என்பதை உணர்ந்து தேர்ந்தெடுப்பது மட்டுமே. எதற்கு எதிராகவும் நான் இருப்பதில்லை. எல்லாவற்றுக்கும் ஆதரவாகவே நான் இருக்கிறேன். எவ்வழியை நீங்கள் தேர்ந்தெடுத்தாலும் அவ்வழியில் உங்களுக்கு உதவிட என்னால் முடியும். ஆனால் ஒருங்கிணைத்தல் என்ற பேச்சுக்கே இடமில்லை! ஒன்றிணைக்க முயலாதீர்கள்.

**நீங்கள் எங்களிடம் பேசிக்கொண்டிருக்கும் பெரும்பாலான நேரங்களில் ஆற்றல் அலைகள் எங்களிடம் வருகின்றன. என் இதயங்களைத் திறக்கின்றன. நன்றிக் கண்ணீரை வர வழைக்கின்றன. நாங்கள் திறந்திருக்கும் போதெல்லாம் எங்களை நீங்கள் நிரப்புவதாக நீங்கள் சொல்லி இருக்கி றீர்கள். மேலும் அடிக்கடி இந்த Saktipat - ஐ போன்ற நிகழ்வு ஒரே நேரத்தில் பலருக்கு நிகழ்கிறது. இந்த அற்புதமான அனுபவத்தை நீங்கள் ஏன் எங்களுக்கு அடிக்கடி வழங்குவதில்லை?**

அது உங்களையே பொறுத்தது. நான் உங்களுக்கு எந்த அனுபவத்தையும் கொடுத்துக் கொண்டிருக்கிறேன் என்பது இல்லை. உங்களைப் பொறுத்ததே அது. நீங்கள் அதை எடுத்துக் கொள்ள முடியும். அது ஒரு கொடுத்தல் அல்ல. ஏனெனில் எல்லா நேரங்களிலுமே நான் கொடுத்துக் கொண்டுதான் இருக்கிறேன். திறந்து எடுத்துக் கொள்ள வேண்டியது உங்களைச் சேர்ந்தது. ஆனால் நீங்கள் சொல்வது சரிதான் - அதாவது பலநேரங்களில் பலருக்கும் இது ஒன்றாகவே நிகழ்கிறது. உடனே, நான்தான் ஏதோ செய்து கொண்டிருக்கிறேன் என்று தர்க்கமனம் கூறுகிறது. இல்லாவிட்டால் ஏன் ஏராளமானவர்களுக்கு ஏககாலத்தில் அது நடந்து கொண்டிருக்கிறது?

இல்லை நான் எதையும் செய்து கொண்டிருக்கவில்லை. மாறாக, எவராவது ஒருவர் திறந்து கொள்ளும்போது அந்த ஒருவரின் திறப்பு தொற்றிக் (*informations*)கொள்வதாயிருக்கிறது. மற்றவர்களும் உடனடியாக திறந்து கொள்ளத் தொடங்குகிறார்கள். ஒருவர் இருமத் தொடங்கியதுமே மற்றவர்களும் இருமத் தொடங்கிவிடுவது போன்றே அது தொற்றிக் கொள்கிறது. ஒருவர் திறந்து கொள்கிறார்: ஒன்று நிகழ்ந்து கொண்டிருப்பதை திடீரென நீங்கள் உணர்கிறீர்கள். உடனே நீங்களும் திறந்தவர்களாக ஆகிறீர்கள்.

நான் இடைவிடாமல் கிடைத்துக் கொண்டே இருக்கிறேன் நீங்கள் திறக்கும் போதெல்லாம் என்னை நீங்கள் பகிர்ந்து கொள்ள முடிகிறது. நீங்கள் மூடிக் கொள்ளும்போதெல்லாம் உங்களால் பகிர்ந்து கொள்ள முடிவதில்லை. மேலும் அது என்னைப் பொறுத்ததல்ல. ஒன்றை செய்ய வேண்டியது உங்களைப் பொறுத்ததே. அது ஒரே சமயத்தில் நிகழ்கிறது என்பது உண்மைதான். ஏனெனில் ஒருவர் மற்றவரைத் திறந்து விடுகிறார், அப்படியே அது தொடர்கிறது. அது ஒரு வெள்ளம்போல் பரவக்கூடியதாக ஆக முடிகிறது.

லத்திஹான் என அறியப்படும் ஒருவித முறை இந்தோனேசியாவில் உள்ளது. திறப்பு என்ற சொல்லையே அவர்கள் பயன்படுத்துகிறார்கள். திறந்துள்ள ஒருவர் பிறரையும் திறக்க முடியும். இன்று இந்த பூமிமேல் வாழும் மனிதர்களில் மிகமிக குறிப்பிடத்தக்க மனிதரான, லத்திஹான் குரு பாபக் சுபுது எனப்படும் மனிதர் ஆவார். அவர் சிலரைத் திறந்து விடுகிறார். பின் அவர்களிடம் பூமியெங்கும் போய் மற்றவர்களைத் திறந்து விடுமாறு கூறுகிறார்.

இனி அவர்கள் என்ன செய்கிறார்கள்? அவர்கள் மிக எளிய முறை ஒன்றைக் கையாள்கிறார்கள். அதே ரீதியிலான பல முறைகளை நீங்கள் இங்கு செய்து கொண்டு வருவதால் உங்களால் அதைப் புரிந்து கொள்ள முடியும். பாபக் சுபுதால் திறந்துவிடப் பட்ட ஒருவர் புதிதாய் வந்தவருடன் - திறந்துவிடப்பட வேண்டியவருடன் - சீடருடன் - இயங்குகிறார். ஓர் மூடி யுள்ள அறைக்குள் அவர்கள் நிற்கிறார்கள். ஏற்கனவே திறந்துள்ளவர் வானத்தை நோக்கி தன் கைகளை உயர்த்துகிறார். அவர் தன்னைத் திறக்கிறார். மற்றவர் அங்கே சும்மா நிற்கிறார். சில நிமிடங்களில் மற்றவர் நடுங்க - உதறத் தொடங்குகிறார். ஏதோ நடந்து கொண்டிருக்கிறது. அவர் திறந்து கொண்டதும், எல்லையற்ற வானத்துக்கு திறந்து கொண்டதும், அப்பால் இருந்து வரும் அளவுகடந்த ஆற்றலுக்கு திறந்து கொண்டதும், அவர் மற்றவர்களை திறக்க அனுமதிக்கப்படுகிறார்.

ஆனால் அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பது யாருக்கும் தெரிவதில்லை. செய்பவருக்கே தான் செய்து கொண்டிருப்பது என்ன

என்பது ஒருபோதும் தெரியாது. அவர் வெறுமனே அங்கு நிற்கிறார். மற்றவரும் - புது சீடனும் - வெறுமனே அருகில் நின்றுகொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கே என்ன நடக்கிறது என்று தெரிவதில்லை... ''என்ன இது?'' என அவர்கள் பாபக் சுபுதை கேட்கிறார்கள். அவர்கள் செய்கிறார்கள், அது நடக்கிறது, ஆனால் பாபக் சுபுது எவ்வித விளக்கமும் தருவதில்லை. அவர் அவ்வகை மனிதர் அல்லர். ''பேசாமல் செய்யுங்கள். ஏன் அது நிகழ்கிறது என்று அலட்டிக்கொள்ளாதீர்கள். அது நிகழ்கிறது. அவ்வளவுதான்!

அதேதான் இங்கும் நிகழ்கிறது. ஒருவர் திறக்கிறார். திடீரென அவரை சூழவும் ஆற்றல் பரவுகிறது. அவர் ஒரு சூழலைத் தோற்றுவிக்கிறார். நீங்கள் அவர் அருகில் இருக்கிறீர்கள். திடீரென ஓர் அலையெழுச்சி பொங்குவதாக உணர்கிறீர்கள், கண்ணீர் வழியத் தொடங்குகிறது. இதயம் நிறைந்து விம்முகிறது. நீங்கள் திறந்து கொள்கிறீர்கள். இன்னொருவர் திறக்கப்பட உதவுகிறீர்கள்... இது ஒரு சங்கிலித் தொடர் வினையாக ஆகிறது. அகில உலகத்தையும் திறந்துவிட முடியும். ஒருமுறை நீங்கள் திறந்ததுமே அந்தப் பக்குவம் உங்களுக்குத் தெரிந்துவிடுகிறது. அது ஒரு செய்முறை அல்ல. அதன் நுட்பம் உங்களுக்குப் பிடிபட்டு விடுகிறது. அவ்வளவுதான். இனி நீங்கள் உங்கள் மனதை ஒரு குறிப்பிட்ட நிலைமையில் இருத்துகிறீர்கள், உங்கள் ஜீவனை ஒரு குறிப்பிட்ட வழியில் வைக்கிறீர்கள் - அவ்வளவுதான். இதைத்தான் நான் பிரார்த்தனை என்று அழைக்கிறேன்.

என்னைப் பொறுத்தவரை, இறைமையிடம் வார்த்தை ரீதியான தொடர்பு கொள்வதல்ல பிரார்த்தனை. ஏனெனில் மொழிமூலமாக இறைமையுடன் எப்படி உங்களால் தொடர்பு கொள்ள முடியும்? இறைமைக்கு எந்த மொழியும் இல்லை. நீங்கள் எதைச் சொன்னாலும் அது அதற்கு புரியாது. மொழியின் வாயிலாக அல்ல, உங்கள் இருத்தலின் வாயிலாகவே இறைமை உங்களுடன் தொடர்பு கொள்கிறது. இருத்தல் *(Being)* மட்டுமே ஒரே மொழி.

ஒரு சிறு பிரார்த்தனை முறையை முயன்று பாருங்கள். இரவில் நீங்கள் படுக்கப்போகும்போது படுக்கை அருகில் முழந்தாளிடுங்கள். விளக்கை அணைத்துவிடுங்கள். உங்கள் இரு கைகளையும் உயர்த்துங்கள். கண்களை மூடிக்கொள்ளுங்கள். ஓர் அருவியின் அடியில் நீங்கள் இருப்பதாகவே நினைத்துக் கொள்ளுங்கள் - அது வானத்திலிருந்து கொட்டும் ஆற்றல் அருவி. தொடக்கத்தில் அது ஒரு கற்பனையாகவே இருக்கிறது. இரண்டு, மூன்று நாள்களுக்குள் இது ஒரு நிஜமான நிகழ்வாக இருப்பதை நீங்கள் உணரத் தொடங்குகிறீர்கள்: நீங்கள் ஓர் அருவியின் அடியிலேயே இருக்கிறீர்கள். பலமான காற்றில் அகப்பட்ட இலைபோல உங்கள் உடல்

குலுங்கத் தொடங்குகிறது. அந்த ஆற்றல் வீழ்ச்சி எந்த அளவுக்கு வன்மையாகவும் பெரிய அளவிலும் இருக்கிறது என்றால் அதை உங்களால் தாங்கிக்கொள்ள முடிவதில்லை. அது உங்கள் தலைமுதல் பாதம் வரை ஒவ்வோர் அணுவிலும் நிரம்புகிறது. ஒரு காலிப் பாத்திரமாக நீங்கள் ஆகி இருக்கிறீர்கள். உங்களை அது நிரப்புகிறது.

நீங்கள் நடுக்கமும், உதறலும் உங்களுக்கு வருவதை உணரும்போது அதனுடன் ஒத்துழையுங்கள். அந்த நடுக்கம் அதிகரிக்க உதவுங்கள். ஏனெனில் எந்த அளவுக்கு அதிகமாய் நடுங்குவீர்களோ, அந்த அளவுக்கு, எல்லையற்ற ஆற்றல் உங்களில் இறங்கும் வாய்ப்பு அதிகமாகிறது. ஏனெனில் உங்கள் சொந்த உள் ஆற்றல் இயக்க ஆற்றலாக ஆகிறது. நீங்கள் இயக்கமாக ஆகும்போது இயக்க ஆற்றலை உங்களால் சந்திக்க முடிகிறது. நீங்கள் நிலையாக இருக்கிற போது இயக்க ஆற்றலை உங்களால் சந்திக்க முடிவதில்லை.

நீங்கள் உதறும் போது உங்களில் ஆற்றல் உருவாக்கப்படுகிறது. ஆற்றல் அதிக ஆற்றலை ஈர்க்கிறது. ஒரு காலியான, நிரம்பிய, நிரம்பிவழிகிற கொள்கலமாக ஆகுங்கள். இப்போது அளவுக்கு அதிகமாக உள்ளது, தாங்கமுடியாததாக உள்ளது என்று நீங்கள் உணரும்போது; ஆற்றலின் பாய்வு மிக அதிகமாக உள்ளது. இதற்குமேல் அதை உங்களால் தாங்க முடியாது என்ற நிலையில், பூமியை குனிந்து வணங்குங்கள். ஆற்றலை பூமிக்குள் ஊற்றுவதுபோல் அப்படியே அமைதியாய் படுத்திருங்கள்.

வானத்திலிருந்து எடுங்கள். பூமிக்கு திருப்பிக் கொடுங்கள். இரண்டுக்கும் இடையிலான ஓர் ஊடகமாக நீங்கள் ஆகிறீர்கள். முழுமையாக தாழ்ந்து வணங்குகள். மீண்டும் வெறுமையாக ஆகுங்கள். இப்போது நீங்கள் வெறுமையாக இருப்பதாக உணரும்போது, நீங்கள் மிகுந்த அமைதியாக, சாந்தமாக, தெளிவாக உணர்வீர்கள்! அப்போது மீண்டும் கைகளை உயர்த்துங்கள். ஆற்றலை உணருங்கள். கீழே போங்கள். பூமியை முத்தமிடுங்கள்; ஆற்றலை பூமிக்குத் திருப்பிக் கொடுங்கள்.

வானமும் ஆற்றலே. பூமியும் ஆற்றலே. அவை இரண்டு விதமான ஆற்றல்கள் . வானம் தருவதால் எப்போதும் அது ஆண் எனப்படுகிறது. பூமி பெறுவதால், கருப்பைபோல் இருப்பதால், எப்போதும் அது பெண் எனப்படுகிறது. எனவே வானத்திலிருந்து எடுத்து பூமிக்கு கொடுங்கள். இதை ஏழு தடவை செய்தாக வேண்டும். அதற்குக் குறைவாக செய்யக்கூடாது. ஏனென்றால் ஒவ்வொரு தடவையும் ஆற்றல் உங்கள் உடலின் ஒவ்வொரு சக்கரத்தையும் ஊடுருவும் - உங்கள் உடலில் ஏழு சக்கரங்கள் உள்ளன.

ஒவ்வொரு தடவையும் ஆற்றல் உங்களுக்குள் மேலும் ஆழ்ந்து செல்லும். உங்களுக்குள் அதிக ஆழத்தில் இருக்கும் மையப்பகுதியை அது கலக்கும். ஏழு தடவை என்பது ஒரு கட்டாயம். அதற்கு குறைந்து நீங்கள் செய்யக்கூடாது. ஏனெனில் அதற்கு குறைந்து நீங்கள் செய்தால் உங்களால் தூங்க முடியாது. உள்ளுக்குள் ஆற்றல் இருக்கும். நீங்கள் அமைதியற்றவர் ஆக உணர்வீர்கள். எனவே ஏழு தடவை செய்யுங்கள். அதற்கு அதிகமாகவும் நீங்கள் செய்ய முடியும். அதிகமாக செய்தால் எந்த கெடுதலும் இல்லை. ஆனால் குறைவாக கூடாது! - ஏழு தடவையோ அதற்கு அதிகமாகவோ செய்யுங்கள்.

நீங்கள் முற்றிலும் வெறுமையாகிவிட்டதாக உணரும்போது தூங்கச் செல்லுங்கள் - இரவு முழுவதும் உங்களுக்கு அது நிகழ்ந்துகொண்டிருக்கும். தூக்கத்தில் நீங்கள் அதிகமதிக அமைதியானவராக ஆவீர்கள். கனவுகள் நின்றுவிடும். காலையில் எழும்போது நீங்கள் முற்றிலும் புதிய ஒரு மனிதராக, புத்துயிர்ப்பு பெற்றவராக உணர்வீர்கள். இப்போது நீங்கள் பழைய நிலையில் இல்லை. கடந்தகாலம் விடுபட்டு விட்டது. இப்போது நீங்கள் புதுமையாகவும் இளமையாகவும் இருக்கிறீர்கள்.

ஒவ்வோர் இரவும் இதை செய்யுங்கள். மூன்று மாதங்களுக்குள் பல காரியங்கள் உங்களுக்கு சாத்தியம் ஆகும். நீங்கள் திறந்தவராக இருப்பீர்கள். பின் நீங்கள் மற்றவர்களைத் திறக்க முடியும். இந்த திறப்பு நிகழ்ச்சியை மூன்று மாதங்கள் செய்தபின், நீங்கள் ஒருவரின் அருகில் வெறுமனே நின்று உங்களைத் திறந்தால், உடனடியாக மற்றவர் நடுங்குவதை, உதறுவதை நீங்கள் காண்பீர்கள். அவருக்கு அது தெரியாவிட்டாலும்கூட, அவர் அறியாமலேகூட, ஒருவரை நீங்கள் திறந்துவிடமுடியும். ஆனால் அப்படி செய்யாதீர்கள். ஏனெனில் அவர் அப்படியே பயந்து நடுங்கி விடுவார். புரிந்துகொள்ள முடியாத ஏதோ ஒரு கெடுதல் தனக்கு நடந்து விட்டதாக அவர் நினைத்துக்கொள்வார்.

ஒரு தடவை நீங்கள் திறந்துகொண்டபின் மற்றவர்களை உங்களால் திறக்க முடியும். அது ஒரு பற்றுதல், அழகான ஒரு தொற்றுதல் ; எவ்வித நோய்த் தொற்றுதலும் அல்ல, முழு நலத்தின் தொற்றுதல், நிறைவின் தொற்றுதல், தூய்மையின் தொற்றுதல், புனிதத்தின் தொற்றுதல்.



## 9. சரியான மனப்பான்மைகளைப் பயிற்றுவித்தல் - ஏற்றுவித்தல்

மகிழ்ச்சியாய் இருப்போரிடத்து நட்புணர்வு, துன்பத்தில் இருப்போரிடத்து பரிவுணர்வு, நன்மையை கண்டால் களிப்பு தீமையைக் கண்டால் புறக்கணிப்பு ஆகிய மனப்பான்மை களை உண்டாக்குவதன் மூலம் மனம் சாந்தி அடைகிறது

மூச்சை மாறிமாறி வெளியேற்றவும் உள்நிறுத்தவும் செய்வதன் மூலமும் மனம் சாந்தி அடைகிறது.

தியானத்தால் புலன் உணர்வுகளில் அசாதாரணமான நுட்பங்கள் விளைகிறபோது மனம் கூடுதல் ஆர்வம், நம்பிக்கை கொள்கிறது. இது முயற்சியை விடாமல் தொடர உதவுகிறது.

மேலும், ஆழ்ந்த அமைதியுடையதும் எல்லா கவலை களுக்கும் அப்பால்பட்டதுமான உள் ஒளியின்மீது தியானம் செய்யுங்கள்.

மேலும், ஆசையின்மையை அடைந்திருக்கிறவர் மீதும் தியானம் செய்யுங்கள்.

**மகிழ்ச்சியாய் இருப்போரிடத்து நட்புணர்வு, துன்பத்தில் இருப்போரிடத்து பரிவுணர்வு, நல்லனவற்றைக் கண்டால் களிப்பு, தீமையைக் கண்டால் புறக்கணிப்பு ஆகிய மனப்பான்மைகளை உண்டாக்குவதன் மூலம் மனம் சாந்தி அடைகிறது.**

இந்தச் சூத்திரத்தை நீங்கள் புரிந்து கொள்வதற்குமுன் புரிந்து கொண்டாக வேண்டிய வேறு பல விஷயங்கள் உள்ளன. முதலாவது, இயற்கையான மனப்பான்மைகளைப் பற்றியது: ஒருவர் மகிழ்ச்சியாய் இருப்பதைப் பார்க்கும் போதெல்லாம் நீங்கள் பொறாமையே கொள்கிறீர்கள் - மகிழ்ச்சி கொள்வதில்லை; ஒருபோதும் மகிழ்ச்சி அடைவதில்லை, துன்பமே அடைகிறீர்கள். இதுதான் இயல்பான மனப்பான்மையாக இருக்கிறது, நீங்கள் இப்போது கொண்டிருக்கிற மனப்பான்மை இப்படித்தான் இருக்கிறது.

பதஞ்சலியோ, மகிழ்ச்சியாக இருப்போரிடம் நட்புணர்வு கொள் ளும் மனப்பான்மையை உண்டாக்குவதன்மூலம் மனம் சாந்தி பெறுகிறது என்கிறார் - மிகவும் கடினமான காரியமே. மகிழ்வாக இருக்கும் ஒருவ ரிடம் நட்பாக இருப்பது என்பது வாழ்வின் மிகவும் கடினமான காரியங் களில் ஒன்றாகவே இருக்கிறது.

சாதாரணமாக இது மிகவும் எளிதே என்று நீங்கள் நினைக்கிறீர்கள். அப்படி இல்லை! இதற்கு நேர்எதிரானதே எளிதாக உள்ளது. நீங்கள் பொறாமையே கொள்கிறீர்கள், துன்பமாகவே உணர்கிறீர்கள். மகிழ்ச்சி அடைவதாக நீங்கள் காட்டிக் கொள்ளலாம். ஆனால் அது வெறும் வெளித்தோற்றமே, வேஷமே, முகமூடியே, மேலும் இப்படிப்பட்ட ஒரு மனப்பான்மை உங்களிடம் இருந்தால் நீங்கள் எப்படி மகிழ முடியும்? எப்படி நீங்கள் அமைதியாக, சாந்தியடைய முடியும்?

ஏனெனில் மொத்த உயிர்வாழ்வுமே விழாக் கொண்டாடிக் கொண்டிருக்கிறது. பிரபஞ்சம் முழுவதிலும் கோடிக்கணக்கான மகிழ்ச்சிகள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. ஆனால் உங்களிடம் பொறாமை மனப்பான்மை இருந்தால் நீங்கள் துன்பமே அடைவீர்கள். ஓயாத நரகத்திலேயே இருப்பீர்கள். மேலும் நீங்கள் அப்படி நரகத்தில் இருக்கக் காரணமே, வெளியில் எங்கும் சொர்க்கமே இருப்பதால்தான். உங்களுக்கு ஒரு நரகத்தை - தனிப்பட்ட நரகத்தை - நீங்கள் உருவாக்குவீர்கள். ஏனெனில் மொத்த உயிர் வாழ்வுமே விழாக் கொண்டாடிக் கொண்டிருக்கிறதே.

ஒருவர் மகிழ்ச்சியாக இருந்தால், உங்கள் மனதில் தோன்றும் முதல் எண்ணம் என்ன? அந்த மகிழ்ச்சி உங்களிடமிருந்தே பறித்துக் கொள்ளப் பட்டதுபோலவே, போட்டியில் அவர் வென்று நீங்கள் தோற்றுவிட்டது போலவே, உங்களை அவர் ஏமாற்றிவிட்டதைப் போலவே தோன்றுகிறது.... மகிழ்ச்சி என்பது ஒரு பந்தயப் போட்டி அல்ல. எனவே கவலைப்படா தீர்கள். ஒருவர் மகிழ்ச்சியாக இருந்தால் அதன்பொருள் உங்களால் மகிழ்ச்சிகாக இருக்க முடியாது என்பதல்ல. உங்கள் மகிழ்ச்சியை அவர் எடுத்துக்கொண்டுவிட்டார், எனவே நீங்கள் இனி எப்படி மகிழ்ச்சியாக இருக்க முடியும் என்பதல்ல. மகிழ்ச்சி என்பது ஓரிடத்தில் நிலவும் பொருள் அல்ல, எனவே மகிழ்ச்சியான மனிதர்களால் அதைப் பயன்படுத்தி தீர்த்துவிடவும் முடியாது.

நீங்கள் ஏன் பொறாமையாக உணர்கிறீர்கள்? ஒருவர் பணக்காரராக இருந்தால், நீங்கள் பணக்காரர் ஆவது கடினமாக இருக்கலாம். ஏனெனில் செல்வங்கள் ஒரு குறிப்பிட்ட அளவிலேயே உள்ளன. பொருள் வகையில் ஒருவர் ஆற்றல்மிக்கவராக இருந்தால், நீங்களும் ஆற்றல் மிக்கவராக இருப்பது கடினமாகலாம். ஏனெனில் பொருள்வகை ஆற்றல் என்பது ஒரு போட்டிதான். ஆனால் மகிழ்ச்சியானது போட்டிக்குரியதல்ல. எல்லையற்ற அளவில் மகிழ்ச்சி நிலவுகிறது. யாராலும் ஒருபோதும் அதை தீர்த்துவிட முடிந்ததில்லை. இதில் எந்தப் போட்டியுமே இல்லை. ஒருவர் மகிழ்ச்சியாக இருந்தால் உங்களுக்கு ஏன் பொறாமை ஏற்படுகிறது? பொறாமையினால் உங்களுக்குள் நரகம் நுழைகிறது.

எனவேதான், ஒருவர் மகிழ்ச்சியாக இருக்கும்போது நீங்களும் மகிழுங்கள், நட்பாக உணருங்கள் என்கிறார் பதஞ்சலி. அப்போது நீங்களும் மகிழ்ச்சியை நோக்கிய கதவைத் திறக்கிறீர்கள். ஒரு நுட்பமான முறையில், மகிழ்ச்சியாக இருப்பவருடன் நீங்கள் நட்பாக உணர முடிந்தால் உடனடியாக அவரின் மகிழ்ச்சியை நீங்கள் பகிர்ந்து கொள்ளத் தொடங்குகிறீர்கள். அது உங்களுடையதாகவும் ஆகி இருக்கிறது - உடனடியாக! மேலும் மகிழ்ச்சி என்பது ஒரு பொருள் அல்ல. அது பொருள் வகையானதல்ல; நீங்கள் பிடித்து வைத்துக் கொள்ளமுடிகிற ஒன்று அல்ல. அதை உங்களால் பகிர்ந்துகொள்ள முடியும். ஒரு மலர் மலரும்போது அதை உங்களால் பகிர்ந்துகொள்ள முடிகிறது. ஒரு பறவை பாடும்போது உங்களால் அதை பகிர்ந்துகொள்ள முடிகிறது. ஒருவர் மகிழ்ச்சியாக இருக்கும்போது நீங்கள் அதை பகிர்ந்துகொள்ள முடியும். மேலும் இதிலுள்ள சிறப்பு என்னவென்றால் இது அவரது பகிர்தலைப் பொறுத்தது அல்ல; உங்களின் பங்குபெறுதலைப் பொறுத்ததே.

அது அவரது பகிர்தலை பொறுத்ததாயிருந்தால், அவர் அதை பகிர்ந்து கொண்டாலும் இல்லாவிட்டாலும், அது முற்றிலும் வேறுவிதமாகவே

இருக்கும். அவர் அதை பகிர்ந்துகொள்ள விரும்பாதிருக்கலாம். ஆனால் இது ஒரு பிரச்சினையே அல்ல. இது அவரது பகிர்தலைப் பொறுத்தது அல்ல. காலையில் சூரியன் உதிக்கும்போது நீங்கள் மகிழ்ச்சி அடைய முடிகிறது. இதுபற்றி சூரியன் எதுவும் செய்துவிட முடியாது. நீங்கள் மகிழ்ச்சியாக இருப்பதை அது தடுத்துவிட முடியாது. ஒருவர் மகிழ்ச்சியாக இருக்கிறார். அவரிடம் நீங்கள் நட்பாக இருக்க முடியும். அது முற்றிலும் உங்களின் சொந்த மனப்பான்மையைப் பொறுத்ததே. பங்கு பெறுவதிலிருந்து உங்களை அவர் தடுத்துவிடமுடியாது. உடனடியாக நீங்கள் ஒரு கதவைத் திறக்கிறீர்கள், அவரது மகிழ்ச்சி உங்களின் வழியாகவும் பாய்ந்து செல்கிறது.

உங்களைச் சுற்றிலும் ஒரு சொர்க்கத்தை உருவாக்கும் ரகசியம் இதுவே. சொர்க்க சூழலில் மட்டுமே உங்களால் நிம்மதியடைய முடியும். நரக நெருப்பில் உங்களால் எப்படி சாந்திபெற முடியும்? மேலும் வேறு யாரும் அதை உருவாக்குவதில்லை. நீங்களே அதை உருவாக்குகிறீர்கள். எனவே புரிந்துகொள்ள வேண்டிய அடிப்படையான விஷயம், துயரம் இருக்கும் போதெல்லாம், நரகநிலை நிலவும் போதெல்லாம், அதற்கு நீங்களே காரணமாக இருக்கிறீர்கள். பொறுப்பை ஒருபோதும் வேறு எவர் மீதாவது வீசியெறியாதீர்கள். ஏனெனில் அப்படி பொறுப்பை கை கழுவுவது, அடிப்படை உண்மையிலிருந்து தப்பிப்பதாகும்.

நீங்கள் துன்பத்தில் இருந்தால் நீங்களே - முற்றிலும் நீங்கள் மட்டுமே - அதற்குப் பொறுப்பு. உள்ளே பார்த்து அதன் காரணத்தை காணுங்கள். மேலும் துன்பத்தில் இருக்கவேண்டுமென யாரும் விரும்புவதில்லை. காரணத்தை உங்களுக்குள் நீங்கள் கண்டறிய முடிந்தால் அதை நீங்கள் வெளியே எறிந்துவிட முடியும். அதிலிருந்து உங்களை தடுக்க யாரும் உங்களின் வழியில் குறுக்கிட்டு நின்று கொண்டிருக்கவில்லை. மகிழ்ச்சியால் இருப்பதை தடுக்கும் தடை ஒன்றுகூட இல்லை.

ஆனால் மகிழ்ச்சியான மனிதர்களிடம் நட்பாக இருப்பதன்மூலம் மகிழ்ச்சிக்கு உங்களை நீங்கள் இசைவித்துக் கொள்கிறீர்கள். அவர்கள் பூத்துக்குலுங்கிக் கொண்டு இருக்கிறார்கள். நீங்கள் நட்புணர்வு கொள்கிறீர்கள். அவர்கள் நட்புணர்வுடன் பழகாதுபோகலாம். அது உங்களின் அக்கறை அல்ல. உங்களை இவர்கள் அறியாமலேகூட இருக்கலாம் - அதனால் பரவாயில்லை. ஆனால் எங்களுக்கு ஒரு மலர்ச்சி இருந்தாலும், எங்கெங்கு மகிழ்ச்சி நிலவினாலும், எங்கெங்கு யாரேனும் பூத்துக் குலுங்கினாலும், எங்கெங்கு யாரேனும் ஆடிக்கொண்டும், சிரித்துக் கொண்டும் மகிழ்ச்சியாக இருந்தாலும், எங்கெங்கு கொண்டாட்டம் நிலவினாலும், நீங்கள் நட்புக் கொள்ளுங்கள், அதில் பங்கெடுங்கள். அது உங்களுக்குள் ஓடத் தொடங்குகிறது, இதை யாராலும் தடுக்க முடியாது.

மேலும் உங்களைச் சுற்றிலும் மகிழ்ச்சி நிலவும் போதே, நீங்கள் அமைதியை உணர்கிறீர்கள்.

**மகிழ்ச்சியாய் இருப்போரிடத்து நட்புணர்வு.... மனப்பான்மையை ஏற்படுத்துவதன் மூலம் மனம் சாந்தி அடைகிறது.**

மகிழ்ச்சியானவர்களைக் கண்டால் உங்களிடம் பொறாமை உணர்வே எழுகிறது. ஒரு நுட்பமான போட்டி உணர்வே தோன்றுகிறது. மகிழ்ச்சியானவர்களைப் பார்த்தால் உங்களை நீங்கள் தாழ்வாக உணர்கிறீர்கள். எப்போதும் உங்களைச் சுற்றிலும் மகிழ்ச்சியற்ற மனிதர்களையே நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்கிறீர்கள். மகிழ்ச்சியற்ற மனிதர்களிடமே நீங்கள் நட்புணர்வு கொள்கிறீர்கள். ஏனென்றால் மகிழ்ச்சியற்றவர்களின் மத்தியிலேயே உங்களை நீங்கள் உயர்வாக உணர முடிகிறது. உங்களைவிட கீழ்நிலையில் உள்ளவரையே எப்போதும் நீங்கள் தேடுகிறீர்கள். உங்களைவிட மேலே இருப்பவர்களிடம் பழக எப்போதும் நீங்கள் அஞ்சுகிறீர்கள். உங்களைவிட கீழ இருப்பவர்களையே எப்போதும் நீங்கள் தேடுகிறீர்கள். கீழானதை நீங்கள் அதிகமாய் தேடத்தேட மேன்மேலும் கீழ்நிலைக்கே நீங்கள் வீழ்கிறீர்கள். அதன்பின் இன்னும் அதிக கீழான மக்களே தேவைப்படுகிறார்கள்.

உங்களைவிட உயர்ந்தவர்களின் - ஞானத்தில் உயர்ந்தவர்களின், மகிழ்ச்சியில் உயர்ந்தவர்களின், சாந்தத்தில், அமைதியில், மோனத்தில், தெளிவில் உயர்ந்தவர்களின் - நட்பையே நாடுங்கள். உயர்ந்தவர்களின் நட்பையே எப்போதும் தேடுங்கள். ஏனெனில் நீங்களும் உயர்ந்தோர் ஆகும் வழி, நீங்களும் பள்ளத்தாக்குகளை கடந்து சிகரங்களை அடையும் வழி அதுதான். அது ஓர் ஏணியாக ஆகிறது. எப்போதும் மேலானவற்றின், அருமையானவற்றின், மகிழ்ச்சியானவற்றின் கூட்டுறவையே நாடுங்கள் - அப்போது நீங்களும் அதிக அழகுடையவராக ஆவீர்கள், அதிக மகிழ்ச்சியுடையவராக ஆவீர்கள்.

ஒரு தடவை இந்த ரகசியம் அறியப்பட்டால், அதிக மகிழ்ச்சியாக ஆவது எப்படி, மற்றவர்களின் மகிழ்ச்சியை - நீங்களும் மகிழ்ச்சியாக இருப்பதற்கான சூழலாக உருவாக்கிக்கொள்வது எப்படி என்பதை ஒரு தடவை நீங்கள் அறிந்து கொண்டதுமே; பின் எந்த இடையூறும் இருப்பதில்லை. பின் நீங்கள் விரும்பும் தொலைதூரம் வரை உங்களால் போக முடியும். யாருக்கு எந்த துயரமும் இருப்பது இல்லையோ - அந்த கடவுளாக நீங்கள் ஆகமுடியும்,

கடவுள் என்பவர் யார்? மொத்த உலகத்துடனும்; ஒவ்வொரு பூவுடனும், ஒவ்வொரு நதியுடனும், ஒவ்வொரு கல்லுடனும், ஒவ்வொரு

விண்மீனுடனும் மகிழ்வாக இருக்கும் ரகசியத்தை கற்றுக் கொண்டிருக்கிறவரே கடவுள். இந்த நிரந்தரமான நித்தியமான கொண் டாட்டத்தில் ஒன்றிவிட்டிருக்கிறவரே கடவுள். கொண்டாடுபவரே, யாருடைய கொண்டாட்டம் என்று கவலைப்படாதவரே கடவுள். ஒரு கொண்டாட்டம் எங்கெங்கு நடந்தாலும் அதில் அவர் பங்கேற்கிறார். மகிழ்ச்சியில் பங்கேற்கும் இந்தக் கலை, நீங்கள் மகிழ்ச்சியாக இருக்க விரும்பினால் கற்றுக்கொள்ள வேண்டிய அடிப்படைகளில் ஒன்று ஆகும். பின் அதை கடைப்பிடிக்க வேண்டும்.

ஆனால் இதற்கு எதிரானதையே நீங்கள் செய்துகொண்டு வந்திருக்கிறீர்கள்: யாராவது மகிழ்ச்சியாக இருந்தால் உடனடியாக நீங்கள் அதிர்ச்சி அடைகிறீர்கள். அது எப்படிச் சாத்தியம்? அதெப்படி நீங்கள் மகிழ்ச்சியாக இராதபோது அவர் மட்டும் மகிழ்ச்சியாக இருக்கிறார்? இது அநீதி. இந்த உலகம் முழுவதும் உங்களை ஏமாற்றிக்கொண்டு இருக்கிறது. கடவுள் இல்லை. கடவுள் இருந்தால் நீங்கள் மகிழ்ச்சியில்லாமல் இருக்கவும் மற்றவர்கள் மகிழ்ச்சியாக இருக்கவும் நேர்ந்தது எப்படி? இந்த மகிழ்ச்சியாக இருப்பவர்கள்தான் சுரண்டல்காரர்கள், சூழ்ச்சிக்காரர்கள், சதிகாரர்கள். உங்கள் இரத்தத்தில் அவர்கள் பிழைக்கிறார்கள். மற்றவர்களின் மகிழ்ச் சியை உறிஞ்சி அவர்கள் உயிர்வாழ்கிறார்கள்!

யாரும் யாருடைய மகிழ்ச்சியையும் உறிஞ்சிக் கொண்டில்லை. மகிழ்ச்சி என்னும் நிகழ்வை உறிஞ்சத் தேவை இல்லை. அது ஓர் உள் மலர்ச்சி. வெளியிலிருந்து வருவதில்லை அது. மகிழ்ச்சியான மனிதர் களுடன் சேர்ந்து மகிழ்ச்சியாக இருப்பதாலேயே, உங்கள் உள் மலர்ச்சி நிகழத் தொடங்கும் சூழ்நிலையை உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள்.

**நட்பு மனப்பான்மையை ஏற்படுத்துவதன் மூலம் மனம் சாந்தி அடைகிறது...**

நீங்கள் பகை மனப்பான்மையை உருவாக்குகிறீர்கள். சோகமான ஆளைக் கண்டால் நீங்கள் நட்பாக உணருகிறீர்கள். அது மிகவும் நல்ல தன்மை என்றும் நீங்கள் நினைக்கிறீர்கள். மனம் சோர்ந்து போய், துய ரத்தில் இருக்கிறவரிடம் நீங்கள் நட்பாக உணரலாம். அது ஒரு வித ஆன்மிகக் கடமை என்றும், நீங்கள் செய்து கொண்டிருப்பது ஒரு தார்மிக காரியம் என்றும் நினைக்கிறீர்கள். ஆனால் நீங்கள் செய்து கொண் டிருப்பது இன்னது என்பதை நீங்கள் அறிவதில்லை.

வருத்தப்பட்டு, மனபாரம் சுமந்து, மகிழ்ச்சியற்று, பரிதாபமாக இருக்கிற ஒருவரிடம் நீங்கள் நட்புணர்வு கொள்ளும் போதெல்லாம், உங்களுக்கே நீங்கள் துன்பத்தை உருவாக்குகிறீர்கள். பதஞ்சலியின்

பார்வை மிகவும் சமயத்தன்மை அற்றதாகத் தோன்றுகிறது. அப்படி இல்லை. ஏனெனில் அவரது நிலைப்பாட்டை முழுமையாக நீங்கள் புரிந்து கொண்டால் அவர் கூறுவதன் பொருளை நீங்கள் காண்பீர்கள். அவர் மிகவும் அறிவியல் பூர்வமானவர். உணர்ச்சிவசப்படும் மனிதர் அல்லர் அவர். உணர்ச்சிவசப் படுவது உங்களுக்கு உதவாது.

நாம் மிக மிக தெளிவாகிக் கொள்ள வேண்டி உள்ளது:

**...துன்பத்தில் இருப்போரிடத்து பரிவுணர்வு....**

நட்புணர்வல்ல - பரிவுணர்வு. பரிவு ஒரு வித்தியாசமான பண்பு. நட்பு என்பது வேறு. நட்புணர்வு என்றால் மற்றவர் இருக்கும் அதே நிலையில் நீங்களும் இருக்க விரும்பும் ஒரு சூழ்நிலையை நீங்கள் உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள் என்று பொருள்; உங்கள் நண்பர் இருக்கும் அதே நிலையில் நீங்களும் இருக்க விரும்புவீர்கள். பரிவுணர்ச்சி என்றால் ஒருவர் தன் நிலையில் இருந்து வீழ்ந்து விட்டார், அவருக்கு நீங்கள் உதவ விரும்புவீர்கள், ஆனால் அவரைப் போல் இருக்க நீங்கள் விரும்ப மாட்டீர்கள் என்பதாகும். அவருக்கு ஒரு கை கொடுக்க விரும்புவீர்கள், அவரைத் தூக்கிவிட விரும்புவீர்கள், அவரைத் தேற்ற விரும்புவீர்கள். எல்லா வகையிலும் அவருக்கு உதவ நீங்கள் விரும்புவீர்கள். ஆனால் எந்த வகையிலும் அவரைப் போல் இருக்க நீங்கள் விரும்பமாட்டீர்கள், ஏனெனில் அது ஓர் உதவியாகாது.

ஒருவர் அழுதுகொண்டும் தேம்பிக் கொண்டும் இருக்கிறார். அவர் பக்கத்தில் நீங்களும் உட்கார்ந்து அழவும் தேம்பவும் தொடங்குகிறீர்கள்: நீங்கள் அவருக்கு உதவவா செய்கிறீர்கள்? எந்த வழியில்? ஒருவர் அவலநிலையில் இருக்கிறார். நீங்களும் அதே நிலைக்கு உள்ளாகிறீர்கள். (இதன் மூலம்) அவருக்கு நீங்கள் உதவிக் கொண்டா இருக்கிறீர்கள்? அவரது துன்பத்தை நீங்கள் இரட்டிப்பாக்கிக் கொண்டு வேண்டுமானால் இருக்கலாம்: அவர் மட்டும் தனியாக துன்பத்துடன் இருந்தார். இப்போது இரண்டுபேர் துன்பத்தில் இருக்கிறீர்கள். ஆனால் துன்ப நிலையில் இருக்கும் மனிதர்களுக்கு அனுதாபம் காட்டுவதன் மூலம் மீண்டும் நீங்கள் ஒரு நையாண்டி விளையாட்டையே விளையாடிக் கொண்டு இருக்கிறீர்கள். அவல நிலையில் இருப்போரிடம் நீங்கள் அனுதாபம் காட்டும்போது அனுதாபம் என்பது கருணை அல்ல என்பதை நினைவில் வையுங்கள். அனுதாபம் என்பது நட்புணர்வு. சோர்ந்துள்ள, சோகமான, கவலையுடன் கூடிய மனிதரிடம் அனுதாபத்தை, நட்பை நீங்கள் காட்டும்போது - அடியாழத்தில் நீங்கள் மகிழ்ச்சியாக உணர்கிறீர்கள். எப்போதும் அதன் அடியோட்டமாக ஒரு மகிழ்ச்சி உள்ளது. அது அப்படித்தான் இருந்தாக

வேண்டும். ஏனெனில் இது ஓர் எளிய கணக்குதான்: ஒருவர் மகிழ்ச்சியாக இருந்தால் நீங்கள் துன்பமாக உணர்கிறீர்கள். பின் எப்படி ஒருவர் துன்பமாக இருக்கும்போது அதைக்கண்டு நீங்கள் மகிழ்ச்சி அடையாமல் இருக்க முடியும்? ஒருவர் மகிழ்ச்சியாக இருக்கிறார், அது உங்களுக்கு துன்பமாக உள்ளது. அடுத்து ஒருவர் மகிழ்ச்சியில்லாமல் இருக்கிறார், உடனே உங்கள் உள்மனத்தில் நீங்கள் மிகுந்த மகிழச்சி கொள்கிறீர்கள்.

ஆனால் அதை நீங்கள் வெளிக்காட்டுவதில்லை. அல்லது நீங்கள் கூர்ந்து கவனித்துப் பார்த்தால், அப்படி நீங்கள் அதை வெளிக்காட்டினாலும் - உங்கள் அனுதாபத்திலும்கூட ஒரு நுட்பமான மகிழ்ச்சி இழையோடுகிறது என்பது தெரியவரும். நீங்கள் (உங்களைப் பற்றி) நல்லவிதமாக உணர்கிறீர்கள். உண்மையில் இதைக் குறித்து நீங்கள் உற்சாகமே அடைகிறீர்கள்: மகிழ்ச்சியற்ற நிலையில் நீங்கள் இல்லை, பரிவுகாட்டும் தகுதியில், தரத்தில் நீங்கள் இருக்கிறீர்கள், எனவே நீங்கள் மேலானவர், உயர்ந்தவர் என்பதில் ஏற்படும் மகிழ்ச்சிக்கிளர்ச்சி.

மற்றவர்களுக்கு தம்மால் அனுதாபம் காட்ட முடிகிற போதெல்லாம் மக்கள் (தம்மைக் குறித்து) பெருமிதமாகவே உணர்கிறார்கள். அப்போதெல்லாம் அவர்களுக்கு உற்சாகம் பொங்குகிறது. நல்ல வேளையாக தாம் துன்பநிலையில் இல்லை என்பதை உள்ளூர அவர்கள் உணர்கிறார்கள். யாரேனும் ஒருவர் சாகும்போது, உடனே உங்களுக்குள் ஒரு மனஓட்டம், அப்பாடா, நாம் இன்னும் உயிரோடு இருக்கிறோம் என்கிறது. மேலும் உங்களால் அனுதாபம் காட்ட முடியும்; அதற்குச் செலவு ஒன்றுமில்லை. அனுதாபம் காட்டுவதால் எந்த நட்டமும் இல்லை. ஆனால் பரிவு - கருணை என்பது முற்றிலும் வேறு. கருணை என்றால் மற்றவர் களுக்கு உதவ நீங்கள் விரும்புவீர்கள். என்ன என்னசெய்ய முடியுமோ அதை எல்லாம் செய்ய விரும்புவீர்கள். அவர் தன் அவலத்திலிருந்து வெளிவர அவருக்கு உதவிட விரும்புவீர்கள். அதைக் குறித்து நீங்கள் மகிழ மாட்டீர்கள், அதேபோது கூடச் சேர்ந்த துன்புறவும் மாட்டீர்கள்.

மேலும் இந்த இரண்டு நிலைகளுக்கும் இடைப்பட்டதே கருணை. புத்தர் கருணை உள்ளவராய் இருக்கிறார். உங்களுடன் சேர்ந்து அவர் துன்புறமாட்டார். ஏனெனில் அது யாருக்கும் உதவப் போவதில்லை. அல்லது உங்கள் நிலைகுறித்து மகிழவும் மாட்டார். ஏனெனில் அதில் எந்தப் பொருளும் இல்லை. ஒருவர் துன்பத்தில் இருக்கிறபோது நீங்கள் எப்படி மகிழ்ச்சி அடைய முடியும். ஆனால் அதற்காக அவர் மகிச்சியிழந்தும் போக மாட்டார். ஏனெனில் அதனால் பயனிராது. அவர் கருணை உள்ளவராய் இருப்பார். இந்த இரண்டுக்கு இடையிலேயே கருணை உள்ளது. கருணை

என்றால், உங்கள் துயரத்திலிருந்து வெளிவர உங்களுக்கு உதவ அவர் விரும்புவார் என்பதாகும். கருணை என்றால், அவர் உங்களுக்கு ஆதரவாக இருக்கிறார், ஆனால் உங்கள் துயரத்துக்கு எதிராக இருக்கிறார் என்பதாகும். உங்களை அவர் நேசிக்கிறார், ஆனால் உங்கள் துன்பத்தை அவர் நேசிப்பதில்லை. உங்களை வெளியில் கொண்டுவர அவர் விரும்புவார், ஆனால் உங்களோடு உங்கள் துன்பத்தையும் சேர்த்து அல்ல.

நீங்கள் ஒருவர்மேல் அனுதாபம் கொள்ளும்போது அவரது துன்பத்தையே நீங்கள் விரும்பத் தொடங்குகிறீர்கள், துன்பத்தில் இருக்கும் அம்மனிதரை அல்ல. மேலும் ஒருவேளை திடீரென அந்த மனிதரே ஊக்கம்பெற்று ''ஒன்றும் பிரச்சினை இல்லை, விடுங்கள்'' என்று உங்களிடம் கூறினால் நீங்கள் திடுக்கிட்டுப் போவீர்கள்! ஏனெனில் நீங்கள் அனுதாபம் காட்ட அவர் உங்களுக்கு வாய்ப்புத் தரவில்லை. நீங்கள் எவ்வளவு உயர்ந்தவர், மேலனாவர், நீங்கள் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள் என்பதை வெளிப்படுத்தும் வாய்ப்பு பறி போய்விட்டது.

துன்பத்தில் இருக்கும் ஒருவரை குறித்து துன்புற வேண்டாம். அதிலிருந்து அவர் வெளியேற அவருக்கு உதவுங்கள். துன்பத்தை ஒருபோதும் அன்புக்குரிய பொருளாக ஆக்காதீர்கள். துன்பத்தின்மீது பாசம் காட்டாதீர்கள். ஏனெனில் அதன்மேல் பாசம்காட்டி, அதை உங்கள் அன்புக்குரிய பொருளாக ஆக்கும்போது, அதற்கொரு கதவை நீங்கள் திறந்து விட்டுக் கொண்டிருக்கிறீர்கள்; கூடிய விரைவில் நீங்களே துன்பநிலைக்கு உள்ளாவீர்கள். தனித்திருங்கள். கருணை என்றால் ஒட்டாமல் விலகியிருப்பதாகும்! உங்கள் கையைக் கொடுங்கள், ஆனால் பற்றற்றிருங்கள். உதவுங்கள், ஆனால் நீங்கள் துன்புறாதீர்கள். அப்படியே மகிழ்ச்சியும் அடையாதீர்கள். ஏனெனில் இரண்டும் ஒன்றே. மேல்புறத்தில் ஒருவரின் துன்பம் கண்டு நீங்கள் இரங்கும்போது, உள்ளுக்குள் உங்களுக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. இரண்டுமே கைவிடப்பட வேண்டும். கருணையானது எதற்கும் கலங்காத சமநிலையான மனதை உங்களுக்கு வழங்கும்.

சமுதாய சீர்திருத்தக்காரர்கள், புரட்சிக்காரர்கள், அரசியல்வாதிகள், கற்பனாவாதிகள் என்று பலரும் என்னிடம் வருகிறார்கள். ''உலகத்தில் இவ்வளவு மிகுதியான துன்பம் இருக்கும்போது, மக்களுக்கு தியானத்தை யும் அமைதியையும் நீங்கள் எப்படி சொல்லிக் கொடுக்கலாம்?'' என்று அவர்கள் கூறுகிறார்கள். ''இது சுயநலமானது,'' என்கிறார்கள் அவர்கள். துன்பத்தில் இருக்கும் மற்றவர்களுடன் நீங்களும் துன்பப்படுங்கள் என்று

மக்களுக்கு நான் போதிக்க வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள். தாம் கூறுவது இன்னது என்பதை அவர்கள் அறிவதில்லை. ஆனால் மிகவும் நன்றாக உணர் கிறார்கள் - சமூகசேவை செய்வதில், தொண்டாற்றுவதில் அவர்கள் மிகவும் நலமாக உணர்கிறார்கள். ஒருவேளை திடீரென வையகம் ஒரு சொர்க்கம் ஆகிவிட்டால், ''இனி எல்லாம் சரியாக இருக்கும்'' என்று கடவுள் சொல்லி விட்டால், சமூக சீர்திருத்தக்காரர்களும் புரட்சிக்காரர்களும் மாபெரும் துன்பத்தில் வீழ்ந்துவிடுவார்கள். ஏனென்றால் இப்போது செய்வதற்கு அவர்களுக்கு ஒன்றுமிருக்காது.

கலீல் கிப்ரான் ஒரு சிறு உவமைக்கதையை எழுதி உள்ளார். ஒரு நகரத்தில், ஒரு பெருநகரத்தில் ஒரு நாய் இருந்தது. அது ஒரு போதகராக, மதப்பரப்புநராக இருந்தது. மற்ற நாய்களிடம் அது பின்வருமாறு போதித்தது, ''குரைப்பதை நிறுத்துங்கள். தேவையில்லாமல் குரைப்பதாலேயே நம் ஆற்றலில் ஏறக்குறைய தொண்ணூற்று ஒன்பது சதவிகிதத்தை நாம் வீணடிக்கிறோம். எனவே தான் நாம் பரிணாம வளர்ச்சிபெற முடியவில்லை. எனவே தேவையில்லாமல் குரைப்பதை நிறுத்துங்கள்'' என்று போதித்தது.

ஆனால் குரைப்பதை நிறுத்துவது நாய்களுக்கு கடினம். அது அவற்றின் உடலோடு இணைந்த ஒரு போக்காகும். உண்மையில் குரைக்கும்போது மட்டுமே அவை மகிழ்ச்சியாக உணர்கின்றன. அது ஒரு சுத்திகரிப்பாக உள்ளது. குரைத்துத் தீர்த்தவுடன் அவை அமைதியை உணர்கின்றன. இருந்தாலும் தம் தலைவர் - புரட்சித் தலைவர், இலட்சியத் தலைவர் - கூறுவதை அவை கேட்டன. கடவுளரின் (*gods*) அரசு, நாய்களின் (*dogs*) அரசு, வருங்காலத்தில் ஒருநாள் அமையப் போவதைப் பற்றி தலைவர் நாய் சிந்தித்துக் கொண்டிருந்தது. அன்று ஒவ்வொரு நாயும் திருந்தி இருக்கும், எல்லா நாயும் மத உணர்வுள்ள நாயாகி இருக்கும். எந்தக் குரைப்பும், எந்த சண்டை சச்சரவும் இராது. எங்கும் ஒரே அமைதி நிலவும்... அந்த கொள்கைப் பரப்பு நாய் ஒரு சமாதானவாதியாக (*pasifist*) இருந்திருக்க வேண்டும்.

ஆனால் நாய்கள் நாய்களாகவே உள்ளன. அவை தம் தலைவர் பேசுவதை கவனித்து விட்டு சொல்லிக் கொண்டன, ''நீங்கள் ஒரு மாபெரும் நாய். நீங்கள் சொல்வது எல்லாமே மெய்தான். ஆனால் நாங்கள் கையாலாகாத சாமானிய நாய்களாக இருக்கிறோம். இப்பேர்ப்பட்ட மாபெரும் விஷயங்கள் எங்களுக்கு விளங்குவதில்லை.'' ஆகவே தம்மால் குரைப்பதை நிறுத்த முடியவில்லை என்பதைக் கண்டு எல்லா நாய்களும் குற்ற உணர்ச்சி கொண்டன. மேலும் தம் தலைவரின் நற்செய்தியை அவை

நம்பின. அவர் கூறுவது சரிதான்: அறிவுபூர்வமாக, அவர் கூறுவதை அவற்றால் புரிந்துகொள்ள முடிந்தது. ஆனால் உடல்களை என்ன செய்வது? உடல்கள் அறிவற்றவையாகவே உள்ளன. வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் - உதாரணமாக ஒரு சந்நியாசி நடந்து போவதைப் பார்த்தால் - அவை குரைக்கும். ஒரு போலீஸ்காரனோ, ஓர் அஞ்சல்காரரோ வருவதைப் பார்த்தால்... ஏனெனில் அவை சீருடைகளுக்கு எதிரானவை.

ஏறக்குறைய அவற்றுக்கு அது அசாத்தியமாகவே இருந்தது. எனவே ''அந்த தலைவர் நாய் ஒரு மாபெரும் நாய். அவரை நம்மால் பின்பற்ற முடியாது. அவர் ஓர் அவதாரம். அக்கரையில் இருந்து வந்திருக்கிறவர். எனவே அவரை நாம் வழிபடுவோம். ஆனால் அவரைப் பின்பற்றி நடக்க நம்மால் எப்படி முடியும்?'' என்று அவை முடிவு செய்தன. அத்துடன் அந்த தலைவரும் எப்போதும் தன் சொல்லுக்கு ஏற்பவே நடந்து வந்தது: ஒருபோதும் அது குரைப்பதில்லை. ஆனால் ஒருநாள் மொத்தமும் தவறி விட்டது. ஓர் இரவு, காரிருளில் நாய்கள் ஒரு முடிவு எடுத்தன, ''இந்தப் பெருந்தலைவர் நம்மை திருத்த ஓயாமல் முயன்று வருகிறார். நாமோ ஒருபோதும் அவர் சொல்படி நடப்பத்தில்லை. குறைந்தது ஆண்டுக்கு ஒரு நாளாவது, தலைவரின் பிறந்த நாள் அன்று, நாம் முழு விரதம் கடைப்பிடிக்க வேண்டும்: அன்று குரைக்கவே கூடாது. முழுமையான அமைதியை அனுசரிக்க வேண்டும் - அது எவ்வளவு கடினமானதாக இருந்தாலும் சரி. குறைந்தது ஆண்டுக்கு ஒரு முறையாவது நம்மால் அப்படி நடக்க முடியும்'' - இவ்வாறு அவை முடிவு செய்தன.

அப்படியே அந்த இரவில் ஒரு நாய்கூட குரைக்கவில்லை. தலைவர் நாய் ஒரு மூலையிலிருந்து அடுத்த மூலைக்கும், ஒரு தெருவிலிருந்து அடுத்த தெருவுக்கும் ஓடிஓடி கவனித்தது. ஏனெனில் நாய்கள் எங்கெல்லாம் குரைத்துக் கொண்டிருக்குமோ அங்கெல்லாம் அது ஓடி ஓடி போதிக்கும். இப்போது அது மிகுந்த வேதனையை உணரத் தொடங்கியது. ஏனெனில் ஒரு நாயும் குரைக்கவில்லை. முழு இரவும் முற்றிலும் அமைதியாக இருந்தது. ஊரில் ஒரு நாய்கூட இல்லை என்பது போல் இருந்தது... அது பல இடங்களுக்கும் சென்றது, கவனித்தது; நள்ளிரவாகும்போது அதற்கே தாங்கமுடியாமல் போனது, எனவே ஓர் இருண்ட மூலைக்கு சென்று குரைத்தது!

ஒருநாய் குரைத்து விட்டதை காதில் கேட்ட அக்கணமே மற்ற நாய்கள் ''இனி பிரச்சினை இல்லை'' என்று கூறின. அதைச் செய்தது தம் தலைவர்தான் என்பதை அவை அறியவில்லை. தம்மில் யாரோ ஒருவர்தான் விரதத்தை மீறி விட்டார் என அவை நினைத்தன. ஆனால் இனியும் அவற்றால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. முழு நகரும்

குரைத்தது. உடனே தலைவர் நாய் வெளியே வந்து போதிக்கத் தொடங்கியது!!

இதுவே உங்களின் சமுதாயப் புரட்சியாளர்கள், சீர்திருத்தவாதிகள் ஆகியோரின் நிலையாக இருக்கும். காந்தியவாதிகள், மார்க்சிய வாதிகள் என எல்லா வாதிகளின் நிலையும் இதுதான். உலகம் உண்மையாகவே மாறிவிட்டால் அவர்கள் மிகுந்த சிக்கலுக்குள்ளவார்கள். அவர்கள் மனங்களின் கனவுகளையும் கற்பனைகளையும் மெய்யாகவே இவ்வுலகம் நிறைவேற்றி விட்டால் அவர்கள் தற்கொலை செய்து கொள்வார்கள், அல்லது அவர்களுக்கு பைத்தியம் பிடித்து விடும். அல்லது நேர் எதிரான கருத்தை, நேர் முரணான கருத்தை, இப்போது அவர்கள் போதித்துக் கொண்டிருப்பதற்கு நேர் மாறான கருத்தை அவர்கள் போதிக்கத் தொடங்கி விடுவார்கள்.

அவர்கள் என்னிடம் வந்து, ''உலகம் இவ்வளவு பெரிய துயரத்தில் இருக்கும்போது மக்களை அமைதியாக இருங்கள் என்று எப்படி நீங்கள் சொல்ல முடியும்? '' என்று சொல்கிறார்கள் முதலில் அந்த துயரம் அகற்றப்படவேண்டும், பின் மக்கள் அமைதியாகி விடுவார்கள் என்று அவர்கள் நினைக்கிறார்களா? ஆனால், மக்கள் அமைதியாக இருந்தால்தான் துயரம் அகற்றப்பட முடியும். ஏனெனில் அமைதி மட்டுமே துயரத்தை அகற்ற முடியும். துயரநிலை என்பது ஒரு மனநிலை, ஒரு மனப்பான்மை. அதற்கும் பொருளாதார நிலைகளுக்கும் அதிக தொடர்பு இல்லை. அதற்கும் உள் மனத்துக்கும், அதற்கும் உள் உணர்வுக்குமே அதிகத் தொடர்பு உள்ளது. ஓர் (*Poor*) ஏழைகூட மகிழ்ச்சியாக இருக்க முடியும். அப்படி அவர் மகிழ்ச்சியாக இருந்தாலே பல விஷயங்கள் சீரடையத் தொடங்கி விடுகின்றன.

விரைவிலேயே அவர் ஓர் ஏழையாக இல்லாமல் போகலாம். ஏனெனில் நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கையில் நீங்கள் எப்படி ஏழையாக இருக்க முடியும்? நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும்போது உலகம் முழுவதும் உங்களுடன் பங்கேற்கிறது. நீங்கள் மகிழ்ச்சியின்றி இருக்கும்போது எல்லாமே தவறாகப் போகிறது. உங்களின் மகிழ்ச்சியின்மை தொடர்ந்து இருக்க உதவும் சூழ்நிலையையே உங்களைச் சுற்றிலும் நீங்கள் உருவாக்குகிறீர்கள். இதுதான் மனம் இயங்கும் முறை. அது தனக்கே கேடு விளைக்கும் ஓர் அமைப்பாக இருக்கிறது. நீங்கள் துயரமாக உணர்ந்தால் அதிக துயரம் உங்களை நோக்கி கவரப்படுகிறது. அதிக துன்பம் உங்களை நோக்கி வரும்போது ''இந்நிலையில் நான் எப்படி அமைதியாக இருக்க முடியும்? இவ்வளவு பெருமளவான துன்பம் இருக்கிறதே'' என்று நீங்கள் சொல்கிறீர்கள். இதனால் இன்னுமதிக துன்பம் உங்களால் ஈர்க்கப்படுகிறது.

பின் நீங்கள், 'இப்போது இதுமுடியாததாக உள்ளது. தாங்கள் மகிழ்ச்சியாக இருப்பதாக கூறுபவர்கள் பொய்யர்களாகத்தான் இருக்கவேண்டும். இந்த புத்தர்கள், கிருஷ்ணர்கள் யாவரும் பொய்ச் சொல்லிக் கொண்டு இருக்கிறார்கள். இந்த பதஞ்சலிகள் பொய்காரர்களாகத் தான் இருக்கவேண்டும். ஏனெனில் இவ்வளவு துன்பத்தின் மத்தியில் அமைதி அவர்கள் சொல்வது எப்படி சாத்தியமாகும்?

அப்படியானால் நீங்கள் தனக்குதானே குழிபறிக்கும் ஓர் அமைப்புக்குள் இருக்கிறீர்கள். துன்பத்தையே நீங்கள் கவர்ந்து இழுப்பீர்கள். உங்களுக்கு மட்டுமல்ல: ஒரு மனிதர் துன்பத்தில் இருக்கிற போது, மற்றவர்களும் துன்பப்பட அவர்கள் உதவிக் கொண்டு இருக்கிறார் கள். ஏனெனில் அவர்களும் உங்களைப் போன்ற மூடர்களாகவே இருக்கி றார்கள். நீங்கள் துன்பத்தில் இருப்பதை கண்டு அவர்கள் பரிதாபப்படு கிறார்கள். அப்படி பரிதாபப்படும்போது அவர்களும் அதற்கு ஆட்படு கிறார்கள். ஆக இது இப்படித்தான் இருக்கிறது - ஒரு நோயாளி மொத்த சமூகத்துக்கும் அதை ஒட்டவைத்துவிடுவதைப்போல.

முல்லா நசுருதீனின் மருத்துவர் அவருக்கு ஒரு பட்டியல் *(Bill)* அனுப்பினார். அதில் பெருந்தொகை எழுதி இருந்தது. அவர் குழந்தை நோய் வாய்ப்பட்டிருந்தான். நசுருதீனின் இளம் புதல்வன் நோயாக இருந்தான். ''இது ரொம்ப அதிகம்'', என மருத்துவரிடம் தொலைபேசி மூலம் சொன்னார் முல்லா. அதற்கு மருந்துவர்,'' ''ஆனால் உமது மகனை பார்க்க நான் ஒன்பது தடவை வரவேண்டி இருந்ததே, அதற்கெல்லாம் சேர்த்துதான் கணக்கிடப்பட்டுள்ளது என்று சொன்னார். அதற்கு நசுருதீன், ''ஆனால் என் மகன் முழு ஊருக்கே நோயைப் பரப்பி விட்டானே, அதை மறந்து விடாதீர்கள். அதன்மூலம் நீங்கள் ஏராளமாகச் சம்பாதித்திருக்கி றீர்கள். உண்மையில் நீங்கள் தான் எனக்கு ஏதாவது தர வேண்டும்.'' என்றார்.

ஓர் ஆள் துன்பத்தில் இருந்தால் அதை அவர் தொற்ற செய்கிறார். மகிழ்ச்சி தொற்றக் கூடியதைப் போலவே. துன்பமும் தொற்றிக் கொள்ளக்கூடியது. நீங்கள் இருக்கும் நிலையில் துன்பத்திற்கு ஏதுவாக *(Vulnerable toward misery)* இருக்கிறீர்கள். ஏனென்றால் உங்களை அறியாமலேயே நீங்கள் எப்போதும் துன்பத்தை தேடுகிறீர்கள். உங்கள் மனது துன்பத்தை தேடுகிறது ஏனென்றால் துன்பம் நிலவினால் நீங்கள் அனுதாபம் கொள்ள முடியும்; மகிழ்ச்சி நிலவினாலோ உங்களுக்கு பொறாமை ஏற்படுகிறது.

ஒருதடவை முல்லா நசுருதீனின் மனைவி என்னிடம் ''குளிர்காலம் வந்து கொண்டிருக்கிறது. நீங்கள் புதுடில்லிக்குப் போனால் செத்துவிழக்

கூடிய அளவுக்கு கோட்டு ஒன்று எனக்கு வாங்கி வாருங்கள்.'' என்று கூறினார். நான் திகைத்துப் போனேன். அவர் கூறுவது என்ன என்பதை என்னால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. இருந்தாலும் அவரிடம் நான், ''கோட்டுகளைப் பற்றி எனக்கு அதிகமாக ஒன்றும் தெரியாது. அதிலும் அப்படி ஒரு கோட்டை ஒருபோதும் நான் கேள்விப்பட்டதே இல்லை. அதென்ன செத்துவிழக்கூடிய அளவு கோட்டு?'' என்றேன். அதற்கு அவர், ''இதை நீங்கள் ஒருபோதும் கேள்விப்பட்டதே இல்லையா?'' மேலும் சிரித்தபடி அவர், ''செத்துவிழக்கூடிய அளவுக்கு கோட்டு என்றால் அதை நீங்கள் போட்டுக் கொண்டதுமே பக்கத்து வீடுகளில் இருப்பவர்கள் அப்படியே செத்துவிழுந்துவிட வேண்டும்!'' என்றார்.

மற்றவர்கள் செத்து விழுந்தால் ஒழிய நீங்கள் உயிரோடுள்ளவராக உங்களால் உணர முடிவதில்லை. மற்றவர்கள் துன்பத்தில் இருந்தால் ஒழிய உங்களால் மகிழ்ச்சியாக உணர முடிவதில்லை. ஆனால் மற்றவர்கள் மகிழ்ச்சி இல்லாமல் இருக்கும்போது நீங்கள் எப்படி மகிழ்ச்சியை உணர முடியும்? மற்றவர்கள் நிஜமாகவே செத்துவிட்டதும் நீங்கள் எப்படி உயிருள்ளவர்களாக உணர முடியும்? நாமனைவரும் ஒன்றாகவே நிலவுகிறோம். சிலநேரங்களில் பல மனிதர்களின் துன்பத்துக்கு நீங்கள் காரணமாக ஆகலாம். அப்போது நீங்கள் ஒரு கருமத்தை சேர்த்துக் கொண்டிருக்கிறீர்கள். நேரடியாக நீங்கள் அவர்களை தாக்காமல் இருந்திருக்காலம். நீங்கள் அவர்களிடம் வன்முறையாக நடந்து கொள்ளாமல் இருந்திருக்கலாம். ஆனால் நுட்பமே எங்குமுள்ள விதியாக இருக்கிறது! நீங்கள் ஒரு கொலைகாரராக இருக்கத் தேவையில்லை. ஆனால் உங்கள் துன்பத்தை மற்றவர்களுக்கும் நீங்கள் தொற்றச் செய்தீர்களானால் கூட வன்முறையில் நீங்கள் பங்கெடுக்கவே செய்கிறீர்கள்; அவலத்தை நீங்கள் தோற்றுவித்துக்கொண்டே இருக்கிறீர்கள். அதற்கு நீங்கள் பொறுப்பாளியாகவே ஆகிறீர்கள், அதற்கான விலையை நீங்கள் செலுத் தவே வேண்டி இருக்கும். இந்த இயக்கமுறை மிகவும் நுணுக்கமானது!

இரண்டு மூன்று நாள்களுக்கு முன்புதான் ஒரு சந்நியாசி லட்சுமியை தாக்கிய சம்பவம் நடந்தது. நீங்கள் எல்லாருமே அதற்கு பொறுப்பான வர்களே என்பதை நீங்கள் கவனத்தில் கொள்ளாமல் இருந்திருக்கலாம். ஏனென்றால் உங்களில் பலருக்கும் லட்சுமிமீது பகை உணர்ச்சி இருக்கிறது. அந்த சந்நியாசி ஒரு பலிகடா மட்டுமே. உங்களிடையே உள்ள மிகவும் பலவீனமான கண்ணியாக மட்டுமே அவர் இருக்கிறார். உங்கள் பகை உணர்வை அவர் வெளிப்படுத்தி இருக்கிறார் - அவ்வளவே. அவர் மிகவும் பலவீனமானவராக இருந்ததால் பலியாகி விட்டார். இப்போது அவர்தான் பொறுப்பு என நீங்கள் கருதுகிறீர்கள். அது உண்மையல்ல. நீங்களும்

பங்கெடுத்தீர்கள். இந்த இயக்கவிதி நுட்பமானது!

நீங்கள் எப்படிப் பங்கெடுத்தீர்கள்? மிக ஆழத்தில், ஒருவர் ஒன்றை (*Managing*)மேலாண்மை செய்கிற போதெல்லாம் - இங்குள்ள வேலைகளை லட்சுமியே மேல்பார்த்து வருகிறாள்...- நீங்கள் பகை உணர்வு கொள்ளக்கூடிய பல சந்தர்ப்பங்கள் வருகின்றன. உங்களுக்கு ஒன்றை அவள் மறுக்க வேண்டி இருந்திருக்கும். அதில் நீங்கள் புண்படுவீர்கள் - இது தவிர்க்க முடியாததே - உங்கள் மேல் போதிய கவனம் செலுத்தப் படவில்லை என நீங்கள் உணர்கிறீர்கள். உங்கள் அகங்காரம் காயப் படுகிறது. நீங்கள் பகை உணர்ச்சி கொள்கிறீர்கள்.

பலபேரும் ஒருவர் மேல் பகை உணர்வு கொள்ளும்போது, அவர்களில் உள்ள மிகவும் பலவீனமான ஆள் அதற்குப் பலியாகி விடுவார். அவர் ஏதாவது செய்துவிடுவார். உங்களிடையே உள்ள மிகவும் பித்தம் பிடித்த (*craziest*)ஆள் அவர் என்பது சரிதான். ஆனால் அவர் மட்டுமே பொறுப்பு என்பது சரியல்ல. எப்போதாவது லட்சுமிக்கு எதிரான பகை உணர்வு உங்களிடம் தோன்றி இருந்தால் அதுவும் ஒரு பகுதிதான் - நீங்கள் ஒரு கருமத்தை சேர்த்துக் கொண்டிருக்கிறீர்கள். மேலும் இதைப் பற்றிய மிகவும் நுட்பமான உணர்வுள்ளவர்களாக நீங்கள் ஆகாதவரை நீங்கள் ஞானமடைய முடியாது. விவகாரங்கள் மிகவும் சிக்கலானவையாக உள்ளன.

வீட்டில் ஒருவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டால் மொத்த குடும்பமுமே பொறுப்பு என்பதை இப்போது மேலை நாட்டின் உளவியலார் கூட கண்டுபிடித்திருக்கிறார்கள். மொத்த குடும்பமும்! தனி நபருக்கல்ல, குடும்பத்துக்கே சிகிச்சை செய்ய வேண்டி உள்ளதாக இப்போது அவர்கள் நினைக்கிறார்கள். ஏனெனில் வீட்டில் ஒருவருக்கு பைத்தியம் பிடித்துவிட்டால், மொத்தக் குடும்பமுமே மன இறுக்கங்களோடு (*inner tensions*)இருப்பதைத் தான் அது காட்டுகிறது. இவர்தான் எல்லாரிலும் மிகுந்த பலவீனமாக இருக்கிறார். எனவே உடனடியாக மொத்த நிலையையும் அவர் தெரியப்படுத்துகிறார்; முழுக் குடும்பத்தினதும் வெளிப்பாடாக அவர் ஆகிறார். அவருக்கு நீங்கள் சிகிச்சை தந்தால் அது பயன்படாது. மருத்துவமனையில் இருக்கும்போது அவர் சீராக இருக்கலாம். வீட்டுக்கு வந்ததும் அவர் திரும்பவும் நோயாளியாவார். ஏனெனில் குடும்பம் முழுவதற்கும் மன இறுக்கங்கள் உள்ளன, அதில் இவரே மிகவும் பலவீனமான கண்ணியாக இருக்கிறார்.

பெற்றோர்களின் காரணமாக குழந்தைகள் அதிக அவதிப்படு கிறார்கள். அவர்கள் போராடிக் கொண்டிருக்கிறார்கள். வீட்டைச் சுற்றி ஓயாமல் பதற்றத்தையும் இறுக்கத்தையும் அவர்கள் ஏற்படுத்தியபடி

இருக்கிறார்கள். வீடு முழுவதும் ஓர் அமைதியான, இல்லை மாறாக உட்போராகவும் பூசலாகவும் இருக்கிறது. அதிலும் குழந்தை இன்னும் பலவீனமாக இருக்கிறது. விசித்திரமான வழிகளில் அது நடக்கத் தொடங்குகிறது. இப்போது குழந்தையின் காரணமாகத்தான் நீங்கள் இறுக்கமும் கவலையும் கொண்டவர்களாக இருக்கிறீர்கள் என்று உங்களுக்கு ஒரு சாக்கு கிடைத்து விடுகிறது இப்போது! மேலும் இப்போது தந்தையும் தாயும் இருவருமே குழந்தைப்பற்றி கரிசனப்பட முடியும். உளவியல் மருத்துவரிடமும் உடல்மருத்துவரிடமும் அதனை அவர்கள் கூட்டிச் செல்வார்கள். தம் சொந்த முரண்பாட்டை சிக்கலை அவர்கள் மறந்துவிட முடிகிறது.

குழந்தை நோய்வாய்ப்பட்டால் அது பெற்றோர்களை இணைக்கும் - பூசிமெழுகும் ஒரு சக்தியாக ஆகிறது. அப்போது அவர்கள் அவனிடம் அதிகக் கவனம் செலுத்த வேண்டி இருக்கிறது. தாம் கவலையும் இறுக்கமும் பதற்றமும் கூடியவர்களாக இருப்பதற்கு அவர்களுக்கு ஒரு போலிக் காரணம் கிடைத்துவிடுகிறது: குழந்தைக்கு நலமில்லாததுதான் காரணம் என்கிறார்கள். உண்மையில் இதற்கு மாறானதே உண்மை என்பதை அவர்கள் அறிவதில்லை... ஏனெனில் அவர்கள் தம் சிக்கலால் கவலை யாகவும் இறுக்கமாகவும் இருந்ததால்தான்... குழந்தை அப்பாவியாக, எளிதில் பாதிப்படைய கூடிய அளவுக்கு மென்மையாக இருக்கிறான். அவன் உடனடியாக பாதிக்கப்பட்டுவிட முடிகிறது. அவனைச் சுற்றி இன்னும் எவ்வித தடையும் - பாதுகாப்பும் உருவாகவில்லை. மேலும் குழந்தை மெய்யாகவே நலமாக ஆனால் பெற்றோர்கள் இன்னும் அதிக சிக்கலில் மாட்டிக் கொள்வார்கள் - ஏனெனில் அப்போது அவர்களுக்கு எந்த சாக்குப் போக்கும் இருக்காது.

இது ஒரு சமூகம். நீங்கள் இங்கு ஒரு குடும்பமாக வாழ்கிறீர்கள். இங்கு (Tensions) பல இறுக்கங்கள் இருக்கவே செய்கின்றன என்பதில் விழிப்பாயிருங்கள். அந்த இறுக்கங்கள் குறித்து கவனமாயிருங்கள். ஏனெனில் உங்கள் இறுக்கங்கள் ஒரு பெரும் சக்தியாக உருவாக முடியும். அவை சேர்ந்து கொண்டே போக முடியும். திடீரென மிகவும் பலவீனமான, எளிதில் தாக்கப்படக்கூடிய, சாமானிய மனிதர் ஒருவர் அந்த திரண்ட விசையின் சேரிடமாக ஆகலாம். அந்நிலையில் அவர் ஒரு குறிப்பிட்ட முறையில் எதிர்வினை புரிகிறார். பின் நீங்கள் எல்லாரும் பொறுப்பை அவர்மேல் சுமத்திவிட முடியும். ஆனால் எப்போதேனும் எந்த அளவிலேனும் நீங்கள் பகை உணர்ச்சிக்கொண்டிருந்தால் கூட, அது உண்மையாகாது. உங்களுக்கு அதில் பங்கு இருக்கிறது. பெரிய சமூகமான உலகத்திற்குள்ளும் இதுவே உண்மை.

கோட்சே காந்தியைக் கொலை செய்தபோது கோட்சேதான் குற்றவாளி என நான் சொன்னதே இல்லை. மிகவும் பலவீனமான கண்ணியாகவே அவன் இருந்தான் - அதுவே உண்மை. ஆனால் முழு இந்து மனமும்தான் அதற்கு பொறுப்பு. காந்திக்கு எதிராக இந்துக்களிடம் இருந்த ஆழமான பகை உணர்ச்சிகளே அதற்குப் பொறுப்பு. அவர் முகமதியரை, முஸ்லீம் களை ஆதரிக்கிறார் என்ற உணர்வு வளர்ந்து வந்தது. பகைமையானது சேர்ந்துகொண்டே வருவது என்பது ஓர் உண்மையான நிகழ்வுதான். ஒரு மேகத்தைப் போன்றே அது கவிகிறது. பின் எங்கேனும் ஒரு பலவீனமான இதயம், மிகவும் தற்காப்பற்ற ஒரு மனிதன் அதற்குப் பலியாகிறான். மேகம் அவனில் வேர்கள் விடுகிறது. பின் வெடிப்பு நிகழ்கிறது. அதன்பின் எல்லாருமே சுமையிறங்கியதாக உணர்கின்றனர், அவர்கள் விடுவிக்கப் பட்டு விடுகிறார்கள். கோட்சேதான் பொறுப்பு. அவனே காந்தியை கொன்ற குற்றவாளி. எனவே நீங்கள் கோட்சேயை கொன்று விட முடியும், அத்தோடு கதை முடிந்தது. பின்னும் நாடு முழுவதும் அதே பாதையிலேயே போகும். இந்துமனம் அப்படியே தான் தொடர்ந்து இருக்கிறது. எந்த மாற்றமும் இல்லை. இயக்கவிதி அவ்வளவு நுட்பமானது!

மனம் இயங்கும் விதத்தையே எப்போதும் கண்டுபிடியுங்கள். அப்போது மட்டும்தான் நீங்கள் அடிப்படை பண்புமாற்றம் பெறுவீர்கள்; இல்லாவிட்டால் இல்லை.

> **மகிழ்ச்சியாய் இருப்போரிடத்து நட்புணர்வு, துன்பத்தில் இருப்போரிடத்து பரிவுணர்வு, நல்லனவற்றை கண்டால் களிப்பு... ஆகிய மனப்பான்மைகளைப் தோற்றுவிப்பதன் மூலம் மனம் சாந்தி அடைகிறது.**

பாருங்கள்! படிக்கட்டுகளை உண்டாக்கிக் கொண்டு போகிறார் பதஞ்சலி - அழகான, மிகவும் நுட்பமான படிகள். ஆனால் முற்றிலும் அறிவியல் ரீதியானவை.

> **....நன்மையைக் கண்டால் களிப்பு, தீமையைக் கண்டால் புறக்கணிப்பு.**

ஒருவரை நல்லவர் ஆனந்தத்தில் இருக்கிறார் என நீங்கள் உணரும்போது சாதாரணமாக அதைப் பற்றி கண்ணோட்டம் அவர் ஏய்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதுதான். உங்களை விட நல்லவ ராக ஏவராவது இருக்க முடியுமா? எனவே அவரைப் பற்றி மிகுந்த விமர்சனம் *(Criticism)* தொடர்கிறது.

நல்லவராக இருக்கும் ஒருவரை பார்க்கும் போதெல்லாம் உடனடியாக அவரை நீங்கள் விமர்சிக்கத் தொடங்கிவிடுகிறீர்கள். அவரிடம் தப்புக்

கண்டுபிடிக்க தொடங்குகிறீர்கள். ஏதாவது ஒரு வழியில் அவரை நீங்கள் மட்டம்தட்டியாக வேண்டும்! அவர் நல்லவராயிருக்க முடியாது. உங்களால் இதை நம்பிவிட முடியாது. நல்லனவற்றைக் கண்டால் களிப்பு என்கிறார் பதஞ்சலி. ஏனெனில் நல்லவர் ஒருவரை நீங்கள் விமர்சிக்கும்போது, உள்ளுக்குள் ஆழத்தில் நல்லனவற்றையே நீங்கள் விமர்சித்துக் கொண்டிருக்கிறீர்கள். ஒரு நல்ல மனிதரை நீங்கள் விமர்சித்தால், இந்த உலகத்தில் நல்ல குணம் இருப்பதற்கு சாத்தியமே இல்லை என்று நம்பும் ஒரு கட்டத்துக்கு நீங்கள் வந்து கொண்டிருக்கிறீர்கள். அப்போது நீங்கள் அப்பாடா என உணர்வீர்கள். இனி உங்கள் தீயவழிகளில் தொந்தர வில்லாமல் உங்களால் முன்னேற முடியும். ஏனெனில் ''யாருமே நல்லவரில்லை; எல்லாருமே என்னைப் போலத்தான் இருக்கிறார்கள் - என்னைவிட மோசமாகத்தான் இருக்கிறார்கள்'' என்று சொல்லி விட முடியும். எனவேதான் இவ்வுலகில் மிகுதியான விமர்சனம், மிகுதியான கண்டனம் நடந்து கொண்டிருக்கிறது.

''அந்த ஆள் மிகவும் அருமையான ஆள்'' என்று எவரேனும் சொன்னால் உங்களால் அதை சகித்துக் கொள்ள முடிவதில்லை. உடனடியாக விமர்சிப்பதற்கு எதையாவது கண்டுபிடிக்கிறீர்கள். ஏனென்றால் வேறு ஒருவர் நல்லவராயிருந்து, நீங்கள் அப்படி இல்லாவிட்டால், உங்கள் அகங்காரம் நொறுங்கிப் போகிறது. அதன்பின், ''என்னை நானே மாற்றிக் கொள்ள வேண்டி உள்ளது'' என்று நீங்கள் எண்ணத் தொடங்குகிறீர்கள். அதற்கு மிகக் கடுமையான முயற்சி தேவைப்படும். அதைவிட கண்டனம் செய்துவிடுவது சுலபமானது; விமர்சிப்பது எளிது; ''கிடையாது! முதலில் நிரூபி! நீ சொல்லிக் கொண்டிருப்பது என்ன? முதலில் அவன் நல்லவன் என்பதற்கு அத்தாட்சி காட்டு!'' என்று சொல்லிவிடுவது எளிது. மேலும் நன்மைத் தனத்தை மெய்ப்பிப்பது கடினம். எதையும் இல்லையென காட்டுதல் மிகவும் எளிது. அதை இருப்பதாகக் காட்டுவதுதான் மிகவும் கடினம்!

மாபெரும் ருசிய கதை ஆசிரியர்களில் ஒருவர் துருகனேவ். அவர் ஒரு கதை எழுதி இருக்கிறார். அந்த கதை என்னவென்றால் ஒரு சிற்றூரில் மடத் தனமானவனாகக் கருதப்பட்ட ஒரு மனிதன் இருந்தான் உண்மையாகவே அவன் மடையன்தான்! நகரம் முழுவதும் அவனைப் பார்த்து சிரித்து கேலி செய்தது. அவன் ஒரு முட்டாள் போலவே இருந்தான். அவனது மூடத்தனத்தைக் கண்டு நகரில் இருந்த அனைவரும் ரசித்தனர். ஆனால் தன் மடத்தனத்தின் மீது அவனுக்கு சலிப்பு ஏற்பட்டது. எனவே ''என்ன செய்யலாம்?'' என ஓர் அறிவாளியிடம் கேட்டான்.

அறிவாளி சொன்னார், ''ஒன்றும் செய்ய வேண்டாம்! யாராவது யாரையாவது புகழ்ந்துகொண்டிருக்கும்போது நீ அதைக் கண்டித்தால்

போதும். 'அந்த ஆள் ஒரு புனிதர்' என்று யாராவது சொல்லிக் கொண் டிருந்தால் உடனே, 'இல்லை, அவன் ஒரு பாவி என்பது எனக்கு தெரியும்' என்று சொல்லு. 'இந்த நூல் மிகவும் சிறந்தநூல்' என்று யாராவது சொன்னால் உடனே 'நான் அதை வாசித்திருக்கிறேன், ஆராய்ந்திருக்கிறேன்', அது ஒரு குப்பை என்று கூறு. நீ அதைப் படித்திருந்தாலும் இல்லாவிட்டாலும் அதைப் பற்றி கவலைப்படாதே. வெறுமனே, 'இது சுத்த குப்பை' என்று சொல். 'இந்த ஓவியம் மாபெரும் கலைப்படைப்புகளில் ஒன்று' என்று யாராவது சொல்லிக் கொண்டிருந்தால், நீ பேசாமல் ''ஆனால் இது என்ன? வெறும் திரைச்சீலையும் வண்ணங்களும்தான்? ஒரு குழந்தைகூட இதைச் செய்துவிடுமே' என்று சொல். விமர்சி, மறுத்துக்கூறு, ஆதாரம் கேள்; ஏழு நாள்கள் கழித்து என்னை வந்து பார்.'' என்றார்.

ஏழு நாள்களுக்குள் இந்த மனிதன் ஒரு மாமேதை என நகரமே உணரத் தொடங்கியது: ''அவரது திறமைப்பற்றி நாம் எப்போதும் அறிந்ததே இல்லை. எல்லாவற்றைப் பற்றியும் இந்த மேதைக்குத் தெரிந்திருக்கிறது. ஓர் ஓவியத்தை அவரிடம் நீங்கள் காட்டினால் அவர் அதிலுள்ள பிழைகளை காட்டுவிடுகிறார். ஒரு பெரிய நூலை அவரிடம் நீங்கள் காட்டினால் அதிலுள்ள தவறுகளை அவர் எடுத்துக்கூறுகிறார். அவ்வளவு பெரிய விமர்சனப் புலி! ஆராய்ச்சியாளர்! மாமேதை!'' என்றனார்.

ஏழாம்நாள் அவன் அறிவாளிடம் வந்து, ''இப்போது உம்மிட மிருந்து நான் எந்த அறிவுரையும் பெறத் தேவை இல்லை. நீரே ஒரு முட்டாள்!'' என்றான். அந்த ஊர் முழுவதும் அந்த அறிவாளியை ஒரு ஞானவானாக நம்பி வந்தது. இப்போது ''நமது மேதையே அவனை முட்டாள் என்று சொல்லிவிட்டார்; அப்படியானால் அவன் ஒரு முட்டாளாகத்தான் இருக்கவேண்டும்'' என்று அவர்கள் எல்லாரும் சொன்னார்கள்.

மக்கள் எப்போதும் எதிர்மறைக் கூற்றையே எளிதாக நம்புகிறார்கள். ஏனெனில் ஓர் எதிர்கருத்தை மறுப்பது மிகவும் கடினமாகிறது. எப்படி உங்களால் நிரூபிக்க முடியும்? யேசு கடவுளின் மகன் என்பதை எப்படி உங்களால் நிரூபிக்க முடியும்? இரண்டாயிரம் ஆண்டுகளாக கிறிஸ்தவ இறையியல்காரர்கள் அதை மெய்ப்பிக்காமலேயே 'மெய்ப்பித்துக்' கொண்டு வந்திருக்கிறார்கள். ஆனால் அவர் ஒரு பாவி, அலைந்து திரிப வர் என்று சிலநிமிடங்களில் நிரூபிக்கப்பட்டு அவர்கள் அவரை கொன்றார்கள் - நிமிடங்களில்! ''ஒரு விலைமாதின் வீட்டிலிருந்து இந்த மனிதன் வெளிவருவதை நான் பார்த்தேன்'' என்று யாராவது சொன்னால், முடிந்தது! ''நான் பார்த்தேன்'' என்று சொல்லும் இந்த மனிதன் நம்பத்

தக்கவனாக இல்லையா என்பதைப் பற்றி யாரும் கவலைப்படுவதில்லை - யாருமே கவலைப்படுவதில்லை! எதிர்மறைக் கருத்து எப்போதும் எளிதாக நம்பப்படுகிறது. ஏனென்றால் அது உங்களின் அகங்காரத்துக்கும் உதவிக் கொண்டிருக்கிறது. உடன்பாடுக் கருத்துதான் நம்பப்படுவதில்லை.

நன்மையை காணும் போதெல்லாம் உங்களால் இல்லை எனச் சொல்ல முடிகிறது. ஆனால் அதன் மூலம் ஒரு நல்ல மனிதருக்கு உங்களால் கெடுதல் செய்துவிட முடியாது: உங்களுக்கே நீங்கள் கெடுதல் செய்து கொண்டிருக்கிறீர்கள். உங்களை நீங்களே அழித்துக் கொள்பவர்களாய் இருக்கிறீர்கள். உண்மையில் உங்களுக்கே கொஞ்சம் கொஞ்சமாக நஞ்சூட்டி நீங்கள் தற்கொலை செய்து கொண்டிருக்கிறீர்கள். ''இந்த மனிதர் நல்லவர் அல்லர், அந்த மனிதர் நல்லவர் அல்லர்'' என்று நீங்கள் சொல்லும்போது, உண்மையில் நீங்கள் உண்டாக்கிக் கொண்டிருப்பது என்ன? நல்லகுணத்துடனிருப்பது சாத்தியமே இல்லை என்று நீங்கள் நம்பப் போவதற்கான ஒரு சூழலையே உண்டாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். அப்படி நல்ல குணத்துக்கு வாய்ப்பில்லை என்றால் பின் அதற்கு முயற்சி எடுக்கவே தேவையில்லையே. இனி நீங்கள் கீழே விழுகிறீர்கள். நீங்கள் இருக்கிற நிலையிலேயே சம்மதித்து நின்று கொள்கிறீர்கள். வளர்ச்சி சாத்தியமின்றிப் போகிறது. நீங்கள் நிலைகொள்ளவே விரும்புவீர்கள். ஆனால் அப்போதும் நீங்கள் அவலத்திலேயே நிலைகொள்கிறீர்கள். ஏனெனில் நீங்கள் அவலமாகவே இருக்கிறீர்கள்.

நீங்கள் எல்லோரும் முற்றிலுமாக நிலைகொண்டு விட்டிருக்கிறீர்கள். இந்த நிலைத்த தன்மை உடைக்கப்படவேண்டி உள்ளது. உங்களை நிலைகுலைய வைக்க வேண்டி உள்ளது. நீங்கள் தங்கி இருக்கும் இடங்களில் இருந்தெல்லாம் உங்களை வேரொடு பிடுங்கி ஓர் உயர்ந்த தளத்தில் திரும்ப நட வேண்டி உள்ளது. ஆனால் நல்லனவற்றின் மீது களிப்புள்ளவர்களாக நீங்கள் இருந்தால் மட்டுமே அது சாத்தியம்.

**நல்லனவற்றைக் கண்டால் களிப்பு, தீமையைக் கண்டால் புறக்கணிப்பு.**

**தீமையைக் கூட கண்டனம் செய்யாதீர்கள்.**

சபலம் இருக்கவே செய்கிறது. நல்லனவற்றைக் கண்டனம் செய்ய விரும்புபவர் நீங்கள். ஆனால் பதஞ்சலியோ தீமையைக் கூட கண்டிக்காதே என்கிறார். ஏன்? மனதின் உள் இயங்கு முறையை அவர் அறிவார்: ஏனெனில் தீமையை அளவுக்கதிகமாக நீங்கள் கண்டித்தால், தீமையின்மீது அளவுக்கதிகமான கவனம் செலுத்துகிறீர்கள்; பையப்பைய அதற்கு நீங்கள்

பழகி விடுகிறீர்கள். '' இது தப்பு, அது தப்பு'' என்று நீங்கள் சொல்லிக் கொண்டே போனால் தப்பின்மீது அளவுக்கதிமான கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறீர்கள். நாளடைவில் தவறானதன் மீது தீராத மோகம் கொண்டவராக ஆகிவிடுவீர்கள். எந்த ஒன்றின்மீதும் அளவுக்குமீறிய கவனம் செலுத்தினால் அதனால் நீங்கள் வசியப்படுத்தப்படுகிறீர்கள். எதையெல்லாம் கண்டனம் செய்து கொண்டிருக்கிறீர்களோ அதை யெல்லாம் நீங்களே செய்வீர்கள். ஏனெனில் அது ஒரு கவர்ச்சியாக, உள்ளூர ஓர் ஈர்ப்பாக மாறும்: அப்படி இல்லாவிட்டால் கவலைப்படுவானேன்? அவர்கள் பாவிகள் சரி. ஆனால் அவர்களைப் பற்றி கவலைப்பட நீங்கள் யார்?

''தீர்ப்புச் சொல்லாதீர்கள்...'' என்றார் யேசு. அதையேதான் புறக் கணிப்பு என்பதன் மூலம் குறிப்பிடுகிறார் பதஞ்சலி. இப்படியோ அப்படியோ தீர்ப்பிடாதீர்கள். புறக்கணித்துவிடுங்கள். சரி என்றோ தப்பு என்றோ சொல்லாதீர்கள். இகழவும் செய்யாதீர்கள், புகழவும் செய்யாதீர்கள். பேசாமல் அதை இறைமையிடம் விட்டுவிடுங்கள். அது உங்கள் வேலை அல்ல. ஒருவன் திருடுகிறான் என்றால் அது அவன் பிரச்சினை. மற்றும் கடவுளின் பிரச்சினை. அவர்களே தீர்த்துக் கொள்ளட் டும்இடையில் நீங்கள் நுழையாதீர்கள். நடுவில் உங்களை நுழைய சொன்னது யார்? ''நீங்கள் தீர்ப்பிட வேண்டாம்...'' என்கிறார் யேசு. ''கண்டுகொள்ள வேண்டாம்'' என்கிறார் பதஞ்சலி.

உலகின் மாபெரும் வசியக்காரர்களில் ஒருவரான எமிலி கூ (*Emile coue*) வசிய விதி என்னும் விதியை கண்டுபிடித்தார். அதை அவர் (*Law of Reverse Effect*) எதிர்விளைவு விதி என அழைத்தார். ஒன்றுக்கு எதிராக நீங்கள் அளவுக்குமேல் எதிர்ப்புத் தெரிவித்தால் நீங்களே அதற்குப் பலியாகி விடுவீர்கள். சாலையில் புதிதாக சைக்கிள் ஓட்ட பழகிக் கொண்டிருப்ப வரைப் பாருங்கள். சாலை அறுபது அடி அகலம் இருக்கிறது. சாலையின் ஓரத்தில் ஒரு மைல்கல் உள்ளது சைக்கிள் ஓட்டுவதில் நீங்கள் திறமை சாலியாக இருந்து அக்கல்லை நீங்கள் குறிவைத்து ஓட்டி னாலும்கூட, ''நான் போய் அக்கல்லின் மேல் மோதுவேன்'' என்று போனாலும்கூட, சில நேரங்களில் நீங்கள் குறிதவறி விடலாம். ஆனால் புதிதாக பழகுபவரின் குறி ஒருபோதும் தவறுவதில்லை - ஒரு தடவை கூட! அந்த மைல் கல் மேல் தவறாமல் போய் மோதுகிறார் அவர். ஒரு நுட்பமான முறையில் அவரது சைக்கிள் அந்த கல்லை நோக்கியே போகிறது. இத்தனைக்கும் அறுபது அடி அகலச்சாலை! கண்ணைக் கட்டிக் கொண்டு கூட அதில் நீங்கள் சைக்கிள் விட முடியும். அப்படி இருக்க சாலையில் யாரும் இல்லாதிருந்தும்கூட, முற்றிலும் அமைதியாக இருந்தும்கூட யாருமே நடமாடாத போதும்கூட...,

இந்த கத்துக்குட்டிக்கு என்ன ஆகிறது? ஒரு விதி செயல்பட்டுக் கொண்டிருக்கிறது: அதை எமிலி கூ ''இயக்கத் திசைமாற்ற விளைவு விதி'' என்கிறார். அவர் ஒரு கத்துக்குட்டி என்பதால் உடனடியாக அவர் பயந்து விடுகிறார். எனவே சுற்றுமுற்றும் பார்க்கிறார். பயப்படுவதற்கு எங்கே இடம் இருக்கிறது என்று பார்க்கிறார் - எந்த இடத்தில் தான் தவறாகிப் போய்விட முடியும் என்பதை துளாவுகிறார். சாலை முழுவதும் பிரச்சினை இல்லாமலே உள்ளது. ஆனால் இந்தக்கல்தான், சாலையின் மூலையில் கிடக்கும் இந்த சிவப்பு கல்தான் ஆபத்தாக உள்ளது: ''அதன்மேல் நான் மோதிவிடலாம்.'' என நினைக்கிறார் இப்போது அதனுடன் ஒரு நெருக்கம் உருவாகிறது. இப்போது அவரது கவனம் இந்த கல்லின்மீதே இருக்கிறது. முழு சாலையும் மறந்து போகிறது. மேலும் அவர் ஒரு கத்துக்குட்டிதான்! அவர் கைகள் நடுங்கின்றன. அவர் அந்தக் கல்லையே பார்த்துக் கொண்டிருக்கிறார். பையப்பைய சைக்கிள் அதை நோக்கிய போய்க் கொண்டிருப்பதாக உணர்கிறார். அப்படி ஒருமுறை அவர் உணர்ந்ததுமே...

உங்கள் கவனத்தின் திசையிலேயே சைக்கிள் பின்பற்றி செல்ல வேண்டி உள்ளது. சைக்கிளுக்கு தனக்கேயான திசைவழி எதுவும் இல்லை. நீங்கள் எங்கெல்லாம் போவீர்களோ அங்கெல்லாம் அது உங்களை பின்தொடர்கிறது. உங்கள் கண்களை நீங்கள் பின்பற்றுகிறீர்கள். ஒரு நுட்பமான வசியத்தை, கூர்ந்த கவனத்தை உங்கள் கண்கள் பின்தொடர் கின்றன. நீங்கள் கல்லை பார்த்துக் கொண்டிருந்தால் கைகள் அத்திசையில் இயங்குகின்றன. இதனால் நீங்கள் மென்மேலும் பயந்து விடுகிறீர்கள். எவ்வளவு அதிகமாய் பயப்படுகிறீர்களோ அவ்வளவு அதிகமாய மாட்டிக் கொள்கிறீர்கள். ஏனெனில் இப்போது அந்தக் கல் ஒரு தீயசக்தியாக தோன்றுகிறது. அது உங்களை கவர்ந்திழுப்பது போல் தோன்றுகிறது. சாலை முழுவதுமாக மறந்துவிடுகிறது, சைக்கிள் மறந்துவிடுகிறது, கற்றுக்கொள் பவர் தன்னையே மறந்துவிடுகிறார். கல் மட்டுமே கவனத்தில் இருக்கிறது. நீங்கள் வசியப்படுத்தப்பட்டிருக்கிறீர்கள். போய் அந்த கல்மேல் மோதுவீர்கள். இப்போது உங்கள் மனதின் கவனத்தை நீங்கள் நிறைவேற்றி விட்டீர்கள். (எனவே) அடுத்தமுறை இன்னும் அதிகமாய் பயப்படுவீர்கள். அப்படியானால் இதிலிருந்து விடுபட்டுக் கொள்வது எப்படி?

ஒன்றைத் தப்பு என நீங்கள் சொல்லும்போது, மடாலயங்களுக்குப் போய்ப் பாருங்கள் - துறவிகள் காமத்தை தப்பு என்று கண்டனம் செய்துகொண்டிருப்பார்கள். காமமே அவர்களின் மைல்கல்லாக ஆகிஉள்ளது. இருபத்து நான்கு மணிநேரமும் அவர்கள் அதைப்பற்றிய எண்ணிக் கொண்டு இருக்கிறார்கள். அதிலிருந்து தப்பிக்க முயல்வது அதைப்பற்றி நினைப்பதாகும்.அதிலிருந்து தப்பிக்க நீங்கள் எவ்வளவு அதிகமாய் முயல்வீர்களோ அவ்வளவு அதிகமாய் அதனால் நீங்கள்

வசியப்படுத்தப்படுகிறீர்கள். எனவேதான் ஒரு மகான் தன் மனத்தை ஒருமுகப்படுத்தும்போது தேவலோகத்தில் இருந்து அழகிய பெண்கள் வந்து அவரது மனதை கலைக்க முயல்கிறார்கள் என்று பழைய புராணங்களில் கூறப்படுகிறது. அவர் மேல் அழகிய பெண்கள் ஏன் நாட்டம் கொள்ளவேண்டும்? ஒருவர் ஒரு மரத்தடியில் கண்மூடி உட்கார்ந்திருக்கும் போது, அத்தகைய மனிதரிடம் இந்த அழகிய பெண்கள் ஆர்வம் கொள்வானேன்?

எங்கிருந்தும் யாரும் வருவதில்லை. ஆனால் காமத்துக்கு மிகவும் எதிரானவராக அவர் இருப்பதால் அது ஓர் ஈர்ப்பு சக்தி ஆகிவிடுகிறது. எந்த அளவுக்கு அவர் அதனால் வசியப்பட்டுவிடுகிறார் என்றால் ஒரு நிலையில் கனவுகள் மெய்போல் தோன்றுகின்றன. அவர் கண்களைத் திறந்து பார்க்கும்போது கண்முன் ஓர் அழகான நிர்வாண மங்கை நின்று கொண்டிருப்பதை பார்க்கிறார். அம்மணமான பெண்ணை பார்க்க உங்களுக்கு விரச நூல் தேவைப்படும். மடத்துக்கு போனால் உங்களுக்கு விரச நூல் தேவைப்படாது. உங்களுக்கான விரசக்காட்சிகளை நீங்களே உங்களைச் சுற்றிலும் உருவாக்குகிறீர்கள். மனதை ஒருமுகப்படுத்திக் கொண்டிருக்கும். ஞானி இனி இன்னும் அதிகமாய் பயப்படுகிறார்: அவர் கண்களை மூடி, கையை இறுக்குகிறார். இப்போது பெண் உள்ளுக்குள்ளே நின்று கொண்டிருக்கிறாள்.

மேலும் அப்படிப்பட்ட அழகிய பெண்களை இந்த பூமியில் எங்கும் உங்களால் கண்டுபிடிக்க முடியாது. ஏனெனில் அவர்கள் கனவின் படைப்புகளாக - வசியத்தின் துணை விளைவுகளாக இருக்கிறார்கள். அவர் பயப்படுவது அதிகரிக்கும் அளவுக்கு, அவர்கள் அங்கு இருப்பதும் அதிகரிக்கிறது. அவர் உடலுடன் அவர்கள் உரசுவார்கள். அவர் தலைமேல் கைவைப்பார்கள். அவரைத் தொட்டு தழுவுவார்கள். அவர் முற்றிலும் பைத்தியமாகிறார். ஆனால் இது நிகழவே செய்கிறது. உங்களுக்கும் கூட இரு நடந்துகொண்டிருக்கிறது. அளவுகள் கூடகுறைய இருக்கலாம். ஆனால் நிகழ்ந்துகொண்டிருப்பது இதுதான். வெளியில் எதற்கெல்லாம் நீங்கள் எதிராக இருக்கிறீர்களோ அதனோடெல்லாம் அடியாழத்தில் நீங்கள் சேர்ந்து கொள்வீர்கள்.

ஒருபோதும் எதற்கு எதிராகவும் இருக்காதீர்கள். தீமைக்கு எதிராக இருப்பது என்பது அதற்கு பலியாவதே ஆகும். அப்போது தீமையின் கைகளுக்குள் நீங்கள் விழுந்துகொண்டு இருக்கிறீர்கள். புறக்கணியுங்கள். புறக்கணிப்பை நீங்கள் கடைப்பிடித்தால், அதன்பொருள், அது உங்கள் பிரச்சினை அல்ல என்பதாகும். ஒருவன் திருடிக் கொண்டிருக்கிறான்: அது அவனுடைய கருமம் - வினை. அதை அவன் அறிந்துகொள்வான்.

அதற்காக அவன் துன்புற வேண்டி இருக்கும். அது உங்கள் வேலையே அல்ல. நீங்கள் அதைப்பற்றி எண்ணாதீர்கள். அதில் எந்தக் கவனமும் செலுத்தாதீர்கள். ஒரு விலைமாது இருக்கிறாள்: அவள் தன் உடலை விற்றுக்கொண்டிருக்கிறாள் - அது அவள் பிரச்சினை. உங்களுக்குள் அவளைப்பற்றிய கண்டனம் எழுவதில்லை. எழுந்தால் அவள் பால் நீங்கள் ஈர்க்கப்பட்டு விடுவீர்கள்.

ஒரு மிகப் பழைய கதை ஒன்றில் இப்படி நடந்துள்ளது. ஒரு துறவியும் ஒரு விலைமாதுவும் அக்கம்பக்கமாக வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் ஒருவருக்கொருவர் பக்கத்து வீட்டுக்காரர்கள். அவர்கள் இருவரும் இறந்தார்கள். துறவி மிகவும் பிரபலமாக விளங்கியவர். யம தூதன் வந்து துறவியை நரகத்துக்கு தூக்கிச்செல்லத் தொடங்கினான். துறவி இறந்த அதே நாளிலேயே விலைமாதும் இறந்தாள்.

விலைமாது சொர்க்கத்தை நோக்கிய சாலையில் கொண்டுபோகப் படுவதை பார்த்த துறவி அதிர்ச்சி அடைந்தார். எனவே அவர் சொன்னார், ''என்ன இது? ஏதோ குழப்பம் ஏற்பட்டுள்ளதாக தோன்றுகிறது. என்னைத் தான் சொர்க்கத்துக்கு இட்டுச் செல்ல வேண்டும். இவளோ ஒரு தேவடியாள்!'' என்றார்.

'யமதூதன் சொன்னான், ''எங்களுக்குத் தெரியும். ஆனால் இப்போது நீர் கேட்பதால் உனக்கு நான் விளக்கம் தருகிறேன். இதில் எந்த குழப்பமும் தவறும் நேர்ந்துவிடவில்லை. விலைமகளை சொர்க்கத்துக்கு கொண்டுவர வேண்டும், துறவியை நரகத்தில் தூக்கிவீச வேண்டும் என்றே உத்தரவுகள் உள்ளன.'' என்றான். ''ஆனால் ஏன் அப்படி? என்றார் துறவி. அந்த விலை மாதுவால்கூட இதை நம்ப முடியவில்லை. அவள் சொன்னாள், ''ஏதோ தவறு நடந்திருக்கவே வேண்டும். என்னை சொர்க்கத்திற்கு கொண்டு போவதா? அவர் ஒரு புனிதர் - மிகப்பெரிய புனிதர். அவரை நாங்கள் வழிபட்டு வந்தோம். அவரை சொர்க்கத்துக்கு கூட்டிச் செல்லுங்கள்.'' என்றார்.

அதற்கு யமதூதன் , ''இல்லை. அதற்கு வாய்ப்பில்லை. வெறும் வெளித் தோற்றத்தில்தான் அவன் புனிதன். ஆனால் இடைவிடாமல் அவன் உன்னையேதான் நினைத்துக் கொண்டிருந்தான். இரவில் நீ பாடும்போது அவன் வந்து உன்னைக் கவனிப்பான். வேலியின் அருகிலேயே நின்றுகொண்டு உன்னைக் கவனிப்பான். உன்னை வந்து பார்க்கவேண்டும், உன்னுடன் கூடவேண்டும் என்று அவன் கோடிக்கணக்கான தடவை விரும்பினான். கோடிக்கணக்கான தடவை உன்னை அவன் கனவு கண்டான். உன்னையே அவன் சதா நினைத்துக்கொண்டிருந்தான். அவன்

உதட்டில் கடவுளின் பெயர் இருந்தது. உள்ளத்திலோ உனது உருவமே இருந்தது.'' என்றார்.

வேசியின் கதையும் இதுபோலவே வேறுபட்டு இருந்தது. அவள் தன் உடலை விற்றுக் கொண்டிருந்தாள். ஆனால் கோயிலிலேயே வாழும் இவர் போன்ற ஒரு புனிதரின் வாழ்க்கையை தான் வாழவேண்டும் என விரும்பி அதையே எப்போதும் நினைத்துக் கொண்டிருந்தாள். ''அவர் எவ்வளவு தூயவராக இருக்கிறார்!'' அந்த புனிதரையே, அவரது தூய்மையையே, புனிதத்தையே, தான் தவறவிட்டுவிட்ட அந்தக் கற்பையே அவள் கனவு கண்டாள். வாடிக்கையாளர்கள் வந்து போனபின் ஆண்டவனிடம் அவள், ''அடுத்த பிறப்பில் என்னை ஒருபாவியாக பரத்தையாக படைத்து விடாதீர். என்னை உமது அடியாளாக ஆக்கும். என்னை ஒரு தியானியாக ஆக்கும். திருக்கோயிலில் பணிபுரிபவளாக இருப்பதே என் விருப்பம்.'' என்று வேண்டினாள்.

பல நேரங்களிலும் கோயிலுக்கு போக அவள் எண்ணினாள். ஆனால் தன் மிகுதியான பாவத்தை நினைத்து தான் கோயிலுக்குள் நுழைவது சரியல்ல என முடிவுசெய்தாள்.'' அது மிகவும் தூய இடம். நானோ மிகவும் பாவி.'' பல நேரங்களில் அந்த மகானின் பாதங்களைத் தொட அவள் விரும்பினாள். ஆனால் அது சரியாயிராது என நினைத்தாள்.'' அவரது பாதங்களைத் தொடக்கூட நான் தகுதி அற்றவள்.'' எனவே துறவி கடந்து போனபின் அவர் பாதம்பட்ட மண்ணை மட்டும் எடுத்துக்கொள் வாள். அதை அவள் வழிபட்டு வந்தாள்.

வெளித்தோற்றத்தில் நீங்கள் என்னவாக இருக்கிறீர்கள் என்பது பிரச்சினையே அல்ல. உங்கள் உள் வசிய நிலை என்னவாக இருக்கிறது என்பதே உங்கள் வாழ்வின் வருங்காலப் போக்கைத் தீர்மானிக்கும். தீமைக்கு புறக்கணித்து இருங்கள். புறக்கணிப்பு (*indifference*) என்றால் அக்கறையின்மை அல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள். இவற்றுக்கிடையில் நுட்பமான பாகுபாடுகள் உள்ளன. புறக்கணிப்பு என்பது அக்கறையின்மை ஆகாது! உங்கள் கண்களை மூடிக்கொள்ள வேண்டும் என்பதல்ல அதன்பொருள். ஏனெனில் உங்கள் கண்களை நீங்கள் மூடிக்கொண்டாலும் உங்களுக்குள் ஒரு நிலைப்பாடு, ஒரு மனப்பான்மை இருக்கவே செய்கிறது. எதற்கும் கவலையில்லை என்பதும் அதன் பொருளல்ல. ஏனெனில் அதிலும் ஒரு நுட்பமான கண்டனம் இருக்கிறது. புறக்கணிப்பில் அது நிலவுவதில்லை, புறக்கணிப்பு என்றால் அது அங்கு இல்லை என்பதுபோல் எடுத்துக்கொள்வது மட்டுமே. புறக்கணிப்பு என்றால் எந்த மனப்பான்மையையும் வளர்த்துக் கொள்வதில்லை என்று பொருள். ஒன்றுமே நிகழாததுபோல் நீங்கள் கடந்து போகிறீர்கள்.

பதஞ்சலி பயன்படுத்தும் சொல் **உபேட்சை**. இது மிகவும் அழகான சொல். இதன் பொருள் அலட்சியமோ, பகைமையோ, தப்பித்தலோ அல்ல. எந்த மனோபாவமும் அற்ற வெறும் புறக்கணிப்பே அது. எந்த மனப்பான்மையும் கொள்வதில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஏனெனில் ஒரு குறிப்பிட்ட மனப்பான்மையினாலும் நீங்கள் புறக்கணிக்க முடியும்; அது மதிப்பற்றது என்று நீங்கள் நினைக்க முடியும்; நான் அதை நினைத்துப் பார்க்கும் தகுதி அதற்கு இல்லை என்று நீங்கள் கருதமுடியும் - அப்படியானால் அது ஒரு மனப்பான்மைதான். அதில் நுட்பமான ஒரு கண்டனம் மறைந்துள்ளது. புறக்கணிப்பு என்பதன் பொருள், ''தீர்ப்பிட, முடிவு செய்ய நீங்கள் யார்?'' என்பது மட்டுமே. உங்களைப்பற்றி நீங்கள் நினைக்கிறீர்கள்? ''நீ யார்? எது தப்பு, எது சரி என நீ எப்படி சொல்ல முடியும்? யாருக்கு தெரியும்?''

ஏனெனில் வாழ்க்கை மிகுந்த சிக்கலுள்ளதாக இருக்கிறது. தப்பானது சரியானதாக மாறுகிறது. நல்லது கெட்டதாக மாறுகிறது. அவை ஒன்று மற்றதாக மாறுகின்றன. பாவிகள் மோட்சம் அடைந்ததாகவும் தெரிய வந்துள்ளது. மகான்கள் நரகத்தில் தள்ளப்பட்டதாகவும் தெரியவந்துள்ளது. ஆக யாருக்குத் தெரியும்? மேலும் அதற்கு நீங்கள் யார்? யார் உங்களிடம் கேட்டது? உங்களை நீங்கள் பாருங்கள். அதை நீங்கள் பார்த்துக் கொண்டாலே பெரிய காரியம் செய்திருக்கிறீர்கள். அதிக விழிப்புள்ளவர் களாகவும் கவனமாகவும் இருங்கள். அப்போது உங்களிடம் ஒரு புறக்கணிப்பு - பற்றற்றதன்மை வருகிறது. அதில் எந்த மனப்பான்மையும் இராது.

நடந்த சம்பவம்: விவேகானந்தர் அமெரிக்கா போவதற்கு முன்பு, உலகப் புகழ்பெற்றவராவதற்கு முன்பு, ஜெய்ப்பூர் மகராஜாவின் அரண்மனையில் தங்கி இருந்தார். விலேகானந்தர் மீதும் ராமகிருஷ்ணர் மீதும் மகாராஜா அன்பு கொண்டிருந்தார். தன் அரண்மனையில் விவேகானந்தர் தங்க வந்தபோது, எல்லா மகாராஜாக்களும் செய்வதுபோலவே, அவர் ஒரு பெரிய விழாவே எடுத்தார். விவேகானந்தரை வரவேற்று உபசரிக்கும் முறையில் பரத்தையரை வரவழைத்து ஆடிப்பாட செய்தார். மகாராஜாக்கள் செய்வது போலவே: அவர்களுக்கு குறிப்பிட்ட மனப்போக்கு உள்ளது. ஒரு சந்நியாசியை வரவேற்க பரத்தையரை ஆடிப்பாடச் செய்வது பொருந்தாது என்பதை அவர் முற்றிலும் மறந்துவிட்டார். ஆனால் அவருக்கு வேறெதுவும் தெரிந்திருக்கவே முடியாது. ஒருவரை வரவேற்க வேண்டி இருந்தால் குடிக்கவும் ஆடிப்பாடவும் செய்யவேண்டும் என்பதுதான் அவருக்கு எப்போதும் தெரிந்திருந்தது.

ஆனால் விவேகானந்தர் அப்போது முதிர்ச்சி அற்றவராகவே இருந்தார். இன்னும் முழுமையான சந்நியாசியாக அவர் ஆகவில்லை. அவர் ஒரு முழு சந்நியாசி ஆகி இருந்தால் அப்போது பற்றற்றத் தன்மை இருந்திருக்கும். பிரச்சினை இருந்திருக்காது. ஆனால் அவர் இன்னும் புறக்கணிப்பவராக ஆகவில்லை. பதஞ்சலிக்குள் அந்த அளவுக்கு ஆழமாக அவர் போயிருக்கவில்லை. அவர் ஓர் இளைஞராக இருந்தார். தன் காமத்தையும் எல்லாவற்றையும் அடக்கிவைத்துக் கொண்டிருந்தார். மிகவும் அமுக்கி வைத்த ஒருவராகவே இருந்தார். தாசியைப் பார்த்ததும் அவர் பேசாமல் தன் அறைக்குள் போய் தாளிட்டுக்கொண்டார். வெளியே வரவில்லை.

மகாராஜா வந்து மன்னிப்பு கேட்டுக்கொண்டார். எனக்குத் தெரியாது. இதுவரை யாம் ஒருபோதும் எந்த சந்நியாசிக்கும் வரவேற்பு கொடுத்த தில்லை. நாங்கள் எப்போதும் ராஜாக்களையே வரவேற்றிருக்கிறோம். எனவே அவர்களை வரவேற்கும் வழிமுறைகளையே யாம் அறிவோம். எனவே யாம் வருந்துகிறோம். மேலும் இது அதிகபட்ச அவமதிப்பாக ஆகிவிட்டது. ஏனெனில் இவள்தான் நாட்டிலேயே மிகப்பெரிய தாசி - மிகுந்த விலைமதிப்புடையவள். அவளுக்கு நாங்கள் பணம் செலுத்திவிட்டோம். இனிபோய் அவளை திரும்பிப்போகுமாறு சொல்வது அவளை அவமதிப்பதாகும். நீங்கள் வராவிட்டாலோ அவள் மிகவும் வருத்தப் படுவாள். எனவே வெளியே வாருங்கள்.'' என்றார் மகாராஜா.

ஆனால் விவேகானந்தர் வெளியேவர அஞ்சினார். எனவேதான் அவர் இன்னும் பக்குவப்படவில்லை என்கிறேன். இன்னும் அவர் ஒரு பழுத்த சந்நியாசி ஆகவில்லை என்கிறேன். இன்னும் புறக்கணிப்பு ஏற்படவில்லை. ஒரு கண்டனமே இருந்தது. ''தாசியா?'' அவருக்கு மிகுந்த ஆத்திரம் வந்துவிட்டது. ''முடியாது!'' என்றார். பின் அவர் இல்லாமலேயே தாசி பாடத் தொடங்கினாள். ஒரு மகானைப்பற்றிய ஒரு பாடலை பாடினாள். அந்த பாட்டு மிகவும் அருமையாக இருந்தது.'' உன் முன் வர நான் தகுதியற்றவள் என்பதை நான் அறிவேன். ஆனால் நீ இன்னும் கொஞ்சம் அதிக கருணை காட்டியிருக்க முடியும். நான் தெருவில் கிடக்கும் புழுதிக்கு சமானம் என்பதை உணர்கிறேன். ஆனால் அதற்காக என்னிடம் இவ்வளவு பகைமை பாராட்ட தேவை இல்லை. நான் ஓர் ஒன்றுமற்றவள் - அறியாமைமிக்கவள், பெரும் பாவி. ஆனால் நீ ஒரு மகான்; (அப்படியிருக்க)என்னைக் கண்டு நீ ஏன் பயப்படுகிறாய்?'' என்று போகிறது அப்பாடல்.

தன் அறையில் இருந்தபடியே அந்தப் பாட்டை விவேகானந்தர் கேட்டார் என்று கூறப்படுகிறது. அந்த விலைமாது அழுதபடியே பாடிக்கொண்டிருந்தாள். உடனே அவர் உணர்ந்தார் - தான் செய்து

கொண்டிருப்பதன் மொத்த சூழ்நிலையையும் உணர்ந்தார். அது முதிர்ச்சியற்றது, சிறுபிள்ளைத்தனமானது. ஏன் அவர் பயப்பட்டார்? நீங்கள் கவரப்படும்போது மட்டுமே பயம் ஏற்படுகிறது. பெண்களிடம் உங்களுக்கு ஈர்ப்பு ஏற்பட்டால் மட்டுமே பெண்களைப் பார்க்க நீங்கள் பயப்படுவீர்கள் நீங்கள் ஈர்க்கப்படவில்லை என்றால் அச்சம் மறைகிறது. அச்சப்பட என்ன இருக்கிறது? எந்த பகைமையும் இல்லாமலே ஒரு புறக்கணிப்பு வருகிறது.

கதவைத் திறந்தார் அவர்: அதற்குமேலும் அவரால் தன்னை கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை. தாசி அவரைத் தோற்கடித்து விட்டாள். அவள் வென்றுவிட்டாள். அவர் வெளியேவர வேண்டிய தாயிற்று. வந்து அமர்ந்தார். தன் நாட்குறிப்பில், ''தெய்வம் ஒரு புதிய வெளிச்சத்தை எனக்கு அருளியது. நான் பயந்தேன்...எனக்குள் காமவிகாரம் இருந்திருக்கவேண்டும். எனவேதான் நான் பயந்தேன். ஆனால் அந்த பெண் என்னை முற்றிலுமாக தோற்கடித்துவிட்டாள். மேலும் அத்தகைய ஒரு தூய ஆத்மாவை ஒருபோதும் நான் பார்த்ததில்லை. அந்தக் கண்ணீர் மிகவும் நிர்மலமாக இருந்தது. அந்தப் பாடலும் மிகவும் புனிதமாக இருந்தது. அதைத் தவறவிடப் பார்த்தேன். அவள் அருகில் அமர்ந்திருந்த போதுதான், முதல் தடவையாக, வெளியில் இருப்பது யார் என்பதல்ல, உள்ளே என்ன இருக்கிறது என்பதே கேள்வி என்பதை உணர்ந்து கொண்டேன்.'' என்று எழுதினார்.

அன்று இரவு அவர் தன் நாட்குறிப்பில், ''இப்போது அந்தப் பெண்ணுடன் ஒரே படுக்கையில் என்னால் படுக்கவும் முடியும். எனக்குள் எந்த பயமும் இல்லை.'' என்று எழுதினார். அவர் கடந்துவிட்டார். அவர் கடந்துசெல்ல அந்தத் தாசி அவருக்கு உதவினாள். இது ஓர் அற்புதமே. (ஏனென்னில்) ராமகிருஷ்ணரால் உதவமுடியவில்லை. ஒரு தாசியால் உதவ முடிந்தது. எனவே எங்கிருந்து உதவிவரும் என்பது யாருக்கும் தெரியாது. எது தீயது, எது நல்லது என்பதை எவரும் அறியார். தீர்மானிப்பது யார்? மனம் கையாலாகாததும் வீரியமற்றதுமாக இருக்கிறது. எனவே எந்த மனப்பான்மையையும் கைக்கொள்ள வேண்டாம்: இதுதான் புறக் கணித்திருப்பது என்பதற்கு அர்த்தமாகும்.

**சுவாசத்தை மாறிமாறி வெளியேற்றவும் உள்நிறுத்தவும் செய்வதன் மூலமும் மனம் சாந்தி அடைகிறது.**

வேறு மாற்றுவழிகளையும் பதஞ்சலி தருகிறார். இதை நீங்கள் செய்ய முடிந்தால் - மகிழ்ச்சியானவர்களுடன் சேர்ந்து மகிழ்ச்சியாக - நட்பாக இருப்பது, துன்பத்தில் இருப்போரிடம் கருணையுடன் இருப்பது, நல்லவர்களை கண்டால் களிப்புக் கொள்வது, தீயவர்களைக் கண்டால் கண்டுகொள்ளாமல் இருப்பது - இவற்றை நீங்கள் செய்யமுடிந்தால்,

மனத்தின் மாற்றம் உன்னத மனத்தை நோக்கி ஆரம்பித்துவிட்டது. அப்படி உங்களால் நடக்க முடியவில்லை என்றால், அது கடினமாக உள்ளது - எளிதாக இல்லை என்றால், பின் வேறு வழிகள் உள்ளன; எனவே மனம் தளர வேண்டியதில்லை.

**பதஞ்சலி கூறுகிறார்:**

**சுவாசத்தை மாறிமாறி வெளியேற்றவும் உள்நிறுத்தவும் செய்வதன் மூலமும் மனம் சாந்தி அடைகிறது.**

அப்படியானால் நீங்கள் உடலியல் வழியாக நுழையுங்கள். முதலில் சொன்னது உளவியல் வழியாக நுழைவதாகும். *(entering through the mind)* இரண்டாவது, உடலியல் வழியாக நுழைவதாகும்.

சுவாசித்தலும் எண்ணுதலும் ஆழமான தொடர்புடையன. ஒரே பொருளின் இருமுனைகள் போல் அவை உள்ளன. மனம் மாறுகிற போதெல்லாம் சுவாசமும் மாறுகிறது என்பதை, சிறிது விழிப்பாக கவனித்தால் நீங்களும் சில நேரங்களில் உணர முடிகிறது. எடுத்துக்காட்டாக நீங்கள் கோபமாக இருக்கிறீர்கள்; உடனடியாக சுவாசம் மாறுகிறது, லயம் மறைகிறது, மூச்சின் தன்மை வேறுபடுகிறது. அது சீராக இல்லை.

நீங்கள் உணர்ச்சி வேகத்தில் இருக்கும்போது, காம உணர்வு / மோகம் மேலிடும் போது சுவாசம் மாறுகிறது. அது சமநிலை குலைந்ததாக, தன்னிலை மறந்ததாக ஆகிறது. நீங்கள் மௌனமாக இருக்கும்போது, எதையும் செய்யாமல் இருக்கும்போது, மிகவும் ஓய்வாக உணரும் போது, சுவாசம் வேறு விதமான லயத்தில் இருக்கிறது. நீங்கள் கவனித்துப் பார்த்தால், பதஞ்சலி மிக ஆழமாக கவனித்திருக்க வேண்டும்... நீங்கள் ஆழ்ந்து கவனித்தால், எந்த விதமான சுவாசமும் லயமும் எந்த விதமான மனத்தை உருவாக்குகிறது என்பதை உங்களால் கண்டுபிடிக்க முடியும். நீங்கள் நட்பு மனநிலையில் இருந்தால் மூச்சு ஒருவிதமாய் இருக்கிறது. நீங்கள் பகை உணர்வில் இருந்தால், கோபமாயிருந்தால், மூச்சு ஒருவிதமாய் இருக்கிறது. எனவே ஒன்று மனத்தை மாற்றுங்கள், சுவாசம் மாறுபடும். அல்லது நேரெதிராக செய்யுங்கள்; சுவாசத்தை மாற்றுங்கள், மனம் மாறிவிடும். மூச்சின் விதத்தை மாற்றுங்கள், உடனடியாக மனமும் மாறும்.

நீங்கள் மகிழ்ச்சியாக, அமைதியாக, களிப்புடன் இருப்பதாக உணரும்போது இருக்கும் சுவாசத்தின் லயத்தை நினைவில் வையுங்கள். அடுத்த தடவை கோபம் வரும்போது மூச்சின் லயம் மாறவிடாதீர்கள். நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும்போது இருந்த அதே லயத்தை தக்கவையுங்கள். அப்படி செய்தால் கோபப் படுவது சாத்தியப்படாது.

ஏனெனில் சுவாசமே சூழ்நிலையை உருவாக்குகிறது. இரத்தத்தில் ரசாயனப் பொருள்களை வெளிவிடும் (உடலுக்குள் உள்ள) சுரப்பிகளை மூச்சின் லயம் கட்டுப்படுத்துகிறது.

இதனால்தான் நீங்கள் கோபப்படும்போது உங்களுக்கு முகம் சிவந்து போகிறது: குறிப்பிட்ட வேதிப் பொருள்கள் ரத்தத்தில் கலக்கின்றன. நீங்கள் நிதானமற்றவர்களாக ஆகிறீர்கள். வெப்பநிலை உயர்கிறது. சண்டை பிடிக்கவோ தப்பிஓடவோ உடல் தயாராக உள்ளது. ஓர் அவசரநிலை தன்மையில் இருக்கிறது உடல். மூச்சின் தாக்குதலால் இந்த மாற்றம் வருகிறது.

சுவாச கதியை மாற்றாதீர்கள். நீங்கள் அமைதியாக இருக்கும்போது இருப்பதுபோலவே அதை தக்கவையுங்கள். சுவாசம் ஓர் அமைதியான கதியை பின்பற்றுவதாக மட்டும் இருக்கட்டும் - இந்நிலையில் நீங்கள் கோபப்படுவது இயலாததாக ஆகிறது. மிகவும் உணர்ச்சி வசப்பட்டவராக நீங்கள் ஆகும்போது, மோகம்/ காமம் மேலிடும்போது, மூச்சில் நிதானமாக இருக்க முயலுங்கள், காமம் மறைந்துவிடுவதைக் காண்பீர்கள்.

**இங்கே ஒரு முறையை அவர் முன்மொழிகிறார்:**

**சுவாசத்தை மாறிமாறி வெளியேற்றவும் உள்நிறுத்தவும் செய்வதன்மூலம் மனம் சாந்தி அடைகிறது.**

நீங்கள் இரண்டு வேலைகள் செய்ய முடியும்: மனம் சாந்தமாய் இல்லை, இறுக்கமாக, கவலையாக, உளறிக்கொட்டிக்கொண்டு, பதற்றமாக, ஓயாமல் கனவு காண்பதாக உள்ளது என்பதை நீங்கள் உணரும் போதெல்லாம் ஒரு காரியம் செய்யுங்கள்: முதலில் ஆழமாக மூச்சை வெளிவிடுங்கள். எப்போதுமே வெளிமூச்சுடன் தொடங்குங்கள். ஆழமாக வெளிமூச்சுவிடுங்கள். உங்களால் முடிந்த அளவுக்கு காற்றை வெளியில் தள்ளுங்கள். காற்றை வெளியில் தள்ளுவதோடு அந்த நேரத்து மனநிலையும் தள்ளப்படுகிறது. ஏனெனில் மூச்சுதான் எல்லாம்.

மேலும் முடிந்தவரை மூச்சை வெளியேற்றுங்கள். வயிற்றை உள் இழுத்து சில நொடிகள் அப்படியே வைத்திருங்கள். மூச்சை உள்ளிழுக்காதீர்கள். காற்று வெளியேறட்டும். சில நொடிகளுக்கு உள்மூச்சு வாங்காதீர்கள். பின் உடலை உள்சுவாசம் வாங்கவிடுங்கள். ஆழமான உள்மூச்சு வாங்குங்கள் - உங்களால் முடிந்த அளவுக்கு. மீண்டும் சில நொடிகள் நிறுத்துங்கள். மூச்சை எவ்வளவு நேரம் வெளியில் நிறுத்தினீர்களோ அதே அளவு நேரம் உள்நிறுத்தம் வேண்டும். மூன்று நொடிகள் மூச்சை வெளியில் நிறுத்தினீர்களானால் உள்ளுக்குள்ளும் மூச்சை மூன்று நொடிகள் பிடித்துவையுங்கள். மூச்சை வெளியேற்றுங்கள், மூன்று

நொடி நேரம் நிறுத்துங்கள். உள்ளிழுங்கள், மூன்று நொடிகளுக்கு நிறுத்திவையுங்கள். ஆனால் வெளிவிடுவதும், உள்வாங்குவதும் முழுமையாக இருக்க வேண்டும். முழுமையாக மூச்சுவிடுங்கள், முழுமையாக மூச்சுவாங்குங்கள். அது ஒரு சமமாகவும் நடைபெறட்டும். நிறுத்துங்கள், உள்ளிழுங்கள். நிறுத்துங்கள், வெளிவிடுங்கள். உடனடியாக உங்கள் முழு ஜீவனிலும் ஒரு மாறுதல் வருவதை உணர்வீர்கள். பழைய மனநிலை போய்விட்டது. புதிய சூழ்நிலை உங்களுக்குள் புகுந்திருக்கிறது.

என்ன நடக்கிறது? ஏன் அப்படி நடக்கிறது? பல காரணங்கள் உள்ளன: ஒன்று, இந்த லயத்தை நீங்கள் உருவாக்கத் தொடங்கியதுமே உங்கள் மனம் முற்றிலுமே திசைமாற்றப்படுகிறது. இப்போது உங்களால் கோபப்பட முடியாது. ஏனெனில் புதிதாக ஒன்று தொடங்கி உள்ளது. மனத்தில் ஒரே நேரத்தில் இரண்டு விஷயங்கள் இருக்க முடியாது. உங்கள் மனம் இப்போது வெளிமூச்சு, நிறுத்தம், உள்மூச்சு, நிறுத்தம் என ஒரு சீரை உருவாக்குவதில் முனைந்து அதனால் நிரம்பி உள்ளது. அதனால் முழுவதுமாக நீங்கள் மூழ்கிப் போய் உள்ளீர்கள். இதனால் கோபத் துக்கு தந்த ஆதரவு விலக்கப்பட்டுவிடுகிறது - இது ஒரு விஷயம்.

இந்த வெளிமூச்சும் உள்மூச்சும் முழு உடலையும் சுத்திகரிக்கின்றன. நீங்கள் வெளிமூச்சுவிட்டபின் மூன்று நொடிகளுக்கோ ஐந்து நொடி களுக்கோ - நீங்கள் விரும்பும் அளவு, உங்களால் முடிந்த அளவு மூச்சை நிறுத்தி வைக்கையில் உள்ளே என்ன நடக்கிறது? முழு உடலும் தன்னி லுள்ள நஞ்சு அனைத்தையும் இரத்தத்தில் கலக்கிறது. காற்று வெளியேற்றப் பட்டுவிட்டது. உடலுக்கு ஓர் இடைவேளை கிடைக்கிறது. அந்த இடைவெளியில் எல்லா விஷங்களும் வெளியே எடுத்து எறியப்படு கின்றன. பொதுவாக அவை இதயத்துக்கு வருகின்றன. அங்கு அவை சேர்கின்றன - நச்சு வாயுக்கள், நைட்ரஜன், கரியமிலவாயு, எல்லாம் அங்கே நிறைகின்றன.

அங்கே அவை ஒன்றுசேர நீங்கள் வாய்ப்பே தருவதில்லை. வெறுமனே உள்ளும் வெளியுமாக சுவாசித்துக்கொண்டே போகிறீர்கள். இடைவெளி, இடைவேளை விடுவதில்லை. அந்த இடைவேளையில் ஓர் இடைவெளி, ஒரு வெறுமை உருவாக்கப்படுகிறது. அந்த வெறுமையில் எல்லாம் பாய்ந்து அதை நிரப்புகிறது. பின் நீங்கள் வெளியே மூச்சை விடும் போது அவையும் வெளியே வீசப்படுகிறது. பின் நீங்கள் ஆழமான உள் சுவாசம் எடுத்து அதை நிறுத்திவைக்கிறீர்கள். அந்த நச்சு வாயுக்கள் எல்லாம் மூச்சுடன் கலந்து விடுகின்றன. பின் நீங்கள் வெளியே மூச்சை விடும்போது அவையும் வெளியே வீசப்படுகிறது. பின் மறுபடியும் இடைவேளை. நஞ்சுகள் திரளட்டும். இது விஷத்தை வெளியேற்றும் ஒரு வழிமுறை.

மனமும் மூச்சும் மிகவும் தொடர்புடையதாக உள்ளன - அப்படித்தான் இருந்தாக வேண்டும். ஏனெனில் மூச்சே உயிர். ஒருவர் மனமின்றி இருக்க

முடியும். ஆனால் மூச்சு விடாமல் எவரும் இருக்க முடியாது. மூச்சானது மனதைவிட ஆழமானது. உங்கள் மூளையை அறுவை மூலம் முழுமையாக அகற்றிவிட முடியும். ஆனாலும் நீங்கள் மூச்சுவிட முடிந்தால் நீங்கள் உயிரோடிருப்பீர்கள். சுவாசம் தொடர்ந்தால் நீங்கள் உயிரோடு இருப்பீர்கள். மூளையை முழுவதுமாக வெளியில் எடுத்துவிட முடியும். நீங்கள் செயலற்றுக்கிடப்பீர்கள், ஆனாலும் உயிரோடிருப்பீர்கள். உங்களால் கண்களை திறக்கவோ பேசவோ எதையும் செய்யவோ முடியாது. ஆனாலும் படுக்கையில் உங்களால் உயிரோடிருக்க முடியும். பல ஆண்டுகளுக்கு சோம்பிக் கிடக்க முடியும். ஆனால் மனத்தால் முடியாது! மூச்சு நின்றுவிட்டால் மனம் மறைந்துவிடுகிறது.

இந்த அடிப்படையான உண்மையை யோகம் கண்டுபிடித்துள்ளது: அதாவது சிந்திப்பதைவிட சுவாசிப்பது ஆழமான ஒன்றாகும். மூச்சை நீங்கள் மாற்றினால் எண்ணத்தை நீங்கள் மாற்றுகிறீர்கள். மேலும் ஒருமுறை இந்த வழியை - அதாவது மூச்சுவிடுதல் முறையை - நீங்கள் அறிந்து கொண்டால், நீங்கள் விரும்பும் எந்த சூழ்நிலையையும் உங்களால் உருவாக்க முடியும். அது உங்கள் கையில் உள்ளது. நீங்கள் மூச்சுவிடும் விதத்தை அதைப் பொறுத்து உள்ளது. ஒன்றுமட்டும் செய்யுங்கள்: ஏழு நாள்களுக்கு உங்களின் வெவ்வேறு மனநிலைகளுடன் நிகழும் வெவ்வேறு விதமான சுவாச முறைகளை ஓர் ஏட்டில் குறித்துமட்டும் வையுங்கள். நீங்கள் கோபமாய் இருக்கிறீர்கள். ஓர் ஏட்டை எடுத்துக் கொள்ளுங்கள். உங்கள் சுவாசத்தை எண்ணுங்கள் - எத்தனை அளவுக்கு நீங்கள் உள்மூச்சு வாங்குகிறீர்கள், எத்தனை அளவுக்கு நீங்கள் வெளிமூச்சு விடுகிறீர்கள் என்பதை கணக்கிடுங்கள். ஐந்து எண்ணிக்கைக்கு நீங்கள் உள்ளிழுக்கிறீர்களா? மூன்று எண்ணிக்கைக்கு நீங்கள் உள்ளிழுக்கிறீர்கள், மூன்று எண்ணிக்கைக்கு நீங்கள் வெளிவிடுகிறீர்களா - இதை குறித்துக் கொள்ளுங்கள்.

சில நேரங்களில் நீங்கள் மிக மிக நன்றாக இருப்பதாக உணர்கிறீர்கள் - அதை குறித்துக்கொள்ளுங்கள். எத்தனை உள்மூச்சுக்கு எத்தனை வெளிமூச்சு விடுகிறீர்கள், மூச்சின் நீளம் என்ன, இடைவேளை விழுகிறதா - இவற்றை குறித்துக்கொள்ளுங்கள். இப்படி ஏழு நாள்களுக்கு, உங்கள் சொந்த மூச்சின் விவரத்தைபற்றி ஒரு நாட்குறிப்பு எழுதுங்கள். அது உங்கள் மனநிலைகளுடன் எப்படி தொடர்புகொண்டுள்ளது என்பதைக் குறித்து வையுங்கள். பின் உங்களால் பிரித்துப் பார்க்க முடியும். அதன்பின் ஒரு குறிப்பிட்ட மனநிலையை நீங்கள் கைவிட விரும்பும் போதெல்லாம் அதற்கு நேர் எதிரான பாணியை பின்பற்றினால் போதும். அல்லது ஒரு குறிப்பிட்ட மனநிலையை கொண்டுவர நீங்கள் விரும்பினால் பின் அந்த பாணியைப் பயன்படுத்தலாம்.

தெரிந்தோ தெரியாமலோ நடிகர்கள் இந்த உத்தியை அறிந்து கொள்கிறார்கள். ஏனெனில் கோபம் வராமலே சிலநேரங்களில் அவர்கள் கோபிக்க வேண்டி உள்ளது. எனவே அவர்கள் என்ன செய்வார்கள்? அவர்கள் சரியான சுவாச முறையை உருவாக்கிக்கொள்ள வேண்டி இருக்கும். அவர்களுக்கே தெரியாமல் இருக்கலாம், ஆனால் அவர்கள் கோபத்தில் சுவாசிப்பதுபோல் மூச்சுவிட தொடங்குவார்கள், விரைவி லேயே இரத்தம் பாய்ந்து வருகிறது, நஞ்சுகள் அதில் விடப்படுகின்றன. கோபம் இல்லாமலேயே அவர்களின் கண்கள் சிவக்கின்றன. அப்போது கோபம் இல்லாமலேயே ஒரு நுட்பமான கோபநிலையில் அவர்கள் இருக்கிறார்கள். காதல் இல்லாமலேயே அவர்கள் காதல் செய்ய வேண்டி உள்ளது. காதல் இல்லாமலே அவர்கள் காதலை வெளிப்படுத்த வேண்டி உள்ளது. இதை அவர்கள் எப்படி செய்கிறார்கள்? ஒரு குறிப்பிட்ட யோக ரகசியம் அவர்களுக்குத் தெரிந்திருக்கிறது.

எனவேதான் ஒரு யோகி மிகச் சிறந்த நடிகராக ஆக முடியும் என்று எப்போதும் நான் சொல்லி வருகிறேன். அவர் நடிகர்தான்! அவரது மேடை மிகப்பெரியது, அவ்வளவுதான். அவர் நடித்துக்கொண்டுதான் இருக்கிறார். நாடக மேடையில் நடிக்கவில்லை. உலகமெனும் மேடையில் அவர் நடிக்கிறார். அவர் ஒரு நடிகர்; செயல்புரிபவர் அல்லர். இதன் வேறுபாடு என்னவென்றால் ஒரு மாபெரும் நாடகத்தில் அவர் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறார், அதற்கு ஒரு சாட்சியாக அவரால் இருக்கமுடிகிறது, தனித்தும் விடுபட்டும் இருக்க அவரால் முடிகிறது.

> **தியானத்தால் புலன் உணர்வுகளில் அசாதாரணமான நுட்பங்கள் விளைகிறபோது மனம் கூடுதல் ஆர்வம் - நம்பிக்கை கொள்கிறது. இது, முயற்சியை விடாமல் தொடர உதவுகிறது.**

உங்கள் மூச்சுப் பாணியை நீங்கள் வகுத்துக் கொண்டால், மனத்தின் சூழ்நிலையை மாற்றுவது எப்படி, மனநிலைகளை மாற்றுவது எப்படி... என்னும் ரகசிய வழிமுறையை கண்டுகொள்வீர்கள். இரு முனைகளில் இருந்தும் நீங்கள் இயங்கினால் அது சிறப்பானதாகும். மேலும் மகிழ்ச்சியாய் இருப்போரிடம் நட்பாக இருக்கவும் தீமையைக் கண்டால் புறக்கணித்திருக்கவும் முயலுங்கள். மேலும் உங்கள் மூச்சுப் பாணிகளை மாற்றுவது, தன்மை மாற்றுவது என்பதையும் தொடருங்கள். அப்போது அசாதாரணமான புலன் உணர்வுக் காட்சிகள் கிடைக்கும்.

எல்.எஸ்டி, மரிஜுவானா, அசிஷ் போன்றவற்றை நீங்கள் உட்கொண்டிருந்தால் அசாதாரணமான புலன் காட்சிகள் நிகழ்வதை நீங்கள் அறிந்திருப்பீர்கள். சாதாரண பொருள்களை நீங்கள் பார்த்தாலும் அவை

அசாதாரணமானவையாக தெரிகின்றன. முதன்முறையாக தான் எல்எஸ்டி எடுத்தபோதுதான் ஒரு சாதாரண நாற்காலியின்முன் உட்கார்ந்திருந்ததை ஆல்டஸ் அக்ஸ்லி நினைவுகூர்கிறார். அந்த போதைப் பொருளில் அவர் மிகமிக ஆழ்ந்து சென்றதும், அவர் அந்நிலையில் இருக்கையில், அந்த நாற்காலி உடனடியாக நிறம் மாறத் தொடங்கியது. அது ஒளிவீசுவதாக ஆயிற்று; ஒரு சாதாரண ஆசனம் - அதன் மீது ஒருபோதும் எந்த கவனமும் அவர் செலுத்தியதில்லை - அது மிகவும் அழகாக ஆயிற்று. அதிலிருந்து பல வண்ணங்கள் வந்து கொண்டிருந்தன. அது வைரங்களால் செய்யப்பட்டது போலிருந்தது. அதன் அழகான வடிவங்களையும் வண்ணவேறுபாடு களையும் பார்த்தபோது, நடந்துகொண்டிருப்பதையே - அவர் கண்களையே அவரால் நம்பமுடியவில்லை. இதுதான் வான்கோவுக்கும் நடந்திருக்க வேண்டும் என்று பிற்பாடு அவர் நினைவு கூர்ந்தார். ஏனெனில் ஏறக்குறைய இதேமாதிரியான ஒரு நாற்காலியை வான்கோ வரைந்திருந்திருந்தார்.

எல்எஸ்டி எடுக்கும் தேவை கவிஞர்களுக்கு இல்லை. எல்எஸ்டி.யை சுரக்கும் அமைப்பு அவரது உடம்பிலேயே அமைந்துள்ளது. இதுதான் ஒரு கவிஞருக்கும் ஒரு சாமானியருக்கும் இடையிலான வேறுபாடு ஆகும். எனவேதான் கவிஞர் என்பவர் பிறக்கிறார், உருவாவதில்லை என்கிறார்கள். ஏனெனில் அவரது உடல் கட்டமைப்பு அசாதாரணமானதாக இருக்கிறது. அவரது உடலில் உள்ள ரசாயனங்களின் அளவும் தன்மையும் வேறுவிதமாக உள்ளது. எனவே தான் உங்களுக்கு எதுவுமே புலப்படாத இடத்தில் அவர் அற்புதங்களைக் காண்கிறார். நீங்கள் ஒரு சாதாரண மரத்தையே பார்க்கிறீர்கள். அவரோ அதில் நம்புவதற்கரிய ஒன்றை காண்கிறார். சாதாரண மேகங்களையே நீங்கள் பார்க்கிறீர்கள்: ஒரு கவிஞரோ - அவர் நிசமாகவே ஒரு கவிஞர் என்றால் - எதையுமே சாதாரணமானதாகப் பார்ப்பதில்லை; ஒவ்வொன்றுமே அசாதாரண அழகுடையதாக அவருக்கு தோன்றுகிறது.

ஒரு யோகிக்கு நிகழ்வதும் இதுவே: ஏனெனில் உங்கள் மூச்சையும் உங்கள் மனப்பான்மைகளையும் நீங்கள் மாற்றியதுமே உங்கள் உடல் வேதியியல் தன் பாணியை மாற்றிக் கொள்கிறது. ஒரு வேதியியல் மாற்றத்தின் ஊடாக நீங்கள் சென்றுகொண்டிருக்கிறீர்கள். அதன்பின் உங்கள் கண்கள் தெளிவாக ஆகின்றன, புதிய ஒரு காட்சித்திறன் உண்டாகிறது. அதே பழையமரம் புத்தம் புதியதாக ஆகிறது. அதன் பச்சை வண்ணத்தின் சாயையை ஒரு போதும் நீங்கள் அறிந்ததில்லை: அது ஒளிவீசுவதாக ஆகிறது. உங்களைச் சுற்றிலும் உள்ள உலகம் முழுவதும் ஒரு புது உருக்கொள்கிறது. இப்போது அது ஒரு தேவலோகம் ஆக உள்ளது, பழைய சாதாரண சீரழிந்த பூலோகமாக அல்ல.

உங்களைச் சுற்றிலும் உள்ள மக்கள் இப்பவும் பழையமாதிரியே இருப்பதில்லை. உங்கள் சாதாரணமான மனைவி மிகவும் அழகிய பெண்மணியாகி இருக்கிறார். உங்கள் காட்சித் தெளிவுடன் ஒவ்வொன்றுமே மாறுகிறது. உங்கள் கண்கள் மாறியதும் எல்லாமே மாறுகிறது. பதஞ்சலி கூறுகிறார்,

> **தியானத்தால் புலன் உணர்வுகளில் அசாதாரணமான நுட்பங்கள் விளைகிறபோது மனம் கூடுதல் ஆர்வம் - நம்பிக்கை கொள்கிறது. இது, முயற்சியை விடாமல் தொடர உதவுகிறது.**

அப்போது நீங்கள் சரியான பாதையில் இருக்கிறீர்கள் என்ற உறுதியுள்ளவராக ஆகிறீர்கள். உலகம் மென்மேலும் அதிக அழகுடையதாக ஆகிக் கொண்டிருக்கிறது; அசிங்கம் மறைந்து கொண்டிருக்கிறது. உலகம் மேலும் மேலும் ஒத்திசைவு உடையதாக ஆகிக்கொண்டிருக்கிறது. உலகம் அதிகமதிகமாய் வாழத்தக்கதாக ஆகிக்கொண்டிருக்கிறது. அதில் நீங்கள் அதிகமதிக இயல்பாக உணர்கிறீர்கள். அது நட்புடன் இருக்கிறது. உங்களுக்கும் பிரபஞ்சத்துக்கும் இடையிலான காதல் விவகாரமாக அது இருக்கிறது. நீங்கள் அதிக தன்னம்பிக்கை உள்ளவர் ஆகிறீர்கள். உங்கள் முயற்சியில் கூடுதல் முனைப்பு சேர்கிறது.

**''மேலும், ஆழ்ந்த அமைதியுடையதும் எல்லா கவலைகளுக்கும் அப்பாற்பட்டதுமான உள் ஒளியின்மீது தியானிக்கவும்.''** குறிப்பிட்ட அளவு காட்சித்தன்மையை நீங்கள் அடைந்திருக்கிறபோது மட்டுமே இதை செய்ய முடியும். அப்போது நீங்கள் கண்களைமூடினால் ஒரு சுடரை நீங்கள் காணமுடியும் - இதயத்தின் அருகில் உள்ள அழகான நீல ஒளிச் சுடர் அது. ஆனால் தற்போது அதை உங்களால் காண முடியாது. அது அங்கு தான் இருக்கிறது. எப்போதுமே அது அங்குதான் இருந்து வருகிறது. நீங்கள் இறந்ததும் அந்த நீல ஒளி உங்கள் உடலைவிட்டு வெளியேறுகிறது. ஆனால் அதை உங்களால் பார்க்க முடியாது. ஏனென்றால் நீங்கள் உயிரோடிருக்கும் போது உங்களால் அதை பார்க்க முடியவில்லை.

மற்றவர்களும் அதை - ஏதோ ஒன்று வெளியே போய்க் கொண் டிருப்பதை - பார்க்க முடியாது. ஆனால் சோவியத் ருசியாவைச் சேர்ந்த கிருலியன் என்பவர் மிகவும் நுட்பமான தகடுகளைப் பயன்படுத்தி புகைப்படங்கள் எடுத்துள்ளார். ஒரு மனிதர் இறக்கும்போது சூழலில் ஏதோ நிகழ்கிறது. ஒருவித உடல் - ஆற்றல், ஒளித்தன்மையுடைய ஏதோ ஒரு பொருள் அகல்கிறது; அகன்றுபோய் பேரண்டத்தில் மறைகிறது. அந்த ஒளி எப்போதும் உடலில் உள்ளது: அதுதான் உங்கள் உயிர் மையம். *(that is your center of being)* அது இதயத்தின் அருகில் - நீலச் சுடராக இருக்கிறது.

உங்களுக்கு ஒரு பார்வை ஏற்படும்போது, உங்கள் கண்கள் தெளிவாக இருக்கும்போது உங்களைச் சுற்றிலும் உள்ள உலகின் அழகை உங்களால் பார்க்க முடிகிறது. அவற்றை நீங்கள் மூடுகிறீர்கள். இதயத்துக்கு அருகே போகிறீர்கள். அங்கே இருப்பது என்ன என்பதை கண்டுபிடிக்க முயலுகிறீர்கள். முதலில் நீங்கள் இருட்டாகவே உணர்வீர்கள். இது எப்படிப்பட்டது என்றால், ஒரு வெயிலான நாளில் வெளியில் இருந்து அறைக்குள் நீங்கள் வருகிறீர்கள். அப்போது நீங்கள் எல்லாவற்றையும் இருட்டாகவே உணர்கிறீர்கள். ஆனால் பொறுங்கள். கண்கள் இருட்டுக்குப் பழகட்டும், சீக்கிரமே வீட்டில் இருக்கும் பொருள்களைப் பார்க்கத் தொடங்குகிறீர்கள்.

கோடிக்கணக்கான பிறவிகளாக நீங்கள் வெளியிலேயே இருந்திருக்கிறீர்கள். முதல்தடவையாக நீங்கள் உள்ளே வரும்போது அங்கே இருளை, வெறுமையைத்தவிர எதுவுமே தென்படாது. ஆனால் காத்திருங்கள்! சில நாள்கள் ஆகும் - சில மாதங்கள்கூட ஆகும். ஆனால் பேசாமல் பொறுத்திருங்கள். கண்களைமூடி இதயத்துக்கு இறங்கிப் பாருங்கள். திடீரென ஒருநாள் அது நிகழ்கிறது: ஓர் ஒளியை, சுடரை நீங்கள் காண்கிறீர்கள். பின் அந்த சுடர்மேல் கவனத்தை ஒருமுகப்படுத்துங்கள்.

அதைவிடப் பரவசமானது வேறு எதுவும் இல்லை. அதைவிட ஆடிக்கொண்டும், பாடிக்கொண்டும் வேறில்லை; உங்கள் இதயத்துக்குள் இருக்கும் அந்த நீல உள் ஒளியை விட இசைத்தன்மை உள்ளது. இசைவுத்தன்மை உள்ளது வேறு எதுவும் இல்லை. மேலும் எவ்வளவு அதிகமாக நீங்கள் ஒருமுகப் படுவீர்களோ அவ்வளவு அதிக சாந்தமாக, மவுனமாக, அமைதியாக, தெளிவாக நீங்கள் ஆகிறீர்கள். அதன்பின் இருள் என்பது உங்களுக்கு இல்லை. உங்கள் இதயம் ஒளியால் நிரம்புகிறபோது, மொத்த பிரபஞ்சமும் ஒளியால் நிரம்பி இருக்கிறது.

> **மேலும், ஆழ்ந்த அமைதியுடையதும் எல்லா கவலைகளுக்கும் அப்பாற்பட்டதுமான உள் ஒளியின்மீது தியானிக்கவும்**
>
> **மேலும், ஆசையின்மையை அடைந்திருக்கிறவர்மீதும் தியானிக்கவும்.**

அதுவும்தான்! எல்லா மாற்று வழிகளையும் பதஞ்சலி உங்களுக்கு வழங்குகிறார்! ஒரு ***Veetaraga*** மீதும் - எல்லா ஆசைகளையும் கடந்துபோய் விட்டிருக்கிறவர் மீதும் - தியானியுங்கள். மகாவீரர், புத்தர், பதஞ்சலி - அல்லது உங்களுக்கு பிடித்த ஒருவர் ஜராதுஷ்டிரர், முகமது, கிறிஸ்து அல்லது நீங்கள் நெருக்கமும் நேசமும் ஆக உணரும் எவர்மீதும்

தியானியுங்கள்... ஆசைகளுக்கு அப்பால் போய்விட்டிருக்கிற ஒருவர்மீது தியானியுங்கள். ஆசைகளை கடந்துவிட்டுள்ள உங்கள் குருமீது, உங்கள் குருவின்மீது தியானியுங்கள். இது எப்படி உதவும்? அது உதவுகிறது. ஏனெனில் ஆசைகளைக் கடந்து போய்விட்ட ஒருவரின்மீது நீங்கள் தியானிக்கும் போது அவர் உங்களுக்குள் ஒரு காந்த சக்தியாக ஆகிறார். அவர் உங்களுக்குள் நுழைய அவரை நீங்கள் அனுமதிக்கிறீர்கள். அவர் உங்களை உங்களிடமிருந்து வெளியே எடுத்து விடுகிறார். இதனால் நீங்கள் அவருக்கு கிடைப்பவராக ஆகிறீர்கள்.

ஆசைகளை கடந்து அப்பால் போய்விட்டிருக்கிற ஒருவரின்மீது நீங்கள் தியானிக்குபோது, கூடியவிரைவில் நீங்களும் அவரைப்போலவே ஆவீர்கள். ஏனெனில் தியானமானது நீங்கள் எதன்மீது தியானிக்கிறீர்களோ அதுவாகவே ஆக்குகிறது. பணத்தின்மீது நீங்கள் தியானித்தால் நீங்கள் பணத்தை போலவே ஆவீர்கள். ஒரு கருமியை போய் பாருங்கள். அவனிடம் ஆன்மா இருப்பதில்லை. வங்கிக்கணக்கு மட்டுமே இருக்கிறது. அவனுக்கு உள்ளம் என்பது இருப்பதில்லை. நீங்கள் கவனித்துக் கேட்டால் வெறும் ரூபாய் மற்றும் நாணயங்களின் ஓசையையே அவனுக்குள் கேட்பீர்கள். அங்கு ஓர் இதயத்தை நீங்கள் காணமாட்டீர்கள். எது எதன் மீதெல்லாம் கவனம் செலுத்துவீர்களோ, அது அதுவாகவே ஆகிறீர்கள். எனவே விழிப்பாயிருங்கள். நீங்கள் எதுவாக ஆக விரும்பமாட்டார்களோ அதன்மீது கவனம் செலுத்தாதீர்கள். நீங்கள் எதுவாக ஆக விரும்புவீர்களோ அதன்மீது மட்டும் கவனம் செலுத்துங்கள். ஏனென்றால் இதுதான் தொடக்கம்..விதை கவனத்துடன் விதைக்கப்படுகிறது. விரைவில் அது ஒரு மரமாக ஆகும்.

நரகத்தின் விதைகளை நீங்கள் விதைக்கிறீர்கள். பின் அது மரமாகும்போது ''நான் ஏன் இவ்வளவு துன்பத்தில் இருக்கிறேன்?'' என்று நீங்கள் சொல்கிறீர்கள். எப்போதுமே தவறானதன் மீதே நீங்கள் கவனம் செலுத்துகிறீர்கள். எப்போதும் எதிர்மறையானதையே நீங்கள் ஏறிட்டுப் பார்க்கிறீர்கள். எப்போதுமே தப்பின்மீதே கவனம் செலுத்துகிறீர்கள். பின் நீங்களும் தப்பானவராக ஆகிறீர்கள்.

தப்பானவற்றின்மீது கவனம் செலுத்தாதீர்கள். அழகனாவற்றின் மீதே கவனம் செலுத்துங்கள். ஏன் -முட்களையே நினைத்துக் கொண்டிருக்கி நீர்கள்? பூக்களை ஏன் நோக்ககக்கூடாது? இரவுகளையே ஏன் எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்? பகல்களை ஏன் பார்க்கக்கூடாது? இரவுகளை நீங்கள் எண்ணினால், இரண்டு இரவுகளுக்கு நடுவில் ஒரே ஒரு பகல்தான் வரும். பகல்களை நீங்கள் எண்ணினாலோ இரண்டு பகல்கள் வரும், அவற்றின் இடையில் ஒரே ஓர் இரவுதான் இருக்கும் மேலும் இதன் வேறுபாடு

மிகப்பெரியது. ஒளியாக நீங்கள் ஆக விரும்பினால் ஒளி இருக்குமிடத்தை நோக்குங்கள். இருளாக ஆக விரும்பினால் இருள் இருக்குமிடத்தை நோக்குங்கள்.

பதஞ்சலி கூறுகிறார்:

**'ஆசையின்மையை அடைந்திருக்கிறவர்மீதும் தியானிக்கவும்:** ஒரு குருவைத் தேடுங்கள். குருவைச் சரணடையுங்கள். அவர்மீது கவனம் உள்ளவராக இருங்கள். அவரைக் கேளுங்கள், கவனியுங்கள், உண்ணுங்கள், குடியுங்கள். உங்களில் அவர் பிரவேசிக்கட்டும். உங்கள் இதயத்தில் அவரை நிரம்ப விடுங்கள். விரைவில் நீங்கள் பயணம் ஆவீர்கள். ஏனெனில் உங்களின் கவனத்துக்குரிய பொருள் இறுதியில் உங்கள் வாழ்வின் இலக்காகவும் ஆகிறது. மேலும் கவனிப்பு ஓர் அந்தரங்க உறவாகும். விழிப்புடன் கூடிய கவனிப்பின் மூலம் உங்கள் கவனிப்பின் பொருளாக - இலக்காக நீங்களே ஆகிறீர்கள்.

''பார்ப்பவர் பார்க்கப்படுவதாக ஆகிறார்'' என்று கிருஷ்ணமூர்த்தி சொல்லிக்கொண்டே போகிறார். அவர் சொல்வது சரிதான்: எதையெல்லாம் நீங்கள் பார்க்கிறீர்களோ அதுவாகவே நீங்கள் ஆவீர்கள். எனவே உஷாராக இருங்கள்! எச்சரிக்கை! நீங்கள் எதுவாக ஆக விரும்பமாட்டீர்களோ அதை நோட்டமிடாதீர்கள். ஏனெனில் எதை பார்க்கிறீர்களோஅதுவே உங்கள் இலக்காகும். விதைகளை நீங்கள் விதைத்துக்கொண்டு இருக்கிறீர்கள்.

ஒரு *Veetaraga* - வின் அருகில் - ஆசைகளை கடந்து நிற்பவரின் அருகில் - வாழுங்கள். இங்கே மேற்கொண்டும் நிறைவு பெறுவதற்கு ஏதுமற்ற - எல்லாம் நிறைவேறி இருக்கிற - ஒருவரின் அருகில் வாழுங்கள். அவரது நிறைவேற்றம் பெற்ற தன்மை உங்களை நிரப்பி மூழ்கடிக்கும். அவர் ஒரு கிரியா ஊக்கியாக ஆவார்.

அவர் எதுவும் செய்யமாட்டார். ஏனெனில் ஆசைகளுக்கு அப்பால்பட்ட மனிதர் எதையும் செய்யமுடியாது. உங்களுக்கு உதவக்கூட அவரால் முடியாது. ஏனெனில் உதவிசெய்வதும் ஓர் ஆசைதான். அவர் வாழியாக நிரம்ப உதவி வருகிறது. ஆனால் அவர் உங்களுக்கு உதவி செய்வதில்லை. தான் எதையும் செய்யாமலே செயலை தூண்டிவிடும் செயலூக்கியாக அவர் ஆகிறார் - நீங்கள் அவரை அனுமதித்தால். உங்கள் இதயத்தில் அவர் பொழிகிறார். அவரது இருப்பே உங்களை தூண்டிச் செயல்படச் செய்வதாகிறது.



**(Negative thoughts) எதிர்மறைச் சிந்தனை - கெட்டது - ஏனென்றால் அவைகள் நடந்துவிடும் என்று சொன்னீர்கள் - உடன்பாட்டுச் சிந்தனை மூலமும் விரும்பியது நடக்குமா? உதாரணமாக ஞானம் பெற விரும்பினால் அது நிறை வேறிவிடுமா?**

*இது உடன்பாட்டுச் சிந்தனையிடமிருந்து அதன் சக்திக்கு மீறியதை கேட்பதாகும். ஏனென்றால் ஞானம் பெறுவது என்பது இருமைகளுக்கு அப்பாற்பட்டது. அது உடன்பாடும் அல்ல எதிர்மறையும் அல்ல. (Neither negative nor positive) இரண்டு துருவங்களையும் கைவிடும்போதே அது நிகழ்கிறது. உடன்பாடு சிந்தனைகள் மூலம் பல காரியங்கள் சாத்தியமாகும் ஆனால் ஞான நிலைபேறு சாத்தியமில்லை.*

*நீங்கள் மகிழ்ச்சியாக இருக்க முடியும், ஆனால் ஆனந்தமாக இருக்க முடியாது. மகிழ்ச்சி வரும், போகும். அதில் ஒன்றுடன் அதன் எதிர்மறையும் சேர்ந்தே இருக்கிறது. நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும்போது மகிழ்ச்சிக்கு அக்கம் பக்கமாகவே மகிழ்ச்சியின்மை தனது நேரத்துக்காக காத்துக்கொண்டு இருக்கிறது. வரிசையில் நின்றுகொண்டு இருக்கிறது. நீங்கள் அன்பு செய்யும்போது அது உடன்பாடானதாக உள்ளது. ஆனால் வெறுப்பு தன் சொந்த நேரத்துக்காகக் காத்துக் கொண்டு இருக்கிறது.*

*Positive உடன்பாடானது இருமையைக் கடந்து போக முடியாது. அது போகிறதூரம் வரை அது நல்லதே. ஆனால் அதனிடமிருந்து ஞானத்தைகேட்பது பெரிதாக எதிர்பார்ப்பதாகும். ஒருபோதும் அதை எதிர்பார்க்காதீர்கள். உடன்பாட்டை அடைய எதிர்மறையை(negative) கைவிட வேண்டி உள்ளது. அதற்கும் அப்பாலை அடைய உடன் பாட்டையும் கைவிட வேண்டி உள்ளது. முதல் எதிர்மறையை கைவிடுங்கள். பின் உடன்பாட்டையும் கைவிடுங்கள். பின் ஒன்றும் மீதம் இராது. அந்த ஒன்றுமின்மையே ஞானநிலை. அதில் மனம் இருப்பதில்லை.*

*மனம் உடன்பாடாகவோ எதிர்மறையாகவோ, மகிழ்ச்சியாகவோ மகிழ்ச்சியில்லாமலோ, அன்பாகவோ வெறுப்பாகவோ, கோபமாகவோ கருணையாகவோ இருக்கிறது. இருட்டு - வெளிச்சம், பிறப்பு - சிறப்பு எல்லாமே மனத்தினுடையதே. ஆனால் நீங்கள் மனத்தை சேர்ந்தவர் இல்லை. அதற்கு அப்பால் உள்ளவர் நீங்கள். மனத்தால் சூழப்பட்டிருந் தாலும் அதைக் கடந்தே நீங்கள் இருக்கிறீர்கள்.*

*ஞானநிலை என்பது மனத்தினுடையது அல்ல. அது உங்களுடையது. ''நான் மனமல்ல'' என்பதை உள்ளபடி உணர்தலே ஞானநிலைபேறு ஆகும்.*

நீங்கள் எதிர்மறை நிலையிலேயே இருந்தால் மனதின் பள்ளத்தாக்கிலேயே நீங்கள் தங்கியிருக்கிறீர்கள். உடன்பாட்டு நிலையில் இருந்தாலோ மனதின் சிகர நிலையை நீங்கள் அடைகிறீர்கள். ஆனால் இரண்டிலுமே உங்கள் இருத்தலின் மனத்தளத்தை நீங்கள் கடப்பதில்லை: இரண்டையும் கைவிடுங்கள்.

உடன்பாடானதை கைவிடுவது அதிக கடினமானதாகும். எதிர் மறையை (*negative*) விட்டுவிடுவது எளிதானது. ஏனெனில் எதிர்மறை வானதே உங்களுக்கு துயர் தருகிறது. அது ஒரு நரகமாக உள்ளது. அதை உங்களால் கைவிட்டுவிட முடியும். ஆனால் பரிதாபத்தை பாருங்கள்: அதைக்கூட நீங்கள் விட்டுவிடவில்லை. (*negative*)எதிர்மறைவானதுட னும் நீங்கள் ஒட்டிக்கொண்டிருக்கிறீர்கள். துன்பத்தை ஒரு பொக்கிஷம் போல் நீங்கள் தொற்றிக்கொண்டிருக்கிறீர்கள். உங்கள் மகிழ்ச்சியின்மையை நீங்கள் பிடித்து தொங்கக் காரணமே, அது ஒரு நீண்டகால பழக்கமாகி விட்டிருப்பதால்தான். மேலும் உங்களுக்கும் எதையாவது பிடித்துக் கொண்டு தொங்க வேண்டியதிருக்கிறது. பிடித்துக்கொள்வதற்கு எதுவும் கிடைக்காததால் உங்கள் நரகத்தை நீங்கள் பிடித்துக் கொள்ளாதீர்கள். ஆனால் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள், எதிர்மறையானதை விட்டுவிடல் எளிது - அது எவ்வளவுதான் கடினமானதாகத் தோன்றி னாலும் உடன்பாடானதுடன் ஒப்பிடும்போது அது மிகவும் எளிதே. ஏனெனில் அது துன்பமாக இருக்கிறது.

உடன்பாடானதை விட்டுவிடுவது என்பது மகிழ்ச்சியை விட்டுவிடுவதாகும். உடன்பாடானதை விட்டுவிடுவது என்பது பூக்களைப் போல் தோன்றும் எல்லாவற்றையும், அழகானவைபோல் தோன்றும் அனைத்தையும் விட்டுவிடுவதாகும். அசிங்கம் எதிர்மறையானது, அழகு உடன்பாடானது. சாவு எதிர்மறையானது. வாழ்வு உடன்பாடானது. ஆனால் எதிர்மறையானதை நீங்கள் விட்டுவிடமுடியுமானால்... எனவே முதல் அடியை எடுத்து வையுங்கள். முதலில் துன்பத்தை உணருங்கள். எதிர்மறையால் உங்களுக்கு ஏற்பட்டுள்ள அவலம் எவ்வளவு அதிகம் என்பதைப் பாருங்கள். அதிலிருந்து துன்பம் எழும் விதத்தை மட்டும் கவனியுங்கள். வெறுமனே கவனிக்கவும் உணரவும் செய்யுங்கள். எதிர்மறையே துன்பத்தை உருவாக்குகிறது என்பதை உணர்வதே அதை கைவிடுவதாகவும் ஆகிறது.

ஆனால் மனத்தின் சூழ்ச்சி மிகவும் ஆழமானது. நீங்கள் துன்பமாக இருக்கும் போதெல்லாம், அதற்கு வேறு ஒருவர்தான் பொறுப்பு என்றே எப்போதும் அது கூறுகிறது. கவனமாக இருங்கள், ஏனென்றால் இந்த சூழ்ச்சிக்கு நீங்கள் இரையாகிவிட்டால் பின் எதிர்மறையை ஒருபோதும் கைவிடமுடியாது. இப்படித்தான் எதிர்மறை தன்னை மறைத்துக்

கொள்கிறது. தக்கவைத்துக்கொள்கிறது. நீங்கள் கோபமாக இருக்கிறீர்கள். யாரோ ஒருவர் அவமதித்துவிட்டார், அதனால்தான் நீங்கள் கோபமாய் இருப்பதாக மனம் சொல்கிறது - இது உண்மை அல்ல. யாராவது உங்களை அவமதித்திருக்கலாம், ஆனால் அது சாக்கு மட்டுமே. கோபிப்பதற்காக ஏற்கனவே நீங்கள் காத்துக்கொண்டு இருக்கிறீர்கள். உங்களுக்குள் கோபட சேர்ந்துகொண்டே இருந்தது. இல்லாவிட்டால், யாராவது அவமதித்திருந் தாலும் உங்களில் கோபம் கிளம்பி இருக்காது.

அவமதிப்பு என்பது கண்ணுக்கு தெரியும் காரணமாக ஆகி இருக்கலாம். ஆனால் உண்மையில் அதுவல்ல காரணம். உள்ளுக்குள் நீங்கள் கொதித்துக்கொண்டு இருக்கிறீர்கள். உண்மையைச் சொன்னால் உங்களை அவமதித்த ஆள் அதன்மூலம் உங்களுக்கு உதவுகிறார். உங்கள் உள் கலவரத்தை வெளியில் கொண்டுவர அவர் உங்களுக்கு உதவுகிறார். அதை தீர்த்துவிட உதவுகிறார். நீங்கள் எவ்வளவு மோசமான நிலவரத்தில் இருக்கிறீர்கள் என்றால் அவமதிப்பு கூட உங்களுக்கு உதவும் நிலையில் இருக்கிறீர்கள். எதிரிகூட உங்களுக்கு உதவுகிறார். ஏனெனில் உங்கள் எதிர்தன்மை அனைத்தையும் வெளியேற்ற அவர் உங்களுக்கு உதவுகிறார். குறைந்தது அப்போதைக்காவது நீங்கள் சுமையிறங்கி இருக்கிறீர்கள்.

உங்கள் உணர்ச்சிக்கு மற்றவரே காரணம் என திசைதிருப்பும் இந்த சூழ்ச்சியை மனம் எப்போதும் கைவசம் வைத்திருக்கிறது. போனவுட னேயே ஏதாவது கோளாறாகிப் போனவுடனேயே, யார் அதை செய்தவன் என்று நீங்கள் பார்க்கத் தொடங்குகிறீர்கள். அப்படிப் பார்க்கும்போது நீங்கள் தவற விடுகிறீர்கள். நிஜமான குற்றவாளி பின்புறம் ஒளிந் திருக்கிறான்.

ஏதாவது தவறாகிப் போகும் போதெல்லாம் உடனடியாக கண்களைமூடி நிஜமான குற்றவாளியைத் தேடுவது என்பதை ஒரு மீறக்கூடாத விதியாக வைத்துக்கொள்ளுங்கள். அப்போது உங்களால் கண்டுகொள்ள முடியும். ஏனெனில் இது ஓர் உண்மை. இதுவே யதார்த் தம். கோபத்தை நீங்கள் குவித்துக்கொண்டிருக்கிறீர்கள் என்பது மெய் தானே. அதனால் தானே நீங்கள் கோபமுள்ளவர் ஆகிறீர்கள். வெறுப்பை நீங்கள் குவித்துக் கொள்கிறீர்கள் என்பது மெய்தானே. அதனால்தானே நீங்கள் வெறுப்பாக உணர்கிறீர்கள். எனவே மெய்யான காரணம் மற்றவர் அல்லர். சமஸ்கிருதத்தில் இரண்டு சொற்கள் உள்ளன. ஒன்று **காரண்** நிஜமான காரணம், மற்றது **நிமித்தம்** - நிஜமற்றகாரணம். இந்த நிமித்தம் என்னும் நிஜமற்ற காரணம், **காரண்** ஆகத் தோன்றுகிறது. ஆனால் அது காரணம் அல்ல. அது உங்களை முட்டாளாக்குகிறது. பலப்பல பிறவி களாகவே அது உங்களை ஏமாற்றியே வந்திருக்கிறது.

துயரமான ஒன்று நிகழும் போதெல்லாம் உடனடியாக கண்களை மூடி உள்ளே போங்கள். ஏனெனில் குற்றவாளியை கையும் களவுமாக பிடிக்க அதுவே சரியான முறை, சரியான தருணம். அதை விட்டுவிட்டால் உங்களால் அவனைப் பிடிக்க முடியாமல் போகும். கோபம் மறைந்தபின் நீங்கள் கண்களை மூடுவீர்கள் என்றால் அங்கு யாரையும் நீங்கள் காண்பதில்லை. கையும் மெய்யுமான சூழ்நிலையில் செய்யவேண்டியதை தவறவிட்டுவிடாதீர்கள்: அதை ஒரு தியானமாக ஆக்குங்கள்.

*(Negative)* எதிரானதை கைவிட இனி எந்த முறையும் தேவை யில்லை என்று நீங்கள் உணரத் தொடங்கும்போது ... எதிரானது நெகட்டிவ் மிகவும் அசிங்கமானது, மோசமான நோய் அது - அதை எப்படி நீங்கள் சுமந்து கொண்டு இருக்கி றீர்கள் என்பதே மலைப்பாக இருக்கிறது. அதை கைவிடுவது ஒரு சாத னையே இல்லை. அதை தூக்கி சுமப்பதுதான் பெரிய மலைப்பான காரியம். எல்லா புத்தர்களுக்கும் இது ஒரு புதிராகவே இருந்து வருகிறது. உங்கள் நோய்கள் யாவற்றையும் மிகுந்த பிரியத்தோடு எவ்வாறு நீங்கள் சுமந்து கொண்டிருக்கிறீர்கள்? ஏன் சுமந்து கொண்டிருக்கிறீர்கள்? அவற்றை குறித்து நீங்கள் மிகுந்த எச்சரிக்கையாக இருக்கிறீர்கள். தவறான அனைத்தையும் நீங்கள் போற்றிப் பாதுகாக்கிறீர்கள். பாதுகாக்கப்படும் போது அவை உங்களில் மென்மேலும் ஆழமாகி வேர்களைப் பரப்புகின்றன.

என் சொந்த எதிர்த்தன்மையே *(Negativity)* சிக்கலை உருவாக்குகிறது என ஒருமுறை உணர்ந்துவிட்டாலே அது தானே வீழ்ந்து விடுகிறது. மேலும் எதிர்மறை மனம் தானே வீழ்ந்துவிடும் போது அதில் ஓர் அழகு இருக்கிறது. அதை நீங்கள் விட்டுவிட முயன்றால் அது தொற்றிக்கொள்ளும் - ஏனெனில் அதைக் கைவிடுதற்கான முயற்சியே, உங்களின் புரிதல் இன்னும் முதிர்ச்சி அடையவில்லை என்பதையே காட்டுகிறது. துறவு முயற்சி அனைத்தும் முதிர்ச்சி அற்றதே. நீங்கள் அதற்கு இன்னும் பக்குவம் அடையவில்லை. எனவேதான் அதை விட்டுவிட் முயற்சி தேவைப்படுகிறது. நான் குப்பையை தூக்கி சுமந்து கொண்டிருக்கிறேன். அதை கைவிட நான் ஏதாவது பெருமுயற்சி எடுக்க வேண்டுமா? இது குப்பை என்று புரிதலே போதாதா? அதைக் கைவிட முயற்சி எதுவும் எனக்கு தேவைப்பட்டால், என் புரிதலுக்கு ஒத்தாசையாக அந்த முயற்சியை நான் செய்கிறேன் என்றே பொருள்படும். என் புரிதல் மட்டுமே போதவில்லை. எனவேதான் முயற்சியின் துணை தேவைப்ப டுகிறது.

உங்களிடம் புரிதல் இல்லாததால்தான் உங்களுக்கு முயற்சியின் துணை தேவைப்படுகிறது என்றே அறிந்தவர் அனைவரும் கூறுகிறார்கள். அது ஓர் புத்தி சார்ந்த விஷயமாக இருக்கலாம். ஆனால் நிலைமையை

நீங்கள் நிஜமாகவே உணர்ந்திருக்கவில்லை; உணர்ந்திருந்தால் அப்படியே நெகட்டிவிட்டியை நீங்கள் விட்டுவிடுவீர்கள். பாதையில் ஒரு பாம்பு போகிறது. உடனடியாக நீங்கள் துள்ளி குதிக்கிறீர்கள். அந்த துள்ளலில் எந்த வலிந்த முயற்சியும் இல்லை. குதிக்கவேண்டும் என்று நீங்கள் முடிவு செய்யவில்லை. ''இது ஒரு பாம்பு, பாம்பு இருக்கும் இடமெல்லாம் அபாயம் உண்டு, எனவே நான் குதித்துத் தப்பியாக வேண்டும்'' என்ற தர்க்கவாதங்களை உங்களுக்குள் நீங்கள் நடத்திக் கொண்டிருப்பதில்லை. படிப்படியான தர்க்க நியாயத்தை நீங்கள் யோசித்து முடிவுசெய்வதில்லை. அரிஸ்டாட்டிலேகூட உடனடியாக துள்ளிக் குதிப்பார். பிற்பாடுதான் அவர் அந்த தர்க்க முடிவை செய்ய முடியும். ஆனால் இக்கணத்தில், பாம்பு அங்கே இருக்கிற போது, உங்கள் தர்க்கத்தைப்பற்றி பாம்புக்கு கவலையில்லை, நிலைமை மிகவும் ஆபத்தானதாக உள்ளது... நிலைமை மிகவும் ஆபத்தாக உள்ளது என்ற புரிதலே அங்கு போதுமானது.

எதிர்த்தன்மையை கைவிட வலிந்த முயற்சி தேவையில்லை, புரிதல் மட்டுமே போதுமானது. இனிதான் மெய்யான சிக்கல் எழுகிறது.' உடன்பாடானதை எப்படி கைவிடுவது? ஏனெனில் இது மிகவும் அழகாகவே உள்ளது. மேலும் கடந்த நிலையை அறிந்திராத உங்களுக்கு இதுவே மகிழ்ச்சியின் முடிவான நிலையாக உள்ளது - அவ்வளவு மகிழ்ச்சியாக உள்ளது. காதலில் ஈடுபட்டிருக்கும் ஜோடியைப் பாருங்கள், அவர்களின் கண்களைப் பாருங்கள். ஒருவர் கையை ஒருவர் கோத்துக் கொண்டு அவர்கள் நடைபோடும் விதத்தைப் பாருங்கள். அவர்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். இந்த உடன்பாடான மனநிலையை கைவிடுமாறு அவர்களிடம் கூறுங்கள், ''உங்களுக்கென்ன பைத்தியமா?'' என்று அவர்கள் நினைப்பார்கள். இதற்குத்தான் அவர்கள் காத்துக்கொண்டு இருந்தார்கள், இப்போது அது நிகழ்ந்துள்ளது. இந்நிலையில் ஒரு புத்தர் வந்து'' அதை விட்டுவிடுங்கள்'' என்று கூறுகிறார்!

ஒருவர் வெற்றிபெற்றுக்கொண்டு இருக்கிறார். ஏணியில் மேலே மேலே போய்க்கொண்டிருக்கிறார். அந்நிலையில் அவரை விட்டுவிட சொல்லுங்கள். அதுவே அவரது நோக்கமாக இருக்கிறது, அது அவர் கண்களில் தெரிகிறது. மேலும் அதை விட்டுவிடவே அவர் நினைத்தாலும் கூட விட்டுவிட்டால் தான் விழுவது அவலத்தில்தான் என்பதையும் அவர் அறிந்திருக்கிறார்! ஏனெனில் உடன்பாடான நிலையில் இருந்து அடுத்து எங்கே நீங்கள் போவீர்கள்?

உங்களுக்கு இரண்டு சாத்தியங்கள் மட்டுமே தெரியும்: நேர்நிலை அல்லது எதிர்நிலை. நேர்நிலையை நீங்கள் கைவிட்டால் எதிர்நிலைக்கு போய்விடுகிறீர்கள். எனவேதான் முதலில் எதிர்நிலையை விட்டொழிக்க வேண்டி உள்ளது. இனி எதிர்லைக்கு திரும்ப / சரிய இடமிருக்காது.

இல்லாவிட்டால் உடன்பாடானதை நீங்கள் கைவிடும் போது, திரும்பவும் உடனடியாக எதிர்மறை நுழைந்துவிடுகிறது. நீங்கள் மகிழ்ச்சியாக இல்லாவிட்டால் பின் வேறு என்னவாக இருப்பீர்கள்? மகிழ்ச்சியில்லாமல்! அமைதியாக நீங்கள் இல்லாவிட்டால் பின் எப்படி இருப்பீர்கள்? - ஓயாத சலசலப்பாக! எனவே முதலில் எதிர்நிலையை கைவிடுங்கள் அப்போது அந்த மாற்று அடைக்கப்பட்டு விடுகிறது. அந்த வழியில் இனி உங்களால் இயங்க முடியாது. இல்லாவிட்டால், பழைய பழக்கத்தில் ஆற்றல் நேர்நிலையில் இருந்து எதிர்நிலைக்கும், எதிர் நிலையில் இருந்து நேர்நிலைக்குமே இயங்குகிறது. எதிர்நிலை இருக்கும் வரை, நேர்நிலையை நீங்கள் கைவிட்ட அக்கணமே எதிர்நிலையாக நீங்கள் ஆவதற்கே எல்லா வாய்ப்பும் இருக்கிறது.

மகிழ்ச்சியாக இல்லாதபோது நீங்கள் சோகமாக இருக்கிறீர்கள். மூன்றாவது ஒரு சாத்தியமும் இருக்கிறது என்பது உங்களுக்கு தெரியாது. எதிர்நிலை கைவிடப்பட்டு, பின் நேர்நிலையையும் நீங்கள் விட்டுவிடும் போதே அந்த மூன்றாவது வாய்ப்பு திறக்கிறது. ஒரு கணம் அங்கு ஓர் அசையாநிலை நிலவும். ஆற்றல் எங்கும் பாயமுடியாது. எங்கு பாய்வதென்று அதற்கு தெரியாது. எதிர்நிலை வாசல் மூடப்பட்டுவிட்டது. நேர்நிலை வாசலும் மூடப்பட்டு விட்டது. ஒருகணம் நீங்கள் நடுவில் - இடையில் இருப்பீர்கள். அந்த கணம் முடிவற்ற காலமாகவே தோன்றும். அது மிகமிக நீடித்த காலம்போல் - முடிவற்ற காலம்போல் தோன்றும்.

ஒரு கணம் நீங்கள் நடுநிலையில் இருப்பீர்கள்; என்னசெய்வது எங்கு போவது என்பதை அறியாத நிலையில் இருப்பீர்கள். இந்தக் கணம் பைத்தியகாரத்தனம் போல் தோன்றும். நீங்கள் உடன்பாட்டு நிலையிலும் இல்லை, எதிர்மறை நிலையிலும் இல்லை. அப்படியானால் நீங்கள் யார்? இருக்கிறீர்கள்? உங்கள் அடையாளம் எது? உடன்பாடு மற்றும் எதிர்மறை நிலைகள் விடப்பட்டதும், உங்கள் அடையாளமும், உங்கள் பெயரும் உருவும் விட்டு விடுகின்றன. திடீரென நீங்கள் ஒரு வெறும் ஆளாக இருக்கிறீர்கள். அதில் உங்களை நீங்கள் கண்டு கொள்ள முடிகிறது: ஓர் ஆற்றல் நிகழ்வே *(energy phenomenon)* நீங்கள். அப்போது நீங்கள் எப்படி உணர்கிறீர்கள் என்பதை உங்களால் எடுத்துச் சொல்ல முடியாது. உணர்தல் என்பது அங்கு இராது. அதை உங்களால் சகித்துக்கொள்ள முடிந்தால், அந்த கணத்தை தாக்குப் பிடித்துக்கொண்டால், அது ஒரு மாபெரும் தியாகமாக இருக்கிறது. மாபெரும் தவமாக இருக்கிறது. யோகம் முழுவதும் இந்த கணத்துக்கே உங்களை தயார் செய்கிறது. இல்லாவிட்டால் வேறெங்காவது போகும் போக்காக இருக்கும். ஆனால் இந்த வெற்றிடத்தில் தொடர்ந்து இருப்பதாக இருக்காது. நேர்நிலையில் இருப்பீர்கள், எதிர்நிலையில் இருப்பீர்கள், ஆனால் இந்த வெற்றிடத்தில் நீங்கள்

தொடர்ந்து இருப்பதாக இருக்காது. நீங்கள் இப்போது ஒன்றுமில்லை. நீங்கள் மறைந்துகொண்டு இருப்பதுபோல் இருக்கிறது. ஒரு பாதாளம் திறந்து கொண்டுள்ளது. அதில் நீங்கள் விழுந்து கொண்டிருக் கிறீர்கள்.

இந்த நேரத்தில்தான் ஒரு குரு தேவைப்படுகிறது. ''பொறுத்திரு! அஞ்சாதே. நான் இங்கு இருக்கிறேன்'' என்று கூற முடிவதற்கு ஒரு குரு தேவைப்படுகிறார். இது ஒரு பொய்தான். ஆனால் உங்களுக்கு அது தேவைப்படுகிறது. யாரும் அங்கு இல்லை. ஒரு குரு கூட அங்கு இருக்க முடியாது. ஏனெனில் உங்கள் மனம் முடியும் போதே குருவும் விடுகிறார். இப்போது நீங்கள் முற்றிலும் தனியராக இருக்கிறீர்கள். ஆனால் தன்னந்தனியராக இருப்பது மிகுந்த அச்சம்தருவதாக, பீதிகிளப்புவதாக, மரணத்தை ஒத்ததாக இருக்கிறது. உங்களுக்கு தைரியமூட்ட யாராவது ஒருவர் தேவைப்படுகிறது. மேலும் இது ஒரே ஒரு கண நேரப் பிரச்சினை தான், அதற்கு அந்த பொய் உதவுகிறது.

மேலும் நான் உங்களுக்கு சொல்கிறேன், உங்கள் மேலுள்ள கருணையிலேயே எல்லா புத்தர்களும் பொய் கூறுபவர்களாக இருந்திருக்கி றார்கள். ''நான் இருக்கிறேன், நீ பயப்படத் தேவையில்லை, தொடர்ந்து முன் செல்'' என்கிறார் குரு. உங்களுக்குத் தன்னம்பிக்கை அதிகரிக்கிறது. குதித்து விடுகிறீர்கள். ஒரு நொடி நேர பிரச்சினைதான், ஆனால் ஒவ்வொன்றும் அதைப் பொறுத்தே உள்ளது. மொத்த இருத்தலும் அந்த இடத்திலேயே நின்று கொண்டிருக்கிறது. அதுவே கடக்கும் நிலையாக, கொதிநிலையாக இருக்கிறது. அந்த அடியை நீங்கள் எடுத்துவைத்துவிட்டால் எக்காலத்துக்கு மாக மனத்தை நீங்கள் இழந்து விடுகிறீர்கள். அதன் பின் உடன்பாடு, எதிர்மறை எதுவும் இராது.

நீங்கள் பீதி அடைந்துவிட முடியும். மறுபடியும் நீங்கள் திரும்பிபோய் எதிர்நிலைக்குள்ளோ நேர்நிலைக்குள்ளோ புகுந்துகொள்ள முடியும். அது சொகுசாக, வசதியாக, பழகியதாக இருக்கிறது. அறியாததற்குள் நீங்கள் பிரவேசித்துக்கொண்டு இருக்கிறீர்கள்: இதுதான் சிக்கல். முதலில், எதிர்மறையை எப்படி கைவிடுவது என்பது சிக்கலாக இருக்கிறது. அதற்கு ஒரு பக்குவப்பட்ட புரிதல் தேவைப்படுகிறது. ஆனாலும் அதுதான் மிக எளியது. ஆனால் அதைக்கூட நீங்கள் இன்னும் செய்திருக்கவில்லை.

அடுத்த சிக்கல் மிகவும் அருமையானதும் உங்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியை தருவதாகவும் இருக்கிற நேர்த்தன்மையை (*Positive*) கைவிடுவது எப்படி என்பதாகும். ஆனால் எதிர்த்தன்மையை நீங்கள் கைவிட்டால், அந்த அளவுக்கு நீங்கள் பக்குவப்பட்டு விட்டிருந்தால், உங்களுக்கு ஓர் இரண்டாவது புரிதல் - இரண்டாவது பண்பு மாற்றம் வாய்க்கும். அதாவது உடன்பாட்டை நீங்கள் கைவிடாவிட்டால் எதிர்மறை

திரும்ப வந்துவிடும் என்பதை அந்நிலையில் நீங்கள் அறிந்து கொள்ள முடியும்.

அதன்பின் உடன்பாடு தன் உடன்பாட்டுத்தன்மை யாவற்றையும் இழக்கிறது. எதிர்மறையோடு ஒப்பிடும்போது மட்டுமே அது உடன்பாடாக இருக்கிறது. எதிர்மறை தூக்கி எறியப்பட்டு விட்டதுமே, உடன்பாடு கூட எதிர்மறையாக ஆகிறது. ஏனெனில் இந்த மகிழ்ச்சிகள் யாவும் கணநேரத்தவையே என்பதை இப்போது உங்களால் பார்க்க முடிகிறது. மேலும் அந்த கணம் போய்விட்டால் அடுத்து நீங்கள் எங்கு இருப்பீர்கள்? மறுபடியும் எதிர்த்தன்மை நுழையும்.

எதிர்த்தன்மை நுழையும் முன்பே அதை கைவிடுங்கள். எப்போதும் சொர்க்கத்தின் வாயிலாகவே நரகம் வருகிறது. சொர்க்கம் ஒரு நுழைவாசல் மட்டுமே. நரகமே மெய்யான இடம். சொர்க்கத்தின் வாயிலாகவும், சொர்க்கத்தைப் பற்றிய வாக்குறுதியின் வாயிலாகவும் நரகத்திலேயே நீங்கள் நுழைகிறீர்கள். நரகமே நிஜமான இடம். சொர்க்கம் ஒரு வாசல் மட்டுமே. கூடிய விரைவில் நீங்கள் உள்ளே நுழைய வேண்டியதே - வாசலிலேயே என்றென்றைக்கும் எப்படி நீங்கள் தங்கிவிட முடியும்? உடன்பாடானதில் இருந்து நீங்கள் எங்கு போவீர்கள்?

எதிர்நிலை கைவிடப்பட்டதுமே, அதன் மற்றோர் அம்சமே நேர்நிலை என்பதை நீங்கள் காணமுடியும். நேர்நிலை என்பது உண்மையில் எதிர்நிலைக்கு மாறானதல்ல, அதற்கு எதிரானதல்ல. அதனுடன் கூடி சதிசெய்வதே அது என்பதை உங்களால் காண முடிகிறது. அவை இரண்டும் ஒரு சதித்திட்டத்தில் கை கோத்து உள்ளன. இந்த புரிதல் எழுந்ததும் உடன்பாடு எதிர்மறையாக ஆகிவிடுகிறது, இனி அதை நீங்கள் கைவிடமுடியும்.

உண்மையில் நீங்கள் அதை கைவிட முடியும் என்று கூறுவதும் சரி அல்ல. அதுவும் கைவிடுகிறது; எதிர்மறையாகவும் ஆகிவிடுகிறது. அதன் பின், இந்த வாழ்வில் மகிழ்ச்சி என்று எதுவும் இல்லை என நீங்கள் அறிகிறீர்கள். மகிழ்ச்சி என்பது துக்கமும் சேர்ந்து உள்ளே நுழைவதற்கான ஒரு சூழ்ச்சிதான். இது முட்டை - கோழி உறவைப் போன்றதே. கோழி என்பது என்ன? மீண்டும் முட்டை வருவதற்கான வழி. முட்டை என்பது என்ன? மீண்டும் கோழி வருவதற்கான வழி.

உடன்பாடும் எதிர்மறையும் ஒன்றுக்கொன்று நிஜமான எதிர்ப்பதங்கள் அல்ல. அவை கோழியையும் முட்டையையும் போன்றவை. தாயையும் சேயையும் போன்றவை. ஒன்றுக்கொன்று அவை உதவுகின்றன. ஒன்றிலிருந்து மற்றது உண்டாகிறது. ஆனால் எதிர்நிலையை

கைவிட்டால்மட்டுமே மேற்சொன்ன புரிதல் சாத்தியம் ஆகும். அப்போது உங்களால் நேர்த்தன்மையையும் கைவிட முடியும். பின் அந்த நிச்சயமற்ற நிமிஷத்தில் உங்களால் தங்கி இருக்க முடியும். அதுவே இருத்தலின் மாபெரும் கட்டமாகும். அதைப் போல் நீடித்ததாக தோன்றும் வேறொரு கணத்தை ஒருபோதும் நீங்கள் உணரமாட்டீர்கள். ஆண்டுக்கணக்கில் கழிவதுபோல் தோன்றும். ஏனெனில் அந்த வெற்றிடம்... எல்லா திசை உணர்வையும் நீங்கள் இழக்கிறீர்கள். இறந்த காலம் முழுமையாக இழக்கப்படுகிறது. திடீரென வெறுமை தோன்றுகிறது. நீங்கள் எங்கே இருக்கிறீர்கள், யாராக இருக்கிறீர்கள், என்ன நடந்து கொண்டிருக்கிறது - ஒன்றுமே தெரிவதில்லை.

இதுதான் பைத்தியத்தனமான நேரம். இந்த நேரத்தில் இருந்து திரும்பிவிட நீங்கள் முயன்றால், பின் எப்போதும் நீங்கள் பைத்தியமாகவே இருப்பீர்கள். தியானத்தின் மூலம் பைத்தியமானோர் பலர். இந்த கணத்திலிருந்து அவர்கள் விழுகிறார்கள். ஆனால் அவர்கள் வந்தடைய எதுவுமில்லை. ஏனெனில் நேர்த்தன்மை / எதிர்த்தன்மை இரண்டுமே கைவிடப்பட்டுள்ளன. அவை இப்போதும் இல்லை. வீடு இப்போது இல்லை. வீட்டைவிட்டு நீங்கள் வெளியேறியதுமே அது மறைந்து விடுகிறது. அது உங்களையே பொறுத்திருந்தது. அது ஒரு தனிநிலையாக இல்லை.

மனம் ஒரு தனிப்பொருளாக நிலவுவதில்லை. உங்களைச் சார்ந்தே அது நிலவுகிறது. ஒருதடவை அதைவிட்டு நீங்கள் அகன்றுவிட்டாலே பின் அது அங்கே இருப்பதில்லை. உங்களால் திரும்பிவர முடியாது, வந்தடைய முடியாது. இதுதான் பைத்திய நிலை. கடந்தநிலையை நீங்கள் அடைந் திருக்கவில்லை. நீங்கள் திரும்பி வருகிறீர்கள், மனத்தை தேடுகிறீர்கள், அது அங்கே இருப்பதில்லை. வீடு காணாமல் போய் விட்டிருக்கிறது.

இந்த நிலையில் இருப்பது மிக, மிக வேதனையானதே. இப்போதுதான் நிஜமான துயரம் முதல்முதலாக ஏற்படுகிறது. எனவேதான் குரு தேவைப்படுகிறார். நீங்கள் திரும்பி வர அவர் விடமாட்டார், தொடர்ந்து முன்செல்லும்படி உங்களை நெருக்குவார். ஏனெனில் ஒரு தடவை நீங்கள் திரும்பி விட்டால் மறுபடியும் அந்த நிலைக்கு உங்களை கொண்டுவர மிகுந்த முயற்சி தேவைப்படும். பல பிறவிகளுக்கு கூட உங்களுக்கு கிடைக்காமல் போகலாம், ஏனெனில் அதைப் புரிந்து கொள்வதற்கான மனம் கூட இப்போது இல்லை.

இந்த நிலையை சூஃபி நெறி மஸ்த் என்கிறது - பித்தனின் நிலை என்கிறது. இந்த நிலையைப் புரிந்துகொள்வது உண்மையிலேயே

கடினமாக உள்ளது. ஏனெனில் மனிதர் இருக்கிறார், இல்லாமலும் இருக்கிறார். ஒரே நேரத்தில் சிரித்துக்கொண்டே அழுகின்றார். எல்லா பிடித் தங்களையும் அவர் இழந்து விட்டிருக்கிறார். அழுவது என்றால் என்ன, சிரிப்பது என்றால் என்ன என்பதே அவருக்குத் தெரிவதில்லை. அவற்றுக்கிடையில் ஏதும் முரண்பாடு இருக்கிறதா? தன்னைத்தானே தாக்கிக்கொண்டு அதை அவர் இனிதாக உணர்கிறார். தன்னைத்தானே தாக்கிக்கொண்டு அதை அவர் கொண்டாடுகிறார். தான் செய்து கொண்டிருப்பது என்ன என்பது, அது தீங்கானதா இல்லையா என்பது அவருக்கு தெரிவதில்லை. அ்வர் முற்றிலும் சார்ந்திருப்பவராக ஆகிறார். ஒரு சிறு குழந்தைபோல் ஆகிறார். அவரை யாராவது பார்த்துக்கொள்ள வேண்டி இருக்கிறது.

குரு இல்லாமல் ஒருவர் தியானத்தில் நுழைந்தால் இதுதான் விளைவாக முடியும். குருவுடன் நுழைந்தால் குருவோ தடங்கலாக ஆவார். உங்கள் கூடவே பின்னால் அவர் நின்று கொண்டிருப்பார். நீங்கள் திரும்பிப்போக உங்களை அவர் விடமாட்டார். அவர் ஒரு பாறைபோல் ஆவார். திரும்பிப்போக வழியில்லாததால் நீங்கள் குதித்துவிட வேண்டி இருக்கும். உங்களுக்காக வேறுயாரும் அதை செய்ய முடியாது. அந்த கணத்தில் உங்களுடன் வேறு யாரும் இருக்க முடியாது. ஆனால் இந்த குதிப்பை ஒருதடவை நீங்கள் செய்துவிட்டதுமே எல்லா இருமை நிலைகளையும் நீங்கள் கடந்திருக்கிறீர்கள். எதிர்நிலை, நேர்நிலை இரண்டும் போய்விட்டன - இதுவே ஞானநிலைபேறு ஆகும்.

நீங்கள் எதிர்த்தன்மையை கைவிட முடிவதற்காகவே நான் நேர்த்தன்மையைப் பற்றி பேசிக் கொண்டிருக்கிறேன். எதிர்த்தன்மையை நீங்கள் விட்டுவிட்டதுமே நீங்கள் மாட்டிக் கொள்கிறீர்கள். பின் நேர்த்தன்மையை விடவேண்டி உள்ளது. ஒவ்வொரு கட்டமும் அடுத்த கட்டத்துக்கு இட்டுச் செல்லும் விதம், நீங்கள் முதல் அடி எடுத்து வைத்துவிட்டால் இரண்டாவது கட்டம் வந்தே தீரும் விதத்தில் உள்ளது. இது ஒரு சங்கிலித் தொடர். உண்மையை சொன்னால் முதல் அடியை மட்டுமே எடுத்துவைக்க வேண்டி உள்ளது. மற்ற யாவும் தானே பின் தொடர்கிறது. நீங்கள் புரிந்துகொண்டால் முதலாவது இறுதியானதாக இருக்கிறது (*Alpha is the Omega*) - ஆரம்பமே கடைசியாக உள்ளது.

**குறிப்பிட்ட தூரம் உயர் விழிப்புணர்வையும், மேலும் சில உளவியல் திறன்களையும் திறமைகளையும் கூட ஏற்கனவே அடைந்திருக்கிற ஆன்மிக அனுபவம் நிறைந்த மனிதருக் கும், முற்றிலும் ஞானநிலை பேறு பெற்றிருக்கிற வாழும்**

**புத்தருக்கும் இடையிலான வளர்ச்சி நிலை. இடைவெளியை தயவு செய்து விளக்குங்கள்.**

இதுதான் வேறுபாடு: முற்றிலும் உடன்பாடானவராக(*Positive*) ஆகி இருக்கிறவர் ஆன்மிக நிலையை அடைந்தவராக இருக்கிறார். முற்றிலும் (*negative*) எதிர்மறையானவராக ஆகி இருக்கிறவர்... மிகவும் விழுந்த மனிதரவார் எதிர்மறை என்று நான் கூறும்போது தொண்ணூற்று ஒன்பது சதவிகித எதிர்நிலை என்றே நான் பொருள் கொள்கிறேன். ஏனெனில் நூறு சதவிகித எதிர்த்தன்மை சாத்தியமில்லை. அப்படியே நூறு சதவி கித நேர்த்தன்மையும் சாத்தியமில்லை. ஒன்றுக்கு மற்றது தேவைப்படுகிறது. அளவு மாற முடியும்; சிறு அளவில் வேறுபாடு இருக்கிறது.

தொண்ணூற்று ஒன்பது சதவிகித எதிர்த்தன்மையும் ஒரு சதவிகித நேர்த்தன்மையும் உள்ளவரே மிகவும் வீழ்ச்சி அடைந்துள்ள மனிதர். இவரையே கிறிஸ்தவர்கள் பாவி என்கிறார்கள் - இவரிடமும் ஒரு சதவீதம் நல்லகுணம் உள்ளது! அவரது தொண்ணூற்று ஒன்பது சதவீத எதிர்த்தன்மைக்கு உதவியாக மட்டுமே அந்த ஒரு சதமும் தேவைப் படுகிறது. அவர் எல்லாவற்றிலும் எதிர்த்தன்மையாகவே இருக்கிறார். எதை நீங்கள் சொன்னாலும், இல்லை என்பதே ஒரே பதிலாக இருக்கிறது. (*Existence*)இருத்தல் அவரிடம் எதை கேட்டாலும் இல்லை என்பதே அவரது ஒரே பதில். எதற்குமே உண்டு என்று சொல்ல முடியாத நாத்திகன், ஆம் என்று கூற முடியாதவனாக ஆகியிருக்கிறான், விசுவாசிக்க முடியாதவனாய் இருக்கிறான் - இந்த மனிதன் நரகத்தை அனுபவிக்கிறான். மேலும் ஒவ்வொன்றுக்கும் அவன் இல்லை என்றே சொல்வதால், அவனே ஒரு இல்லை ஆகிறான், ஒரு பிரமாண்டமான இல்லை ஆகிறான். கோபம், வன்முறை, அடக்கிவைத்தல், சோகம் எல்லாம் சேர்ந்து நரகமே மனித உருக்கொண்டது போல ஆகிறான்.

அப்படிப்பட்ட ஒருவனை கண்டுபிடிப்பது கடினமே. ஏனெனில் அப்படிப்பட்ட மனிதனாக இருப்பது கடினம். தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் நரகத்தில் வாழ்தல் மிகவும் கடினம். ஆனால் உங்களுக்கு விளக்குவதற்காக மட்டுமே இதை நான் சொல்லிக் கொண்டிருக்கிறேன். இது ஒரு கணிதவியல் சாத்தியமே. ஒருவன் முயன்றால் அப்படியும் ஆக முடியும். அப்படி ஓர் மனிதரை எங்கும் நீங்கள் கண்டுபிடிக்க முடியாது. ஒரு இட்லர் கூட அந்த அளவு அயோக்கியனாக இருக்க முடியாது. மொத்த ஆற்றலும் அழிவு செய்வதாகிறது - பிறருக்கு மட்டுமல்ல, தனக்குமே கூட. மொத்த அணுகு முறையும் தற்கொலைத் தன்மை யுடையதாகவே உள்ளது. ஒருமனிதன் தற்கொலை செய்து கொள்ளும்

போது அதன்மூலம் அவன் கூறுவதென்ன? தன் சாவு மூலம் வாழ்வுக்கு அவன் இல்லை என்று சொல்லிக் கொண்டிருக்கிறான். கடவுளிடம் அவன் இல்லை என்று சொல்லிக் கொண்டிருக்கிறான். ''உம்மால் என்னை உருவாக்க முடியாது, என்னை நானே அழித்துக் கொள்வேன்'' என்று கூறுகிறான்.

இந்த யுகத்தின் மாபெரும் சிந்தனையாளர்களில் ஒருவரான சார்த்தர், (Sartre) தற்கொலை மட்டுமே ஒரே சுதந்தரம் - கடவுளிடமிருந்து விடுதலை என்கிறார். ஏன் கடவுளிடமிருந்து விடுதலை? ஏனெனில் அதில் உங்களுக்கு சுதந்தரம் இல்லை. உங்களை ஆக்கிக் கொள்வதற்கு உங்களிடம் எந்த சுதந்தரமும் இல்லை. நீங்கள் எந்த நிலையில் இருந்தாலும் ஏற்கனவே உருவாக்கப்பட்ட ஒரு நிலையிலேயே உங்களை நீங்கள் காண்கிறீர்கள். பிறப்பை உங்களால் கையில் எடுக்க முடியாது. அதற்கு உங்களுக்கு சுதந்தரம் இல்லை. சார்த்தர் சொல்கிறார், ''ஆனால் இறப்பை உங்கள் கையில் எடுக்க முடியும், அந்த சுதந்தரம் உங்களுக்கு உள்ளது.'' குறைந்தபட்சம் ஒரு விஷயத்தை கடவுளிடம் தீர்க்கமாக சொல்லிவிட உங்களால் முடியும்: ''நான் சுதந்தரமானவன்.'' எப்போதும் தற்கொலைப் படுகுழியின் விளிம்பில் வாழும் இந்த மனிதனே கடை கெட்ட, மிகப்பெரிய பாவி.

சார்த்தர் போதிக்கும் இருத்தலியலில் (existentialism)வருத்தம், சலிப்பு, துயரம் ஆகியவை மிகவும் அர்த்தம் நிறைந்த சொற்களாக ஆகி உள்ளன. அவை அர்த்தமிக்கதாகவே ஆகவேண்டி உள்ளது. ஏனெனில் இந்த மனிதன் துயரத்திலேயே வாழ்வான். சலிப்புடனேயே வாழ்வான். ஒரு சதவிகித உடன்பாட்டுத் தன்மை தேவைப்படுகிறது. சலிப்புக்கும் தற்கொலைக்கும் துயரத்துக்கும் அவன் ஆமென்று சொல்லுவான் - இவ்வளவுக்கு மட்டுமே. இவற்றுக்கு ஆம் என்று சொல்லும் தேவை அவனுக்கு இருக்கிறது. இந்த கடைசி கரையை மென்மேலும் நெருங்கி வந்துகொண்டிருக்கும் நவீன மனிதன் இவன். மறுபுறமுள்ள சிகரத்தில் ஆன்மிக மனிதன் இருக்கிறான். ஒருபுறமுள்ளவன் பாவி; படு குழியில் வீழ்ந்தவன். மறுபுறமுள்ள சிகரத்தில் தொண்ணூற்று ஒன்பது சதவிகித உடன்பாட்டுத் தன்மையும் ஒருசதவிகி.ந எதிர்மறை தன்மையும் உடைய ஆன்மிக மனிதன் இருக்கிறான். எல்லாவற்றுக்கும் உண்டு/ஆம் என்று சொல்கிறான் இவன். இவனிடம் ஒரே ஓர் இல்லை மட்டுமே உண்டு. அதுதான் இல்லைக்கு இல்லை என்பது - அவ்வளவே. மற்றபடி அவன் ஓர் ஆமாம் என்பவன். ஆனால் முழுமையான ஆம் என்பது நிலவ முடியாததால் இல்லை என்று சொல்லும் ஒரு தேவையும் அவனுக்கு உள்ளது.

இந்த மனிதன் பல விஷயங்களை அடைகிறான். ஏனெனில் *(Positivemind)* உடன்பாட்டு மனம் உங்களுக்கு கோடிக்கணக்கானவற்றை வழங்கமுடியும். இந்த மனிதன் மகிழ்ச்சியாக, சலனமற்று, தெளிவுடன், அமைதியாக, மௌனமாக இருப்பான். இதனால் மனம் மலரும்; அதன் உடன்பாட்டுப் பண்புகள் அவனுக்கு அனைத்தையும் வழங்கும். அவன் சில சக்திகளைப் பெற்றிருப்பான். உங்கள் எண்ணங்களை அவனால் தெரிந்துகொள்ள முடியும், உங்களை அவனால் குணமாக்க முடியும். அவனது ஆசி ஓர் ஆற்றலாக ஆகும். அவன் அருகில் இருப்பதன்மூலமே நீங்கள் நன்மை அடைவீர்கள். நுட்பமான வழிகளில் அவன் ஓர் ஆசீர்வாதமாகவே இருக்கிறான்.

யோகா சொல்கிற அனைத்து சித்திகளும் அதாவது ஆற்றல்களும்... இவற்றைப்பற்றி பின்னால் பதஞ்சலி பேசுகிறார் - அவனுக்கு எளிதாக கைவரும். அவன் அற்புதங்கள் செய்யும் மனிதனாவான். அவனது தொடுதலே மாயங்கள் பல புரியும். எதையும் அவனால் சாதிக்க முடியும். ஏனெனில் அவனிடம் உடன்பாட்டு மனம் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் உள்ளது. உடன்பாட்டுத்தன்மை என்பது ஓர் ஆற்றலாகும், சக்தியாகும். அவன் மிகுந்த ஆற்றல் உள்ளவனாக இருப்பான். இருந்தாலும் அவன் இன்னும் ஞானம் பெற்றவனல்லன். மேலும் ஒரு ஞானம் பெற்றவனை ஞானம்பெற்றவர் என நினைக்க முடிவதைக் காட்டிலும் இந்த மனிதனை ஞானம் பெற்றவனாக நினைப்பதே உங்களுக்கு அதிக எளிதாக இருக்கும். ஏனெனில் ஞானநிலைபேறு பெற்ற மனிதர் முற்றிலும் உங்களுக்கு அப்பாற்பட்டவராக இருக்கிறார். உங்களால் அவரைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. அவர் புரிந்துகொள்ளப்பட முடியாதவராக இருக்கிறார்.

உண்மையைச் சொன்னால் ஞானியிடம் ஆற்றல் இருப்பதில்லை. ஏனெனில் அவரிடம் மனம் இருப்பதில்லை. அவர் அற்புதங்கள் செய்வதில்லை. அவரிடம் மனம் இல்லை. அவரால் எதையுமே செய்ய முடியாது. செயலின்மையின் உச்சம் அவர். அவரைச் சுற்றி அற்புதங்கள் நடக்க முடியும். ஆனால் அவை நிகழ்வது உங்கள் மனத்தின் காரணமாகத் தான், அவரால் அல்ல - இதுதான் வேறுபாடு. ஆன்மிக மனிதன் அதிசயங் கள் செய்ய முடியும். ஞானம் பெற்ற மனிதரால் முடியாது. அற்புதங்கள் சாத்தியமே. ஆனால் அவை நிகழ்வது உங்களால்தான், அவரால் அல்ல. உங்கள் விசுவாசமே, உங்கள் நம்பிக்கையே அற்புதத்தை சாதிக்கிறது. ஏனெனில் அந்த நேரத்தில் நீங்கள் உடன்பாட்டு மனமாக ஆகிறீர்கள்.

யேசு சொல்கிறார்: ஒரு பெண் அவரது அங்கியை தொட்டாள். ஒரு கும்பலிடையில் அவர் போய்க்கொண்டிருந்தார். அந்தப்பெண் மிகவும்

ஏழை, மிகவும் வயதானவள். எனவே தன்னைக்கூட யேசு ஆசீர்வாதிப்பார் என்று அவளால் கற்பனை செய்யவும் முடியவில்லை. எனவே கும்பலோடு சேர்ந்து கொள்வதே நல்லது என அவள் நினைத்தாள். யேசு கடந்து போகும்போது அவரது அங்கியையாவது தொட்டுவிட வேண்டும் என்று நினைத்தாள். ''அது அவருடைய அங்கி. அதை தொட்டாலே போதும். நானோ பரம ஏழை, மிகவும் வயதானவள். என்னை யார் கண்டுகொள்வார்? என்னை யார் கவனிப்பார்? எனக்காக யார் கவலைப்படுவார்? பலபேர் வருவார்கள், அவர்களையே யேசு கவனிப்பார்.'' எனவே அவரது அங்கியைத் தொட மட்டும் செய்தாள்.

யேசு திரும்பிப் பார்த்தார். அந்தப் பெண் ''நான் குணமானேன்'' என்றாள். அதற்கு யேசு, ''அதற்கு உன் விசுவாசமே காரணம். நான் எதையும் செய்யவில்லை. உனக்கு நீயே செய்துகொண்டாய்.'' என்றார்.

பல அற்புதங்கள் நடக்க முடியும். ஆனால் ஞானம் பெற்ற மனிதரால் எதையும் செய்ய முடியாது. மனமே செய்கிறது - எல்லாவற்றையும் மனமே செய்கிறது. மனம் இல்லாதபோதும் பலவும் நிகழும். ஆனால் அவை செய்யப்படுபவை அல்ல. உண்மையில் ஞானம் அடைந்த மனிதர் இருப்பதில்லை. ஓர் இன்மையாகவே வெறுமையாகவே அவர் இருக்கிறார். அவர் ஒரு வெற்று ஆலயமாக இருக்கிறார். அவருக் குள் நீங்கள் நுழைய முடியும். ஆனால் அங்கு அவரை நீங்கள் சந்திக்கமாட்டீர்கள். எதிரெதிர் நிலைகளை அவர் கடந்து விட்டுள்ளார். அவர் ஒரு மாபெரும் கடந்தநிலையாக இருக்கிறார். அவரில் நீங்கள் காணாமல் போவீர்கள். ஆனால் அவரை கண்டுபிடிக்க மாட்டீர்கள்.

ஆன்மிக ஆற்றல்கள் உடைய மனிதரும் இன்னும் உலகிற்குள் தான் இருக்கிறார். உங்களுக்கு நேர் எதிர் முனையில் அவர் இருக்கிறார். நீங்கள் பலமற்றவராக உணர்கிறீர்கள். அவர் பலசாலியாக உணர்கிறார். நீங்கள் நலமற்றவராக உணர்கிறீர்கள். அவரால் உங்களை நலமாக்க முடிகிறது. அது அப்படித்தான் இருக்கும். (ஏனெனில்) நீங்கள் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் எதிர்த்தன்மையில் இருக்கிறீர்கள். அவரோ தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் நேர்த்தன்மையில் இருக்கிறார். இந்த சந்திப்பே சக்தியற்ற நிலைக்கும் சக்திபெற்ற நிலைக்கும் இடையிலானதாக இருக்கிறது. நேர்த்தன்மை என்பது சக்தி. எதிர்த்தன்மை என்பது சக்தியற்ற நிலை. எனவே சக்திமிக்க மனிதரால் நீங்கள் வெகுவாகவே கவரப் படுவீர்கள். ஆனால் அதுவே அவருக்கு அபாயமாக ஆகிறது. அவர்மேல் நீங்கள் எவ்வளவு அதிகமாய் மதிப்பு கொள்கிறீர்களோ அவ்வளவு அதிகமாய் அவரது அகங்காரம் வலிமைபெறுகிறது. எதிர்நிலை மனிதருக்கு

அகங்காரம் அவ்வளவு வலிமையாய் இருக்கமுடியாது. ஏனெனில் அகங்காரம் தன்னை வலிமையாக உணர உடன்பாடான ஆற்றல் தேவைப்படுகிறது.

எனவேதான் பாவிகளில்கூட மிகமிகப் பணிவான மனிதர்களை நீங்கள் காணமுடியும். ஆனால் மகான்களின் மத்தியில் ஒருபோதும் காணமுடியாது. புனிதர்கள் எப்போதும் அகங்காரமுடையவர்களாகவே இருக்கிறார்கள். அவர்கள் குறிப்பிடத்தக்கவர்களாக - சக்திபடைத்தவர்கள், தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், உத்தமர்கள், இறைதூதர்கள், தீர்க்கதரிசிகள் என குறிப்பிடத்தக்கவர்களாக இருக்கிறார்கள். பாவியோ பணிவாக இருக்கிறான். தன்னைக் குறித்தே பயப்படுகிறான். எச்சரிக்கையாக இயங்குகிறான். தான் எத்தகையவன் என்பதை அவன் அறிவான். பாவி ஒருவன் நேரடியாக குதித்து ஞானம் பெற்ற நிகழ்ச்சிகள் பல நடந்துள்ளன. ஆனால் ஆன்மிக ஆற்றலுடைய ஒருவனுக்கு அது அவ்வளவு எளிதல்ல. ஏனெனில் அந்த ஆற்றலே ஒரு தடங்கலாக மாறுகிறது.

இதைப்பற்றி பதஞ்சலி நிறைய பேசுவார். இந்த ஆற்றல் எனும் பரிமாணத்தைப் பற்றிப் பேச ஒரு முழு பகுதியையே அவர் ஒதுக்கியுள்ளார். (விபூதி பாதம்) மேலும் அந்தப் பகுதி முழுவதையும் அவர் எழுதி இருப்பதன் நோக்கம் அதற்கு நீங்கள் பலியாகிவிடக் கூடாது என்பதில் உங்களை விழிப்புடனிருக்கச் செய்வதற்கே. ஏனெனில் அகங்காரம் மிகவும் நுட்பமானது; அது மிகுந்த நுட்பமான ஒரு நிகழ்வு; மிகவும் ஏய்ப்புத் தன்மையுள்ள ஒரு சக்தி. ஆற்றல் - அதிகாரம் எங்கெல்லாம் இருக்கிறதோ அங்கெல்லாம் அது ஒட்டிக்கொண்டு உறிஞ்சுகிறது. அகங்காரம் ஓர் உறிஞ்சும் விவகாரமாக இருக்கிறது. எனவே உலகில் அகங்காரம் அரசியலை, கவுரவத்தை, அதிகாரத்தை, செல்வத்தை தேடிக் கண்டுபிடிக் கிறது. அப்போதுதான் அது ஓர் ஆளாக உணர்கிறது - நீங்கள் ஒரு நாட்டின் தலைவர் அல்லது பிரதமர். அப்போது நீங்கள் குறிப்பிடத்தக்கவராக இருக்கிறீர்கள். அல்லது உங்களிடம் கோடிக்கணக்கான ரூபாய் உள்ளன என்றால் அப்போதும் நீங்கள் ஓர் ஆளாக உணர்கிறீர்கள். அகங்காரம் வலுப்பெறுகிறது.

விளையாட்டு அப்படியேதான் நீடிக்கிறது. ஏனெனில் நேர்த்தன்மை (*Positive*)யும் உலகின் வழியிலிருந்து அப்பாற்பட்டதல்ல. நேர்த் தன்மையும் உலகினுள்தான் உள்ளது. எதிர்த் தன்மையைவிட அதிக ஒட்டுதலாகவே உள்ளது. ஆனால் அப்போது ஆபத்தும் அதிகமாகிறது. ஏனெனில் தான் ஒரு பிரதமர் அல்லது முதல்வர் அல்லது கோடீசுவரர் என்பதாலேயே தன்னை மிகவும் உயர்வாக கருதும் ஒருவன், அந்த தகுதி

களை/ வசதிகளை தன் சாவுக்கு அப்பாலும் எடுத்துச் செல்ல முடியாது என்பதையும் அறிந்தே இருக்கிறான். ஆனால் புலன்கடந்த காட்சி *E.S.P.* என்பதை படித்தல், தொலைநுண் காட்சியறிவு (*Clairvoyance*), தொலைநுண் எண்ணத்தைக் கேட்டலறிவு (*Clair - audience*) ஆவியுலகப் பயணம், குணப்படுத்தல் முதலிய ஆன்மிக திறமைகள் காரணமாக தன்னை அதிகாரம் மிக்கவராக உணர்பவர் அதிக அகங்காரத்தையும் உணர்கிறார். இந்த ஆற்றல்களை சாவுகடந்தும் தான் எடுத்துச் செல்ல முடியும் என்று அவர் அறிகிறார். மேலும், ஆம், அவ்விதம் அவை எடுத்துச் செல்லப் படவும் முடியும்தான். ஏனெனில் மனமே மறுபடியும் பிறக்கிறது, இந்த சக்திகள் மனதிற்குச் சொந்தமானவை.

பொருட்செல்வம் உடம்புக்கு சொந்தமானது. மனத்தை சேர்ந்தது அல்ல. அதை உங்களால் எடுத்துச் செல்ல முடியாது. அரசியல் அதிகாரம் உடலைச் சேர்ந்தது. நீங்கள் செத்துவிட்டால் நீங்கள் ஒன்றுமில்லை. ஆனால் இந்த சக்திகள், இந்த ஆன்மிக ஆற்றல்கள் மனதுக்குச் சொந்தமானவை; மனமோ ஓர் உடம்பில் இருந்து மற்றோர் உடம்பிற்குப் போகிறது / அந்த ஆற்றல்மையம் சுமந்து செல்கிறது. அடுத்த பிறவியில் தொடக்கத்தில் இருந்தே வசீகரமிக்க ஒரு குழந்தையாக நீங்கள் பிறப்பீர்கள். உங்களில் ஒரு காந்த விசை இருக்கும். எனவே அதிக கவர்ச்சி இருக்கும். எனவே அதிக ஆபத்தும் இருக்கும்.

ஆன்மிகராக ஆக முயற்சிக்க வேண்டாம் என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஆன்மிகம் என்பது உலகியலுக்கு எதிரானது, எதிர்த்தன்மை நேர்த்தன்மைக்கு எதிரானது போலவே. உண்மையைச் சொன்னால் அவை ஒன்றுக்கொன்று எதிரே அல்ல. இரண்டின் தன்மையும் ஒன்றேதான். ஒன்று உயர்வானதாகவும் நுட்பமானதாகவும் உள்ளது. மற்றது தாழ்வானதாகவும் பருண்மையானதாகவும் உள்ளது. ஆனால் இரண்டும் ஒன்றே. ஆன்மிக ஆற்றல்களைக் கண்டு ஏமாந்து போகாதீர்கள். மேலும் உங்களில் ஆன்மிக ஆற்றல்கள் எழத் தொடங்கும் போதெல்லாம் முன் எப்போதைவிடவும் நீங்கள் அதிக விழிப்பாக இருக்கவேண்டி உள்ளது. மேலும் அவை எழும்! நீங்கள் தியானிப்பது அதிகமாக ஆக மனம் பண்பட்டதாகும். மனம் பண்படும் போது நீங்கள் எப்போதும் உங்களுக்குள் வைத்திருக்கும் விதைகள் முளைவிடத் தொடங்குகின்றன. இப்போது மண் ஆயத்தப் படுத்தப்பட்டு விட்டது. பருவம் வந்திருக்கிறது. அந்த பூக்கள் அழ கானவை.

ஒருவரை நீங்கள் தொட்டு அதனால் உடனடியாக அவர் குணம் பெற முடிந்தால் அந்தச் சோதனையை எதிர்த்து நிற்பது கடினமாக உள்ளது.

மக்களுக்கு உங்களால் மிகுந்த நன்மை செய்ய முடியும்போது நீங்கள் மிகப்பெரும் சமுக சேவையாளர் ஆக முடிகிறது. அந்த ஆவலை எதிர்த்து நிற்பது மிகவும் கடினம்தான். உடனடியாக ஆவல்கள் எழுகின்றன. நீங்கள் நியாயப்படுத்துகிறீர்கள்: மக்கள் பணிக்காகவே இதை நீங்கள் செய்து கொண்டிருப்பதாக கூறுகிறீர்கள். ஆனால் உள்ளே பாருங்கள்: மக்கள் சேவை வழியாக அகங்காரம் எழுந்துகொண்டு உள்ளது. இப்போது த்டை மிகப்பெரியதாக இருக்கும்.

பொருளியல் (*Materialism*) கூட அவ்வளவு பெரிய தடையாக இருப்பதில்லை. அது எதிர்மறை மனதைப் போன்றதுதான் - கைவிட முடியாத அளவுக்கு பெரிய தடை அல்ல அது. அது ஒரு வேதனை. உடன்பாட்டுத் தன்மையைத் தான் கைவிடுவது கடினம். ஆன்மிக நாட்டத்தை கைவிடுவதே கடினம். உடலை உங்களால் எளிதாக விட்டுவிட முடிகிறது. மனத்தை விட்டுவிடுவதுதான் உண்மையான பிரச்சினை. ஆனால் பொருளியல் / ஆன்மிகம் இரண்டையும் நீங்கள் கைவிடாதவரை - இதுவுமில்லை அதுவுமில்லை என்றாகும் வரை - இரண்டையும் நீங்கள் கடந்து செல்லாதவரை நீங்கள் ஞானமடைவதில்லை.

உண்மையைச் சொன்னால் ஞானம்பெற்ற மனிதர் வெறுமனே மிகமிக சாமாணியராகவே ஆகிறார். சிறப்பான எதுவும் அவரிடம் இருப்பதில்லை, அதுவே அவரது சிறப்பு. எந்த அளவுக்கு அவர் சாதாரணமாக இருக்கிறார் என்றால் தெருவில் அவரைப் பார்த்ததும் பாராமல் நீங்கள் தாண்டி போய்விட முடியும். ஆன்மிக மனிதரை உங்களால் தாண்டி போய்விட முடியாது. அவரைச் சுற்றிலும் ஓர் ஆற்றல் அலையை அவர் கொண்டு வருவார். அவர் ஆற்றலாய் இருப்பார். சாலையில் உங்களை அவர் கடந்து சென்றால் அவரால் அப்படியே குளிப்பாட்டப்பட்டு விடுவீர்கள் நீங்கள். ஒரு காந்தம்போல் அவரால் கவரப்படுவீர்கள்.

ஆனால் ஒரு புத்தரை நீங்கள் தாண்டிபோய்விட முடியும். அவர் ஒரு புத்தர் என்பதை நீங்கள் அறியாதிருந்தால் உங்களுக்கு தெரியப்போவ தில்லை. ஆனால் ஒரு ரஸ்புதீனை அப்படி உங்களால் தாண்டிப் போய்விட முடியாது. மேலும் ரஸ்புதீன் ஒரு கெட்ட மனிதரும் அல்லர். ரஸ்புதீன் ஒரு ஆன்மிக மனிதர். ரஸ்புதீனை கவனிக்காமல் தாண்டிப்போய்விட உங்களால் முடியாது. அவரை நீங்கள் பார்த்ததுமே அவரால் ஈர்க்கப்படுகிறீர்கள். உங்கள் வாழ்நாள் முழுதும் அவரை நீங்கள் பின்தொடர்வீர்கள். ஜாருக்கு நடந்தது அதுதான். ஒருமுறை அவரை அவன் கண்டதுமே அவரது அடிமையாகிவிட்டான். அவரிடம் அளவிடற்கரிய ஆற்றல் இருந்தது. ஒரு புயல் போல் அவர் வருவார். அவரால் கவரப்படாமல் இருப்பது கடினம்.

ஒரு புத்தரால் கவரப்படுவது கடினம். பல தடவை நீங்கள் அவரை அறியாமல் கடந்துபோய்விட முடியும். அவ்வளவு எளிமையும் சாதாரணமும் ஆனவர் அவர். அதுதான் அவரது அசாதாரணத் தன்மை. ஏனெனில் இப்போது எதிர்த்தன்மை, நேர்த்தன்மை இரண்டுமே இல்லாமல் போய்விட்டது. மின் ஆற்றல் வட்டத்துக்குள் இப்போது அவர் இல்லை. அவர் நிலவுகிறார்! ஒரு பாறைபோல் அவர் நிலவுகிறார். ஒரு மரம்போல் நிலவுகிறார். வானத்தைப்போல் இருக்கிறார். அவரை நீங்கள் அனுமதித்தால் உங்களில் அவர் நுழைய முடியும். உங்கள் கதவை அவர் தட்டுவதுகூட இல்லை. அந்த அளவுகூட அவர் அத்துமீறுவதில்லை. அவர் மிகமிக அமைதியான ஒரு நிகழ்வு. அவர் ஒரு சூனியம் இல்லாமை.

ஆனால் நீங்கள் சாதிக்கக்கூடிய மிகப்பெரிய சாதனை அதுதான். ஏனெனில் இருத்தலைப்பற்றி அவருக்கு மட்டுமே தெரியும். உயிர் என்றால் என்ன என்பதை அவர் மட்டுமே அறிகிறார். எதிர்மறையையும் உடன்பாட்டையும் கொண்டு நீங்கள் மனத்தை அறிகிறீர்கள்: எதிர்மறை சக்தியற்றது, உடன்பாடு சக்திமிக்கது என அறிகிறீர்கள். ஆன்மிகர் ஆவ தற்கு ஒருபோதும் முயலாதீர்கள் - அது தானாக நிகழும். அதற்கு நீங்கள் முயலவேண்டியதில்லை. அது நிகழும் போது பற்றற்று இருங்கள்.

கடந்த காலத்தில் பலப்பல கதைகள் நடந்தன. புத்தரின் மைத்துனன் ஒருவன் இருந்தான். பெயர் தேவதத்தன். புத்தரிடமிருந்து தீட்சை பெற்றுக்கொண்டான். புத்தரின் பெற்றோரின் உடன்பிறந்தார் பிள்ளையான அவன் தன் அடி மனதில் புத்தர்மேல் பொறாமை கொண்டான். ரஸ்புதீனைப் போலவே மிகவும் சக்திபெற்ற மனிதனாக அவன் விளங்கினான். விரைவிலேயே தனக்கென ஒரு தனிக்கூட்டத்தைச் சேர்த்துக் கொண்டான். ''என்னால் பல காரியங்களை செய்ய முடியும், இந்த புத்தனால் ஒன்றும் செய்ய முடியாது'' என்று மக்களிடம் சொல்லத் தொடங்கினான்.

சீடர்கள் திரும்ப திரும்ப புத்தரிடம் வந்து, ''இந்த தேவதத்தர் தனிப்பிரிவை உருவாக்க முயன்று கொண்டிருக்கிறார்; தானே அதிக சக்தி வாய்ந்தவரென்றும் அவர் சொல்கிறார்'' என்று சொன்னார்கள். அவன் சொன்னது சரிதான். ஆனால் அவனது ஆற்றல் உடன்பாட்டு மனதுக்குச் சொந்தமானது. புத்தரைக் கொல்ல அவன் கடின முயற்சிகளை மேற் கொண்டான். ஒரு யானைக்கு மதம் பிடிக்க செய்தான். ஒரு யானைக்கு மதம்பிடிக்க செய்தான் என்று கூறும்போது, தன் உடன்பாட்டு மனோ சக்தியை அவன் பயன்படுத்தினான் என்ற பொருளில் கூறுகிறேன். அந்த சக்தி மிகவும் வலிமையாக இருந்ததால் யானைக்கு மதம் ஏறிவிட்டது. அது வெறித்தனமாக விரைந்தது. பல மரங்களையும் முறித்தெறிந்தது.

தேவதத்தன் மிகவும் மகிழ்ந்தான். ஏனெனில் மரங்களின் பின்புறம்தான் புத்தர் உட்கார்ந்திருந்தார். யானைக்கோ வெறி பிடித்துவிட்டது - வெறித் தனமான ஆற்றல் அது. ஆனால் அந்த யானை புத்தரின் அருகில் வந்ததும் புத்தரை அது பார்த்தது. பின் ஆழமான தியானத்தில் அமைதியாக அமர்ந்திருந்துவிட்டது. அந்த யானை... தேவதத்தன் திகைத்துப்போனான்.

என்ன நடந்தது? வெறுமை நிலவும்போது எல்லாமே அதனால் உள்வாங்கப்பட்டு விடுகிறது. வெறுமைக்கு வரம்புகள் இல்லை. மதம் கொண்ட நிலை உள்கிரகிக்கப்பட்டுவிட்டது. புத்தர் ஏதோ செய்தார் என்பதல்ல - அவர் எதையுமே செய்யவில்லை. அவர் ஒரு வெற்றிடமாக மட்டுமே இருக்கிறார். யானை வந்தது, அதன் ஆற்றலை இழந்தது, அமைதியாகிவிட்டது - அவ்வளவுதான். அது எந்தளவுக்கு 'சாதுவாக' ஆகிவிட்டது என்றால் அதன் பின்னும் தேவதத்தன் பல தடவை முயன்றும்கூட அவனால் மறுபடியும் அதற்கு மதம்பிடிக்கும்படி செய்ய முடியவில்லை என்று சொல்லப்படுகிறது.

ஞானமடைந்த மனிதர் ஒரு மனிதராக இல்லை என்பது முதல் விஷயம். அவர் எதுவுமாகவும் இல்லை - என்பது இன்னொரு விஷயம். அவர் இருப்பதுபோல் தோன்றுகிறது, ஆனால் அவர் இல்லை. அவர் உடலையே நீங்கள் பார்க்கிறீர்கள், அவரை அல்ல. எந்தளவுக்கு அவரை நீங்கள் தேடுவீர்களோ அந்த அளவுக்கு அவரை நீங்கள் கண்டுபிடிப்பதற் கான வாய்ப்பு குறைவு. இந்தத் தேடலிலேயே நீங்கள் தொலைந்து போவீர்கள். அவர் பேரண்டமாக ஆகிஇருக்கிறார். ஆனால் ஆன்மிக மனிதரோ இன்னும் ஒரு தனி நபராகவே இருக்கிறார்.

எனவே, உங்கள் மனம் ஒரு தனிநபராக ஆக முயலும், என்பதை நினைவில் கொள்ளுங்கள். அதிக பலசாலி ஆகும் பேராவல் உங்கள் மனதுக்கு இருக்கிறது. இந்த அடையாளமற்ற உலகில் ஓர் அடையாளம் சொல்லும்படியான ஆளாக ஆகும் ஆசை உங்கள் மனதுக்கு இருக்கிறது. இதைப்பற்றிய விழிப்புடன் இருங்கள். அதன் வழியாக ஏராளமான நன்மைகள் செய்யமுடியும் என்றாலும்கூட அது அபாயகரமானதே. நன்மை என்பது மேல் எழுந்தவாரியாகத்தான் உள்ளது. அடியாழத்தில் உங்களை நீங்களே கொன்றுகொண்டே இருக்கிறீர்கள். விரைவில் அது தீர்ந்துபோகும். பின் ம்றுபடியும் நீங்கள் எதிர்த்தன்மையில் விழுந்து விடுவீர்கள். அது ஒருவித ஆற்றல். அதை நீங்கள் இழந்துவிட முடியும். அதை நீங்கள் பயன்படுத்த முடியும். அதன் பின் அது போய்விட்டது.

இந்துக்களிடம் மிகவும் அறிவியல் பூர்வமான ஒரு வகை பிரிவு (*category*) உள்ளது. இத்தகைய பிரிவு வேறெங்கும் இல்லை. மேற்கில் நரகம் -

சொர்க்கம் என்ற இரண்டு வகையில் மட்டுமே சிந்திக்கிறார்கள். இந்துக்களோ நரகம், சொர்க்கம், மோட்சம் என மூன்று வகைகளில் சிந்திக்கிறார்கள். இந்த மூன்றாவதை மேற்கத்திய மொழிகளில் மொழிபெயர்த்தல் கடினம். ஏனெனில் அப்படி ஒரு பிரிவை அவர்கள் செய்யவில்லை. அதை விடுதலை எனலாம், ஆனால் அதுவல்ல. அதில் அதன் சாயல் தெரிகிறது, லேசான வாசம் வீசுகிறது, ஆனாலும் இரண்டும் ஒன்றல்ல.

நரகமும் சொர்க்கமும் அங்கே உள்ளன. மூன்றாவது இல்லை. எதிர்மறை மனம் முழுமைபெற்றால் அது நரகம். உடன்பாட்டு மனம் முழுமை பெற்றால் அது சொர்க்கம். ஆனால் இரண்டையும் கடந்தநிலை எங்கே? நீங்கள் ஓர் ஆன்மிகவாதியாக இருந்தால் நீங்கள் இறந்தபின் சொர்க்கத்தில் பிறப்பீர்கள் என்று இந்தியாவில் கூறுகிறார்கள். அங்கே நீங்கள் கோடிக்கணக்கான ஆண்டுகள் மகிழ்ச்சியாக வாழ்வீர்கள் எல்லாவற்றையும் முழுமையாக ரசித்து அனுபவிப்பீர்கள். ஆனால் அதன்பின் மீண்டும் நீங்கள் பூமிக்கே திரும்பிவர வேண்டியிருக்கும். ஆற்றல் தீர்ந்ததும் நீங்கள் திரும்பி வரவேண்டியதே. ஒருவித சக்தியை நீங்கள் சம்பாதித்தீர்கள், பின் அதை பயன்படுத்திவிட்டீர்கள். இனி மீண்டும் பழைய நிலைக்கே வந்து சேர்வீர்கள்.

எனவே இந்தியாவில் சொர்க்கத்தை தேடாதே என்கிறார்கள். கோடிக்கணக்கான ஆண்டுகள் நீங்கள் மகிழ்ச்சியாக இருந்தாலும்கூட அந்த மகிழ்ச்சி நிலையானதல்ல. அதை நீங்கள் இழப்பீர்கள், பழைய நிலைக்கு வீழ்வீர்கள். அதற்காக எடுத்த முயற்சிகள் எல்லாம் வீண். தேவர்கள் - தேவதைகள் என இந்துக்களால் அழைக்கப்படுபவர் சொர்க்கத்தில் வசிக்கிறவர்கள், சொர்க்கத்தில் வாழ்கிறவர்கள்.

இவர்கள் முக்தர்கள் (*Muktas*) அல்லர்: இவர்கள் ஞானமடைந்த வர்கள் அல்லர். ஆனால் உடன்பாட்டுத்தன்மை நிறைந்தவர்கள். தம் உடன்பாட்டு ஆற்றலின், மனோ சக்தியின் சிகரத்தை அடைந்துவிட்டிருக் கிறவர்கள். இவர்களால் வானத்தில் பறக்க முடியும். விண்வெளியின் ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்தை எந்த கால தாமதமும் இன்றி உடனடியாக இவர்களால் அடைந்துவிட முடியும். அவர்கள் ஆசைப் படுவது அக்கணமே நிறைவேறுகிறது. அவர்களின் உடல்கள் அழகுடனும் நிரந்தர இளமையுடனும் இருக்கிறது. அவர்களுக்கு முதுமை இல்லை. அவர்களின் உடல்கள் பொன்னுடல்களாக இருக்கும். தங்க நகரங்களில் இளமங்கையருடனும் மதுவுடனும் ஆடல்பாடலுடனும் வாழ்கிறார்கள். இடைவிடாத மகிழ்ச்சியில் அவர்கள் திளைக்கிறார்கள். உண்மையை

சொன்னால் ஒரே ஒரு சிக்கல் மட்டும் அங்கே இருக்கிறது - அதுதான் சலிப்பு. அவர்களுக்கு சலித்துவிடும். அதுதான் ஒரே எதிர்த்தன்மை - ஒரு சதவிகித எதிர்த்தன்மை. தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் அவர்கள் மகிழ்ச்சியாகவே இருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு சலித்துவிடுகிறது. சில நேரங்களில் அவர்கள் பூமிக்கு வந்துவிடவும் முயல்கிறார்கள். அவர்களால் வர முடியும். அவர்கள் வருகிறார்கள், தம் சலிப்பிலிருந்து விடுபட மனிதப் பிறவிகளுடன் அவர்கள் கலந்து பழக முயல்கிறார்கள்.

ஆனால் கடைசியில் அவர்கள் திரும்பிவிடுகிறார்கள்... இது ஒரு கனவில் இருந்து, அழகான கனவிலிருந்து நீங்கள் மீள்வதைப் போன்றே உள்ளது. இந்துக்களைப் பொறுத்தவரை சொர்க்கம் என்பது ஒரு கனவு - அருமையான கனவு. நரகமும் ஒரு கனவே - கெட்ட கனவு. ஆனால் இரண்டும் கனவுகளே. ஏனெனில் இரண்டும் மனதைச் சேர்ந்தவையே. இந்த வரையறையே. நினைவில் கொள்ளுங்கள்: மனதுக்குச் சொந்தமான அனைத்தும் கனவே. உடன்பாடு, எதிர்மறை எதுவானாலும் மனமே கனவுதான். கனவுக்கு அப்பால் செல்வதே, விழிப்படைவதே, ஞானம் பெறுதலாகும்.

ஞானநிலை பெற்ற மனிதரைக் குறித்து எதையும் சொல்வது கடினம். ஏனெனில் அவரை வார்த்தைகளில் விவரித்துவிடமுடியாது. வரம்புகள் இருந்தால்தான் வரையறை சாத்தியம். அவர் ஆகாயம்போல் பரந்துவிரிந்தவர். வரையறுத்தல் இயலாத காரியம். ஞானவான் ஒருவரை அறிந்துகொள்ள ஒரே வழி, நாமும் ஞானமடைந்தவர் ஆவதே. ஆன்மிகவாதியை வரையறுக்க முடியும். அவருக்கு வரம்புகள் உள்ளன. மனத்தின் எல்லைகளுக்குள் இருக்கிறார்கள். அவரை வரையறுப்பதில் எந்தக் கடினமும் இல்லை.

சித்திகள் அதாவது ஆற்றல்கள் பற்றிய பதஞ்சலியின் சூத்திரங் களுக்கு - **விபூதிபாதத்துக்கு** - பிற்பாடு நாம் வரும்போது, அவரை முழுமையாக வரையறுத்துவிட முடியும் என்பதை நாம் காண்போம். மேல்நாடுகளில் ஆன்மிக இயல் ஆய்வு (*Psychic Research*) என அவர்கள் அழைக்கிற அறிவியல் ஆய்வு நடந்து கொண்டுள்ளது. ஆன்மிகக் கழகங்கள் (சைக்கிக் சொசயட்டீஸ்) உலகமுழுவதிலும் உள்ளன. ஆன்மிக ஆய்வுக்கென இப்போது பல பல்கலைக்கழகங்கள் சோதனைச் சாலைகள் வைத்துள்ளன. கூடியவிரைவில் பதஞ்சலி கூறுபவை அறிவியல்ரீதியாக அட்டவணைப் படுத்தப்பட்டு மெய்ப்பிக்கப்பட்டுவிடும்.

ஒருவகையில் அது நல்லதே. ஏனெனில் இது மனத்தை சேர்ந்த ஒரு நிகழ்வே, இதை தொழில்நுட்ப சாதனங்களை கொண்டு பரிசோதித்து

விடவும், வகைப்படுத்தி முடித்துவிடவும் முடியும் என்பதை அப்போது உங்களால் அறிந்துகொள்ள முடியும். ஆனால் எந்த தொழில்நுட்பக் கருவியைக் கொண்டும் ஞானநிலை பற்றிய எவ்வித லேசான காட்சியைகூட நீங்கள் பெற்றுவிட முடியாது. அது உடலின் நிகழ்வோ மனநிகழ்வோ அல்ல. அது மிகவும் மாயமானது, மர்மமானது.

ஒன்றை நினைவில் கொள்ளுங்கள்: எவ்வித ஆன்மிக ஆற்றல்களை அடையவும் ஒருபோதும் முயலாதீர்கள். உங்களின் பாதையில் தாமாக அவை வந்து சேர்ந்தாலும் கூடிய சீக்கிரத்தில் அவற்றை உதறிவிடுங்கள். அவற்றிடம் தொடர்பு வைத்துக்கொள்ளாதீர்கள். அவற்றின் சூழ்ச்சி களுக்குச் செவிசாய்க்காதீர்கள்.'' இதில் என்ன தவறு இருக்கிறது? உங்களால் மற்றவர்களுக்கு உதவ முடிகிறதே. நீங்கள் ஒரு மிகப்பெரிய நலம் விளைவிப்பவராக ஆகமுடிகிறதே'' என்று அவை கூறும். ஆனால் அப்படி ஆகாதீர்கள்.'' நான் ஆற்றலை/ அதிகாரத்தை தேடவில்லை, யாரும் யாருக்கும் உதவி செய்துவிட முடியாது'' என்று மட்டும் சொல்லிவிடுங்கள். உங்களால் ஒரு வித்தைகாட்டுபவராக ஆகமுடியும், ஆனால் யாருக்கும் எந்த உதவியும் செய்யமுடியாது.

மேலும் யாருக்குமே உங்களால் எப்படி உதவமுடியும்? ஒவ்வொருவரும் தன் சொந்த வினைகளுக்கு ஏற்பவே இயங்குகிறார். உண்மையைச் சொன்னால், ஆன்மிக ஆற்றலுடைய ஒரு மனிதர் உங்களைத் தொட்டு உங்கள் நோய் மறைந்துபோனால், அதனால் நிகழ்ந்திருப்பது என்ன? உள்ளுக்குள் உங்கள் நோய் மறைய வேண்டி இருந்தது. உங்கள் கருமங்கள் பூர்த்தியாகிவிட்டது. ஓர் ஆன்மிக மனிதரின் தொடுதலால் அது மறைந்தது ஒரு தற்செயல்தான். அது மறைய வேண்டி இருந்தது: நீங்கள் எதையோ செய்ததால்தான் அது அங்கு இருந்தது. இப்போது அது மறைவ தற்கான நேரம் வந்துவிட்டதால் மறைந்துவிட்டது.

எந்த வழியிலும் எவருக்கும் நீங்கள் உதவிவிடமுடியாது. ஒரே ஓர் உதவி மட்டுமே இருக்கிறது. அதுதான், எல்லாரும் எப்படி ஆகவேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களோ அப்படி நீங்களே ஆகிக் கொள்வதாகும். நீங்களே அதுவாக ஆகிவிடுகிறீர்கள். உங்கள் செயல் அல்ல, உங்கள் இருத்தலே உதவும்.*(your presence will help)*

புத்தர் என்ன செய்கிறார்? அவர் வெறுமனே இருக்கிறார். ஒரு நதிபோல் எளிதில் கிடைக்கக் கூடியவராக இருக்கிறார். தாகமுள்ளவர்கள் வருகிறார்கள். உங்கள் தாகத்தை தீர்க்க ஒரு நதி முயன்றால்கூட, நீங்கள் ஆயத்தமாக இல்லை என்றால் அது சாத்தியமில்லை. உங்கள் வாயை

நீங்கள் திறக்காவிட்டால், நீரை ஏற்க நீங்கள் மண்டியிடாவிட்டால், ஓர் ஆறு ஓடிக்கொண்டே இருந்தாலும் நீங்கள் தாகத்துடன் தான் இருப்பீர்கள். மேலும் நடந்துகொண்டிருப்பதும் இதுதான்: ஆறு பாய்ந்து கொண் டிருக்கிறது. அதன் கரையில் நீங்கள் தாகத்தோடு உட்கார்ந்து கொண் டிருக்கிறீர்கள். அகங்காரம் எப்போதும் தாகத்தோடேயே இருக்கும்-அதற்கு எது கிடைக்கிறது என்பதை பற்றி கவலை இல்லை. அகங்காரமே தவிப்பு. ஆன்மாவே நிறைவு. அகங் காரத்தின் நிறைவு அல்ல அது.

**ஒரே நேரத்தில் எங்களில் பலரின் மேலும் நீங்கள் செயல்பட முடிவதன் ரகசியம் என்ன?**

நான் செயல்படுவதே இல்லை என்பதுதான் அந்த ரகசியம்! நான் வெறுமனே இருக்கிறேன். என்னைச் சுற்றி எத்தனைபேர் இருந்தாலும் அதனால் எந்த வேறுபாடும் இல்லை. நான் வேலை செய்வதானால், பிறகு, ஒரே நேரத்தில் இத்தனை பேரின் மேலும் எப்படி என்னால் செயல்பட முடியும்? என் வேலையின் தன்மை வேறுவிதமானது. உண்மையில் அது வேலையே அல்ல. உங்களுக்காகத்தான் இந்தச் சொற்களை நான் பயன்படுத்த வேண்டி இருக்கிறது. நான் இங்கே சும்மா இருக்கிறேன். நீங்களும் இங்கே (சும்மா) இருந்தால் காரியங்கள் நிகழும். நான் கிடைக்கக் கூடியவனாக இருக்கிறேன். நீங்களும் கிடைக்கக் கூடியவர்களாக இருந்தால் நிகழ்ச்சிகள் தாமே நடைபெறும்; எதையும் செய்யத் தேவையிருக்காது.

இரண்டு கிடக்கக் கூடியவைகளுனுடைய - இரண்டு உள்ளவைகளு னுடைய ஒரு சந்திப்பு தேவையுள்ளது. அப்போது நிகழ்வுகள் தாமே நடக்கின்றன. ஒரு விதையை மண்ணில் நீங்கள் ஊன்றும்போது நீங்கள் என்ன செய்கிறீர்கள்? நீங்கள் செய்வது என்ன? விதையும், மண்ணும் சந்திக்கும்படி செய்கிறீர்கள். அதன்பின் நிகழவேண்டியது தானாகவே நடைபெறுகிறது அல்லவா, அதைப் போலத்தான்.

நான் இங்கே இருக்கிறேன். நீங்களும் இங்கே இருந்தால் காரியங் கள் நிகழும். மேலும் இதுதான் பிரச்சினை: நீங்கள் இங்கு இருப்பது போலவே தோன்றலாம். ஆனால் நீங்கள் இங்கு இல்லாமல் இருக்கலாம் அப்போது எதுவும் நிகழ்வதில்லை. நான் இங்கே இருக்கிறேன். நீங்களும் இங்கே இருந்தால், காரியங்கள் தாமே நிகழ்கின்றன - அவ்வளவுதான். நான் எதையும் செய்துகொண்டு இருக்கவில்லை. அப்படி இருந்தால் உங்களால் நான் களைத்துப் போவேன். ஆனால் ஒருபோதும் நான் களைப்படைவதில்லை. ஏனெனில் நான் எதையும் செய்துகொண்டு இல்லை: என்னை களைப்படையச் செய்ய உங்களால் முடியாது. எனக்கு சலிப்பு ஏற்படுவதில்லை. மாறாக இருந்திருக்குமானால் நான் சலித்துப்

போய் இருப்பேன். உங்களுக்கே கூட உங்களைக் குறித்து சலிப்பு உள்ளது - உங்களில் பல பேருக்கு.

ஒரு யூத செபக்கூடத்தில் இது நடந்தது: ஒரு ராபி யூதபோதகர் போய்விடப் போவதாக பயமுறுத்திக் கொண்டிருந்தார். திருவிழா நாள்கள் நெருங்கிக் கொண்டிருந்தன. என்ன செய்வதென கோயில் பொறுப்பாளர்கள் கவலைப்பட்டார்கள். இப்போது, இந்தக் கடைசி நேரத்தில் ஒரு ராபியை, புது ராபியை கண்டுபிடிப்பது கடினம். அவரோ - பழையவரோ - பிடிவாதமாக இருந்தார். எனவே அவரை இணங்கச்செய்ய அவர்கள் முடிவுசெய்தார்கள். பொறுப்பாளர்கள் மூவர் அடங்கிய ஒரு தூதுக்குழுவை அவர்கள் அனுப்பினார்கள். அவரை எப்படியாவது சம்மதிக்க வைக்கும்படி பொறுப்பாளர்களிடம் அவர்கள் கூறினார்கள். அதிக ஊதியத்தை அவர் எதிர்பார்த்தால் சரி என்று சொல்லுங்கள், அல்லது அவரிடம் ''ஒரு சில வாரங்களுக்கு மட்டுமாவது இங்கு இருங்கள், அதன்பின் நீங்கள் போய்விடலாம். அதற்குள் நாங்கள் வேறொருவரை கண்டுபிடித்துவிட முடியும்'' என்று சொல்லுங்கள் என்றனர். சரி என்று அவர்கள் போனார்கள். அவரை அவர்கள் இணங்கச் செய்ய முயன்றார்கள். சாத்தியமான எல்லா வழியிலும் முயன்றார்கள்.'' நாங்கள் உங்களை நேசிக்கிறோம், உங்களை மதிக்கிறோம். ஏன் எங்களைவிட்டுப் போகிறீர்கள்?'' என்றார்கள். அதற்கு ராபி ''உங்களைப்போல் இங்கே ஐந்து பேர்மட்டும் இருந்துவிட்டால், நான் இங்கேயே தங்கிவிட்டிருப்பேன்!'' என்றார்.

அவர்களுக்கு பெருமை தாங்கவில்லை. ஏனென்றால் ''உங்களைப் போல இங்கே ஐந்துபேர் மட்டும் இருந்துவிட்டால், நான் இங்கேயே தங்கிவிட்டிருப்பேன்'' என்று அவர் சொல்லிவிட்டாரே! அவர்கள் மிகவும் நன்றாக உணர்ந்தார்கள். அவர்கள் சொன்னார்கள், ''ஆனால் இதில் பெரிய பிரச்சினை ஒன்றும் இல்லை: இங்கே நாங்கள் மூன்றுபேர் இருக்கிறோம். மேலும் இரண்டுபேரை கண்டுபிடித்துவிட முடியும்'' என்றனர். ராபி சொன்னார், ''இதில் பிரச்சினையே இல்லை - அதுதான் பிரச்சினையே. உங்களைப்போல் இங்கு இருநூறுபேர் இருக்கிறீர்கள். இதுவோ தாங்க முடியாத அளவுக்கு அதிகமாகும்!'' என்றார்.

உங்கள்மீதே நீங்கள் வெறுத்துப் போயிருக்கிறீர்கள். கண்ணாடியைப் பாருங்கள்: உங்கள் முகத்தின்மீது உங்களுக்கே சலிப்புத் தட்டிவிட்டது. இந்நிலையில் நீங்கள் இத்தனை பேர் இங்கே இருப்பதற்கு இந்நேரம் நான் சலிப்பால் செத்தே போயிருக்க வேண்டும்! மேலும் ஒவ்வொருநாளும்

ஒரேவிதமான பிரச்சினைகளையே நீங்கள் என்னிடம் கொண்டுவந்து கொண்டே இருக்கிறீர்கள். ஆனால் நான் ஒருபோதும் சலிப்படைவ தில்லை. ஏனெனில் நான் செயல்பட்டுக் கொண்டில்லை. இது ஒரு வேலையே அல்ல. இதை நீங்கள் அன்பு என அழைக்கலாம். ஆனால் வேலை என்று சொல்ல முடியாது. அன்பு ஒருபோதும் சலிப்படைவ தில்லை. ஆயிரம் தடவை நீங்கள் அதே பிரச்சினைகளை என்னிடம் கொண்டு வர முடியும் - திரும்பத் திரும்ப.... மேலும் நிறைய பிரச்சினைக ளும் இல்லை.

ஆயிரக்கணக்கான பேரை நான் கவனித்துக் கொண்டு வந்திருக்கி றேன். வந்த பிரச்சினைகளேதான் திரும்பத் திரும்ப வருகின்றன. உங்கள் பிரச்சினைகள் வாரத்தின் ஏழு நாள்கள் போலவே இருக்கின்றன - அதற்குமேல் இல்லை. மறுபடியும் ஞாயிறு வருகிறது. திரும்பவும் திங்கள் வருகிறது. இது இப்படியே வந்துகொண்டு போகிறது. ஆனால் இதில் நான் துளிக்கூட சலிப்பு அடைவதில்லை. ஏனென்றால் நான் வேலை செய்துகொண்டு இல்லை. நீங்கள் வேலை செய்து கொண்டிருந்தால் பின் அது மிக மிக கடினம் என்பது வெளிப்படை. எனவேதான் என்னால் செயல்பட முடிகிறது - ஏனெனில் நான் செயல்பட்டுக் கொண்டு இல்லை.

உங்களில் பலர் விஷயத்திலும், தேவைப்படும் ஒரே விஷயம் உங்களிடமிருந்துதான் தேவைப்படுகிறது, என்னிடமிருந்து அல்ல. எனவே ஒருநாள் என்னிடம் உங்களுக்கு சலிப்பு தோன்றிவிடலாம். அதற்கு வாய்ப்பு உள்ளது. என்னிடம் இருந்து நீங்கள் தப்ப முயலலாம். அதற்கு சாத்தியம் உள்ளது.

ஒரே ஒரு காரியமே உங்களிடமிருந்து தேவைப்படுகிறது. அதை உங்களால் செய்ய முடிந்தால் பின் என் தரப்பில் இருந்தோ உங்கள் தரப்பில் இருந்தோ எதைச் செய்யவும் தேவையில்லை. அந்த ஒரு காரியம் நீங்கள் கிடைக்கக்கூடியவராக இருப்பதுதான்: இப்போது இங்கேயே இருப்பது தான். அப்படி இருந்தால் நீங்கள் இந்த நகரில் இருந்தாலும் இந்த ஆசிர மத்தில் இருந்தாலும் அல்லது உலகின் எந்த மூலையில் இருந்தாலும் அதில் எந்த வேறுபாடும் இல்லை.

நீங்கள் கிடைக்கக் கூடியவராக இருந்தால் விதைகள் முளைக்கும். நான் எல்லா இடத்திலும் கிடைக்கிறேன்: 'எங்கு' அதில் பிரச்சினையே இல்லை. நான் இந்த உடலில் இல்லாதபோதும் நான் கிடைப்பேன். ஆனால் உங்களுக்குதான் இன்னுமதிக கடினமாக இருக்கும். ஏனெனில் நான் உடலில் இங்கே இப்போது இருக்கும்போதே நீங்கள் கிடைக்காமல்

இருக்கிறீர்கள். இப்போது நான் பேசிக்கொண்டிருக்கும்போதே இங்கே நீங்கள் கவனிக்காமல் இருக்கிறீர்கள். நீங்கள் கேட்டுக்கொண்டுதான் இருக்கிறீர்கள், ஆனால் கவனித்துக்கொண்டு இல்லை. என்னைப் பார்த்தபடிதான் நீங்கள் இருக்கிறீர்கள். ஆனால் என்னை நீங்கள் பார்க்கவில்லை.என்னைப் பாருங்கள்! இது ஒரு வேலை அல்ல! இது ஒரு சாதாரண, கிடைக்கிற அன்பு அந்த அன்பின்மூலம் எல்லாமே சாத்தியம் - ஒவ்வொரு பண்புமாற்றமும் அன்பினால்தான் நிகழ்கிறது.

**அன்பு ஓர் தேவை என்று நீங்கள் குறிப்பிட்டீர்கள். பின் ஏன் இந்த அத்தியாவசியத் தேவையை நிறைவு செய்வது பெரும்பாலான மக்களுக்கு எப்போதும் மிகுந்த கடினமான காரியமாக உள்ளது?**

இதில் பல விஷயங்கள் சம்பந்தப்பட்டுள்ளன. ஒன்று: சமுதாயம் அன்புக்கு எதிராக உள்ளது. ஏனெனில் அன்பு ஒரு மாபெரும் பந்தமாகும், ஆனால் அன்பு உங்களைச் சமுதாயத்திலிருந்து பிரித்துவிடுகிறது. இரண்டு அன்பர்கள் தமக்குள் ஓர் உலகமாக ஆகிறார்கள். யாரைப்பற்றியும் அவர்கள் கவலைப்படுவதில்லை. எனவேதான் சமுதாயம் எதிராக நிற்கிறது. நீங்கள் நேசிப்பதை சமுதாயம் விரும்புவதில்லை. திருமணம் - ஏற்கப்படுகிறது. ஆனால் காதலுக்கு - அனுமதியில்லை. ஏனெனில் ஒருவரை நீங்கள் காதலித்ததுமே நீங்கள் உங்களுக்குள் ஓர் உலகமாக, தனிஉலகமாக ஆகிறீர்கள். உலகில் உள்ள மற்றவர்களுக்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதைப்பற்றி உங்களுக்குக் கவலை இல்லை. அவர்களை அறவே நீங்கள் மறந்துவிடுகிறீர்கள். உங்களின் சொந்த சமுதாயதத்தால் உலகத்தை நீங்கள் உருவாக்குகிறீர்கள்.

அன்பு அப்பேர்ப்பட்ட ஓர் ஆக்க சக்தியாக இருக்கிறது. அது ஒரு பிரபஞ்சமாக ஆகிறது. பின் உங்கள் சொந்த மையத்தைச் சுற்றி இயங்கு கிறீர்கள். இது சகித்துக்கொள்ள முடிவதில்லை. உங்கள் காதலை உங்கள் பெற்றோர்களால் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை. ஏனெனில் நீங்கள் காதல்கொண்டால் அவர்களை முற்றிலும் மறந்துவிடுகிறீர்கள் - அவர்கள் இருப்பதே இல்லை என்பதுபோல்! அந்நிலையில் அவர்கள் ஓர் ஓரத்தில், எங்கோ தொலைதூரத்தில் கிடக்கிறார்கள். அப்படியானால் அவர்கள் எப்படி உங்கள் காதலை ஏற்க முடியும்? உங்கள் திருமண ஏற்பாடுகளை அவர்கள் செய்வார்கள் - அது அவர்கள் செய்யும் ஏற்பாடாக இருக்கும். குடும்பத்தின் ஒரு பகுதியாக... மட்டும் நீங்கள் இருப்பீர்கள்.

முல்லா நசருதீன் ஒரு பெண்ணிடம் காதல் கொண்டார். மகிழ்ச்சி யுடன் வீட்டுக்கு வந்தார் அவர். குடும்பத்தினர் இரவு உணவு கொள்ளும்

போது அவர்களிடம், ''நான் முடிவு செய்துவிட்டேன்'' என்று தெரிவித்தார். உடனடியாக அப்பா சொன்னார், ''இது நடக்காது! நடக்கவே நடக்காது! இதை நான் அனுமதிக்க முடியாது. ஏனென்றால் பெண்வீட்டார் அவளுக்காக ஒரு பைசாகூட விட்டுச் செல்லவில்லை. அவள் கையில் காலணாகூட இல்லை. இதைவிட நல்ல பெண்கள் இதைவிட நல்ல பரிசுத் தொகைகளுடன் வரதட்சனைகளுடன் கிடைக்கிறார்கள். முட்டாள்தனமாக இராதே.'' என்றார்.

அம்மா சொன்னார், ''அந்த பெண்ணா? நீ இந்த அளவு மடையனாக இருப்பாய் என்று எங்களால் கற்பனை செய்துகூட பார்க்க முடியவில்லை. மட்டரகமான கதைப் புத்தகங்களை வாசிப்பதை தவிர உருப்படியாக வேறு எதையும் அவள் செய்வது கிடையாது. அவள் ஓர் உதாவக்கரை. அவளுக்கு சமைக்க தெரியாது. வீடு பெருக்கத் தெரியாது. அவள் குடியிருக்கும் அழுக்கு வீட்டைப் பார்.'' என்றாள்.

இப்படியே தொடர்ந்தது. வீட்டில் உள்ள ஒவ்வொருவரும் அவரவர் சொந்தக் கருத்துநிலைக்கு ஏற்ப அந்தப் பெண்ணை மறுத்துரைத்தார்கள். சின்னத்தம்பி கூறுகிறான், ''என்னால் ஏற்க முடியாததற்குக் காரணம் அவளுடைய மூக்கு ரொம்பவுமே அவலட்சணமாக இருக்கிறது.'' அவனது அபிப்பிராயத்தை எல்லாரும் ஏற்றுக்கொண்டார்கள்.

பின் நசுருதீன், ''ஆனால் அந்தப் பெண்ணிடம் உள்ள ஒரு நல்ல விஷயம் நம்மிடம் இல்லை'' என்று சொன்னார். அவர்கள் எல்லாம் ஒரே குரலில் ''அது என்ன?'' என்று கேட்டார்கள். அதற்கு அவர், ''குடும்பம் அவளுக்கு ஒரு குடும்பம் இல்லை. அதுதான் அவளிடம் உள்ள அந்த அருமையான விஷயம்.'' என்று சொன்னார்.

பெற்றோர்கள் அன்புக்கு எதிராகவே இருப்பார்கள். தொடக்கத்தி லிருந்தே அவர்கள் உங்களைப் பழக்குவார்கள். நீங்கள் காதலிக்க துணியாத விதத்தில் உங்களை பழக்குவார்கள். ஏனெனில் காதல் குடும் பத்திற்கு எதிராக போகிறது. சமுதாயம் என்பது ஒரு பெரிய குடும்பமே தவிர வேறில்லை. சமுதாயம், நாகரிகம், மதம், புரோகிதம் எல்லா வற்றுக்கும் எதிராகக் காதல் இருக்கிறது. காதல் அத்தகைய ஓர் ஈடுபாடாக முழுமையான அர்ப்பணிப்பாக இருக்கிறது. எல்லாவற்றுக்கும் எதிராக செல்கிறது அது. ஆனால் ஒவ்வொருவருக்கும் உங்களிடம் ஒரு முதலீடு உள்ளது.

முடியாது. இதை அனுமதிக்க முடியாது. காதலிக்காமல் இருக்கவே உங்களுக்கு பயிற்சி தரப்பட்டிருக்கிறது - இதுதான் கஷ்டம். சமுதாயம், பண்பாடு, நாகரிகம் மற்றும் உங்களைச் சுற்றிலும் உள்ள அனைத்திடமும் இருந்துதான் இந்த கஷ்டம் வருகிறது - ஆனால் இதுதான் மாபெரும் கஷ்டம் என்பதல்ல; உங்களிடம் இருந்தே கிளம்பும் இன்னொரு சிக்கலே மிகப்பெரிய சிக்கல்; காதலுக்கு சரணாகதி தேவை. உங்கள் அகங்காரத்தை விட்டுவிடுவது காதலுக்கு தேவைப்படுகிறது.

இவ்வகையில் நீங்களும் காதலுக்கு எதிராகவே இருக்கிறீர்கள். காதல் என்பது உங்கள் அகங்காரத்தின் ஒரு கொண்டாட்டமாக ஆகவேண்டும் என்றே நீங்கள் விரும்புவீர்கள். உங்கள் அகங்காரத்துக்கு ஓர் அலங்காரமாக காதல் ஆக வேண்டும் என்று நீங்கள் விரும்பலாம். காதல் ஒரு நாய்போல் உங்களைச் சுற்றி சுற்றி வரவேண்டும் என்று நீங்கள் விரும்பலாம். ஆனால் அன்பு ஒருபோதும் ஒரு நாய்போல் எவரையும் பின் தொடர்வதில்லை. அன்புக்கு உங்களின் முழுமையான சரணாகதி தேவைப்படுகிறது. பெண் ஆணிடம் சரணடைவதோ ஆண் பெண்ணிடம் சரணடைவதோ அல்ல இது. அல்லவே அல்ல! இருவரும் காதலிடம் சரணடைய வேண்டும். காதல் ஒரு கடவுள். அன்புதான் ஒரே உண்மையான கடவுள். அதற்கு நீங்கள் தேவை, காதலர் இருவருமே தேவை. அதனிடம் முற்றிலுமாக சரணடைவது தேவை.

ஆனால் காதலர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? மனைவி தனக்குச் சரணடைய வேண்டும் என்று கணவன் முயற்சி செய்கிறான். கணவன் தன்னிடம் சரணடைய வேண்டும் என மனைவி முயல்கிறாள். இந்நிலையில் காதல் எப்படி சாத்தியம்? காதல் என்பது வேறு - இருவரும் அதற்கு சரணடைவதே காதல். இருவரும் அதில் மறைந்துவிடுவதே காதல்.

இதுதான் மிகப்பெரிய தடையாகிறது: உங்களால் காதலிக்க முடியாதிருப்பதற்கு நீங்களே காரணம். இந்த இரண்டு அகங்காரங்களும் சேரும்போது காதல் சாத்தியமில்லாதது ஆகிறது. காதல் சாத்தியயமில்லை என்றால் வாழ்க்கை சாத்தியமில்லை. காதல் சாத்தியம் இல்லை என்றால் பிரார்த்தனை சாத்தியம் இல்லை. காதல் சாத்தியம் இல்லை என்றால் கடவுள் சாத்தியம் இல்லை. அழகான அனைத்தும் அன்பில் இருந்தே வளர்கிறது. அன்பெனும் மண் ஒரு கட்டாயத் தேவை. இல்லாவிட்டால் நீங்கள் வளர்ச்சிபெறாமலேயே இருப்பீர்கள். பின் அதை நீங்கள் பலவேறு வழிகளில் நிறைவு செய்யவும் ஈடுசெய்யவும் முயல்கிறீர்கள். ஆனால் அன்பை எதுவும் ஈடுசெய்ய முடியாது. அன்புக்கு ஈடான வேறெதும் இல்லை.

நீங்கள் பிரார்த்தனை செய்துகொண்டே போக முடியும். ஆனால் உங்கள் பிரார்த்தனையில், அன்பு செய்யும் ஒருவரிடமிருந்து வரும் அருள் (grace)இருக்காது உங்களால் எவ்வாறு பிரார்த்தனை செய்ய முடியும்? உங்கள் பிரார்த்தனை வெறும் குப்பையாகவே - வார்த்தைகளின் கூட்டமாகவே இருக்கும். நீங்கள் கடவுளிடம் ஒன்றைச் சொல்வீர்கள், அவருடன் பேசுவீர்கள், பின் படுக்கப் போய்விடுவீர்கள். ஆனால் அதில் ஓர் அடிப்படையான பண்பு குறைகிறது. நீங்கள் காதலித்திராத போது உங்களால் எப்படி ஜெபிக்க முடியும்? இதயத்திலிருந்து பிரார்த்தனை எழுகிறது.ஆனால் உங்கள் இதயமோ அடைபட்டே கிடக்கிறது. எனவேதான் ஜெபம் தலையிலிருந்து வருகிறது. தலை, இதயமாக முடியாது.

எனவேதான் உலகம் முழுவதிலும் மக்கள் ஜெபம் செய்துகொண்டே இருக்கிறார்கள். அவை வெறும் பாவனைகளே. சாரமான அம்சம் அதில் இல்லை. அந்த பிரார்த்தனையானது வேர்களின்றி இருக்கிறது. அன்பு, மண்ணைப் பண்படுத்துகிறது; பிரார்த்தனை வெளிவருவதற்கான தளத்தை அது தயாரிக்கிறது. பிரார்த்தனை என்பது அன்பின் ஓர் உயர்ந்த வடிவமே தவிர வேறல்ல - தனிநபர்களை கடந்த, முழுமைக்குச் செல்கிற அன்பே பிரார்த்தனை. பகுதி அன்பல்ல. ஆனால் பகுதியுடன் அன்பில் இருந்து தான் நீங்கள் கற்பது தேவையாகிறது.

எடுத்த எடுப்பிலேயே கடலில் நீங்கள் குதித்துவிட முடியாது. முதலில் ஒரு நீச்சல் குளத்தில் நீந்திப் பழகுங்கள். காதல் என்பது ஒரு நீச்சல் குளம். அதில் நீங்கள் பாதுகாப்பாக நீந்த கற்க முடியும். பின் நீங்கள் கடலுக்குப் போகமுடியும், ஆபத்தான கடல்களுக்கும் போகமுடியும். ஆபத்தான கடல்களில் நேரடியாக நீங்கள் குதித்துவிட முடியாது. அப்படிக் குதித்தால் உங்களுக்கு தான் ஆபத்து. அது சாத்தியமில்லை. அன்பு ஒரு சிறு நீச்சல் குளம் - இரண்டு பேர் மட்டுமே. முழு உலகம் மிகச் சிறிதாக உள்ளது... ஒருவர் மற்றவரில் நுழைதல் சாத்தியம்.

அங்கும்கூட நீங்கள் அஞ்சுகிறீர்கள். நீச்சல் குளத்தில் கூட நீங்கள் ''நான் போய் சேர்ந்துவிடலாம், மூழ்கிப் போகலாம்'' எனப் பயப்படு கிறீர்கள். பின் பெருங்கடலைப் பற்றி என்ன சொல்வது? காதலே முதல் அடிப்படையாக, பெரிய குதிப்பை மேற்கொள்வதற்கான முதல் தயார்நிலையாக இருக்கிறது. நான் உங்களுக்கு காதலை/ அன்பை போதிக்கிறேன். அதனால் என்னென்ன இழப்பு ஏற்பட்டாலும் கவலைப் படாதீர்கள் அதைத் தியாகம் செய்யுங்கள் என்று உங்களுக்குச்

சொல்கிறேன். கவுரவம், செல்வம், குடும்பம், சமுதாயம், பண்பாடு எதை இழப்பதானாலும் கவலைப்படாதீர்கள். அவற்றையெல்லாம் பணயம் வையுங்கள். ஏனெனில் அன்பைப் போல் உயர்ந்தது வேறு எதுவும் இல்லை. எல்லாவற்றையும் நீங்கள் இழந்தாலும், நீங்கள் அன்பை மட்டும் ஆதாயப்படுத்திக் கொண்டால் நீங்கள் எதையும் இழப்பதில்லை. அன்பை நீங்கள் இழந்துவிட்டால், வேறு எதை நீங்கள் ஆதாயப்படுத்தினாலும் உங்களுக்கு எந்த ஆதாயமும் இல்லை. இந்த இரண்டு விஷயங்கள் குறித்து விழிப்பாயிருங்கள்.

சமுதாயம் உங்களுக்கு உதாவது. அது எதிரானது. அன்பு ஒரு சமுதாய எதிர்ப்பு சக்தியாகும். சமுதாயம் அன்பை ஒடுக்க முயல்கிறது. அன்பை ஒடுக்கிவிட்டால் உங்களைப் பல வழிகளிலும் சமுதாயம் பயன்படுத்திக் கொள்ள முடியும். உதாரணமாக, நீங்கள் நிஜமாகவே அன்புள்ள வராயிருந்தால் உங்களைப் போர்வீரன் ஆக்கமுடியாது. உங்களைப் போருக்கு அனுப்பிவிட முடியாது. அது சாத்தியமே இல்லை. ஏனெனில் நீங்கள் கவலைப்பட மாட்டீர்கள்... ''நாடு என்றால் என்ன? நாட்டுப்பற்று என்றால் என்ன? சுத்த அபத்தம்!'' என்பீர்கள் நீங்கள். அன்பு என்பது அத்தகைய அழகிய மலர். அதை அறிந்துகொண்டவருக்கு நாட்டுப்பற்று, தேசியம், நாடு, கொடி எல்லாமே பொருளற்றதாகவே தோன்றுகிறது. மெய்ப்பொருளை நீங்கள் சுவைத்துவிட்டீர்கள்.

சமுதாயம் திசைதிருப்பவே முயல்கிறது. மெய்ப்பொருளை நீங்கள் சுவைத்துவிடக் கூடாது. அந்நிலையில் காதலுக்காக நீங்கள் ஏங்கித் தவிக்கிறீர்கள், இனி உங்கள் காதலை எந்த திசையிலும் திருப்பிவிட முடியும். அதை தேச பக்தியாக ஆக்க முடியும். உடனே நீங்கள் போய் தியாகியாக ஆகமுடியும். அப்படியானால் நீங்கள் ஒரு முட்டாள். ஏனெனில் உங்களையே நீங்கள் வீணடித்துக் கொண்டு இருக்கிறீர்கள். நீங்கள் போய் இறக்க முடியும் ஏனென்றால் உங்கள் அன்பு திசை திருப்பிவிடப்பட்டிருக் கிறது. நீங்கள் நேசிக்காவிட்டால் உங்கள் நேசம் பணத்தின் மீதான பாசமாகிவிட முடியும். அப்போது நீங்கள் சேமித்துக்கொண்டே, பதுக்கிக்கொண்டே இருப்பவராக ஆகிறீர்கள். அந்நிலையில் உங்கள் குடும்பம் மகிழ்ச்சியாக இருக்கிறது- நீங்கள் அருமையாக செயல்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என்று.

ஆனால், நீங்கள் தற்கொலைதான் செய்துகொண்டிருக்கிறீர்கள். நீங்கள் மிகுதியான செல்வத்தை குவித்துக்கொண்டிருப்பதால் குடும்பம் மகிழ்ச்சியாக இருக்கிறது. தம் வாழ்வை அவர்கள் இழந்துவிட்டனர்.

இப்போது அவர்கள் உங்கள் வாழ்வையும் நீங்கள் இழந்துவிடுமாறு உங்களை வற்புறுத்திக் கொண்டிருக்கிறார்கள். மேலும் அவர்கள் அதை செய்யும் அன்பான விதத்தில் உங்களாலும் அதை மறுத்துவிடவும் முடிவதில்லை. 'அவர்கள் உங்களைக் குற்ற உணர்வு கொள்ளச் செய்கிறார்கள். நீங்கள் பணத்தைப் பதுக்கினால் அவர்கள் மகிழ்கிறார்கள். ஆனால் அன்பான மனிதன் எப்படி பதுக்கி வைக்க முடியும். கடினம். அன்புள்ள ஒருவர் ஒருபோதும் பதுக்கல்காரர் ஆவதில்லை. அப்புள்ளவர் பகிர்கிறார், பங்கிட்டுத் தருகிறார், கொடுத்துக் கொண்டே போகிறார். அன்புள்ளவரால் பதுக்க முடியாது.

அன்பு இல்லாத போது நீங்கள் கருமியாக ஆகிறீர்கள். ஏனெனில் நீங்கள் அச்சப்படுகிறீர்கள். அன்பின் பாதுகாப்பு உங்களுக்கு இல்லை. எனவே உங்களுக்கு வேறு ஏதாவது பாதுகாப்புத் தேவைப்படுகிறது. இந்நிலையில் செல்வம் ஒரு பதிலியாக ஆகிறது. நீங்கள் பதுக்க வேண்டும் என்றே சமுதாயம் விரும்புகிறது. ஏனெனில் எல்லாருமே அன்பராக இருந்தவிட்டால் செல்வத்தை உருவாக்குவது எப்படி? சமுதாயம் மிகமிக வளமாக இருக்கும், ஆனால் முற்றிலும் வித்தியாசமான ஒரு முறையிலேயே அது வளமாக இருக்கும்'. பொருள் வகையில் அது வறியதாக இருக்கலாம். ஆனால் ஆன்மிக ரீதியாக அது வளமாகவே இருக்கும்.

ஆனால் அந்த வளம் கண்ணுக்குத் தெரியாது. கண்ணுக்குத் தெரிகிற செல்வமே சமுதாயத்துக்கு தேவை. எனவேதான் உலகம் முழுவதும் மதம், சமுதாயம், பண்பாடு ஆகியன ஒரு கூட்டுச்சதியில் ஈடுபட்டு உள்ளன. ஏனெனில் உங்களிடம் ஒரே ஓர் ஆற்றலே உள்ளது. அதுதான் அன்பின் ஆற்றல். அது சரியாக அன்பினுள் இயங்குமானால், பின் வேறெங்கும் அதை இயக்க வைக்க முடியாது. நீங்கள் காதலிக்காவிட்டால், உங்களின் அன்பற்ற நிலையே, அறிவியல் ஆராய்ச்சியாக மாறிவிடலாம்.

உண்மை பற்றிய பல அற்புதமான பார்வைகள் பிராய்டிடம் இருந்தன. மெய்யாகவே அவர் ஓர் அபூர்வமனிதர்தான். பற்பல தரிசனங்கள் அவருக்கு நேர்ந்திருந்தன. ஒன்றை நீங்கள் ஊடுருவும் போதெல்லாம் பெண்ணையே ஊடுருவுவதாகும் அது என்றார் அவர். உங்களுக்கு பெண் கிடைக்கவில்லை என்றால் வேறு எதையாவது ஊடுருவ நீங்கள் முயல்வீர்கள். ஒரு நாட்டின் பிரதம மந்திரியாக இருப்பதை நோக்கி நீங்கள் ஊடுருவலாம்.

அரசியல்வாதிகளில் அன்பானவர்களை ஒருபோதும் உங்களால் கண்டுபிடிக்க முடியாது. தம் அதிகாரத்துக்காக எப்போதும் அன்பை

காதலை தியாகம் செய்வார்கள் அவர்கள். அறிவியல்காரர்கள் ஒருபோதும் அன்பானவர்களாக இருக்க மாட்டார்கள். ஏனெனில் அவர்கள் அன்பர்களாக இருந்துவிட்டால் அவர்கள் தளர்ந்து விடுவார்கள். அவர்களுக்கு ஓர் இறுக்கம், ஓயாத ஒரு கருத்துவெறி தேவைப்படுகிறது. அன்போ ஓய்வாக்குகிறது. அதில் தீராத வெறிக்கு சாத்தியம் இல்லை..மிகுந்த வெறியோடு தம் சோதனைச் சாலைக்குப் போகிறார்கள் அவர்கள். அவர்கள் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள், ஆட்கொள்ளப்படு கிறார்கள். இரவும் பகலும் அவர்கள் வேலை செய்கிறார்கள்.

ஒரு நாட்டின் காதல் தேவை நிறைவு செய்யப்படும்போதெல்லாம் அந்த நாடு பலவீனம் ஆகிறது என்பதை வரலாறு அறிந்துள்ளது. இனி அதை தோற்கடித்துவிட முடியும். எனவே காதல் தேவையை பூர்த்திசெய்துவிடக்கூடாது. அப்போதுதான் அந்த நாடு அபாயகரமானதாக இருக்கும். ஏனெனில் ஒவ்வொருவரும் ஒரு வெறியராகவும், போரிட ஆயத்தமாகவும் இருக்கிறார். மிக லேசாக சீண்டினாலே ஒவ்வொரும் போரிடத் தயாராக இருக்கிறார். அன்புத் தேவையை நிறைவுசெய்து விட்டால் பின் யாருக்கு கவலை! சற்றே எண்ணிப் பாருங்கள், மெய்யாகவே ஒரு நாடுமுழுவதும் அன்பாக இருந்தால், அப்போது யாராவது தாக்குதல் தொடுத்தால்...நாம் அவர்களிடம் சொல்வோம், ''நல்லது, நீங்களும் வாருங்கள், இங்கு இருங்கள். கவலை ஏன்? நாங்கள் மிகுந்த மகிழ்ச்சியாக இருக்கிறோம். நீங்களும் வாருங்கள். மேலும் இந்த நாடு பெரியது. நீங்களும் இங்கு இருங்கள். மகிழ்ச்சியாக இருங்கள். அல்லது நீங்களே ஆள விரும்பினால் ஆட்சியாளராகவே இருங்கள் - அதற்கு எந்தத் தடையுமில்லை. அப்படி இருந்தால் மிகவும் நல்லதே. பொறுப்பைத்தான் நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களே - நல்லது!''

ஆனால் காதல் தேவை பூர்த்தியாகவில்லை என்றால் நீங்கள் எப்போதும் சண்டைபிடிக்க ஆயத்தமாக இருக்கிறீர்கள். இதைமட்டும் நினைவில் கொள்ளுங்கள். உங்கள் சொந்த மனதை கவனிக்க மட்டும் முயலுங்கள். உங்கள் காதலியை சிலநாள்களாக நீங்கள் காதலித்திருக்க வில்லை என்றால் நீங்கள் ஓயாத எரிச்சலில் இருக்கிறீர்கள். காதல் செய்தால் நீங்கள் இளைப்பாறுகிறீர்கள். எரிச்சல் போகிறது. நீங்கள் மிகவும் நல்லபடி உணர்கிறீர்கள் - இப்போது உங்களால் மன்னிக்க முடிகிறது. அன்பான ஒருவரால் எல்லாவற்றையும் மன்னித்துவிட முடியும். அன்பு என்பது அத்தகைய ஓர் ஆசீர்வாதமாக இருக்கிறது. எல்லாப் பிழைகளையும் அவரால் பொறுத்துக் கொள்ள முடியும்.

ஆனால் நீங்கள் அன்பாயிருக்க தலைவர்கள் உங்களை விடமாட்டார்கள். ஏனென்றால் அதன் பின் போர்வீரர்களை உருவாக்க

முடியாது. அதன்பின் போர் வெறியர்களை, பித்தர்களை, அழித்தொழிக்க விரும்பும் பைத்தியக்கார மனிதர்களை நீங்கள் வேறெங்கு போய் கண்டுபிடிப்பீர்கள்? அன்பு ஓர் ஆக்க சக்தி. அன்புத் தேவை நிறை வடைந்தால் நீங்கள் படைக்கவே விரும்புவீர்கள், அழிக்க விரும்ப மாட்டீர்கள். அதன்பின் மொத்த அரசியல் கட்டமைப்பும் விழுந்துவிடும். நீங்கள் காதலித்தால், பின் மொத்த குடும்ப அமைப்பும் முற்றிலும் வேறுவிதமாக இருக்கும். நீங்கள் அன்பு செய்தால், பின் பொருளும் பொருளியலும் வேறுவிதமாக இருக்கும். உண்மையைச் சொன்னால், அன்பு அனுமதிக்கப்பட்டால் மொத்த உலகமும் முற்றிலும் வேறுவிதமான ஓர் உருவெடுக்கும். அதற்கு அனுமதிக்க முடியாது ஏனெனில் இன்றைய கட்டமைப்புக்கு அதற்கே உரிய முதலீடுகள் லாப நோக்கங்கள் உள்ளன. ஒவ்வோர் அமைப்பும் தன்னை முன்னேற்றவே முனைகிறது. அதில் நீங்கள் நசுக்கப்பட்டால் அதைப்பற்றி அது கவலைப்படுவதில்லை.

மொத்த மனித இனமும் நசுக்கப்படுகிறது. நாகரிகத் தேர் முன்னேறிப் போய்க் கொண்டே இருக்கிறது. இதை உணருங்கள். இதைக் கவனியுங்கள். இதைக் குறித்து விழிப்புடன் இருங்கள். அதன்பின் காதல் என்பது மிகவும் எளியதாகும். அதைவிட எளிதான ஒன்று எதுவும் இல்லை. சமுதாயம் சொல்லும் ''தேவைகள்'' அனைத்தையும் கைவிடுங்கள். உங்கள் உள் தேவைகளை மட்டுமே கவனத்தில் கொள்ளுங்கள் - இது சமுதாயத்துக்கு எதிராகச் செல்வது ஆகாது. உங்கள் சொந்த வாழ்வை வளப்படுத்திக் கொள்ள நீங்கள் முயன்று கொண்டிருக்கிறீர்கள் - அவ்வளவே. வேறு எவரின் எதிர்பார்ப்புகளையும் நிறைவேற்றுவதற்காக நீங்கள் இங்கு இல்லை. உங்கள் சொந்தக் காரியத்துக்காகவே - உங்களின் சொந்த நிறைவேற்றத்துக்காகவே நீங்கள் இங்கு இருக்கிறீர்கள்.

அதையே முதன்மையானதாக, அடிப்படையானதாக ஆக்குங்கள். மற்ற காரியங்களைப் பற்றி கவலைப்படாதீர்கள். ஏனெனில் உங்களைச் சுற்றிலும் எல்லாப்புறமும் பைத்தியக்காரர்களே இருக்கிறார்கள். அவர்கள் உங்களைப் பைத்திய நிலையை நோக்கித் தள்ளுவார்கள். சமுதாயத்துக்கு எதிராகச் செல்லத் தேவை இல்லை. அதன் முதலீடுகளில் இருந்து மட்டும் விடுபடுங்கள் - அவ்வளவுதான்.

நீங்கள் கலக்காரர் ஆக, புரட்சிக்காரர் ஆகத் தேவையில்லை. ஏனெனில் இதுவும் மீண்டும் அதே பழைய இடத்தை வந்தடைவதுதான். உங்கள் காதல் நிறைவேறாவிட்டால் நீங்கள் புரட்சிவாதி ஆவீர்கள். ஏனெனில் அதுவும் மாறுவேடமிட்ட ஓர் அழிப்பு வேலையே.

இனிமேல்தான் உண்மையான பிரச்சினை வருகிறது: உங்கள் சொந்த அகங்காரத்தை கைவிடுங்கள். காதலுக்கு / அன்புக்குத் தேவை முழுமை யான சரணாகதி.

இது நிகழ இடம் கொடுங்கள். ஏனெனில் உங்களுக்கு நிகழ கூடியது இதைத் தவிர வேறெதுவுமில்லை. இது நிகழ நீங்கள் இடம் கொடுக்கா விட்டால் நீங்கள் வீணாகிப் போவீர்கள். இது நிகழ நீங்கள் இடம் கொடுத்தால் இன்னும் பல காரியங்கள் நடப்பது சாத்தியம் ஆகும். ஒன்று மற்றதற்கு இட்டுச் செல்கிறது. அன்பு எப்போதும் பிரார்த்தனைக்கு இட்டுச் செல்கிறது. எனவேதான் அன்பே கடவுள் என அழுத்தமாகக் கூறுகிறார் யேசுநாதர்.

